# அற இலக்கியமும் திருவிவிலியமும்
# (அற விழுமிய நோக்கு)

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ.பௌலியன்ஸ்**

(பதிவு எண்: 1600/2016-17)

**நெறியாளர்**

முனைவர் **மா.சிதம்பரம்**

தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 3.





## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

**ஆகஸ்ட் - 2021**

# அற இலக்கியமும் திருவிவிலியமும்
# (அற விழுமிய நோக்கு)

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ.பௌலியன்ஸ்**

(பதிவு எண்: 1600/2016-17)

**நெறியாளர்**

முனைவர் **மா.சிதம்பரம்**

தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 3.





## அழகப்பா பல்கலைக்கழகம்


(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

**ஆகஸ்ட் - 2021**

**முனைவர் மா. சிதம்பரம் எம்,ஏ, எம்.பில்., பி. எட்., பிஎச்.டி**

இணைப்பேராசிரியர்

தமிழ் உயராய்வு மையம்

அழகப்பா அரசு கலைக்கல்லூரி

காரைக்குடி – 630003

நாள்:

## நெறியாளர் சான்றிதழ்

**"அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)"** என்னும் தலைப்பில் **திரு.அ.பௌலியன்ஸ் (பதிவு எண்: 1600/2016 - 17)** அவர்கள் பகுதி நேர முனைவர் பட்டத்திற்குச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(மா. சிதம்பரம்)**

**(நெறியாளர்)**

**துறைத்தலைவர்** **முதல்வர்**

**அ. பௌலியன்ஸ்**

**(பதிவு எண் (1600 / 2016 – 17 )**

பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்

தமிழ் உயராய்வு மையம்

அழகப்பா அரசு கலைக்கல்லூரி

காரைக்குடி – 3

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**“அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)”** என்னும் தலைப்பில் பகுதிநேரத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இந்த ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(அ. பௌலியன்ஸ்)**

**(ஆய்வாளர்)**

**உறுதிக் கையொப்பம்**

**முனைவர் மா. சிதம்பரம் எம்,ஏ, எம்.பில்., பி. எட்., பிஎச்.டி**

இணைப்பேராசிரியர்

தமிழ் உயராய்வு மையம்

அழகப்பா அரசு கலைக்கல்லூரி

காரைக்குடி – 630003

## நன்றியுரை

நன்றி உரைப்பது நன்று (திருப்பாடல்: 92:1)

நன்றி மறப்பது நன்றன்று (திருக்குறள் :108)

அருள் பழுத்த பழச்சுவையாய் அன்பில் விளைந்த ஆரமுதாய் எத்திக்கும் தித்திக்கும் எல்லாம் வல்ல இறைவனுக்குச் சிரம் தாழ்த்திக் கரம் உயர்த்தி நன்றி! நன்றி! நன்றி! என்று நன்றி மலர்களைத் தாள் பணிந்து வாய்மொழிந்து மகிழ்கின்றேன்.

**"அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)"** என்னும் தலைப்பில் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கி ஆக்கத்திற்கு வித்திட்ட, அழகப்பா பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர், பதிவாளர், புலமுதன்மையர் மற்றும் ஆராய்ச்சிப்புலம் சார்ந்த அலுவலகப் பெருமக்கள் அனைவருக்கும் நெஞ்சம் நிறை நன்றிகளைச் செந்தமிழால் சிறப்புடனே செப்பி மகிழ்கின்றேன்.

அழகப்பா அரசு கலைக்கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் முனைவர் பட்ட ஆய்வின் பயணத்தில் திறந்த மனதுடன் நல்வழிகாட்டிய தமிழ் உயராய்வு மையத்தின் துறைத்தலைவர் மதிப்பிற்குரிய பேராசிரியர் திரு.ம.துரை அவர்களுக்கும் அன்புநிறை நன்றிகளைத் தேன்தமிழால் தெற்றென உரைத்து மகிழ்கின்றேன்.

**"அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)"** எனும் பொருண்மையிலான முனைவர் பட்ட ஆய்விற்கு நெறியாளராக இருந்து கரம்பிடித்து, உரம்கொடுத்து, ஆய்வின் நுணுக்கங்களை இதமாய் வகுத்துரைத்து, இவ்ஆய்வினைச் சிறப்புடனே நடத்தி முடிப்பதற்கு இறைவன் கொடுத்த வரமாக எந்நேரமும் கனிவான இதயத்துடனும் ஊக்கத்துடனும் சுறுசுறுப்பில் தேனீயாய் அல்லும் பகலும் அயராமல் வழிகாட்டி ஆய்வின் இலக்கு நோக்கிப் பயணிக்கப் பெருந்துணை புரிந்த எனது நெறியாளர் அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தின் இணைப்பேராசிரியர் முனைவர் **மா.சிதம்பரம்** அவர்களுக்கு இதயம் நிறை நன்றிகளை என்றென்றும் இன்தமிழால் இனிதுடனே இயம்பி மகிழ்கின்றேன்.

மதிப்பிற்குரிய நெறியாளரின் குடும்பத்தினருக்கும் பாசமிகு நன்றிகளைப் பைந்தமிழால் வாசமுடனே வழங்கி மகிழ்கின்றேன்.

முனைவர் பட்ட ஆய்வினைச் செய்வதற்கு உதவி செய்த, அழகப்பா அரசு கலைக்கல்லூரித் தமிழ் உயராய்வு மையத்தைச் சேர்ந்த இருபால் பேராசிரியப் பெருமக்களுக்கும் அலுவலகப் பெருமக்களுக்கும் வாஞ்சைநிறை நன்றிகளை வண்டமிழால் வளமுடனே விளம்பி மகிழ்கின்றேன்.

முனைவர் பட்ட ஆய்வினைச் செய்வதற்கு உதவி செய்த, நான் பணியாற்றும் இயேசு சபையின் தே பிரித்தோ மேல்நிலைப்பள்ளியின் முன்னாள் தாளாளர் அருட் தந்தை லூர்துசாமி சே.ச., முன்னாள் தலைமையாசிரியர் அருட்தந்தை அகஸ்தின் சே.ச., இந்நாள் தாளாளர் அருட்தந்தை வின்சென்ட் அமல்ராஜ் சே.ச மற்றும் இந்நாள் தலைமையாசிரியர் அருட்தந்தை ஆரோக்கியசாமி சே.ச அவர்களுக்கும் தகைமைநிறை நன்றிகளை நற்றமிழால் நலமுடனே நவின்று மகிழ்கின்றேன்.

கல்விப்பாதையில் எனக்கு உரிய நேரத்தில் பேருதவி செய்த சிவகங்கை மறை மாவட்ட முன்னாள் மேதகு ஆயர் எட்வர்ட் பிரான்சிஸ் அவர்களுக்கும் அருட்தந்தை அருள்உயிர் அவர்களுக்கும் ஆழ்மன நன்றிகளைப் பொற்றமிழால் பொலிவுடனே பொழிந்து மகிழ்கின்றேன்.

முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட நாள் முதல் நெறியாளரை அடையாளம் காட்டியும், ஆய்வுக்கான உதவிகளை அன்புடன் செய்தும் தந்த, என்னுடன் பணியாற்றும் பட்டதாரித் தமிழாசிரியர் அருமைத்தம்பி முனைவர் ம.ஸ்டீபன் மிக்கேல்ராஜ் அவர்களுக்கும் எப்போதும் எனக்கு நல்மனதுடன் உதவி செய்துவரும், நண்பரும் உடன் பணியாற்றும் முதுகலை ஆங்கில ஆசிரியருமாகிய திரு.இ.ஜான் கென்னடி அவர்களுக்கும் என்னுடன் பணியாற்றும் பாசமிகு மூத்த முதுகலைத் தமிழாசிரியர் முனைவர் அ.மைக்கேல் குரூஸ் அவர்களுக்கும், உடன் பணியாற்றும் ஆசிரியப் பெருமக்களுக்கும், பள்ளியின் மூத்த அலுவலர் திரு.இ.பாண்டியராஜன் அவர்களுக்கும் திரு.க.ராஜ்குமார் அவர்களுக்கும் பண்பின் நிறை நன்றிகளைப் பாங்குடன் பகர்ந்து மகிழ்கின்றேன்.

‘அ’கரம் தொடங்கி வைத்துக் கல்வியைக் கருத்துடன் கற்றுக் கொடுத்த கீழக்கரை ஹமீதியா தொடக்கப்பள்ளி, மேல்நிலைப்பள்ளிகளின் அறிவுச்சுடர்களாம் பெருமதிப்பிற்குரிய இருபால் ஆசிரியப் பெருமக்கள் அனைவருக்கும் பணிவுநிறை நன்றிகளைக் கன்னித்தமிழால் கனிவுடனே நல்கி மகிழ்கின்றேன்.

என்னை ஈன்றெடுத்து, கல்வி வளர்ச்சியில் நிறை செலுத்தி வளர்த்து ஆளாக்கிய என் உயிரின் உயிரான தாய் தந்தையராம் அற்புதசாமி, அந்தோனியம்மாள் அவர்களுக்கும்

தன்னலம் கருதாது எப்போதும் நிறைமனதுடன் என் நலத்தில் அக்கறை கொண்ட என் உடன்பிறந்த சகோதரிகளுக்கும் சகோதரருக்கும்,

என் உயர்வில் எப்போதும் மகிழும் தாய்நிகர் சின்னம்மா திருமதி J.செபமாலைமேரி (தமிழாசிரியை பணிநிறைவு) அவர்களுக்கும்,

முனைவர் பட்ட ஆய்வின் இக்காலக் கட்டத்தில் எனக்கு முழு ஒத்துழைப்பு கொடுத்து, ஆய்வினை விரைந்து முடிக்க எந்நேரமும் உதவிசெய்த என் அன்பு மனைவி பட்டதாரி கணித ஆசிரியை திருமதி J.செபிஷிஜோசப் அவர்களுக்கும், உடன் உதவி செய்த பௌ. பபி பௌஸ்ட்டீனா, பௌ. சாரோன் ஜோஸ் ஆன்டனி ஆகிய என் பிள்ளைகளுக்கும்,

எனக்கு ஆர்வமூட்டி நம்பிக்கையூட்டிய சுற்றத்தார்க்கும் நட்பின் உறவுகளுக்கும், குறிப்பாக என் செயல்களை எப்போதும் பாராட்டும் உடன் பணியாற்றிய நண்பர் கீழக்கரை பட்டதாரி அறிவியல் ஆசிரியர் து.இரவி அவர்களுக்கும்,

பள்ளிக் காலத்தில் பாடித்திரிந்த பறவைகளாகி இன்றும் நாடித் திரியும் உறவுகளாகி, நட்பின் நற்பழக்கத்திற்கு உரியவராம், உரிமையானவராம் என் இதயத்துக்கு இனியவராம் நண்பர் முகைதீன் அப்துல்காதர் அவர்களுக்கும் நண்பரின் குடும்பத்தினருக்கும் நன்றிகளை அறத்தின் வழி நின்று முத்தமிழால் முனைப்புடனே கூறி மகிழ்கின்றேன்.

நன்றி மறவாத நல்மனதுடன்….

(அ.பௌலியன்ஸ்)

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா | – | அகநானூறு |
| அதி | – | அதிகாரம் |
| அப | – | அபக்கூக்கு |
| அரசர் | – | அரசர்கள் |
| அருணந்தி | – | அருணந்தி சிவாச்சாரியார் |
| ஆசார | – | ஆசாரக்கோவை |
| ஆமோ | – | ஆமோஸ் |
| இணை | – | இணைச்சட்டம் |
| இறைவாக்கு | – | இறைவாக்கினர் |
| இன்னா | – | இன்னா நாற்பது |
| இனியவை | – | இனியவை நாற்பது |
| உ. ஆ | – | உரையாசிரியர் |
| உரோ | – | உரோமையர் |
| எசா | – | எசாயா |
| எண் | – | எண்ணிக்கை |
| எபி | – | எபிரேயர் |
| எபே | – | எபேசியர் |
| எரே | – | எரேமியா |
| எஸ் | – | எஸ்ரா |
| எஸ் (கி) | – | எஸ்தர் கிரேக்கம் |
| ஒசே | – | ஒசேயா |
| ஔவை | – | ஔவையார் |
| கலா | – | கலாத்தியர் |
| கலி | – | கலித்தொகை |
| காஞ்சி.பு | – | காஞ்சி புராணம் |

| | | |
|---|---|---|
| குறள் | – | திருக்குறள் |
| குறுந் | – | குறுந்தொகை |
| கொரி | – | கொரிந்தியர் |
| கொலோ | – | கொலோசையர் |
| கொன்றை | – | கொன்றை வேந்தன் |
| சபை | – | சபை உரையாளர் |
| சால | – | சாலமோனின் ஞானம் |
| சிந்தா | – | சீவக சிந்தாமணி |
| சிறு | – | சிறுபஞ்சமூலம் |
| சிலம்பு | – | சிலப்பதிகாரம் |
| சாமு | – | சாமுவேல் |
| சீரா | – | சீராக்கின் ஞானம் |
| செக் | – | செக்கரியா |
| தானி | – | தானியேல் |
| திமொ | – | திமொத்தேயு |
| திரி | – | திரிகடுகம் |
| திரு | – | திருப்பாடல்கள் |
| திருத் | – | திருத்தூதர் பணி |
| திருமந் | – | திருமந்திரம் |
| திருவள்ளுவ | – | திருவள்ளுவ மாலை |
| திவாகரம் | – | திவாகர நிகண்டு |
| திருவாய் | – | திருவாய்மொழி |
| திவெ | – | திருவெளிப்பாடு |
| தொ. ஆ | – | தொகுப்பாசிரியர் |
| தொடக் | – | தொடக்க நூல் |
| தொல்.எழுத்து | – | தொல்காப்பியம் - எழுத்ததிகாரம் |
| தொல்.சொல் | – | தொல்காப்பியம் - சொல்லதிகாரம் |

| | | |
|---|---|---|
| தொல்.பொருள் | – | தொல்காப்பியம் - பொருளதிகாரம் |
| தோபி | – | தோபித்து |
| நச்சர் | – | நச்சினார்க்கினியர் |
| நற் | – | நற்றிணை |
| நன்- எழுத்து | – | நன்னூல் எழுத்ததிகாரம் |
| நாலடி | – | நாலடியார் |
| நான் | – | நான்மணிக்கடிகை |
| நீதி | – | நீதிமொழிகள் |
| நூ | – | நூற்பா |
| ப | – | பக்கம் |
| ப. ஆ | – | பதிப்பாசிரியர் |
| பக் | – | பக்கங்கள் |
| பட்டினம் | – | பட்டினப்பாலை |
| பதிற் | – | பதிற்றுப் பத்து |
| பழமொழி | – | பழமொழி நானூறு |
| பா. | – | பாடல் |
| பாரதி | – | பாரதியார் |
| பிங்கலம் | – | பிங்கல நிகண்டு |
| பிலி | – | பிலிப்பியர் |
| புறம் | – | புறநானூறு |
| புறப்பொருள் | – | புறப்பொருள் வெண்பாமாலை |
| பெருங் | – | பெருங்கதை |
| பேது | – | பேதுரு |
| மக்க | – | மக்கபேயர் |
| மணி | – | மணிமேகலை |
| மத் | – | மத்தேயு |
| மதுரை | – | மதுரைக்காஞ்சி |

| | | |
|---|---|---|
| மாற் | – | மாற்கு |
| முதுமொழி | – | முதுமொழிக்காஞ்சி |
| மேலது | – | மேலே குறிப்பிடப்பட்டது |
| யாக் | – | யாக்கோபு |
| யோ | – | யோபு |
| யோசு | – | யோசுவா |
| யோவா | – | யோவான் |
| யோவே | – | யோவேல் |
| வச | – | வசனம் |
| விடுதலை | – | விடுதலைப் பயணம் |
| லூக் | – | லூக்கா |
| லேவி | – | லேவியர் |
| p. | – | Page |
| Vol | – | Volume |

# முன்னுரை

தமிழ் இலக்கிய நெடும்பரப்பானது சங்ககாலம், சங்கம் மருவிய காலம், காப்பியக்காலம், பக்தி இலக்கியக் காலம், சிற்றிலக்கியக் காலம், நவீன இலக்கியக் காலம் என்பதாகப் பிரிக்கப்படுகின்றது. அவற்றுள் சங்கம் மருவிய காலத்தில் தோற்றம் பெற்ற இலக்கியங்கள் பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள் என்று அழைக்கப்படுகின்றன. அவை முறையே, திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, கார்நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்பனவாகும். இப்பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் பதினொரு நூல்கள் அற நூல்களாய் அமைகின்றன. இவ் அறநூல்களால் வலியுறுத்தப்படும் அற விழுமியங்கள் கிறித்தவர்களின் புனித நூலான திருவிவிலியத்திலும் உணர்த்தப்படும் அற விழுமியங்களோடு ஒத்தமைகின்றன. நிகழ்காலச் சூழலில் சிக்கி உழலும் இன்றைய மனித சமூகத்திற்கு வாழ்வியல் நெறிகளை நினைவுறுத்தி நல்வழியில் ஆற்றுப்படுத்த அவற்றை ஆய்வு செய்வது இன்றியமையாததாய் அமைகின்றது. எனவே உலகின் இருவேறு பகுதிகளில் தோற்றம் பெற்ற நூல்களுள் காணப்படும் அற விழுமியங்களை ஒப்பிட்டு ஆய்தல் என்னும் பொருண்மையின் அடிப்படையில் இவ் ஆய்வானது அமைகின்றது.

**ஆய்வுத்தலைப்பு:**

தமிழ் இலக்கியப் பரப்பில் சங்கம் மருவிய கால அற இலக்கியங்களில் காணப்படும் அறவிழுமியங்களைத் திருவிவிலியத்தோடு ஒப்பிட்டு ஆயும் வகையான் அமைந்த இவ் ஆய்விற்கான தலைப்பாக ‘‘**அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)**’’ என்பது அமைகின்றது.

**ஆய்வுநோக்கம்:**

சங்கம் மருவிய காலத்துத் தோற்றம் பெற்ற தமிழ் அற இலக்கியங்கள் காட்டும் அறவிழுமியங்களைத் திருவிவிலியத்தில் காணப்படும் அறவிழுமியங்களோடு ஒப்பிட்டு ஆய்ந்து விளக்குவதே இவ் ஆய்வின் நோக்கமாய் அமைகின்றது.

**ஆய்வுக் கருதுகோள்:**

மனித சமூகம் தோற்றக்காலம் தொடங்கி பல்வேறு வாழ்வியல் முறைகளைக் கட்டமைத்து வாழ்ந்து வந்திருக்கின்றது. எனினும் மனித சமூகம் நிலைப்பேறுடைய வாழ்வினைப் பெறுதற்குக் காலம் தோறும் அறவிழுமியங்களைப் பின்பற்றி வாழ்தல் என்பது இன்றியமையாததாகின்றது.

அத்தகைய அறவிழுமியங்களை இலக்கியங்கள் வரையறுத்துத் தருகின்றன. இடம், காலம் போன்றவற்றின் மாறுபாடுகள் அறவிழுமியங்களில் மாற்றத்தினை ஏற்படுத்துவதில்லை. அத்தகைய அளவுகோலின் அடிப்படையில் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் அறவிழுமியங்கள் ஒத்தமைகின்றன என்பதே இவ் ஆய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**ஆய்வுப் பயன்:**

தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் அற விழுமியங்கள் நிகழ்காலத் தலைமுறைக்கும் வருங்காலச் சமூகத்திற்கும் வழிகாட்டுவதாய் அமையும் என்பதே இவ் ஆய்வின் பயனாக அமைகின்றது.

**ஆய்வுஎல்லை:**

பதினெண்கீழ்க்கணக்கு என்னும் வகைப்பாட்டினுள் அமைந்துள்ள பதினொரு அறஇலக்கியங்களும் திருவிவிலியமும் இவ் ஆய்வின் எல்லையாக அமைந்துள்ளது.

**ஆய்வு முன்னோடிகள்:**

சங்கம் மருவிய காலத்துத் தோற்றம் பெற்ற தமிழ் அற இலக்கியங்கள் காட்டும் அறவிழுமியங்களைத் திருவிவிலியத்தில் காணப்படும் அறவிழுமியங்களோடு ஒப்பிட்டு ஆயும் இவ் ஆய்விற்கு, 'திருக்குறளும் விவிலியமும் காட்டும் அறக்கோட்பாடுகள்' என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஜோ.ஆல்வின் ஞானக்கண் என்பவரால் மேற்கொள்ளப்பெற்ற முனைவர் பட்ட ஆய்வும் 'தமிழிலக்கிய நீதிக்கருத்துகளும் விவிலியமும்' என்னும் தலைப்பில் ச.சூசையம்மாள் என்பவரால் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் மேற்கொள்ளப்பெற்ற ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வும் முன்னாய்வுகளாக அமைகின்றன.

**ஆய்வு ஆதாரங்கள்:**

தமிழ் அற இலக்கிய விழுமியங்களைத் திருவிவிலியத்தோடு ஒப்பிட்டு ஆயும் இவ் ஆய்விற்கான ஆய்வு ஆதாரங்கள் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இருவகைப்பட்டதாய் அமைகின்றன.

**முதன்மை ஆதாரங்கள்:**

சங்கம் மருவிய காலத் தமிழ் அற இலக்கியங்களாகிய திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்னும் பதினொரு நூல்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு தமிழ்நாடு விவிலிய மறைக்கல்வி திருவழிபாட்டு நடுநிலையத்தால் 1995

இல் வெளியிடப்பெற்றுள்ள திருவிவிலியமும் இவ் ஆய்வின் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

**துணைமை ஆதாரங்கள்:**

மேற்கண்ட ஆய்வுப் பொருண்மையோடு தொடர்புடைய இலக்கண நூல்கள், இலக்கிய நூல்கள், திறனாய்வு நூல்கள், சமய நூல்கள், திறனாய்வுக் கட்டுரைகள், இதழ்களில் வெளிவந்த கட்டுரைகள், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள், ஆங்கில நூல்கள் போன்றன இவ் ஆய்வின் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்:**

அற இலக்கியங்களும் திருவிவிலியமும் தோற்றம் பெற்ற காலத்தை ஆராயுமிடத்து வரலாற்றியல் அணுகுமுறை பின்பற்றப்படுகின்றது. அற இலக்கியங்கள் மற்றும் திருவிவிலியத்தின் அமைப்பு முறையை ஆராயுமிடத்து அமைப்பியல் அணுகுமுறையும் அற இலக்கியங்கள் மற்றும் திருவிவிலியத்தில் காணப்படும் அறவிழுமியங்களை விளக்குமிடத்து விளக்கவியல் அணுகுமுறை பின்பற்றப்பட்டுள்ளன. அற இலக்கியங்கள் மற்றும் திருவிவிலியத்தில் காணப்படும் அறவிழுமியங்களை ஒப்பிட்டு உரைக்குமிடத்தும் தமிழில் உள்ள பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டு உரைக்குமிடத்தும் ஒப்பியல் அணுகுமுறை ஆய்வியல் அணுகுமுறையாகப் பின்பற்றப்பட்டுள்ளது.

**ஆய்வுப் பகுப்பு:**

**‘அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)’** என்னும் தலைப்பிலான இவ் ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களைக் கொண்டு அமைந்துள்ளது. அவை முறையே,

1. வகைமை நோக்கில் அற இலக்கியமும் திருவிவிலியமும்
2. தனிமனித அற விழுமியங்கள்
3. இல்லற அற விழுமியங்கள்
4. சமூக அற விழுமியங்கள்

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்:**

முன்னுரை என்னும் பகுதியில் ஆய்வு அறிமுகம், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வுக் கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு முன்னோடிகள், முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரம் பற்றிய செய்திகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு, இயல் விளக்கங்கள், முடிவுரை, துணைநூற்பட்டியல் குறித்த செய்திகள் போன்றன இடம்பெற்றுள்ளன.

**'வகைமை நோக்கில் அற இலக்கியமும் திருவிவிலியமும்'** என்னும் முதலாவது இயலில் அற இலக்கியங்களுள் தலைமைத்தன்மை உடையதாய்த் திருக்குறள் அமைந்திருத்தல், திருவள்ளுவர் என்பதன் பெயர்க்காரணம், சங்க இலக்கியங்களிலும் நிகண்டுகளிலும் திருக்குறள், திருவள்ளுவர் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளமை, திருக்குறளின் வெண்பா அமைப்பு முறை, திருக்குறளின் நூற்சிறப்பு, திருக்குறள் உரைகள், திருக்குறள் மொழிபெயர்ப்புகள், திருக்குறள் குறித்த சான்றோர் மொழிகள், நாலடியாரின் சிறப்பு, நாலடியாரின் அமைப்பு முறைமை, பழமொழி நானூற்றின் அமைப்பு முறைமை, பழமொழிநானூற்றில் இடம்பெற்றுள்ள வரலாற்றுச் செய்திகள், திரிகடுகம் எனப் பெயர் அமைந்தமைக்கான காரணம், திரிகடுகத்தின் அமைப்பு முறைமை, நான்மணிக்கடிகை எனப்பெயர் பெற்றமைக்கான காரணம், நான்மணிக்கடிகையின் அமைப்பு முறைமை, சிறுபஞ்சமூலம் எனப் பெயர் அமைந்தமைக்கான காரணம், சிறுபஞ்சமூலத்தின் அமைப்பு முறைமை, ஏலாதி என்ற பெயரின் காரணம், ஏலாதி என்னும் நூலின் அமைப்பு முறைமை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது என்னும் நூல்களின் அமைப்பு முறைமை, காஞ்சி என்னும் துறை குறித்த வரையறையை இலக்கண நூல்களின் வழி விளக்கியுரைத்தல், முதுமொழிக்காஞ்சி என்னும் நூலின் அமைப்பு முறைமை, ஆசாரக்கோவையின் அமைப்பு முறைமை, ஆசாரக்கோவை ஆசிரியர் குறித்த செய்திகள், இயேசு கிறித்துவின் வரலாறு, விவிலியம் பெயர்க்காரணம் குறித்த செய்திகள், திருவிவிலியத்தின் தோற்றம், யாவே மரபு, எலோகிம் மரபு, இணைச்சட்டமரபு, குருக்கள் மரபு எனப்படும் மரபுகள் குறித்த பதிவுகள், திருவிவிலியத்தின் பிரிவுகள்,பழைய ஏற்பாட்டில் அமைந்துள்ள வரலாற்று நூல்கள், திருச்சட்ட நூல்கள், ஞானநூல்கள், இறைவாக்கு நூல்கள் என்னும் பிரிப்பு முறைமை, புதிய ஏற்பாட்டில் அமைந்துள்ள 27 நூல் தொகுதிகள் பற்றிய குறிப்புகள் போன்றன ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

**'தனிமனித அற விழுமியங்கள்'** என்னும் இரண்டாவது இயலில் தனிமனிதன் சமுதாயத்தில் பெறும் இடம், தனிமனிதன் அறவிழுமியத்தைப் பின்பற்றவேண்டியதன் இன்றியமையாமை, அறத்தின்வழி நிற்றலின் அருமை, தனிமனிதன் அடக்கத்தை உடைமையாய்க் கொள்வதன் அருமை, தனிமனிதன் பின்பற்ற வேண்டிய புலனடக்கத்தின் மேன்மை, இன்சொற் பயிறலின் உயர்வு, கொல்லாமை என்னும் நல்லறத்தை மேற்கொள்ளல், பொறையுடைமையைப் பொருளெனக் கொள்ளல், பயனில சொல்லாமை என்னும் பண்பினைக் கைக்கொள்ளல், தீவினை அச்சம், அன்புடைமை என்னும் ஆன்ற ஒழுக்கு, கள்ளாமை, வெகுளாமை, வாய்மை, ஒழுக்கமுடைமை என்னும் உயரிய நெறிகளைப் போற்றல், பணிவுடைமை என்னும் தகைசால்

பண்பினைப் பெறல், புறங்கூறாமையைப் போற்றி ஒழுகல், இன்னாசெய்யாமை என்னும் இயல்பைப் பெறல் என்பன போன்ற தனிமனித அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஒப்புநோக்கி ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

**'இல்லற அற விழுமியங்கள்'** என்னும் மூன்றாவது இயலில் குடும்ப அமைப்பானது சமுதாயத்தில் பெறும் இடம், இல்லறத்திற்கு அடிப்படையாய் அமையும் திருமணம் என்பதன் வரையறை, இல்வாழ்க்கையின் அடிப்படைக்கூறாய் அறம் அமைதலின் இன்றியமையாமை, இல்லறத்தில் பெண் பெறும் மதிப்புகள், வாழ்க்கைத் துணைநலமாய் அமையும் பெண் பின்பற்ற வேண்டிய கற்புடைமை என்னும் ஒழுகலாறு, சொற்காத்துச் சோர்விலள் ஆகல், தற்கொண்டானையும் காக்கும் தகைவுடைமை, சுற்றம் பேணல், விருந்தினரைப் போற்றல், வளத்தக்க வாழ்க்கைத்துணை ஆதல், நாணுடைமை என்னும் நலம் பெற்றுச் சிறத்தல், ஈன்று புறந்தருதல், இல்லறத்தில் ஆண்மகன் மனைவியின்பால் அன்பு பாராட்டல், இல்லறத் தலைமக்கள் நல்ல பெற்றோராய் அமைந்து சான்றோனாகிய மகனைச் சமூகத்திற்கு வழங்கல், இல்லறத்தின் நன்கலமாய் அமையும் நன்மக்களுக்குரிய கடமைகள், இல்லறத் தலைமக்களுக்கு அமைய வேண்டிய ஒப்புரவு என்னும் உயரிய பண்பு, இல்லறத்தலைவன் பின்பற்ற வேண்டிய பிறன்மனை நோக்காப் பேராண்மை, கடமையைச் செய்தலின் இன்றியமையாமை, இல்லறத்தின் குறிக்கோள்களுள் ஒன்றாய துறவறத்தினை மேற்கொள்ளலின் மேன்மை போன்ற அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஒப்புநோக்கி ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

**"சமூக அற விழுமியங்கள்"** என்னும் நான்காவது இயலில் சமுதாயம் என்பதன் சொற்பொருள் விளக்கம், சமுதாய வரையறை, சமுதாயச் சிந்தனை என்பதன் வரையறை, சமூகநேயத்தை வளர்த்தெடுக்கும் இறையுணர்வைக் கைக்கொள்ளல், வான்சிறப்பாய் அமையும் மழையினைப் போற்றல், நீத்தார் மேன்மையை அறிந்து ஒழுகல், சமூக அறம் பேணலில் நடுவுநிலைமை பெறும் இடம், அவா அறுத்து சமூக அறம் பேணல், உலக உயிர்களின் நன்மை பேணும் அருளுடைமையைப் பின்பற்றலின் சிறப்பு, உயிர்களின் பசிப்பிணியையும் வறுமைப்பிணியையும் போக்கும் ஈதலறத்தை மேற்கொள்ளலின் இன்றியமையாமை, சமூக அறத்தினைச் சிதைக்கும் கூடா ஒழுக்கத்தினை நீக்கி வாழ்தல், மனிதர்களிடத்து நல்லுறவைக் கட்டமைத்துச் சமூக மேம்பாட்டிற்கு உறுதுணையாய் அமையும் செய்ந்நன்றி அறிதலை மாந்தர்கள் பின்பற்றல், மெய்யுணர்தலின் மேன்மை, வெஃகாமை என்னும் சமூக அறம், தவத்தால் விளையும் சமூக விழுமியங்கள், ஊழ்வினை, நிலையாமையை மனிதன் உணர்வதன் வழித் தன்னலம் துறந்து சமூகநலம் பேண விழைதல், அரசியல் என்பதன் சொற்பொருள், அஞ்சாமை, அல்லல் நீக்கல், அளிஉடைமை, அறன் இழுக்காமை, அறிவுடைமை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, இன்சொலுடைமை, ஈகையுடைமை, ஊக்கமுடைமை, கடுஞ்சொல்

உரையாடாமை, காட்சிக்கு எளிமையுடைமை, தூங்காமை, பெண்வழிச் சேராமை, பொச்சாமை, மடியின்மை, மறன் இழுக்கா மானம் உடைமை, குற்றம் கடிதல், காலம் அறிதல் ஆகிய அரசனின் கடமைகள் போன்ற அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஒப்புநோக்கி ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

ஒவ்வோர் இயலின் முடிவிலும் அவ்வியலில் பெறப்பட்ட செய்திகள் தொகுப்புரையாக இடம்பெற்றுள்ளன.

ஆய்வின் வழிப் பெறப்பட்ட முடிவுகள் முடிவுரைப் பகுதியில் இடம்பெற்றுள்ளன.

துணைநூற்பட்டியலில் ஆய்விற்குத் துணையாய் அமைந்த நூல்கள், அகராதிகள், கலைக்களஞ்சியங்கள், இதழ்கள், ஆங்கில நூல்கள் போன்றன அகர வரிசைப்படுத்தப்பட்டு இடம்பெற்றுள்ளன.

**இயல் - 1**

## பொருளடக்கம்

## வகைமை நோக்கில் அற இலக்கியமும் திருவிவிலியமும்

பதினெண்கீழ்கணக்கு நூல்களுள் திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்னும் பதினொரு நூல்கள் அற நூல்களாய் அமைகின்றன. இவ் அறநூல்கள் மனித சமூகம் மாண்புறுவதற்கான பல்வேறு அறக்கருத்துகளை முன்மொழிகின்றன. கிறித்தவர்களின் புனித நூலாகக் கருதப்படும் திருவிவிலியம் சமயம் சார்ந்த நூல் எனினும் தமிழ் அறநூல்களால் வலியுறுத்தப்படும் அற விழுமியங்கள் திருவிவிலியத்திலும் உணர்த்தப்படும் அற விழுமியங்களோடு ஒத்தமைகின்றன. இத்தகைய அறவிழுமியங்களை ஒப்பிடுவதாய் அமைந்த இவ் ஆய்வின் முதல் இயலாகிய இவ் இயலானது அறநூல்களின் தோற்றம், அமைப்பு முறைமை போன்றவற்றையும் திருவிவிலியத்தின் தோற்றம், அமைப்பு முறைமை போன்றவற்றையும் ஆய்ந்து விளக்குவதாய் அமைகின்றது.

**திருக்குறள்:**

தமிழில் தோன்றிய அறநூல்களுள் தலைமைத்தன்மை உடையதாய்ப் போற்றப்படும் நூல் திருக்குறள் ஆகும். இந்நூலினை இயற்றியவர் திருவள்ளுவர் ஆவார். இவரின் பிறப்பு, வாழ்வு போன்றவை குறித்து முழுமையாக அறிய முடியவில்லை. இதனை,

**“**திருவள்ளுவர் பிறப்பு, வளர்ப்பு, முதலியவற்றைப் பற்றிய உண்மை வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. அவரது வரலாறு பலவாறு கூறப்படுகிறது. திருவள்ளுவர் தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்தவர் என்பதும் மக்கள் சார்ந்தவர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றது”[1] எனக் குறிப்பிடுவார் மு.வ.

‘வள்ளுவன்’ என்பது இயற்பெயராகவோ அல்லது தொழில் பற்றிய பெயராகவோ அமைந்திருக்கலாம். வள்ளுவன் என்பான், அரசனின் கட்டளையை முரசறைந்து அறிவிப்பவன் என்பதைப் பெருங்கதை,

“ஏற்றுரி போர்த்த விடியுறழ் தழங்குகுரற்

கோற்றொழில் வேந்தன் கொற்ற முரசம்

பெரும்பணைக் கொட்டிலு ளரும்பலி யோச்சி

முற்றவை காட்டிக் கொற்றவை பழிச்சித்

திருநாள் படைநாள் கடிநா ளென்றிப்

பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்

செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்”[2]

என்ற பாடல் அடிகளால் குறிப்பிடுகின்றது. வள்ளுவன் என்பவன் அரசர்க்கு உள்படு கருமத் தலைவனாய் விளங்குபவன் என்பதனை,

‘‘வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்கு

உள்படு கருமத் தலைவர்க் கொன்றும்.’’[3]

எனப் பிங்கல நிகண்டின் வழி அறிய முடிகின்றது. வள்ளுவன் என்பவன் புள்ளுவன் (நிமித்திகன்) என்று சீவகசிந்தாமணியும் கூறுவதனை,

‘‘நிலம் திரு நீங்கும் என்று ஓர் நிமித்திகன் நெறியில் சொன்னான்’’ [4]

‘‘மந்திரத்து அரசன் வல்லே நிமித்திகன் வருக என்றாற்கு’’[5]

என்ற அடிகள் விளக்கி நிற்கும். “‘வள்’ என்னும் அடிச்சொல்லிற்கு அமைந்த பலபொருள்களுள் கூர்மை, வலிமை, வண்மை”[6] என்பனவும் அமையும். எனவே, வள்ளுவன் என்னும் சொல்லிற்கு கூர்மதியன், வல்லவன், வள்ளியோன் என்று முப்பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்தாம். வள்ளுவர் என்பது உயர்வுப் பன்மை அமைந்தது என்பது பொருத்தப்பாடு உடையதாகும். இவரது வாழ்வியல் ஒழுக்கத்தின் உயர்வும் திருக்குறளின் மறைத் தன்மையும், இவருக்குத் தெய்வத்தன்மையை உண்டாக்கியதினால், இவர் பெயர்க்கு முன் திரு என்னும் அடைமொழி சேர்க்கப்பெற்றது. தெய்வப் புலவர், பொய்யில் புலவர், முதற்பாவலர், பெருநாவலர், செந்நாப் போதார், நாயனார் முதலிய பிற பெயர்களாலும் அவர் சிறப்பிக்கப்படுகிறார்.

திருவள்ளுவர் காலத்தினை இந்த நூற்றாண்டு எனத் திட்டமிட்டு உரைக்க இயலாதெனினும் தொல்காப்பியர் காலத்திற்கும் கடைச்சங்க காலத்திற்கும் இடைப்பட்டதென்று கொள்ளப்படுகின்றது. புறநானூற்றில், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடிய பாட்டில்

‘‘ ---- நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்

செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென

அறம்பா டிற்றே ஆயிழை கணவ”[7]

எனக் குறிப்பிடுவதில்,

“எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு” (குறள்:.110)

என்னும் குறளின் கருத்தானது காணப்படுகின்றது. மேலும் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் பாடிய பாட்டில் அமைந்துள்ள

“ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே”[8]

என்ற அடியில்,

“ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்

சான்றோன் எனக் கேட்ட தாய்” ( குறள் - 99 )

என்ற குறளில் அமைந்துள்ள ‘ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும்’ என்னும் தொடர் குறிக்கப்பட்டுள்ளமையும் சுட்டுதற்குரியதாம்.

“செங்களத் துழவுவோள் சிதைந்துவே றாகிய

படுமகன் கிடக்கை காணூஉ

ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே”[9].

என்னும் புறப்பாட்டுப் பகுதி, ‘தன்மகனைச் சான்றோ னெனக் கேட்ட தாய்”. என்னுங் குறட்பகுதியொடும் முற்றும் பொருத்தமுடையதாய் அமைவதாகும்.

“பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா

பிற்பகல் தாமே வரும்” (குறள்:319)

என்ற குறட்கருத்தானது

“முற்பகற் செய்தான் பிறன்கேடு தன்கேடு

பிற்பகற் காண்குறூஉம் பெற்றியகாண்”[10]

என்று கி.பி.2-ஆம் நூற்றாண்டின் சிலப்பதிகார அடிகளில் அமைந்திருக்கின்றது. அதே நூற்றாண்டில் தோற்றம் பெற்ற மணிமேகலையில்,

“தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்

பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்''[11]

என்று, சீத்தலைச் சாத்தனார் சதுக்கப் பூதத்தின் கூற்றாகத் திருக்குறளை எடுத்துரைத்துள்ளார். எனவே திருக்குறளின் காலம் கடைச்சங்க காலத்திற்கு முற்பட்டது என்பது தெரியவருகின்றது.

**திருக்குறள்: - பெயர்க்காரணம்**

திருக்குறளில் அமைந்துள்ள பாக்கள் அனைத்தும் குறள் வெண்பா என்னும் வெண்பா யாப்பு வகையினைச் சேர்ந்தவை. அக்காலத்தில் இவ்வகை வெண்பாக்களால் ஆகிய முதல் நூலும் ஒரே நூலும் இதுதான். குறள் வெண்பாக்களால் ஆனமையால் 'குறள்' என்றும் அதன் உயர்வு கருதித் 'திரு' என்ற அடைமொழியுடன் 'திருக்குறள்' என்றும் பெயர் பெறுகிறது. திருக்குறளானது ஈரடிகளில் அறக்கருத்துகளைச் சொன்னதால், இது 'ஈரடி நூல்' என்றும், அறம், பொருள், இன்பம் அல்லது காமம் என்னும் முப்பெரும் பிரிவுகளைக் கொண்டதால், 'முப்பால்' என்றும் அழைக்கப்படுகின்றது. மேலும் உத்தரவேதம்,பொய்யாமொழி, வாயுரை வாழ்த்து, தெய்வநூல், தமிழ் மறை என்பனவும் இதன் பெயர்களாய் அமைந்துள்ளன. திருக்குறளுக்கு அமைந்துள்ள பெயர்களுள் 'வாயுறை வாழ்த்து' என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.வாயுறை வாழ்த்து என்பதற்குத் தொல்காப்பியம்,

''வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்

வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்

தாங்குதலின்றி வழிநனி பயக்குமென்

ஓம்டைக் கிளவியின் வாயுறுத் தற்றே''[12]

என்று இலக்கணம் வகுக்கும். திருக்குறள் இத்தகைய அறக்கருத்துகளை வலியுறுத்தி உரைத்தமையால் 'வாயுறை வாழ்த்து' என்று அழைக்கப்படலாயிற்று. மேலும் திருக்குறள் கருத்துகளை இன, மொழி, பாலின வேறுபாடுகளின்றி காலம் கடந்தும் அனைவருக்கும் பொருந்துவது போல் கூறி உள்ளதால் இந்நூல் 'உலகப் பொது மறை' என்றும் அழைக்கப்படுகிறது.

**திருக்குறளின் வெண்பா அமைப்பு முறை:**

செய்யுள் இயற்றுவதற்கான பாவகையினை ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா எனத் தொல்காப்பியம் எடுத்துரைக்கும். இந்நால்வகைப் பாவுள் சிறந்தது வெண்பா ஆகும். இதனை.

''காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்

பேசும் உலாவிற் பெதும்பை புலி - ஆசு

வலவர்க்கு வண்ணம் புவியாமற் றெல்லாப்

புலவர்க்கும் வெண்பாப் புலி."[13]

என்ற தனிப்பாடல் எடுத்துரைக்கும். இத்தகைய வெண்பாவுட் குறுகியது குறள் வெண்பா ஆகும். பயனில் சொல் பகர்வானைப் பதடி எனப் பழித்துரைக்கும் திருவள்ளுவர், சொற்சுருக்கம் பற்றிக் குறள் வெண்பாவையே தம் நூற்கான பாவகையாக எடுத்துக் கொண்டார். திருவள்ளுவரின் வெண்பாச்சிறப்பினை,

''பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்

ஆவிற் கருமுனியா யானைக் கமரரும்பல்

தேவிற் றிருமால் எனச்சிறந்த தென்பவே

பாவிற்கு வள்ளுவர்வெண்பா."[14]

என்னும் திருவள்ளுவ மாலைப் பாடல் எடுத்துரைக்கும்.

**திருக்குறளின் நூற்சிறப்பு:**

தமிழில் தோன்றிய அறநூல்கள் யாவற்றிலும் தனித்த சிறப்புடைய நூல் திருக்குறள்ஆகும். இதன் தனிச் சிறப்பினை,

''திருக்குறள் பலருக்கும் பலவகையாகப் பயன்படும் சிறப்பு வாய்ந்த தனி நூலாகும்.இலக்கிய ஆராய்ச்சியாளர் அதைத் தலைசிறந்த இலக்கியமாகக் கற்றுக் கலைநயம் காணலாம்.அறவோர் சமய நூலெனப் போற்றி ஒழுக்க முறைகளைக் கற்கலாம்.அரசியலார் அரசியல் நூலென மதித்தும் பல நுணுக்கங்களைக் காணலாம்.இவ்வாறே ஒவ்வொரு சாராரும் தம் தம் துறைக்கு ஏற்ற கருத்துகளைக் காணலாம்.பொதுவாக வாழ்க்கையை ஆராய்ந்து விளக்கியுள்ள எல்லா நூல்களும் இவ்வாறு பலர்க்குப் பலவேறு வகையாகப் பயன்படுவனவே ஆகும்''[15] எனக் குறிப்பர்.

திருக்குறளின் நூற்சிறப்பினை,

“நிழலருமை வெய்யிலிலே நின்றறிமின் ஈசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின் - பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்.”[16]

என்ற ஔவையாரின் தனிப்பாடலும்,

“பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ.”[17]

என்ற பரிமேலழகருரைச் சிறப்புப் பாயிரமும்

“ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி.” [18]

என்ற பழமொழியும் எடுத்துரைத்து நிற்கின்றன. வள்ளுவரின் புலமை நுட்பத்தினை.

“புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேல்
சிலவர் புலவரெனச் செப்பல் நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றும்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்.”[19]

என்னும் திருவள்ளுவமாலைப்பாடலும் கருத்துச் சிறப்பினை,

“மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுதும் நயந்தளந்தான் - வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து”[20]

என்னும் திருவள்ளுவமாலைப்பாடலும் உணர்த்தி நிற்கின்றன. மேலும் திருக்குறள் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் பெற்றியினை உடையதாகும். இந்நூலின் இத்தகைய சிறப்பினை,

''தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட

பனையளவு காட்டும் படித்தால் - மனையளகு

வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்

வெள்ளைக் குறட்பா விரி'' [21]

என்னும் திருவள்ளுவமாலைப் பாடல் எடுத்துரைக்கின்றது. மேலும் கருத்துகளை அனைவருக்கும் விளங்கவைத்தலின் உயர்வினை,

''பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு

தெரிந்து திறந்தொறுஞ் சேரச் - சுருங்கிய

சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்

வல்லாரார் வள்ளுவரல் லால்''[22]

என்னும் திருவள்ளுவமாலைப்பாடலும் உணர்த்தும்.

**நூலின் அமைப்பு**

இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் அல்லது காமத்துப்பால் என்னும் முப்பெரும் பிரிவுகளாய் அமைந்துள்ளது.

**நூற் பிரிவுகள்**

திருக்குறளில் அமைந்துள்ள அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால்களாகிய இவை ஒவ்வொன்றும் 'இயல்' என்னும் பகுதிகளாக மேலும் பகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு இயலும் சில குறிப்பிட்ட எண்ணிக்கையான அதிகாரங்களைக் கொண்டதாக விளங்குகின்றது. அதன் அடிப்படையில் அறத்துப்பால் 38 அதிகாரங்களையும் பொருட்பால் 70 அதிகாரங்களையும் காமத்துப்பால் 25 அதிகாரங்களையும் தன்னுட் கொண்டதாய் அமைந்துள்ளன. ஒவ்வொரு அதிகாரமும் பத்து பாடல்களைத் தன்னுள் அடக்கியது. இதனுள் 133 அதிகாரங்களும் 1330 பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

**அறத்துப்பால்**

திருக்குறளின் அறத்துப்பாலில் பாயிரவியலைத் தொடர்ந்து முதலாவதாக 20 அதிகாரங்களுடன் ‘இல்லறவியல்’ அடுத்து 13 அதிகாரங்கள் கொண்ட ‘துறவறவியல்’ இறுதியில் ‘ஊழ்’ என்னும் ஒரே அதிகாரம் கொண்ட ‘ஊழியல்’ என வகைபடுத்தப்பட்டுள்ளது. திருக்குறளில் ஒரே ஒரு அதிகாரம் உடைய இயல் ‘ஊழியல்’ மட்டுமே ஆகும்.

**பாயிரவியல்:**

திருக்குறளில் ‘பாயிரம்’ என்னும் இயலில் நான்கு அதிகாரங்கள் வைக்கப்பட்டுள்ளன. அதில் முதலாவது , ‘கடவுள் வாழ்த்து’ என்னும் அதிகாரம் ஆகும். அதைத்தொடர்ந்து, ‘வான் சிறப்பு’ ‘நீத்தார் பெருமை’ ‘அறன் வலியுறுத்தல்’ ஆகிய அதிகாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**இல்லறவியல்**

இதனுள் இடம்பெற்றுள்ள அதிகாரங்கள் முறையே இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு, அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றி அறிதல், நடுவுநிலைமை, அடக்கம் உடைமை, ஒழுக்கம் உடைமை, பிறன் இல் விழையாமை, பொறை உடைமை, அழுக்காறாமை, வெ.்.காமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, தீவினை அச்சம், ஒப்புரவு அறிதல், ஈகை, புகழ் என்பனவாகும்.

**துறவறவியல்:**

இதனுள் அருள் உடைமை, புலால் மறுத்தல், தவம், கூடா ஒழுக்கம், கள்ளாமை, :வாய்மை, வெகுளாமை, இன்னா செய்யாமை, கொல்லாமை, நிலையாமை, துறவு, மெய் உணர்தல், அவா அறுத்தல் என்னும் அதிகாரங்கள் இடம்பெற்றுள்ளன.

**ஊழியல்**

இதனுள் ஊழ் என்னும் அதிகாரம் மட்டும் இடம்பெற்றுள்ளது.

**பொருட்பால்**

பொருட்பாலில் அரசு இயல், அமைச்சு இயல், ஒழிபு இயல் ஆகிய இயல்கள் அமைந்துள்ளன. அரசு இயலில் 25 அதிகாரங்கள் உள்ளன. அமைச்சு இயலில் 32 அதிகாரங்களும், ஒழிபு இயலில் 13 அதிகாரங்களுமாக மொத்தம் 70 அதிகாரங்கள் உள்ளன.

**அரசியல்:**

இதனுள் இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றம் கடிதல், பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினம் சேராமை, தெரிந்து செயல்வகை, வலி அறிதல், காலம் அறிதல், இடன் அறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றம் தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம், ஒற்றாடல், ஊக்கம் உடைமை, மடி இன்மை, ஆள்வினை உடைமை, இடுக்கண் அழியாமை என்பன இடம்பெற்றுள்ளன.

**அமைச்சியல்:**

இதனுள் அமைச்சு, சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினை செயல்வகை, தூது, மன்னரைச் சேர்ந்து ஒழுகல், குறிப்பு அறிதல், அவை அறிதல், அவை அஞ்சாமை என்பன இடம்பெற்றுள்ளன.

**அரணியல்:**

இதனுள் நாடு, அரண், பொருள் செயல்வகை என்னும் அதிகாரங்கள் இடம்பெற்றுள்ளன.

**படையியல்:**

இவ்வியலுள் படைமாட்சி, படைச்செருக்கு, நட்பு, நட்பு ஆராய்தல், பழைமை, தீ நட்பு, கூடா நட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, இகல், பகை மாட்சி, பகைத்திறம் தெரிதல், உட்பகை, பெரியாரைப் பிழையாமை, பெண்வழிச் சேறல், வரைவில் மகளிர், கள் உண்ணாமை, சூது, மருந்து என்னும் அதிகாரங்கள் அமைந்துள்ளன.

**குடியியல்:**

இதனுள் குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில் செல்வம், நாண் உடைமை, குடி செயல்வகை, உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை என்னும் அதிகாரங்கள் அமைந்துள்ளன.

**காமத்துப்பால்:**

காமத்துப்பாலில் களவியல் மற்றும் கற்பியல் என இரண்டு இயல்கள் அமைந்துள்ளன. களவியலில் 7 அதிகாரங்களும், கற்பியலில் 18 அதிகாரங்களுமாக மொத்தம் 25 அதிகாரங்கள் உள்ளன.

**களவியல்:**

இதனுள் தகையணங்குறுத்தல், குறிப்பறிதல், புணர்ச்சி மகிழ்தல், நலம் புனைந்து உரைத்தல், காதற் சிறப்பு உரைத்தல், நாணுத் துறவு உரைத்தல், அலர் அறிவுறுத்தல் என்னும் அதிகாரங்கள் அமைந்துள்ளன.

**கற்பியல்**

இதனுள் பிரிவாற்றாமை, படர் மெலிந்து இரங்கல், கண் விதுப்பு அழிதல், பசப்பு உறு பருவரல், தனிப்படர் மிகுதி, நினைந்தவர் புலம்பல், கனவு நிலை உரைத்தல், பொழுது கண்டு இரங்கல், உறுப்பு நலன் அழிதல், நெஞ்சொடு கிளத்தல், நிறை அழிதல், அவர் வயின் விதும்பல், குறிப்பு அறிவுறுத்தல், புணர்ச்சி விதும்பல், நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம், ஊடல் உவகை என்பன அமைந்துள்ளன.

**திருக்குறள் உரைகள்:**

பழங்காலத்தில் இதற்குப் பலர் உரை எழுதியுள்ளனர். எனினும் இதற்கு உரை எழுதிய பதின்மர் பெரிதும் குறிக்கப்படுகின்றனர்.

‘‘தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்

பரிதி பரிமே லழகர்-திருமலையார் மல்லர்

பரிப்பெருமாள் காளிங்கர், வள்ளுவர்நூற்கு

எல்லையுரை செய்தா ரிவர்’’[23]

என்கிறது பழைய வெண்பா. இவற்றுள் புகழ் வாய்ந்ததாக விளங்குவதும் அதிகமாகப் பயன்படுத்தப்படுவதும் பரிமேலழகர் உரைதான். இவ்வுரையின் சிறப்பினை,

‘‘---------------------------------------------நூலிற்

பரித்த உரையெல்லாம் பரிமேலழகன்

தெரித்த உரையாமோ தெளி’’[24]

என்ற பாடல் அடிகள் எடுத்துரைக்கும். தற்காலத்திலும் திருக்குறளுக்குப் பலர் விளக்க உரைகளை எழுதியுள்ளனர். இவற்றுள் சிறப்பாகக் கருதப்படுவது டாக்டர் மு.வரதராசனாரின் உரையாகும்.

**திருக்குறள் மொழிபெயர்ப்புகள்**

திருக்குறள் இந்திய மொழிகள் மற்றும் உலக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**இந்திய மொழிகள்:**

திருக்குறள் குஜராத்தி, இந்தி, வங்காள மொழி, கன்னடம், கொங்கணி மொழி, மலையாளம், மராத்தி, மணிப்புரியம், ஒரியா, பஞ்சாபி, இராஜஸ்தானி, சமற்கிருதம், சௌராட்டிர மொழி, தெலுங்கு போன்ற பல்வேறு இந்திய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**ஆசிய மொழிகள்**:

அரபி, பருமிய மொழி, சீனம், பிஜியன், இந்தோனேசிய மொழி, சப்பானியம், கொரிய மொழி, மலாய், சிங்களம், உருது போன்ற பல்வேறு உலக மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**உலக மொழிகளில் திருக்குறள்**

உலகிலேயே அதிக மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள நூல்களில் மூன்றாம் இடத்தைத் திருக்குறள் வகிக்கின்றது. ஐரோப்பிய மக்களுக்கு லத்தீன் மொழியில் 1730 இல் திருக்குறளை அறிமுகப்படுத்தியவர் வீரமாமுனிவர் ஆவார். திருக்குறள் கருத்துகளை (Extracts from "Ocean of Wisdom") 1794ஆம் ஆண்டு முதன் முறையாக ஆங்கில மொழியில் அறிமுகப்படுத்தியவர் கின்டெர்ஸ்லே. ஏரியல் திருக்குறளைப் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்தார். ஏ,எப்.காமெரஸ் திருக்குறளை ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்தார்.ஜி.யு: போப் திருக்குறளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார், செக், டச்சு, ஆங்கிலம், பின்னிய மொழி, பிரெஞ்சுமொழி, செருமன், அங்கேரிய மொழி, இத்தாலிய மொழி, இலத்தீன், நார்வே மொழி, போலிய மொழி, ரஷிய மொழி, எசுப்பானியம், சுவீடிய மொழி ஆகிய 14 ஐரோப்பிய மொழிகளிலும் திருக்குறள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

**திருக்குறள் குறித்த சான்றோர் மொழிகள்:**

**காந்தி அடிகள்:**

மகாத்மா காந்தியடிகள் தான் தமிழ் பயிலத் தொடங்கியதற்குக் காரணம் திருக்குறளே எனக் குறிப்பதற்கு,

"யான் தமிழ் பயிலத் தொடங்கியதற்குக் காரணம் திருக்குறள் மூலத்தையே நேராகப் படித்தல் வேண்டும் என்று என் உள்ளத்தில் எழுந்த ஆவலே ஆகும்"[25] என்ற அவர்தம் கூற்று சான்றாகும்.

**ஜான் முர்டாக்:**

“திருக்குறளுக்கு இணையான ஒரு அறநூல் இந்திய மொழிகளிலே பிற எந்த மொழியிலும் இல்லை” [26] எனக் குறிப்பார் ஜான் முர்டக்.

**ஜி.யு.போப்:**

“திருக்குறள் தமிழ் நூல்கள் எல்லாவற்றிலும் உயர்ந்து நிற்கிறது.ஒரு நாட்டு மக்களின் உள்ளத்திலுள்ள உயிரிலே இடம் கொண்டு என்றென்றும் அழியாது விளங்கும் ஒரு சில பெருநூல்களில் குறளும் ஒன்று”[27] எனத் திருக்குறளின் சிறப்பினை வியந்து போற்றுவார் ஜி.யு.போப்

**நாலடியார்:**

திருக்குறளுக்கு அடுத்த இடத்தில் வைத்து எண்ணப்படுவது நாலடியார். நாலடி வெண்பாக்கள் கொண்ட நீதி நூல்கள் வேறு பல உண்டு. எனினும், இந்நூலின் சிறப்புக் கருதி இதனை மட்டும் ‘நாலடி’ என்று வழங்கினர். மேலும் ‘ஆர்’ விகுதி சேர்த்து நாலடியார் எனப்பட்டது. நானூறு வெண்பாக்கள் உடைமையால் ‘நாலடி நானூறு’ என்றும் வழங்கப்படுகிறது. இதற்கு ‘வேளாண் வேதம்’ என்ற பெயரும் உண்டு.

“பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்”[28]

என்னும் குறிப்பானது நாலடியாரின் சிறப்பினை உணர்த்தி நிற்கின்றது.

**நூலின் அமைப்பு:**

இந்நூல் ஒருவரால் இயற்றப்பட்டதன்று. இதனை, சமண முனிவர் பலரும் இயற்றிய வெண்பாக்களில் இருந்து தொகுக்கப்பெற்ற 400 வெண்பாக்களைக் கொண்ட நூல் என்பர்.இந்நூல் திருக்குறள் போன்றே முப்பால்களாகவும், பல இயல்களாகவும், அதிகாரங்களாகவும் பகுக்கப்பட்டுள்ளது.

**அறத்துப்பால்**

இப்பால் துறவற இயல், இல்லற இயல் என்ற இரண்டு இயல்களும் 13 அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, அறன் வலியுறுத்தல், தூய்தன்மை, துறவு, சினமின்மை, பொறையுடைமை, பிறர் மனை நயவாமை, ஈகை, பழவினை, மெய்ம்மை, தீவினையச்சம் என்பன இதனுள் அமைந்துள்ள இயல்கள் ஆகும்.

**பொருட்பால்**

இப்பாலில் அரசு இயல், நட்பு இயல், இன்ப இயல், துன்ப இயல், பொது இயல், பகை இயல், பல்நெறி இயல் என ஏழு இயல்களும் 24 அதிகாரங்களும் அடங்கும். அவைமுறையே, கல்வி, குடிப்பிறப்பு, மேன்மக்கள், பெரியாரைப் பிழையாமை, நல்லினம் சேர்தல், பெருமை, தாளாண்மை, சுற்றந்தழால்,நட்பாராய்தல், நட்பிற்பிழை பொறுத்தல், கூடா நட்பு, அறிவுடைமை, அறிவின்மை, நன்றியில் செல்வம், ஈயாமை, இன்மை, மானம், இரவச்சம், அவையறிதல், புல்லறிவாண்மை, பேதைமை, கீழ்மை, கயமை, பன்னெறி என்பனவாகும்.

**காமத்துப்பால்:**

இப்பாலில் இன்ப துன்ப இயல், இன்ப இயல் என இரண்டே இயல்களும், 3 அதிகாரங்களும் இடம்பெற்றுள்ளன.

பொது மகளிர், கற்புடை மகளிர், காமநுதலியல் என்னும் அதிகாரங்கள் இதனுள் அமைந்துள்ளன.

நாலடியாரில் சமண சமயத்திற்கே சிறப்பாகவுரிய பல உண்மைகள் அழகாகக் கூறப்பட்டுள்ளன. செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை ஆகியவற்றை அழகிய உவமைகள் வாயிலாக இந்நூல் விளக்கியுள்ளமை சிறப்புடையதாகும்.

**பழமொழி நானூறு:**

நாலடி போலவே நானூறு வெண்பாக்கள் கொண்ட நீதிநூல் பழமொழியாகும். பழமொழி நானூறு என்றும் இது வழங்கப்படுகின்றது. இதிலுள்ள ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் ஒரு பழமொழி இடம்பெறுகின்றது. பாடல் முழுவதும் அப்பழமொழியின் விளக்கமாக அமைகின்றது. பழமொழிகளைத் தொகுத்து இலக்கியமாக்கப்பட்டவற்றில் தொன்மையான தமிழ்நூல் இதுவேயாகும். திருக்குறள், நாலடியார் போன்ற அற நூல்களைத் தழுவிச் செல்வது இந்நூல்.

பழமொழியின் ஆசிரியர் முன்றுறை அரையனார் என்பவர். அரையனார் என்பது இயற்பெயர் அன்று. ‘‘அரையர் என்பது பொதுநிலையில் அரசரைக் குறிக்கும். இவர் ஒரு குறுநில மன்னராக இருக்கலாம்.அல்லது அரையர் என்ற சிறப்புப்பட்டம் பெற்ற அரசு அதிகாரியாக இருக்கலாம்’’[29]

என்பார் ச. வே. சுப்பிரமணியன். அரசியலில் உயர் பதவி வகித்தவராகவோ இருந்திருக்கலாம். முன்றுறை என்பது ஊர்ப்பெயர் ஆகும்.

இவ்வாசிரியர் சமண சமயத்தினர் என்பது நூலின் தற்சிறப்புப் பாயிரத்தில் ‘பிண்டியின் நீழல் பெருமான் அடி வணங்கி ------- முன்றுறை மன்னவன் செய்து அமைத்தான்’ என்று வருவது கொண்டு உணரலாம்.

இந்நூலில் 34 தலைப்புகளின் கீழ் பாடல்கள் அமைந்துள்ளன. அவை முறையே,

கல்வி (10) கல்லாதார் (6) அவையறிதல் (9) அறிவுடைமை (8) ஒழுக்கம் (9) இன்னா செய்யாமை (8) வெகுளாமை (9) பெரியாரைப் பிழையாமை (5) புகழ்தலின் கூறுபாடு (4) சான்றோர் இயல்பு (12) சான்றோர் செய்கை (9) கீழ்மக்கள் இயல்பு (7) கீழ்மக்கள் செய்கை (17)நட்பின் இயல்பு (10) நட்பில் விலக்கு (8) பிறர் இயல்பைக் குறிப்பால் அறிதல் (7) முயற்சி (13) கருமம் முடித்தல் (15) மறை பிறர் அறியாமை (6) தெரிந்து செய்தல் (13) பொருள் (9)பொருளைப் போற்றுதல் (8) நன்றியில் செல்வம் (14) ஊழ் (14) அரசியல்பு (17) அமைச்சர் (18)மன்னரைச் சேர்ந்தொழுகல் (19) பகைத்திறம் (26) படைவீரர் (16) இல்வாழ்க்கை (21) உறவினர் (9) அறம் செய்தல் (15) ஈகை (15) வீட்டு நெறி (13) என்பதாய் அமைகின்றன.

மனுநீதிச் சோழன் தன் மகனைத் தேரினைச் செலுத்திக் கொன்ற செய்தியும் (243), பாரி முல்லைக்குத் தேரும், பேகன் மயிலுக்குப் போர்வையும் அளித்த வரலாறும் (75), கரிகாலன் இரும்பிடர்த் தலையார் உதவியால் அரசு பெற்று ஆண்ட வரலாறும் (240), கரிகாலனுக்கு யானை மாலையிட்டு மன்னனாக்கிய செய்தியும் (231), அவனே நரைமுடிந்து வந்து நீதி வழங்கிய வரலாறும் (07) வேறு பல வரலாறுகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**திரிகடுகம்:**

கடவுள் வாழ்த்தோடு சேர்ந்து 101 வெண்பாக்களைக் கொண்ட நீதிநூல் இது. திரிகடுகம் என்பது சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று காரப் பொருள்கள் அடங்கியதாகும்.இதனை.

“திரிகடுகம் சுக்கு மிளகு திப்பிலி”[30]

எனக் குறிக்கும் திவாகரம். இதனைப் போன்று மூன்று அறக்கருத்துகளை ஒவ்வொரு பாடலும் கூறுவதால் இப்பெயர் பெற்றது. திரிகடுகம் உடல் நோயைத் தீர்ப்பது போல், அப்பெயர் கொண்ட இந்நூல் அகநோயைத் தீர்க்கவல்லது.

திரிகடுகம் செய்தவர் நல்லாதனார் என்பவராவார். ‘ஆதனார்’ என்பதுவே பெயர். “ஆதனும் பூதனும்”[31] என்ற சூத்திரத்தில் தொல்காப்பியரும் இப் பெயரைக் குறித்துள்ளார். ‘நல்’ என்பது

அடைமொழியாகும். திருத்து என்னும் ஊரில் பிறந்தவர் இவர் என்பது செல்வத்திருத்து உளார் செம்மல் என்ற சிறப்புப்பாயிரச் செய்யுளால் தெரிகின்றது. இவ்வூர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளது என்பர். இவ்வாசிரியர் இயற்றிய கடவுள் வாழ்த்தில் திருமாலின் புகழ் பேசப்படுவதால் இவர் வைணவ நெறியினர் என்பது பெறப்படுகிறது. இந்நூலாசிரியர் திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை ஆகியவற்றின் கருத்துக்களை எடுத்தாண்டுள்ளார்.

**நான்மணிக்கடிகை:**

நான்மணிக்கடிகை பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள், ஒன்று**.** நான்கு உயர்ந்த மணிகளால் ஆன அணிகலன் போல ஒவ்வொரு பாட்டிலும் நான்கு அரிய உண்மைகளைத் தொகுத்துக் கூறும் வெண்பாக்களைக் கொண்ட நூல் நான்மணிக்கடிகை. கடவுள் வாழ்த்து இரண்டு உட்பட, இதில் 104 செய்யுட்கள் உள்ளன. வாழ்த்துச்செய்யுள்கள் திருமாலை வாழ்த்துவதால் இதன் ஆசிரியர் விளம்பி நாகனார் வைணவர் என்பது விளங்கும்.

இவர் ‘விளம்பி’ என்ற ஊரில் பிறந்த நாகனார் என்ற பெயர் உடையவராக இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. இந்நூல் நான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது ஆகும்**.** இவற்றில் இரண்டு பாடல்களை ஜி.யூ.போப் அவர்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

“அல்லவை செய்தார்க்கு அறம் கூற்றம் ஆம் என்னும்
பல்லவையோர் சொல்லும் பழுதன்றே” **[32]**

என்னும் சிலப்பதிகார வெண்பாப்பகுதி இந்நூலில்,

“அல்லவை செய்வார்க்கு அறம் கூற்றம்” ( பா. 82 )

எனப் பயின்று வந்துள்ளது. வெற்றுச்சொல் யாதும் இன்றி ஒவ்வொரு பாட்டிலும் மிக உயர்ந்த வாழ்வியல் உண்மைகள் நான்கினைத் திறம்படத் தொடுத்துக் கூறியுள்ள ஆசிரியர் திறம் பாராட்டத்தக்கது.

**சிறுபஞ்சமூலம்**

சிறுபஞ்சமூலம் என்னும் தொடர் ஐந்து சிறிய வேர்கள் என்று பொருள்படும். அவ்வேர்களாவன: சிறுவழுதுணை, நெருஞ்சி, சிறுமல்லி, பெருமல்லி, கண்டங்கத்திரி என்பனவற்றின் வேர்களாகும். இவ்வேர்கள் உடற்பிணி போக்கி நலம் செய்வது போல, மக்களின் உயிர்ப்பிணியாகிய அறியாமையைப் போக்கி அதன் ஈடேற்றத்திற்கு உதவும் அரிய பெரிய உண்மைகளை ஐந்து ஐந்தாகச் செய்யுள்தோறும் கூறும் நூலும் சிறுபஞ்சமூலம் என்று பெயர் பெற்றது.

இதன் ஆசிரியர் காரியாசான் ஆவார். இதில், சிறப்புப்பாயிரங்கள் இரண்டும் 104 வெண்பாக்களும் உள்ளன. இரு செய்யுட்கள் இடைச்செருகல் எனக் கருத இடமுண்டு. “செந்தமிழ் தேற்றான் கவி செயலும் நாவகம் மேய் நாடின் நகை’ (பா. 11) என் தொடரும் ‘கேட்பவன் கேடில் பெரும்புலவன் பாட்டு அவன் சிந்தையால் ஆகும் சிறத்தல்’ (பா.32) என்ற தொடர்களும் ‘நூற்கு இயைந்த சொல்லின் வனப்பே வனப்பு’ (பா.36 ) என்ற அமைப்பும் இவர் நல்ல கவிதை அறிந்த நாவலர் என்பதை நமக்கு அறிவிக்கின்றன”[33] எனப் போற்றுவார் ச. வே. சுப்பிரமணியன்.

**ஏலாதி:**

ஏலம், இலவங்கம், நாககேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு பொருள்களையும் முறையே 1 : 2 : 3 : 4 : 5 : 6 என்ற விகிதத்தில் கலந்து செய்வது ஏலாதிச் சூரணமாகும். இம்மருந்து போல, ஒவ்வொரு செய்யுளாலும் ஆறு அரிய அறக்கருத்துகளைக் கொண்ட 80 வெண்பாக்களால் ஆன நூலும் ஏலாதி எனப் பெயர் பெற்றது. உடல்நோய் தீர்க்கும் ஏலாதிச் சூரணம் போல, இச் செய்யுட்களில் வற்புறுத்தப்படும் அறங்களும் அகநோய் நீக்கி நலம் செய்யும் என்பது கருத்து ஆகும்.

இதன் ஆசிரியர் கணிமேதாவியார் ஆவார். இவர் சோதிட நூல் வல்லவர் என்பது இவர் பெயரால் அறியப்படுகின்றது. திணைமாலை நூற்றைம்பதின் ஆசிரியரும் இவரே. இவர் மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனாரின் மாணாக்கராவார். அருகனுக்கு வணக்கம் சொல்லி நூலைத் தொடங்குவதால் இவர் சமணர் எனக் கருதலாம். இந்நூலில் இடம்பெற்றுள்ள,

“பொய்தீர் புலவர் பொருள்புரிந் தாராய்ந்த
மைதீருயர் கதியின் மாண்புரைப்பின் - மைதீர்
சுடரின்று; சொல்லின்று; மாறின்று; சோர்வின்
றிடரின் றினிதுயிலு மின்று” ( பா. 66 )

என்ற பாடலானது.

“பொய் இல் புலவர் புரிந்து உறையும்மேல் உலகம்
ஐயம் ஒன்று இன்றி அறிந்து உரைப்பின், வெய்ய
பகல் இன்று, இரவு இன்று, பற்று இன்று, துற்று இன்று,

இகல் இன்று, இளிவரவும் இன்று"[34]

என வரும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடலோடு பெரிதும் ஒப்புமையுடையதாகும்.

**இன்னா நாற்பது:**

நாற்பது என்னும் எண்தொகையால் குறிக்கப்பெறும் நான்கு நூல்கள் கீழ்க்கணக்கில் உள்ளன. அவற்றுள் கார்நாற்பதும், களவழி நாற்பதும் முறையே அகம், புறம் என்னும் பொருள் பற்றிப் பாடப்பெற்றவை ஆகும். எஞ்சிய இன்னா நாற்பதும் இனியவை நாற்பதும் அறம் உரைப்பன. இவ் இரண்டும் முறையே துன்பம் தரும் நிகழ்ச்சிகளும் இன்பம் தரும் செயல்களும் இன்னின்ன எனத் தொகுத்து உரைக்கின்றன. நூலுக்குப் புறம்பான கடவுள் வாழ்த்திலுங்கூட, 'இன்னா', 'இனிதே'என்னும் சொற்கள் அமைந்துள்ளன. நானாற்பது என்பதற்கு இலக்கண விளக்கப்பாட்டியல்

"காலம் இடம் பொருள் கருதி நாற்பான்

சால உரைத்தல் நானாற்பதுவே"[35]

என வரையறை தருகின்றது. இவற்றுள் காலம்பற்றி வருவது கார் நாற்பது; இடம் பற்றி வருவது களவழி நாற்பது; பொருள் பற்றி வருவன இன்னா நாற்பது இனியவை நாற்பதாம். இன்னா நாற்பது கடவுள் வாழ்த்து உள்பட 41 வெண்பாக்களைக் கொண்ட அறநூல். இதிலுள்ள ஒவ்வொரு பாட்டும் இன்னது இன்னது துன்பம் தருவது என்று கூறுவதால் இன்னா நாற்பது என்று பெயர் பெற்றது. தொல்காப்பியர் கூறும் அம்மை என்னும் வனப்பைச் சார்ந்தது இது. இதன் ஆசிரியர் கபிலர். இவர் சங்க காலத்துக் கபிலர் அல்லர். இந்நூலில் கூறியது கூறல் எனும் முறை காணப்படுகின்றது. கருத்தின் பெருமை கருதி, அக்கருத்து மக்கள் உள்ளத்தில் நன்கு பதிய வேண்டும் என்ற நோக்கத்தில் மீண்டும் மீண்டும் கூறியிருக்கக்கூடும் என்பர்.

**இனியவை நாற்பது:**

வாழ்விற்கு நன்மை தரும் இனிய அறக்கருத்துகளைக் கூறும் நாற்பது வெண்பாக்களைக் கொண்ட நூல் இனியவை நாற்பதாயிற்று. இதன் கடவுள் வாழ்த்தில் சிவபெருமானும், திருமாலும், நான்முகனான பிரம்ம தேவனும் வாழ்த்தப்படுகின்றனர். 'ஊரும் கலிமா' (பா.8) எனத் தொடங்கும் பாடல் மட்டும் ப:.றொடை வெண்பா ஆகும். ஏனைய பாடல்கள் அனைத்தும் நாலடி கொண்ட அளவியல் வெண்பாக்களாய் அமைந்துள்ளன.

இந்நூலின் நான்கு பாடல்கள் மட்டும் (1, 3, 4, 5) நான்கு இனிய பொருள்களைக் கூறுகின்றன. ஏனையவற்றில் மும்மூன்று கருத்துகளே கூறப்பட்டுள்ளன. இந்நூல் திரிகடுகத்தினை அடியொற்றிச்செல்வது என்பர்.

இந்நூலின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார். பூதன் என்பது இவர் தந்தையார் பெயர் ஆகும். இவர் பயன் கொள்ளும் 'பொலிசை' (பா. 39) என்னும் சொல்,

> ''பெண் பெற்ற பொலிசை பெற்றார் பிணை அனார் பெரிய யாமும்
>
> கண் பெற்ற பொலிசை பெற்றாம் இன்று எனக் கரைந்து முந்நீர்
>
> மண் பெற்ற ஆயுள் பெற்று மன்னுவாய் மன்ன என்னாப்
>
> புண் பெற்ற வேலினான் மேல் பூ மழை தூவினாரே'' [36]

எனச் சீவகசிந்தாமணியில் உள்ளது. எனவே ''இவர் காலம் சீவகசிந்தாமணியின் ஆசிரியர் திருத்தக்கத்தேவர் காலத்தை ஒட்டி அமையலாம் [37] என்பார் ச. வே. சுப்பிரமணியன்.

**முதுமொழிக்காஞ்சி:**

'முதுமொழி' என்பது மூதுரை அல்லது முதுசொல்லாகும். ஆண்டாலும் அறிவாலும் மூத்தோர் ஏனையோர்க்கு உலகியல் உண்மைகளை எடுத்துக் கூறுவது என்னும் பொருளில் முதுமொழிக் காஞ்சி எனப்பட்டது. காஞ்சி என்பது காஞ்சித் திணையில் தொல்காப்பியம் காட்டும் ஒரு துறை. அது ''கழிந்தோர் ஒழிந்தோர்க்குப் காட்டிய முறைமை''[38] என்னும் துறை என்று விளக்கப்பட்டுள்ளது.

> ''கழிந்தோர் ஏனை ஒழிந்தோர்க்குக் காட்டிய
>
> முதுமை ஆகும் முதுமொழிக்காஞ்சி''[39] (திவாகரம்: X. 107)

என்பது திவாகரம். இவ் விளக்கம் முதுமொழிக்காஞ்சி நூலுள் பொதிந்த பொருளைத் தெளிவாக உணர்த்தவில்லை. புறப்பொருள் வெண்பாமாலையில் 'முதுமொழிக் காஞ்சி' என்று ஒரு துறை அமைந்துள்ளது. இதனை, ''மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி''[40] என்று தொகைச் சூத்திரத்தில் சுட்டியதோடு, பின்னர்,

> ''பலர்புகழ் புலவர் பன்னினர் தெரியும்
>
> உலகியல் பொருள் முடிவு உணரக் கூறின்று''[41]

என்று விளக்கியும் ஆசிரியர் உரைத்துள்ளார். இந்நூலின் ஆசிரியர் மதுரைக் கூடலூர்கிழார் எனக் குறிக்கப்படுகின்றார். புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் என்ற சங்கப் புலவரினும் இவர் வேறானவர்.

ஒவ்வொரு பதிகமும் 'ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்' என்னும் தரவு அடியோடு தொடங்குகிறது. அடுத்து ஓரடிப் பாடல்கள் பத்து ஒவ்வொன்றிலும் தாழிசை போல அடுக்கி வருகின்றன. 18 நூல்களின் தொகுப்பான பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என அழைக்கப்படும் தமிழ் நூல் தொகுதியில் மிகச் சிறியது இது. பத்து அடிகளைக் கொண்ட ஒவ்வொரு பாடலுக்கும் தனித்தனிப் பெயர் வழங்கப்பட்டுள்ளது. இந்நூலில் பத்துப்பத்துக்கள் உள்ளன. ஒவ்வொரு பத்திலும் பத்து அறிவுரைகள் உள்ளன. ஒவ்வொரு பத்தும் ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம் என்று தொடங்குகின்றது. ஒவ்வொரு பத்துக்கும் ஒவ்வொரு பெயர் தலைப்பாக அமைகிறது. அப்பெயர் அப்பத்தில் அமைந்த எல்லாப் பத்துப் பாடல்களின் அடிகளிலும் இடம்பெறும். சிறந்த பத்து, அறிவுப்பத்து, துவ்வாப்பத்து என்றவாறு அப்பெயர்கள் அமையும்.

சிறந்த பத்து, அறிவுப் பத்து, பழியாப் பத்து, துவ்வாப் பத்து, அல்ல பத்து, இல்லைப் பத்து, பொய்ப் பத்து, எளிய பத்து, நல்கூர்ந்த பத்து, தண்டாப் பத்து என்பன இதனுள் அமைந்த பத்துகள் ஆகும். இந்நூலின் பாடல்களை உரையாசிரியர்கள் பலர் மேற்கோளாகக் காட்டியுள்ளனர். இதற்குத் தெளிவான பழைய பொழிப்புரை உள்ளது. திருக்குறளின் கருத்துகளும் தொடர்களும் இதில் பரவலாகக் காணப்படுகின்றது.

**ஆசாரக்கோவை:**

'ஆசாரம்' என்னும் வடசொல் ஒழுக்கம் என்று பொருள்படுவது. நல்லொழுக்கக் கோட்பாடுகளைத் தொகுத்துக் கோவையாகத் தருவதனால் இப்பெயர் பெற்றது. சிறப்புப் பாயிரம் நீங்கலாக இதில் நூறு வெண்பாக்கள் உள்ளன. வெண்பா வகையில் குறள், சிந்தியல், நேரிசை, இன்னிசை, ப.்.றொடை ஆகிய பல வகையும் இதில் உள்ளன.

இது வடமொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டது. இதனை,

"ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையான் ஆசாரம்

யாரும் அறிய அறனாய மற்று அவற்றை

ஆசாரக் கோவை எனத் தொகுத்தான்" (சிறப்புப்பாயிரம்)

என்ற ஆசாரக்கோவையின் சிறப்புப்பாயிரப் பகுதியால் அறிய முடிகின்றது.

இதன் ஆசிரியர் கயத்தூர்ப் பெருவாயில் முள்ளியார் என்னும் சான்றோர் ஆவார். பெருவாயில் என்ற ஊரினர் இவர் என்று தெரிகிறது. கயத்தூர் என்ற பெரிய ஊர் இதன் அருகில் இருந்திருக்க வேண்டும். இவர் வடமொழி வல்ல கல்வியாளர் என்பது நூலால் விளங்குகின்றது.

இந்நூலின் ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு விடயம் தொடர்பான ஒழுக்கத்தை எடுத்து இயம்புகின்றது.அகந்தூய்மையளிக்கும் உயர்ந்த அறங்களை வற்புறுத்துவதோடு, அன்றாட வாழ்க்கையில கடைப்பிடிக்க வேண்டிய நல்ல ஒழுகலாறுகளையும் இது வற்புறுத்தியுள்ளது. காலையில் எழுதல், காலைக்கடன் கழித்தல், நீராடல், உணவு உட்கொள்ளல், உறங்குதல் ஆகிய நடைமுறைகளின் பொழுது கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகளை இது போல் வேறு எந்த நூலும் சொல்லவில்லை. இதனுள் கூறப்படும் ஆசார வித்து,ஒழுக்கம் தவறாதவர் அடையும் நன்மைகள், முந்தையோர் கண்ட நெறி, நீராட வேண்டிய சமயங்கள்,செய்யாமல் தவிர்க்க வேண்டியவை,யாவரும் கூறிய நெறி, நல்லறிவாளர் செயல்,உணவு உண்ணும் முறைமை, ஒழுக்கம் பிழையாதவர் செய்வது, பெரியோருடன் இருந்து உண்ணும் முறை,உண்டபின் செய்ய வேண்டியவை, மாலையில் செய்யக் கூடியவை, தெய்வத்துக்குப் பலியூட்டிய பின் உண்ணல், சான்றோர் இயல்பு, அறம் செய்தற்கும் விருந்து அளித்தற்கும் உரிய நாட்கள், அறிஞர் விரும்பாத இடங்கள், மன்னன் முன் செய்யத் தகாதவை, விருந்தினர்க்குச் செய்யும் சிறப்பு, நூல்முறை உணர்ந்தவர் துணிவு, பெரியோர் போல் வாழ்வோம் என விரும்புபவர் செயல்கள் போன்ற அறக்கருத்துகள் மிகவும் குறிப்பிடத்தக்கவை ஆகும்.

**இயேசுவின் வரலாறு:**

இயேசு யூதேயாவிலுள்ள பெத்லகேமில் கன்னிமரியாவிடமிருந்து கடவுளின் வல்லமையாகிய தூய ஆவியினால் பிறந்தார். கபிரியேல் வானதூதர் மரியாவுக்குத் தோன்றி, ‘அருள்மிகப் பெற்றவரே வாழ்க! ஆண்டவர் உம்மோடு இருக்கிறார்’ (லூக்: 1:28) என்று வாழ்த்துக் கூறினார் என்று லூக்கா குறிப்பிடுகின்றது. இவ்வார்த்தைகளைக் கேட்டு அச்சமுற்றுக் கலங்கிய மரியாவைப் பார்த்து, கபிரியேல் வானதூதர், ‘மரியா, அஞ்சவேண்டாம்; கடவுளின் அருளைக் கண்டடைந்துள்ளீர். இதோ கருவுற்று ஒரு மகனைப் பெறுவீர்; அவருக்கு இயேசு என்னும் பெயரிடுவீர்’ லூக்காவின் கூற்று உணர்த்தி நிற்கின்றது ( லூக்: 1:26-31) என்றுரைத்தார்.

இயேசு பிறந்த நிகழ்ச்சியை விவரிக்கும் நற்செய்தி நூல்கள் யோசேப்பும் மரியாவும் அப்போது யூதேயாவை ஆண்ட அகஸ்து சீசர் என்னும் அரசன் இட்ட கட்டளைக்கு ஏற்ப, மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் தங்களைப் பதிவு செய்யச் சென்றார்கள் என்று கூறுகின்றன. (லூக்: 2:1-5). யோசேப்பு தமக்கு மண ஒப்பந்தமான மரியாவைக் கூட்டிக்கொண்டு நாசரேத்திலிருந்து தம் சொந்த ஊரான பெத்லகேமுக்குப் பெயர் பதிவுசெய்யச் சென்றார். அப்போது மரியா தம் குழந்தையாகிய இயேசுவை ஒரு மாட்டுத் தொழுவத்தில் பெற்றெடுத்து, குழந்தையைத்

துணிகளில் பொதிந்து தீவனத் தொட்டியில் கிடத்தினார் (லூக்: 2:1-7). அக்குழந்தைக்கு மரியாவும் அவரது வளர்ப்புத் தந்தையான யோசேப்பும் கபிரியேல் வானதூதர் கூறியவாறே இயேசு (இம்மானுவேல்) என்று பெயரிட்டனர்.

இயேசுவின் பிறப்பு முதலாவதாக இடையர்களுக்கு வானதூதரால் அறிவிக்கப்பட்டு அவர்கள் வந்து இயேசுவைப் பணிந்தார்கள். மேலும், மத்தேயு நற்செய்திப்படி, இயேசுவின் பிறப்பின் போது ஒரு அதிசய விண்மீன் தோன்றியது. இதனைப் பார்த்த ஞானிகள் யூதரின் அரசன் பிறந்துள்ளார் என்று அறிந்து பெத்லகேம் வந்து இயேசுவைக் கண்டு பணிந்தார்கள். பொன், தூபம், வெள்ளைப்போளம் ஆகிய பரிசுப் பொருள்களையும் அவர்கள் இயேசுவுக்குக் காணிக்கையாகக் கொடுத்தனர். மேலும் அப்போது யூதாவை ஆண்டுவந்த ஏரோது மன்னன் யூதரின் அரசன் பிறந்துள்ளார் என அறிந்து அப்பிரதேசத்திலிருந்த இரண்டுவயதுக்குக் குறைவான அனைத்து ஆண்குழந்தைகளையும் கொலை செய்வித்தான். எனினும் முன்னரே தேவதூதரால் எச்சரிக்கப்பட்ட யோசேப்பு மரியாவையும் இயேசுவையும் கூட்டிக்கொண்டு எகிப்துக்குத் தப்பிச் சென்றார். ஏரோது இறந்த பின்னர் யோசேப்பு, மரியா, இயேசு ஆகியோரை உள்ளடக்கிய 'திருக்குடும்பம்' யூதா நாட்டுக்குத் திரும்பி நாசரேத்து என்னும் ஊரில் குடியேறியது (மத்: 2:1-23). இயேசுவின் குழந்தைப் பருவத்துக்கும் இளமைப் பருவத்துக்குமிடையே இயேசு 12 வயதில் எருசலேம் கோவிலுக்குச் சென்ற நிகழ்வுமட்டுமே விவிலியத்தில் லூக்கா நற்செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ளது. (லூக்: 2:41-52). அதன்படி அவர் போதகர்கள் நடுவில் அமர்ந்து அவர்கள் சொல்வதைக் கேட்டுக் கொண்டும் அவர்களிடம் கேள்விகளை எழுப்பிக்கொண்டும் இருந்தார். அதன் பிறகு அவருக்கு 30 வயது ஆகும் வரையிலான 18 ஆண்டுகள்பற்றி எந்தத் தகவலும் ஆங்கு இல்லை. இயேசுவுக்குப் பன்னிரண்டு வயது ஆனதும் என்ன நடந்தது என்பதை மிகச் சுருக்கமாக லூக்கா நற்செய்தி எடுத்துக் கூறுகிறது

பின்பு இயேசு தம் பெற்றோர்களுடன் சென்று நாசரேத்தை அடைந்து அவர்களுக்குப் பணிந்து நடந்தார். அவருடைய தாய் இந்நிகழ்ச்சிகளையெல்லாம் தமது உள்ளத்தில் பதித்து வைத்திருந்தார். இயேசு ஞானத்திலும் உடல்வளர்ச்சியிலும் மிகுந்து கடவுளுக்கும் மனிதருக்கும் உகந்தவராய் வாழ்ந்து வந்தார். (லூக்: 2:51-52) கிறித்தவ மரபுப்படி, இயேசு தனது பன்னிரண்டு வயது முதல் முப்பது வயதை அடையும் வரை தம் பெற்றோரோடு கலிலேயாவில் வாழ்ந்துவந்தார் என்பதுதான் குறிக்கப்படும் செய்தி ஆகும்.

இயேசு தனது முப்பதாம் வயதில் யோர்தான் ஆற்றருகே வந்து, அங்கே திருமுழுக்குக் கொடுத்துக் கொண்டிருந்த யோவானிடம் தாமும் திருமுழுக்குப் பெற்றார். ஆற்றிலிருந்து இயேசு கரையேறியபோது வானம் பிளவுபடுவதையும் தூய ஆவி அவர்மீது புறா வடிவில் வந்திறங்குவதையும் கண்டார். மேலும் 'என் அன்பார்ந்த மகன் நீயே. உன்பொருட்டு நான்

பூரிப்படைகிறேன்' (மாற்: 1:10‒11) என்று வானத்திலிருந்து ஒரு குரல் ஒலித்தது. திருமுழுக்குப் பெற்ற பின்னர் இயேசு பாலைநிலத்துக்குச் சென்று 40 நாள்கள் நோன்பிருந்தார். அப்போது அலகை அவரை மூன்று முறை சோதித்தது. மூன்று முறையும் இயேசு வென்றார். பின்னர் இயேசு பாலைநிலத்தை விட்டகன்று, கடவுள் தம்மை ஒரு சிறப்புப் பணி ஆற்றிட அனுப்பியுள்ளார் என்பதை உளமார உணர்ந்து 'கடவுளின் ஆட்சி இவ்வுலகில் வந்துகொண்டிருக்கின்றது' என்னும் நற்செய்தியை மக்களுக்கு அறிவிக்கத் தொடங்கினார். தம்மோடு இருக்கவும் மக்களுக்கு இறையரசு பற்றிய நற்செய்தியை அறிவிக்கவும் இயேசு தமக்கென சீடர்களைத் தெரிந்துகொண்டார்.( மத்: 4:12-22; மாற்: 1:14-20; லூக்: 4:14-5:11).

மேலும் மக்களுக்கு இயேசு மூன்று ஆண்டுகள் இடையறாது பணிசெய்தார். தன்னுடைய பணியை முழுக்க முழுக்க மனித நேயம் சார்ந்த பணியாக அமைத்துக் கொண்டவர் இயேசு. இறைத்தன்மையுடன் விளங்கிய அவர் தான் கடவுளின் மகன் என்பதை தன்னுடைய போதனைகளில் வெளிப்படையாகவே அறிவித்தார். இறைத்தன்மையை வெளிக்காட்டும் விதமாக நோய்களைக் குணமாக்குதல், பேய்களை ஓட்டுதல், இறந்தோரை உயிர்த்தெழச் செய்தல் என ஏராளமான புதுமைகளை மக்களிடையே நிறைவேற்றினார் இயேசு. (மத்: 14:13-21; மாற்: 6:30-44; லூக்: 9:10-17; யோவா: 6:1-14).)

இயேசு தம் பொதுப் பணியை நாசரேத்து தொழுகைக் கூடத்தில் தொடங்கினார் என்று லூக்கா நற்செய்தி கூறுகிறது. (லூக்:4:16-21). நாசரேத்து ஊரில் யூதர்களுக்கு ஒரு தொழுகைக் கூடம் இருந்தது. அங்கு இயேசு சென்று, பண்டைக்கால இறைவாக்கினருள் ஒருவராகிய எசாயா இறைவாக்கினரின் ஏட்டுச் சுருளிலிருந்து 'ஆண்டவராகிய என் தலைவரின் ஆவி என்மேல் உளது; ஏனெனில் அவர் எனக்கு அருள்பொழிவு செய்துள்ளார்; ஒடுக்கப்பட்டோருக்கு நற்செய்தியை அறிவிக்கவும், உள்ளம் உடைந்தோரைக் குணப்படுத்தவும், சிறைப்பட்டோருக்கு விடுதலையைப் பறைசாற்றவும், கட்டுண்டோருக்கு விடிவைத் தெரிவிக்கவும் என்னை அனுப்பியுள்ளார். ஆண்டவர் அருள் தரும் ஆண்டினை அறிவிக்கவும். என்னை அனுப்பியுள்ளார். (எசா:61:1-2) என்னும் பகுதியை மக்கள் முன்னிலையில் வாசித்து அறிக்கையிட்டார். இவ்வாறு இயேசு மூன்று ஆண்டுகள் நிகழ்த்திய போதனைகளும், செய்த அற்புதச் செயல்களும் யூத மத குருக்களை எரிச்சலடையச் செய்தது. அவர்களை இயேசு வெளிவேடக்காரர்கள் என்றும், வெள்ளையடிக்கப் பட்ட கல்லறைகள் என்று பகிரங்கமாகச் சாடி, அவர்கள் போதனைகளை நம்பவேண்டாம் அவர்கள் விண்ணரசிற்குள் நுழையமாட்டார்கள். அவர்கள் குருடர்களுக்கு வழிகாட்டும் குருடர்கள் என்று மக்களுக்குப் போதித்தார். எனவே மத குருக்கள் அவரை ஒழித்துக் கட்ட வழி தேடினார்கள்.

எருசலேம் தேவாலயத்தில் பலிப் பொருட்களை விற்பனை செய்து கொண்டிருந்தவர்களைச் சாட்டையால் அடித்துத் துரத்தி இயேசு புரட்சி செய்தது மத குருக்களை வெறி கொள்ளச் செய்தது. காலம் காலமாக நடந்து வந்த விற்பனையையும், அதற்கு மேலாக மதகுருமார்கள் மேல் இருந்த மரியாதையையும் இயேசு சிதைத்து விட்டதால் அவர்கள் இயேசுவைக் கொல்வது என்று முடிவு செய்தார்கள்.

தலைமைக் குருக்களாக இருந்த அன்னா, காய்பா இருவரும் இயேசு தன்னைக் கடவுளின் மகனாகக் காட்டிக் கொண்டார் என்னும் குற்றச்சாட்டின் கீழ் அவரைப் பிடித்து ஆளுநனாக இருந்த பிலாத்துவின் விசாரணைக் கூடத்துக்குக் கொண்டு வந்தார்கள். அங்கு பொய்சாட்சிகள் அவருக்கு எதிராக நிறுத்தப்பட்டனர். பொய் சாட்சிகளின் சாட்சியங்கள் வலுவிழந்தன. ஆனால் இயேசு தானே கடவுளின் மகன் என்று அந்த விசாரணைக் கூடத்திலேயே துணிச்சலுடன் அறிவித்துச் சிலுவைச் சாவை விரும்பி ஏற்றுக் கொண்டார்.

கல்வாரி மலையில் இயேசு சிலுவையில் அறையப்பட்டு கொலை செய்யப்பட்டார். சிலுவையில் உயிர்விடும் காலத்தும் தன்னைத் துன்புறுத்துபவர்களுக்காக மன்னிப்பை மன்றாடிய இயேசு தன் தந்தையின் கைகளில் தன்னுடைய உயிரை ஒப்படைத்தார். இயேசு இறந்து விட்டார் என்று அரச வீரர்கள் ஈட்டியால் குத்தி உறுதிப்படுத்திய பின் இயேசுவின் உடல் கீழிறக்கி கல்லறையில் அடக்கப்பட்டது.

இறந்த மூன்றாம் நாள் உயிர்ப்பேன் என்று இயேசு சொல்லியிருந்ததால் அவருடைய கல்லறைக்கு அரச காவல் நியமிக்கப்பட்டது. கல்லறைக் கதவைச் சங்கிலியால் பூட்டிக் காவலர்கள் காவலிருந்தார்கள். ஆனால் மூன்றாவது நாள் இயேசு சொன்னது போல உயிர்த்தெழுந்தார். உயிர்த்த இயேசு தன்னுடைய சீடர்களுக்குப் பல முறைக் காட்சியளித்தார்.

இயேசுவின் இறப்பினால் சோர்ந்து போயிருந்த சீடர்களுக்கு இயேசுவின் உயிர்ப்புச் செய்தி புதிய ஊக்கத்தைக் கொடுத்தது. அதுவே கிறித்தவ மதம் மண்ணில் தோன்றுவதற்கு முக்கிய காரணமாயிற்று.

**திருவிவிலியம்:**

தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பட்டு புனித நூல்கள் எனக் கத்தோலிக்கத் திருச்சபையால் அங்கீகரிக்கப்பட்டுள்ள எழுபத்து மூன்று நூல்களின் தொகுப்பே கத்தோலிக்கக் கிறித்தவர்களின் திருவிவிலியம் என்று அழைக்கப்படுகிறது. திருவிவிலியத்தில் உள்ள நூல்களை மனிதர்கள் எழுதினர் என்றாலும் அவை தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பெற்றவை என்றே குறிப்பிடப்படுகிறது. அவ்வாறு மனித குலத்தின் மீட்பு மற்றும் நிறை வாழ்விற்கான வழியைக்

காட்டுகின்ற எழுபத்து மூன்று நூல்களை மட்டும் திருச்சபை அங்கீகரித்து திருவிவிலியமாகத் தொகுத்துள்ளது.

**விவிலியம்- பெயர்க்காரணம்:**

பிப்ளோஸ் என்னும் கிரேக்கச் சொல்லிலிருந்து உருவான மருவிய சொல்லான பிப்போன் என்பதற்குப் 'புத்தகம்' அல்லது 'சுருள்' அல்லது 'நூல்' என்பது பொருளாகும்.அவற்றைப் பதப்படுத்தப்பட்ட தோல் சுருள்களிலே எழுதினர். தோல் சுருள் மிக நீளமாக இருந்தமையால் ஓர் அறிஞரின் கருத்தை எழுதிய பின் எஞ்சிய இடம் இருக்குமானால் பிற்காலத்தவர் மற்றொரு அறிஞரின் கூற்றுகளை அவ்விடத்தில் எழுதுதல் மரபு ஆகும். இம் முறையிலே சில நூல்களில் பிற்சேர்க்கைகள் சேர்க்கப்பட்டன.

“பிப்ளோன் என்பது லெபனான் நாட்டில் உள்ள ஒரு துறைமுகப்பட்டினம்.புத்தகம் செய்யப் பயன்படும் பாப்பிரஸ் என்ற நாணல் விற்கப்பட்ட இடம்.இந்த பாப்பிரஸ் என்ற வார்த்தையே பேப்பர் என ஆயிற்று, பாப்பிரஸ் விற்கப்பட்ட பிப்ளோஸ் என்ற நகரத்தின் பெயரால்(Biblio) புத்தகம் ஆயிற்று”[42] என்பார் அருண் ஞானப்பிரகாசம்.

எகிப்தில் உள்ள நைல் நதிக்கரையில் வளர்ந்த பப்ரைஸ் என்னும் ஒருவகை நாணற் புற்களிலிருந்து தயாரிக்கப்பட்ட காகிதத்தில் எழுதப்பட்ட நூல்கள் யாவும் கிரேக்கத்தில் பிபிலியா என அழைக்கப்பட்டன. இந்த கிரேக்க மூலச்சொல்லே பைபிள் என ஆங்கிலத்திலும் விவிலியம் எனத் தமிழிலும் வழங்கப்படலாயிற்று.

**திருவிவிலியத்தின் உட்பொருள்:**

ஏற்பாடு என்றால் 'உடன்படிக்கை' என்று பொருள். இது கடவுளுக்கும் இசுரேல் மக்களுக்குமான உடன்படிக்கை என்ற பொருளில் அமைகிறது. இதனுள் பழைய ஏற்பாடு என்பது கடவுளைக் காணும் நோக்கில் விளிம்பில் இருந்து மையத்தை நோக்கியதாகவும் புதிய ஏற்பாடு என்பது மையத்தில் இருந்து விளிம்பை நோக்கியதாகவும் பயணிப்பதைக் கணமுடிகின்றது.

**திருவிவிலியத்தின் தோற்றம்:**

திருவிவிலியத்திதில் உள்ள படைப்புகள் முதலில் சிறுசிறு பாடல்கள் கதை வடிவில் உருவாகி வாய்மொழியாகவே பின் வந்த தலைமுறையினருக்கு வந்தன.மேலும் சமூக மற்றும் நாட்டு உணர்வுகளுடன் உருவான கதைகள் பாடல்கள் படிப்படியாகச் சமயச் சார்பற்ற பொருள் பெற்றன. பின்னாளில் சிறுசிறு எழுத்தோவியங்கள் உருவாயின. முக்கியமாக சாலமோன் காலத்திலிருந்து எழுத்துப் படையல்கள் உருவாயின.பின் சிறுசிறு ஏடுகள் தொகுக்கப்பெற்று பாரம்பரியங்கள் ஆயின. இப்போதைய வடிவத்தின்படி பழைய ஏற்பாட்டில் முதலில் எழுதப்பட்ட

நூல் ஆமோஸ் நூல்' ஆகும். "புதிய ஏற்பாட்டில் முதலில் எழுதப்பட்ட நூல் தெசலோனிக்கர் நூல் ஆகும். இது தெசலோனிக்கரால் எழுதப்பட்டது ( கி.பி.51 ) என்றும் புனித யோவானின் நற்செய்தி மற்றும் திருமுகங்கள் முதல் நூற்றாண்டின் இறுதிக்கட்டத்தில் எழுதப்பெற்றவை என்றும் கூறலாம்" [43] என்பார் அருண் ஞானப்பிரகாசம்.

**திருவிவிலியத்தின் அதிகாரங்கள் - வசனங்கள்:**

திருவிவிலியம் எழுதப்பட்ட காலத்தில் ஆசிரியர்கள் அதிகாரங்களாகவோ வசனங்களாகவோ பிரித்து எழுதவில்லை. கி. பி இரண்டாம் நூற்றாண்டில் தாசியன போன்றோர் திருவிவிலியத்தின் நூல்களைச் சிறுசிறு பிரிவுகளாகப் பிரித்தனர்,

புதிய ஏற்பாட்டைப் பொறுத்தவரையில் கான்டர்பரி பேராயர் ஸ்டீபன் லாங்டன் என்பவர் புதிய ஏற்பாட்டின் அதிகாரங்களைப் பிரித்தார். கி.பி 1550 இல் பிரான்சு அச்சுவல்லுநர் இராபர்ட் ஸ்டீபன் புதிய ஏற்பாடு நூலின் வசனங்களை உருவாக்கினார்,

"பழைய ஏற்பாட்டைப் பொறுத்த வரையில் கி.பி 1440 இல் இராபி நாத்தான் என்பவர்தான் அதிகாரங்கள் மற்றும் வசனங்களை உருவாக்கினார். இவர்கள் உருவாக்கிய அதிகாரப் பிரிவுகள் நூற்றுக்குநூறு சரியானவை என்று சொல்லமுடியாது, சில நீளமாகவும் சில சிறியதாகவும் உள்ளன. சில அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் மையக்கருத்து அடுத்த அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் முடிகிறது"[44] என்கிறார் அருண்ஞானப்பிரகாசம்.

**திருச்சட்ட நூல்களின் மரபுகள்:**

திருவிவிலியத்தின் முதல் ஐந்து நூல்கள் ஒரே தொகுதியாக உள்ளன. எனினும் சான்றோர் இவற்றை நான்கு மரபுகளின் வழியாக வந்தவை என்று பிரித்துரைப்பர்.

**யாவே மரபு:**

இம்மரபின் கடவுள் 'யாவே' என்று அழைக்கப்படுவதால் இம்மரபிற்கு இப்பெயர் வந்தமைந்தது.

**எலோகிம் மரபு:**

இம்மரபின் கடவுள் 'எலோகிம்' என்னும் பெயரால் அழைக்கப்படுகிறார். இம்மரபிற்கு இப்பெயர் வந்தமைந்தது.

**இணைச்சட்டமரபு:**

இம்மரபானது வடநாட்டில் தோற்றம் பெற்று தென்னாட்டின் தலைநகரான எருசலேமில் இஸ்ரேல் இனம் குடியேற்ற இனமாக மாற்றம் பெற்ற பின் உருவான சிந்தனைகள் இம்மரபில் இடம் பெற்றன.

**குருக்கள் மரபு:**

இம்மரபு பாபிலோனுக்கு யூதர்கள் நாடு கடத்தப்பட்ட காலத்திலும் அதற்குப் பிந்தைய காலத்திலும் உருவானது ஆகும்.குருக்கள் மூலமாக இம்மரபு வளர்க்கப்பட்டது, இதன் மூலம் குருக்கள் மக்களின் விசுவாசத்தையும் நம்பிக்கையையும் பாதுகாக்க முனைந்தார்கள்.

“மேற்கண்ட மரபுகளும் வளர்நிலைகளும் ஒன்றிணைந்து ஒரே தொகுதியாயின.அதுவே ஐந்தாம் தொகுதியானது, இப்பணியானது கி.பி 400 ஆண்டளவில் முடிவடைந்தது. எஸ்ரா என்னும் குரு அப்பணியைச் செய்தார் என்பர் எனக் குறிப்பார்”[45] அருண்ஞானப் பிரகாசம்.

**திருவிவிலியத்தின் பிரிவுகள்:**

திருவிவிலியமானது பழைய ஏற்பாடு, புதிய எற்பாடு என்னும் இருபெரும் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டமைந்ததாகும். பழைய ஏற்பாட்டில் நாற்பத்தாறு நூல்களும் புதிய ஏற்பாட்டில் இருபத்தேழு நூல்களும் உள்ளன. பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை சீர்திருத்த சபையாருக்கும் கத்தோலிக்க கிறித்தவர்களுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன. சீர்திருத்த சபையார்கள் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நாற்பத்தாறு நூல்களுள் தோபித்து, யூதித்து,பாரூக்கு, சீராக்கின் ஞானம், சாலமோனின் ஞானம், 1மக்கபேயர், 2. மக்கபேயர் என்னும் ஏழுநூல்களை நீக்கி ஏனைய முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே ஏற்றுக் கொள்கின்றனர், இதற்குக் காரணம் பாலஸ்தீனத்தில் உள்ள யூதர்கள் எபிரேய மொழியில் அமைந்த முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே பழைய ஏற்பாடாக ஏற்றனர், பாலஸ்தீனத்திற்கு வெளியே உள்ள யூதர்கள் கிரேக்க மொழிபெயர்ப்பான செப்துவசிந்து நூலில் காணப்படும் நாற்பத்தாறு நூல்களைப் பழைய ஏற்பாடாக ஏற்றனர்.காலப்போக்கில் கத்தோலிக்கக் கிறித்தவர்களும் பழைய ஏற்பாட்டில் கிரேக்க யூதர்களைப் பின்பற்றினர்.

ஆனால் தூய ஆவியின் ஏற்பாட்டால் எழுதப்பெற்ற இந்நூல்களை காலம், இடம், மொழி என்னும் எல்லைக்கு உட்படுத்தக் கூடாது என கூறிய ஆதித் திருச்சபை அவ் ஏழு புத்தகங்களையும் ஏற்றுக் கொண்டது.

புதிய ஏற்பாட்டைப் பொறுத்தவரை கத்தோலிக்க திருச்சபையார் இருபத்தேழு நூல்களையும் ஏற்றுக் கொண்டனர். இயேசுவின் காலத்தில் அமைந்த உடன்படிக்கையின் அடிப்படையில் எழுந்த நூல்கள் புதிய ஏற்பாடு என்னும் பிரிவில் உள்ளன.

**பழைய ஏற்பாடு:**

பழைய ஏற்பாடு கிறித்துவின் வருகைக்கு முன் முழுமையாகத் தொகுக்கப்பெற்றவை ஆகும். இதனை, பொருளடக்கம்,அவற்றின் இலக்கியச் சொற்றொடர் அமைப்பு, போன்றவற்றை அடிப்படையாக வைத்து நான்கு வகையினதாகப் பிரிக்கலாம்.

**வரலாற்று நூல்கள்: (16)**

கத்தோலிக்க முறைப்படி இருபத்தொரு வரலாற்று நூல்கள் பழைய ஏற்பாட்டில் உள்ளதாகக் கருதப்படுகின்றது, அந்நூல்களையும் வரலாற்றுப் பிரிவில் சேர்த்தாலும் யூதர்கள் இவற்றை தனிப்பிரிவாகக் கொண்டு 'தோரா' என அழைத்தனர், பழைய ஏற்பாட்டின் பிற நூல்களை இறைவாக்கினர் நூல்கள் என்றும் அறிவுரை நூல்கள் என்றும் கொண்டனர்.

செப்துவசிந்து எனும் எழுபதின்மர் அந்நூல்களையும் 'பென்டேயுக்' என அழைத்து ஒவ்வொரு நூலுக்கும் அதன் உள்ளடக்கத்தின் அடிப்படையில் தலைப்புக் கொடுக்கப்பட்டுள்ளது, யாவே இறைவன் இசுரயேலுடன் செய்த உடன்படிக்கை மூலம் ஓர் இறையாட்சியை உருவாக்கினார். இந்த ஆட்சி பற்றிய விவரங்கள் அந்நூலில் உள்ளன என்பார்.

யோசுவா; நீதித் தலைவர்கள்; ரூத்து; 1 சாமுவேல்; 2 சாமுவேல்; 1 அரசர்கள்; 2 அரசர்கள்; 1 குறிப்பேடு; 2 குறிப்பேடு; எஸ்ரா; நெகேமியா; தோபித்து; யூதித்து; எஸ்தர்; 1 மக்கபேயர்; 2 மக்கபேயர்.

**திருச்சட்ட நூல்கள் (5):**

தொடக்க நூல்; விடுதலைப் பயணம்; லேவியர்; எண்ணிக்கை; இணைச் சட்டம் என்ற நூல்கள் திருச்சட்ட நூல்கள் என்று அழைக்கப்பட்டன.

**ஞான நூல்கள் (7):**

யோபு; திருப்பாடல்கள்; நீதிமொழிகள்; சபை உரையாளர்; இனிமைமிகு பாடல்; சாலமோனின் ஞானம்; சீராக்கின் ஞானம்.

**இறைவாக்கு நூல்கள்:**

6 பெரிய இறைவாக்கினர்; 12 சிறிய இறைவாக்கினர்:

**பெரிய இறைவாக்கினர்**: (6)

எசாயா; எரேமியா; பாரூக்கு; புலம்பல்; எசேக்கியேல்; தானியேல்.

**சிறிய இறைவாக்கினர்**: (12)

ஓசேயா; யோவேல்; ஆமோஸ்; ஒபதியா; யோனா; மீக்கா; நாகூம்; அபக்கூக்கு; செப்பனியா; ஆகாய்; செக்கரியா; மலாக்கி.

மரபு வழிக் கிறித்தவ சபைகள் (Orthodox Churches) பழைய ஏற்பாட்டில் 51 நூல்கள் உள்ளதாகக் கருதுகின்றன.

**தொடக்கநூல்**:

தொடக்கநூல் அல்லது ஆதியாகமம் (Genesis) என்றழைக்கப்படுவது எபிரேய விவிலியம் மற்றும் பழைய ஏற்பாடு ஆகியவற்றில் முதல் நூலாக இடம்பெறுகிறது. இந்நூல் யூத மற்றும் கிறித்தவ விவிலியத்தின் முதல் நூலாக உள்ளது. இந்நூலானது இசுரயேல் மக்களின் வரலாற்றை மனித இனத்தின் தோற்றத்துடன் இணைத்துக் காட்டுகின்றது. கடவுள் ஆபிரகாமைத் தேர்ந்தெடுத்து அவர்தம் வழி மரபினர் வரலாற்றில் தாமே செயல்பட்டு மீட்புப்பணியைத் தொடர்ந்து ஆற்றுகிறார். இந்நூலில் பத்துப் பிரிவுகள் உள்ளன. ஐம்பது அதிகாரங்கள் அமைந்துள்ளன. இத்தகைய  முதல் நூலைத் தொடர்ந்து அமைந்துள்ள நான்கு நூல்களையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு தொகுதியாகக் கருதுவது யூத, மற்றும் கிறித்தவ மக்களின் மரபு ஆகும். இந்த ஐந்து நூல்களும் கீழ்க்கண்டவாறு அமையும்.

போதனை, அறிவுரை, உபதேசம், அறநெறி, நல்வழி போன்ற பொருள்கள் உண்டு. இந்த ஐந்து நூல்களின் தொகுப்பு தோரா (Torah) என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. யூத மரபுப்படி, தோரா நூல் தொகுப்பு மோசே என்னும் இறைவாக்கினரால் உருவாக்கப்பட்டதாகும்.

**விடுதலைப்பயணம்**:

விடுதலைப் பயணம் யூத சமய நூல் தொகுப்பான தோராவில் இரண்டாவது நூலாக அமைந்துள்ளது. எபிரேய விவிலியத்திலும் அது இரண்டாவது நூலாகவே அமைந்துள்ளது. இது முதல் நூலாகிய தொடக்க நூலின் தொடர்ச்சியாக அமைந்துள்ளது, இறைவன் தான் வழங்கவிருக்கும் நாட்டை நோக்கி இசுரயேல் மக்களை மோசேயின் மூலம் அழைத்துச் செல்கின்றார். அவ்வாறு செல்லும் வழியில், சீனாய் மலை அடிவாரத்தில் அவர்களோடு உடன்படிக்கை செய்து, பத்துக் கட்டளைகளை அருளி தமக்கே உரிய அரச குருத்துவ இனமாகப் புனிதப்படுத்துகின்றார். எனினும் அம்மக்கள் இவ்வுடன்படிக்கையை மீறும்பொழுது, அவர்களைத் தண்டித்துத் தூய்மையாக்கி மீண்டும் ஏற்றுக் கொள்கின்றார். இந்நிகழ்ச்சிகள் இந்நூலின் முற்பகுதியில் இடம்பெற்றுள்ளன.இசுரயேல் மக்களின் சமய அமைப்புகளை

நெறிப்படுத்துமாறு கடவுள் தரும் பல்வேறு ஒழுங்குமுறைகள் இந்நூலின் பிற்பகுதியில் காணப்படுகின்றன. விடுதலைப் பயணம் நூலில் நான்கு பிரிவுகளும் 40 அதிகாரங்களும் உள்ளன.

**லேவியர்:**

லேவியர் (Leviticus) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் மூன்றாவது நூலாக இடம்பெற்றுள்ளது. இந்நூல் எழுதப்பட்ட மூல மொழியாகிய எபிரேயத்தில் "Wayiq'ra" என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது 'அவர் அழைத்தார்' என்பது முதல் சொல்லாக உள்ளது. எனவே அப்பெயரும் இந்நூலுக்கு வழங்கப்படுகின்றது. பழங்கால இசுரயேலர்தம் கடவுளின் தூய தன்மையும் அவருக்கான வழிபாட்டு முறைகளும், அவற்றை நிறைவேற்றும் குருக்களுக்கான நெறிகளும் அவ்வினத்தார் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்குகளும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. இதில் ஐந்து பிரிவுகளும் இருபத்தேழு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

'உன்மீது நீ அன்புகூர்வதுபோல், உனக்கு அடுத்திருப்பவர் மீதும் அன்புகூர்வாயாக!' என்னும் ஆண்டவர் இயேசுவின் இரண்டாம் பெரிய கட்டளை இந்நூலில் (லேவி: 19:18) இடம் பெறுவது குறிப்பிடத்தக்கது.

**எண்ணிக்கை:**

எண்ணிக்கை அதாவது எண்ணாகமம் என்னும் இந்நூல் கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் நான்காவது நூலாக அமைந்துள்ளதாகும். 'எண்ணிக்கை' என்னும் இத்திருநூல் இஸ்ரயேலர்கள் சீனாய் மலையை விட்டுப் புறப்பட்டு, இறைவனால் வாக்களிக்கப்பட்ட நாட்டின் கிழக்கு எல்லையை அடைந்தது வரையிலான நாற்பது ஆண்டுகளின் நிகழ்வுகளின் தொகுப்பாகும். சீனாய் மலையினின்று புறப்படும் முன்னும் யோர்தானுக்குக் கிழக்கே மோவாபில் ஒரு தலைமுறை கடந்த பின்னும் மோசே செய்த கணக்கெடுப்பின் காரணமாக இந்நூல் இப்பெயரைப் பெறுகின்றது. இந்நூல் எழுதப்பட்ட மூல மொழியாகிய எபிரேயத்தில் "Bəmidbar" அதாவது 'பாலைநிலத்தில்' என்பது முதல் சொல்லாக உள்ளது. எனவே அப்பெயரும் இந்நூலுக்கு உண்டு. இந்நூல் ஐந்து பிரிவுகளையும் முப்பத்தாறு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது. கடவுளுக்கும் மக்களுக்கும் மோசே உண்மையுடன் பணியாற்றுவது இந்நூலில் சிறப்பிடம் பெறுகின்றது.

**இணைச்சட்டம்:**

இணைச் சட்டம் (உபாகமம்) (Deuteronomy) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் ஐந்தாவது நூலாக இடம்பெற்றுள்ளது. விவிலியத்தின் ஐந்து ஆகம நூல்களில் இது இறுதியானதாகும். இந்நூல் ஆறு பிரிவுகளையும் முப்பத்து நான்கு அதிகாரங்களையும் கொண்டுள்ளது. 'இணைச் சட்டம்' என்னும் இத்திருநூல் இசுரயேல் மக்கள் பாலை நிலத்தில் நெடும் பயணம் செய்து, கானான் நாட்டில் நுழைவதற்குச் சற்றுமுன், அவர்களுக்கு மோசே வழங்கிய பேருரைகளின் தொகுப்பாக அமைந்துள்ளது. இந்நூல் எழுதப்பட்ட மூல மொழியாகிய எபிரேயத்தில் 'Devarim' அதாவது 'சொற்பொழிவுகள்' என்பது முதல் சொல்லாக உள்ளது. எனவே அப்பெயரும் இந்நூலுக்கு வழங்கப்படுகின்றது.

**வரலாற்று நூல்கள்:**

**யோசுவா:**

யோசுவா (Joshua) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் ஆறாவது நூலாக இடம்பெறுவதாகும். இந்நூலில் ஐந்து பிரிவுகளும் இருபத்து நான்கு அதிகாரங்களும் அமைந்துள்ளன. இந்நூல் எழுதப்பட்ட மூல மொழியாகிய எபிரேயத்தில் 'Sefer Y'hoshua' அதாவது 'யோசுவாவின் நூல்' என்பது முதல் சொல்லாக உள்ளது. எனவே அப்பெயரும் இந்நூலுக்கு வழங்கி வருகின்றது. இந்நூலில் ஐந்து பிரிவுகளும் இருபத்து நான்கு அதிகாரங்களும் அமைந்துள்ளன. இறைவனால் தேர்ந்துகொள்ளப்பட்டு, மோசேக்குப் பின் இசுரயேல் மக்களின் தலைவராகச் செயல்பட்டவர் யோசுவா. இவர் கானான் நாட்டின் பல்வேறு பகுதிகளைக் கைப்பற்றி, இசுரயேலின் குலங்களுக்குப் பிரித்துக் கொடுத்ததை விரிவாகக் கூறுகிறது 'யோசுவா' என்னும் இந்நூல்.

**நீதித் தலைவர்கள்:**

நீதித் தலைவர்கள் (Book of Judges) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் இடம்பெறும் ஒரு நூல் ஆகும். இந்நூலில் மூன்று பிரிவுகளும் இருபத்தொரு அதிகாரங்களும் அமைந்துள்ளன. இந்நூல் இசுரயேலர் கானான் நாட்டைக் கைப்பற்றியதற்கும் அவர்களிடையே முடியாட்சி தொடங்கியதற்கும் இடைப்பட்ட காலத்தைப் பற்றியதாகும். இக்காலக் கட்டத்தில் இறைவன் இசுரயேல் மக்களுக்குத் தாம் தெரிந்துகொண்டோர் மூலமாக விடுதலை அளித்து அவர்களைப் பாதுகாத்து வந்தார். இசுரயேலரின் வாழ்வும் வெற்றியும் கடவுளிடம் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கையைப் பொறுத்தே அமைந்திருந்தது என்பதையும் அவர்களது நம்பிக்கையின்மை அவர்களுக்கு அழிவையே கொணர்ந்தது என்பதையும் இந்நூல் வலியுறுத்திக் கூறுகின்றது.

**ரூத்து:**

ரூத்து என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் அதாவது பழைய ஏற்பாட்டில் இடம்பெறும் ஒரு நூல் ஆகும். மனித வரலாற்றில் துயரங்களை எல்லாம் கடவுள்வெற்றி மகுடமாக மாற்றித் தருகின்றார் என்பதே விவிலிய நூலின் அடிப்படைக் கருத்தாகும். அத்தகைய மாபெரும் செயல்களில் பெண்களுக்கும் அரியதொரு பங்கைக் கடவுள் அளிக்கிறார் என்பது இந்நூலால் வெளிப்படுகிறது. இதில் குறிக்கப்படும் பெண்கள் இருவரும் கைம்பெண்கள் ஆவர். அவர்கள் முறையே வயதான நகோமி, இளம் பருவத்தினரான ரூத்து என்பவர்கள் ஆவர். நகோமியின் அருமை மருமகளான ரூத்தின் வழியாக இறையருள் செயல்பட்டு இவ்விரு கைம்பெண்களின் வாழ்க்கை மீண்டும் மலர்கின்றது என்பதை எடுத்துரைக்கின்றது. இயேசு கிறித்துவின் மூதாதையர் அட்டவணையில் ரூத்தின் பெயரும் இடம்பெறுகின்றது. இந்நூலில் மூன்று பிரிவுகளும் நான்கு அதிகாரங்களும் இடம்பெற்றுள்ளன.

**1 சாமுவேல்:**

1சாமுவேல் (1Samuel) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூலில் ஐந்து பிரிவுகளும் முப்பத்தொரு அதிகாரங்களும் உள்ளன. இந்நூல்களில் இசுரயேல் அரசுரிமையின் தொடக்க வரலாறு குறிப்பிடப்படுகின்றது, இவ்விரு நூல்களின் தொகுப்பு எபிரேய மூல மொழியில் "Sefer Sh'muel" (சாமுவேலின் நூல்கள்) என்று அழைக்கப்படுகிறது. நீதித் தலைவர்களின் காலம் அரசுரிமையின் காலமாக மாறியது குறித்த நிகழ்ச்சிகள் '1 சாமுவேல்' என்னும் நூலில் இடம் பெறுகின்றன. மேலும், நீதித் தலைவர்களின் வரிசையில் இறுதியாக வந்தவரான சாமுவேல், இசுரயேலின் முதல் அரசரான சவுல், சிறுபருவத்தே இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு இசுரயேலின் பேரரசராக உயர்த்தப்பட்ட தாவீது ஆகிய மூவரை மையமாகக் கொண்டு ஏற்பட்ட சமுதாய மாற்றமும் இந்நூலில் இடம்பெறுகின்றது.

**2 சாமுவேல்:**.

2சாமுவேல் (2 Samuel) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூல் 1 சாமுவேல் கூறும் வரலாற்றின் தொடர்ச்சியாக உள்ளது.இந்நூலில் இரண்டு பிரிவுகளும் இருபத்து நான்கு அதிகாரங்களும் உள்ளன. இந்நூலில் அரசர் தாவீதின் ஆட்சி வரலாறு எடுத்துரைக்கப்படுகிறது.

**1அரசர்கள்:**

1 அரசர்கள் (1 Kings) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இதன் பின்னே வருகின்ற 2 அரசர்கள் என்னும் நூல் யூதா-இசுரயேல் நாடுகளின் வரலாற்றைத் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்கிறது. ‘1 மற்றும் 2 சாமுவேல்’ என்னும் நூல்களின் தொடர்ச்சியாக இந்நூல்கள் அமைந்துள்ளன. யூதா-இசுரயேல் நாடுகளில் நிகழ்ந்தவற்றை, குறிப்பாக அவற்றை ஆண்ட அரசர்களின் வாழ்க்கையை எடுத்துரைப்பதால் இந்நூல்கள் இப்பெயரால் அழைக்கப்பெற்றன. இந்நூல் இருபத்திரண்டு அதிகாரங்களையும் நான்கு பிரிவுகளையும் கொண்டு அமைந்துள்ளது.

**2அரசர்கள்:**

2 அரசர்கள் (2Kings) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். ‘2 அரசர்கள்’ என்னும் இத்திருநூல் ‘வடக்கு - தெற்கு’ எனப் பிரிந்த யூதா - இசுரயேல் அரசுகளின் வரலாற்றை ‘1 அரசர்கள்’ என்பதன் தொடர்ச்சியாகத் தொடர்கின்றது. ‘2 அரசர்கள்’ என்னும் இத்திருநூல் இரு பகுதிகளைக் கொண்டது: இது வடக்கு - தெற்கு அரசுகளின் வரலாறு வரையிலானது ஆகும். இரண்டாவது பகுதி சமாரியாவின் வீழ்ச்சியிலிருந்து, (எருசலேமின் வீழ்ச்சி) வரையிலான யூதா அரசர்களின் வரலாறு என்பது வரையிலானது ஆகும். இந்நூலில் எலியாவின் பதில் ஆளான இறைவாக்கினர் எலிசாவின் புதுமைகள் சிறப்பிடம் பெறுகின்றன. இந்நூல் இரண்டு பிரிவுகளையும் இருபத்தைந்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**1 குறிப்பேடு:**

1 குறிப்பேடு (1 Chronicles) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூலில் மூன்று பிரிவுகளும் இருபத்தொன்பது அதிகாரங்களும் இடம்பெற்றுள்ளன. யூதா-இசுரயேல் நாடுகளை ஆண்ட அரசர்களின் காலத்தில் நிகழ்ந்தவை அங்கே குறிக்கப்பட்டுள்ளன. இதனால், பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் ‘குறிப்பேடு’ என்பது ‘நாளாகமம்’ என்று அறியப்பட்டது. சாமுவேல், அரசர்கள் ஆகிய நூல்களில் குறிக்கப்பெற்ற நிகழ்ச்சிகள் இந்நூலில் பிறதொரு கோணத்தில் விளக்கப்பட்டுள்ளன.முதலாம் குறிப்பேடு இரு செய்திகளைத் தெளிவாக முன்வைக்கின்றது.அவை முறையே, கடவுள் தாவீது, சாலமோன் ஆகியோர் வழியாகச் செயல்பட்டதையும் இரண்டாவது எருசலேம் கோவிலைக் கட்டியெழுப்பியவர் சாலமோனே ஆயினும், அங்கு தொடங்கிய இறைவழிபாட்டு ஒழுங்குமுறைகளையும் அவற்றுக்கான குருத்துவ, லேவிய அமைப்புகளையும் ஏற்படுத்தியவர் தாவீதே என்பதனைக் குறித்து நின்றதும் ஆகும்.

## 2 குறிப்பேடு

2 குறிப்பேடு (2 Chronicles) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூல் நான்கு பிரிவுகளும் முப்பத்தாறு அதிகாரங்களும் அமைந்துள்ளன. ‘இரண்டாம் குறிப்பேடு’ என்னும் இந்நூல் முதலாம் குறிப்பேட்டின் தொடர்ச்சியாகும். இந்நூல் சாலமோனது ஆட்சியின் தொடக்கம் முதல் அவரது இறப்பு வரையிலான நிகழ்ச்சிகளும் சாலமோனின் மகனும் அவருக்குப்பின் வந்தவனுமான ரெகபெயாமுக்கு எதிராக எரொபவாமின் தலைமையில் வடநாட்டுக் குலங்கள் கிளர்ந்தெழுந்ததையும் எருசலேம் வீழ்ச்சியுற்றது வரையிலான தென்னாட்டுக் குலங்கள் பற்றிய வரலாற்றையும் விளக்கி அமைகின்றது.

## எஸ்ரா

எஸ்ரா (Ezra) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். எஸ்ரா என்னும் இந்நூல் ‘1 மற்றும் 2 குறிப்பேடு’ என்னும் நூல்களின் தொடர்ச்சியாகும். இந்நூலைத் தொகுத்தவர் திருச்சட்ட வல்லுநரும் குருவுமான எஸ்ரா என்பவர் எனக் கருதப்படுவதால் இப்பெயர் அமைந்தது. எஸ்ரா ஒரு குரு; திருச்சட்ட வல்லுநர். இவர் இசுரேலியர்களின் மறைவாழ்விலும், சமூக வாழ்விலும் மறுமலர்ச்சி ஏற்படுத்தியவர் ஆவார். மேலும் ‘இறையாட்சி’ இசுரயேல் மக்களிடையே நிலவுமாறு அரசியல், மறை ஆகியவற்றின் பொறுப்பைக் குருக்களிடமே ஒப்படைத்து, அவற்றிற்கான சட்டதிட்டங்களை வகுத்துத் தந்தவர் ஆவார். இந்நூலின் பெரும் பகுதி எபிரேயத்திலும், சிறு பகுதி (எஸ்: 4:8-6:18, மற்றும் எஸ்:7:12-16) அரமேயத்திலும் எழுதப்பட்டுள்ளன. இந்நூல் மூன்று பிரிவுகளையும் பத்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

## நெகேமியா

நெகேமியா (Nehemiah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூல் நான்கு பிரிவுகளையும் பதிமூன்று அதிகாரங்களையும் கொண்டுள்ளது. இந்நூல் ‘எஸ்ரா’ நூலைப் போன்று ‘குறிப்பேட்டின்’ தொடர்ச்சியாகும். எபிரேய மொழியில் ‘நெகேமியா’ என்றால் ‘இறைவனே எனக்கு ஆறுதல்’ என்பது பொருள். ஒருவர் கடவுள் மீது பற்றுறுதி கொண்டு செயல்பட்டால், எத்துணை வலிமைபடைத்த உலக ஆற்றல்களையும் வென்றுவிடலாம் என்பது இந்நூலின் மையக் கருத்தாகும்.

நெகேமியா பாரசீக மன்னரான அர்த்தக்சசுத்தாவுக்குப் பானப் பணிவிடைக்காரராக இருந்தார். பாரசீக மன்னரால் யூதா நாட்டின் ஆளுநராக நியமனம் பெற்றார். பாழடைந்து கிடந்த எருசலேம் நகரின் மதிலைப் பல எதிர்ப்புகளுக்கிடையே மனம் தளராது கட்டியெழுப்பினார். சமய, சமூக சீர்திருத்தங்களை இசுரயேல் மக்களிடையே செய்தார் என்பன போன்ற செய்திகளை இந்நூல் குறிப்பிடுகிறது.

**எஸ்தர்:**

எஸ்தர் (Esther) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூல் நான்கு பிரிவுகளையும் பத்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது. இந்நூலில் வருகின்ற கதைத் தலைவியின் பெயர் எஸ்தர். அவரை மையமாகக் கொண்டு அமைந்துள்ள இந்நூலில் இடம்பெற்றுள்ள நிகழ்ச்சிகள் பாரசீகப் பேரரசர் அகஸ்வேரின் குளிர்கால அரண்மனையில் நடைபெற்றவை ஆகும். எஸ்தர் தம் மக்களிடம் பேரன்பு கொண்டிருந்ததையும் அம்மக்களை அழிக்க எதிரிகள் திட்டமிட்டபோது எஸ்தர் மிகுந்த துணிவுடன் செயல்பட்டதையும் இந்நூல் விளக்குகிறது. பூரிம் என்ற யூதப் பெருவிழாவின் பொருளும் அதன் பின்னணியும் இந்நூலில் எடுத்துக் கூறப்படுகின்றன

**யோபு**

யோபு (Book of Job) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற ஒரு நூல் ஆகும். இந்நூல் ஐந்து பிரிவுகளையும் நாற்பத்திரண்டு அதிகாரங்களையும் கொண்டுள்ளது. யோபு என்னும் விவிலிய நூலின் கதைத் தலைவர் யோபு என்பவர் பெயரால் இந்நூல் அமைந்துள்ளது. விலியத்திலுள்ள ஞானத்தைப் போதிக்கும் இந்நூல் மிகச் சிறந்தது.

யோபு  இறைவனுக்கு அஞ்சி நடந்தவர் இறைவனின் அனுமதியுடன் சாத்தான் அவரைச் சோதித்தான். யோபு மக்கள், சொத்து, உடல் நலம் உள்ளிட்ட அனைத்தையும் இழந்தார். எனினும் கடவுளுக்கு ஏற்புடையவராகவே வாழ்ந்தார் எனச் சொல்வது இந்நூல் ஆகும். துன்பத்திற்கு விடை தேடிய யோபு, முடிவில் இறைவனின் திட்டத்தை மனித அறிவால் அறிய முடியாது என்னும் முடிவுக்கு வருகிறார்.

**திருப்பாடல்கள்**:

திருப்பாடல்கள் (Book of salms) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூல் விவிலியப் பக்திப் பாடல்கள், இறை மன்றாட்டுகள் ஆகியவற்றின் தொகுப்பு நூலாகும். இசுரயேலரின் சமய நம்பிக்கை இந்நூலிலுள்ள 150 பாடல்களில் அமைந்துள்ளது. இப்பாடல்கள் இறைவனைப் போற்றிப் புகழும் பாடல்களாகவும் தனி மனிதரின் வேண்டுதலாகவும் நாட்டு மக்களின் மன்றாட்டாகவும் அமைந்துள்ளன. கடவுளிடம் உதவி, பாதுகாப்பு, மீட்பு வேண்டிப் பாடியவை, மன்னிப்பு வேண்டும் மன்றாட்டுகள், கடவுள் வழங்கிய ஆசிகளுக்கு நன்றி செலுத்தும் பாடல்கள், அரசர் பற்றிய பாடல்கள், அறிவுரை அளிக்கும் பாடல்கள் போன்றவை இந்நூலில் இடம்பெற்றுள்ளன. புதிய ஏற்பாட்டிலும் இப்பாடல்கள் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்டுள்ளன. எனவே இப்பாடல்கள் கிறித்த திருமறையிலும் திருச்சபையின் இறை வழிபாட்டிலும் தொடக்கத்திலிருந்தே சிறப்பிடம் பெற்று வந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**நீதிமொழிகள்**

நீதிமொழிகள் (Book of roverbs) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூல் நான்கு பிரிவுகளையும் முப்பத்தொன்று அதிகாரங்களையும் கொண்டுள்ளது. இந்நூல் ஒழுக்கம், சமயம் சார்ந்த போதனைகள் போன்றவற்றின் தொகுப்பாகும்.பழைய தமிழ் மொழிபெயர்ப்பு 'பழமொழி ஆகமம்' எனப்பட்டது. இதனுள் அமைந்துள்ள போதனைத் தொகுப்பு, சொற்கோவை, பழமொழி ஆகிய வடிவங்களில் காணப்படுகின்றது. 'ஆண்டவரிடம் கொள்ளும் அச்சமே ஞானத்தின் தொடக்கம்' (நீதி: 1:7) எனத் தொடங்கி, சமய ஒழுக்கம் பற்றியும் நல்லறிவு, நன்னடத்தை ஆகியவை பற்றியும் எடுத்துக் கூறுகின்றது.

இந்நூலில் தீமையினின்றும் குறிப்பாகக் காமத்தினின்றும் விலகும்படி எச்சரிக்கப்படுகின்றது. அவை, பிறரைக் கொன்று பொருளைக் கவரும் திருடர் கூட்டத்தில் சேராமலும் விலைமகளிரை நாடி செல்வத்தையும் பிறரின் நன்மதிப்பையும் இழக்காமலும், தீமையைவிட்டு விலகித் தீயோரின் உறவை விட்டு நன்னெறியில் செல்லுமாறும் கற்பிக்கின்றன. பெற்றோரின் அறிவுரைக்குச் செவிமடுத்து வாழ்தல், சோம்பலை விலக்குதல், எறும்பு போல ஊக்கத்தோடு உழைத்து உண்ணுதல் போன்ற அறிவுரைகள் இப்பகுதியில் உள்ளன. ஞானம் இங்கே ஒரு பெண்ணாக உருவகிக்கப்படுகிறது.

பத்தாம் அதிகாரத்திலிருந்து 29ஆம் அதிகாரம் முடிய உள்ள பகுதி 'சாலமோனின் நீதிமொழிகள்' என்னும் தலைப்பின் கீழ் உள்ளது. இங்கே ஞானமுள்ளோர் (மெய்யறிவு உள்ளோர், நேர்மையானவர்கள், நல்லார்) எத்தகைய நற்பண்புகளைக் கொண்டிருப்பர் என்றும்

அறிவிலிகள் (பொல்லார், மூடர், மதிகெட்டவர், மடையர், பேதையர்) எத்தகைய தீயகுணமுடையவராயிருப்பர் என்றும் பழமொழிப் பாணியில் அரிய அறிவுரைகள் உள்ளன.

**சபை உரையாளர்:**

சபை உரையாளர் (Ecclesiastes) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். சபை உரையாளர் என்னும் நூல் ஒரு ஞானியின் சிந்தனைகளைக் கொண்டது.இந்நூலின் பழைய தமிழ்ப் பெயர் சங்கத் திருவுரை ஆகமம் என்பதாகும். இந்நூல் ஞான இலக்கியம் என்னும் வகை சார்ந்தது. இந்நூலை உருவாக்கிய ஞானி மானிட வாழ்வு எவ்வளவு குறுகியது, முரண்பாடானது எனக் கண்டுணர்கிறார். இந்நூலில் மனித வாழ்க்கையின் நிலையாமை, இயலாமை முதலியன விரித்துரைக்கப்படுகின்றன. வாழ்க்கை நிலையற்றது. எல்லாரும் இறுதியில் சாவைச் சந்திக்கிறார்கள். அறிவிலி இறப்பதுபோல ஞானியும் ஒருநாள் இறந்து மறைகின்றான் (2:15-17). என்பது இதன் அடிப்படைப் பொருள் ஆகும். ஆயினும் மக்கள் உழைத்து இறைவனின் கொடைகளைத் துய்த்து மகிழுமாறு அறிவுறுத்தப்படுகின்றது. கடவுள் நம்பிக்கைதான் மானுட வாழ்வின் நிறைவு எனவும் உணர்த்தப்படுகின்றது. இந்நூலில் பன்னிரண்டு அதிகாரங்கள் அமைந்துள்ளது.

**இனிமைமிகு பாடல்**:

இனிமைமிகு பாடல் என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூலில் எட்டு அதிகாரங்கள் அமைந்துள்ளன. இது ஒரு காதல் கவிதைகளின் தொகுப்பு ஆகும். இதன் ஆசிரியர் சாலமோன் ஆவார். ஆனால் சாலமோனின் காலத்திற்குப் பிற்பட்ட பாடல்களும் இத்தொகை நூலில் இடம்பெற்றுள்ளன. இந்நூல் கடவுளுக்கும் இசுரேயல் மக்களுக்கும் இடையேயுள்ள அன்புறவை வருணிப்பதாகவும் கருதப்படுகிறது. காதல் என்பது புனிதமானது, கடவுளின் கொடை என்பதனை விவிலியம் ஏற்கிறது. இதில் கடவுளின் பெயர் ஒரு இடத்தில் கூட இல்லை. எனினும் இந்நூல் இறை ஏவுதலால் எழுதப்பெற்றுத் திருமறை நூல்களுள் இடம்பெற்றுள்ளது.

**எசாயா:**

எசாயா (Isaiah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். எசாயா என்னும் இறைவாக்கினர் பெயரால் இந்நூல் அழைக்கப்படுகின்றது. இந்நூலின் பழைய தமிழ் மொழிபெயர்ப்பு ‘இசையாஸ் ஆகமம்’ அல்லது ‘ஏசாயா’ என்னும் பெயர் கொண்டிருந்தது. எசாயா இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு, கற்பிக்கப்பட்டு யூதா மக்களிடம் அனுப்பப்பட்டவர். தாவீதின் வழிமரபில் தோன்றவிருக்கும் அரசர்

மூலம், அனைத்துலகும் அமைதி பெறும் பொற்காலம் வரவிருந்ததையும் எசாயா முன்னறிவித்தார். இயேசு பெருமான் தம் பணியின் தொடக்கத்தில் இந்நூலில் இடம்பெற்றுள்ள 'ஆண்டவராகிய என் தலைவரின் ஆவி என்மேல் உளது; ஏனெனில் அவர் எனக்கு அருள்பொழிவு செய்துள்ளார்; ஒடுக்கப்பட்டோருக்கு நற்செய்தியை அறிவிக்கவும், உள்ளம் உடைந்தோரைக் குணப்படுத்தவும், சிறைப்பட்டோருக்கு விடுதலையைப் பறைசாற்றவும், கட்டுண்டோருக்கு விடிவைத் தெரிவிக்கவும் என்னை அனுப்பியுள்ளார். ஆண்டவர் அருள் தரும் ஆண்டினை முழங்கவும்... என்னை அனுப்பியுள்ளார்' (எசா:61:1-2) என்னும் பகுதியின் சொற்களைக் கையாள்வது குறிப்பிடத்ததாகும். இந்நூல் ஏழு பகுதிகளையும் அறுபத்தாறு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**எரேமியா**:

எரேமியா (Jeremaiah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். எரேமியா என்னும் இறைவாக்கினர் பெயரால் இந்நூல் அழைக்கப்படுகிறது. எரேமியா என்ற இறைவாக்கினர் நெடிய பணிக்காலத்தில் இசுரயேல் மக்களுக்கு நிகழவிருந்த தண்டனை பற்றி முன்னெச்சரிக்கை விடுத்தார். பாபிலோனிய மன்னனால் எருசலெம் திருக்கோவிலும் அழிவுற்றதையும் யூதா அரசனும் நாட்டினரும் நாடு கடத்தப்பட்டதையும் கண்டவர். எனினும் அம்மக்கள் பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று மீளவிருப்பதையும் நாடு புத்துயிர் பெறவிருப்பதையும் முன்னறிவித்தார். இந்நூல் ஆறு பிரிவுகளையும் ஐம்பத்திரண்டு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**புலம்பல்:**

புலம்பல் (Book of Lamentations) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூலின் பழைய தமிழ் மொழிபெயர்ப்பு 'புலம்பல் ஆகமம்' என்னும் பெயர் கொண்டிருந்தது. கிறித்தவர்கள் இந்நூலின் பகுதிகளைப் பெரிய வெள்ளிக் கிழமையில் இயேசுவின் துன்பங்களை நினைவுகூரும் வண்ணம் அறிக்கையிட்டு தியானிப்பர். 'புலம்பல்' என்னும் இத்திருநூல் ஐந்து எபிரேய அகர வரிசைக் கவிதைகளால் ஆனது. எருசலேமுக்கு நேரிட்ட பேரழிவையும், அதன் தொடர் நிகழ்ச்சியான நாடுகடத்தப்படுதலையும் பற்றிய புலம்பலாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலில் அவலச்சுவை மேலோங்கி உள்ளது. கடவுளின் அருளினால் கிடைக்கவிருக்கும் ஒளிமயமான எதிர்காலம் பற்றிய நம்பிக்கையும் ஆங்காங்கு வெளிப்படுகின்றது. இந்நூல் ஐந்து பிரிவுகளையும் ஐந்து அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**எசேக்கியேல்:**

எசேக்கியேல் (Ezekiel) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். எசேக்கியேல் என்னும் பெயர் கொண்ட இறைவாக்கினர் எருசலேம் நகரின் வீழ்ச்சிக்கு முன்பும் பாபிலோனியச் சிறையிருப்பின் போதும் வாழ்ந்தவர். பாபிலோனுக்கு நாடு கடத்தப்பட்டோருக்கு மட்டுமன்றி, எருசலேமில் எஞ்சியிருந்தோருக்கும் அவர் இறைவாக்கு உரைத்தார். இவர் குருவாகவும் இறைவாக்கினராகவும் இருந்தமையால், கோவிலைக் குறித்தும் உள்ளத் தூய்மையைக் குறித்தும் இந்நூல் மிகுதியும் எடுத்துக் கூறுகின்றது. எசேக்கியல் என்பதற்கு ஆண்டவர் ஆற்றல் அளிப்பார் என்பது பொருள் ஆகும். இந்நூல் ஆறு பகுதிகளையும் நாற்பத்தெட்டு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**தானியேல்**:

தானியேல் (Daniel) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். தானியேல் என்பவர் இந்நூலின் மைய கதாபாத்திரம் ஆவார். தானியேல் என்னும் இந்நூல் யூதர்கள் வேற்றினத்து மன்னனால் ஒடுக்கப்பட்டுத் துன்புறுத்தப்பட்டபோது எழுதப்பெற்றது. கொடுங்கோல் மன்னனை வீழ்த்தி இறைவன் தம் மக்களை மீண்டும் முன்னிருந்தவாறே சிறப்புறச் செய்வார் என்பதை வற்புறுத்துமாறு இந்நூலில் எடுத்துக்காட்டுகளும் காட்சிகளும் கையாளப்பட்டுள்ளன. இந்நூல் மூன்று பிரிவுகளையும் பன்னிரண்டு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**ஒசேயா:**

ஒசேயா (Hosea) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெறுகின்ற நூல் ஆகும். இறைவாக்கினர் ஒசேயா இந்நூலின் முக்கிய கதாபாத்திரம் ஆவார். இறைவாக்கினர் ஒசேயா வடநாடான இசுரயேலில் ஆமோசுக்குச் சற்றுப் பின்னர் வாழ்ந்தவர்; சமாரியா வீழ்ச்சியுறுவதற்கு முன் இறைவாக்கு உரைத்தவர்; இசுரயேலின் சிலைவழிபாட்டைக் கடிந்து கொண்டவர்; அவர்களது கீழ்ப்படியாமையைக் கண்டித்தவர். கடவுளை விட்டு விலகிச் சென்ற அவர்களுக்கு இறைவன் தண்டனை வழங்குவார்; ஆயினும் இறைவனின் பேரன்பு இறுதிவரை நிலைத்திருக்கும்; அம்மக்களை அவர் பக்கம் ஈர்த்துக்கொள்ளும்; அதன்மூலம், முறிந்த உறவு மலரும். இதுவே ஒசேயா இறைவாக்கினர் பெயரால் அமைந்துள்ள நூலின் செய்தியாகும். இந்நூல் மூன்று பிரிவுகளையும் பதினான்கு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**யோவேல்:**

யோவேல் என்னும் இறைவாக்கினர் பெயரால் இந்நூல் அழைக்கப்படுகிறது. இவரின் பெயர் ஒரே ஒரு முறை மட்டும் விவிலியத்தில் குறிப்பிடப்படுகிறது. அவர் பெயரால் வழங்கப்படுகின்ற இந்நூலின் முதல் வசனம் அவர் பெயரைக் கொண்டிருக்கிறது: 'பெத்துவேலின் மகனான யோவேலுக்கு ஆண்டவர் அருளிய வாக்கு இதுவே' (யோவே: 1:1). 'யோவேல்' என்னும் பெயருக்கு 'யாவே' என்னும் கடவுளை வழிபடுபவர்' எனப் பொருள் கொள்ளலாம். இந்நூல் மூன்று பிரிவுகளையும் பதினான்கு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**ஆமோஸ்**:

ஆமோஸ் (Amos) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இந்நூல் ஆமோஸ் என்னும் இறைவாக்கினர் பெயரில் அமைந்துள்ளது. 'ஆமோஸ்' என்பதற்கு 'சுமை சுமப்பவர்' என்பது பொருளாகும். இந்நூலில் மூன்று பிரிவுகளும் ஒன்பது அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**ஒபதியா:**

ஒபதியா (Obadiah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். ஒபதியா என்னும் பெயரின் பொருள் 'இறையடியான்' என்பதாகும். இறைவாக்கு நூல்களிலேயே மிகச் சிறிதான இந்நூல் எருசலேம் நகர் வீழ்ச்சியடைந்ததற்குச் சற்றுப் பின்னர் தோன்றியதாகும்.

இந்நூலில் ஓர் அதிகாரமும் அதில் 21 வசனங்கள் மட்டும் உள்ளன. நூல் சிறிதாயினும் அது வழங்குகின்ற செய்தி முக்கியமான அறிவுரையாக அமைந்துள்ளது. வசனங்கள் 1 முதல் 9 வரை ஏதோம் நாட்டை, ஆண்டவர் தண்டிப்பார் என்னும் செய்தி வழங்கப்படுகிறது.

**யோனா:**

யோனா (Jonah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இறைவாக்கினராக யோனா சித்தரிக்கப்படுகிறார் (2 அரசர்: 14:25). அவரைக் கதாபாத்திரமாகக் கொண்டு அமைந்த நூல் யோனா ஆகும். தன்னை வெறுத்துப் போன யோனாவையும் கடவுள் புறந்தள்ளவில்லை. அவர்பால் அன்பு பாராட்டி அவரைக் காத்தார் என்பதனை இந்நூல் குறிப்பிடுகின்றது. இயேசு கிறித்து இரு இடங்களில் யோனா நூலிலிருந்து மேற்கோள் காட்டித் தம் பணியையும் உயிர்த்தெழுதலையும் அந்நூல் அடையாளமாக முன்னறிவித்ததைக் குறிப்பிட்டார். அப்பகுதிகள், மத்தேயு 12:38-41; லூக்கா 11:29-30,32 என்பனவாகும். இந்நூலில் நான்கு பிரிவுகளும் நான்கு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**மீக்கா:**

மீக்கா (Micah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இப்பெயரின் பொருள் 'கடவுளுக்கு இணையாவார் யார்?' என்பதாகும். மிக்கேல் (Michael) என்பது இப்பெயரின் வேறொரு வடிவம். இவர் காலம் யோத்தாம், ஆகாசு, எசேக்கியா ஆகிய மன்னர்களின் ஆட்சிக்காலமும்கூட. மீக்கா யூதாவில் உள்ள நாட்டுப்புற நகர் ஒன்றில் தோன்றியவர். ஓசேயா, எசாயா ஆகியோர் வாழ்ந்து பணியாற்றிய காலமும் அதுவே. எரேமியா 'யூதாவின் அரசரான எசேக்கியாவின் காலத்தில் மோரசேத்தைச் சார்ந்த மீக்கா இறைவாக்கு உரைத்துக் கொண்டிருந்தார்' (இறைவாக்கு:26:18) மீக்கா நூலில் சமூக நீதி பற்றிய சிறப்பான கருத்துகள் உள்ளன. அவை ஆமோஸ் இறைவாக்கினர் அறிவித்த செய்தியோடு ஒத்திருக்கின்றன. இந்நூலில் மூன்று பிரிவுகளும் ஏழு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**நாகூம்**

நாகூம் (Nahum) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். நாகூம் என்னும் இப்பெயரின் பொருள் 'ஆறுதலளிப்பவர்' என்பதாகும். இசுரயேலின் எதிரியான அசீரியருடைய தலைநகராம் நினிவே பெருநகரின் அழிவை மகிழ்ந்து பாடும் கவிதையாக இந்நூல் அமைந்துள்ளது. ஆணவம் கொண்டு மற்ற மக்களைக் கொடுமைப்படுத்தும் எந்த நாட்டையும் ஆண்டவர் தண்டிக்காமல் விட மாட்டார் என்பதை இந்நூல் விளக்குகிறது. இந்நூலில் இரண்டு பிரிவுகளும் எட்டு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**அபக்கூக்கு:**

அபக்கூக்கு (Habakkuk) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இறைவாக்கினர் அபக்கூக்கு, கல்தேயர் இனத்தாரான பாபிலோனியரின் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்தவர் எனச் சுட்டப்படுகிறது. பாபிலோனியர் கொடுமை இழைத்தல்,கொள்ளையடித்தல் போன்றவை செய்வது கண்டு அபக்கூக்கு, ஆண்டவரிடம் 'பொல்லாதவர்கள் நேர்மையானவர்களை விழுங்கும்போது நீர் ஏன் மௌனமாய் இருக்கிறீர்?' என்று வினவ, ஆண்டவர் தாம் குறித்த காலத்தில் தண்டனைத் தீர்ப்பை வழங்குவதாகவும் அதுவரை நேர்மையுடையோர் கடவுள்மீது கொண்ட நம்பிக்கையினால் வாழ்வார்கள் என்றும் ஆண்டவர் மறுமொழி கூறினார் என்பதனை இது முதற்பகுதியாக அறிவிக்கின்றது, இந்நூலின் பிற்பகுதி நேர்மையற்றோர், கொடியோர் ஆகியவர்களுக்கு ஆண்டவர் வழங்கும் தண்டனைத் தீர்ப்பைப் பற்றிக் கூறுகின்றது. இறுதியில் அமைந்துள்ள பாடல்

இறைவனின் மாட்சியையும் புகழையும் எடுத்துரைக்கிறது. இந்நூலில் மூன்று பிரிவுகளும் மூன்று அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**செப்பனியா**:

செப்பனியா (Zephaniah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இப்பெயருக்குக் 'கடவுள் காக்கிறார்' என்று பொருள். இந்நூலில் மூன்று பிரிவுகளும் மூன்று அதிகாரங்களும் அமைந்துள்ளன. ஆண்டவரின் தீர்ப்பு நாள் அழிவைக் கொணரும் என்பதால் மனிதர்கள் தீயவற்றிலிருந்து மனம் மாறுதல் வேண்டும் என்றும் மனமாறினால் கடவுளின் இரக்கம் வெளிப்படும் என்றும் இந்நூல் உணர்த்துகின்றது. இந்நூலில் மூன்று பிரிவுகளும் மூன்று அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**ஆகாய்**

ஆகாய் (Haggai) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள பிறிதோர் நூல் ஆகும். இப்பெயருக்குக் 'திருப்பயணம் செய்வோன்' என்று பொருள் ஆகும். ஆகாய் இறைவாக்கினர் மூலம் ஆண்டவர் அருளிய இறைவாக்குகளின் தொகுப்பாக இத்திருநூல் அமைந்துள்ளது.பாபிலோனிய அடிமைத்தனத்தினின்று எருசலேமுக்குத் திரும்பிய இசுரயேலர் ஆகாய் ஊக்கத்தினால் ஆண்டவருக்குக் கோயில் எழுப்பியதை இந்நூல் குறிப்பிடுகின்றது. இந்நூலில் இரண்டு பிரிவுகளும் இரண்டு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**செக்கரியா:**

செக்கரியா (Zechariah) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இப்பெயருக்குக் 'கடவுள் நினைவுகூர்ந்தார்' என்று பொருள் அமைகின்றது. செக்கரியா நூலை இரு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம். இந்நூலில் எருசலேமின் மீட்பு, கோவில் மீண்டும் கட்டியெழுப்பப்படும் என்ற வாக்குறுதி, இறைமக்கள் தூய்மைப்படுத்தப்படுவர் என்ற அறிவிப்பு, மெசியாவின் வருங்கால ஆட்சி ஆகியன சிறப்பாக எடுத்துரைக்கப்படுகின்றன. மேலும் மெசியாவைப் பற்றியும் இறுதித் தீர்ப்பைப் பற்றியும் எடுத்துரைக்கின்றது. இந்நூலில் மூன்று பிரிவுகளும் பதினான்கு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**மலாக்கி:**

மலாக்கி (Malachi) என்பது கிறித்தவ மற்றும் யூதர்களின் திருநூலாகிய திருவிவிலியத்தில் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நூல் ஆகும். இப்பெயருக்கு 'கடவுளின் தூதுவன்' என்று பொருள். மலாக்கி நூலின் ஆசிரியர் யார் என்று தெரியவில்லை. நெகேமியா இறைவாக்கினர் எருசலேமுக்கு வருவதற்கு முன் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும். எருசலேம் கோவில் மீண்டும் கட்டியெழுப்பப்பட்டதற்கு பின் இந்நூல் தோன்றியது என்றும் தெரிகிறது. மக்களின் வாழ்க்கையை மாற்றியமைக்க கடவுள் தாமே வருவார்; ஆண்டவர் வரும் நாளை முன்னறிவிப்பதுபோல அவருடைய தூதர் வருவார் என்று மலாக்கி நூல் கூறுவதை நற்செய்தி நூலாசிரியர்கள் இயேசுவுக்கும் அவருடைய வருகையை முன்னறிவித்த திருமுழுக்கு யோவானுக்கும் பொருத்தியுரைப்பார். இந்நூலில் இரண்டு பிரிவுகளும் மூன்று அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**இணைத்திருமுறைகள்:**

**தோபித்து:**

தோபித்து: (Tobit) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். 'கடவுளே என் நலம்' என்பது இதன் பொருள்.இந்நூல்கள் கத்தோலிக்க திருச்சபையாலும் மரபுவழாத் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறை ஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன. யூதர்கள் அசீரியாவுக்கு நாடு கடத்தப்பட்டு அடிமைகளாக வாழ்ந்ததைப் பின்னணியாகக் கொண்டு யூதக் குடும்ப வாழ்வை விளக்குவதாய் இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலின் ஆசிரியர் யார் என்பது தெரியவில்லை. இது, யூத போதகர்கள் கையாண்டுவந்த விவிலிய விளக்கமுறையான மித்ராஷ் என்னும் இலக்கிய வகையைச் சேர்ந்தது. ஞான இலக்கியத்தைச் சேர்ந்ததாகக் கருதுவாரும் உளர். பல்வேறு துன்பங்களிடையிலும் தம் மீது பற்றுறுதி கொண்டு வாழ்வோர்க்குக் கடவுள் கைம்மாறு அளித்து அவர்களைக் காப்பார் என்பது இந்நூலின் மையச் செய்தியாகும். இந்நூலில் ஐந்து பிரிவுகளும் பதினான்கு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**யூதித்து**:

யூதித்து (Judith) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். இந்நூல்கள், கத்தோலிக்கத் திருச்சபையாலும் மரபுவழாத் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறை ஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன. இப்பெயரின் பொருள் 'யூதப் பெண்மணி' என்பதாகும்; 'புகழ்பெற்றவர்' என்றும் பொருள்கொள்ளலாம். இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.ஒருவர் கடவுள் மீது பற்றுக் கொண்டு செயல்பட்டால் எத்தனை வலிமை படைத்த உலக

ஆற்றல்களையும் வென்று விடலாம் என்பது இந்நூலின் மையக் கருத்தாகும். இது புதினம் ஆகும். இந்நூலில் இரண்டு பிரிவுகளும் பதினாறு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**எஸ்தர் (கி)**

எஸ்தர் (கிரேக்கம்) (Esther) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த நூல்களுள் ஒன்றாகும். இந்நூல் கத்தோலிக்க திருச்சபையாலும் மரபுவழாத் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறை ஏவுதலால் எழுதப்பட்டதாக ஏற்கப்பட்டுள்ளது. எபிரேய மொழியில் அமைந்த எஸ்தர் நூலே மூல பாடம் என்று அறிஞர் கருதுகின்றனர். கிரேக்க பாடம் இருவேறு வடிவங்களில் உள்ளது. கிரேக்க பாடம் எபிரேய பாடத்தின் மொழிபெயர்ப்பாக இருந்தாலும், எழுத்துக்கு எழுத்து என்று மொழிபெயர்ப்பு இல்லை. மேலும், கிரேக்க பாடம் 6 பெரும் பகுதிகளை அதிகமாகக் கொண்டுள்ளது. கி.பி. நான்காம் நூற்றாண்டில் செய்யப்பட்ட இலத்தீன் மொழிபெயர்ப்பில் கிரேக்க இணைப்புகள் எஸ்தர் நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டன. இவ்வாறு கிரேக்க எஸ்தர் நூலில் சில பகுதிகள் அதிகமாகச் சேர்க்கப்பட்டதால், எபிரேய மொழி எஸ்தர் நூலில் இருக்கும் மொத்தம் 167 வசனங்கள் கிரேக்க மொழி எஸ்தர் நூலில் 270 வசனங்களாக விரிந்தன. இந்நூலில் ஐந்து பிரிவுகளும் பத்து அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**சாலமோனின் ஞானம்:**

சாலமோனின் ஞானம் (Book of Wisdom) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். இந்நூல்கள் கத்தோலிக்க திருச்சபையாலும் மரபுவழாத் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறை ஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன. இந்நூலின் மூல பாடம் (செப்துவசிந்து) என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. யூத மறைக்கு மனம் மாறி வர அழைப்பு விடுப்பதே இந்நூலாசிரியரின் முதன்மை நோக்கம்.கிரேக்கருடைய சிலைவழிபாடு மடமை என்று அடையாளம் காட்டுவதோடு, ஆண்டவர்மீது அச்சம் கொள்வதே - அவரது திருச்சட்டத்தின்படி ஒழுகுவதே - உண்மையான, உயரிய ஞானம் என்று கோடிட்டுக் காட்டி, யூத மறையைத் தழுவுமாறு வேற்றினத்தாரைத் தூண்டுகிறார்.

கிரேக்கருக்கும் கிரேக்கச் சூழலில் வாழ்ந்துவந்த யூதருக்கும் யூதநெறிக் கோட்பாடுகளை விளக்க எழுந்த இந்நூலில் கிரேக்க மெய்யியல், நடை, சொல்லாட்சி முதலியன மிகுதியாகக் காணப்படுகின்றன.

முழு நூலும் இனிய கவிதை நடையில் அமைந்துள்ளது. நூலின் இறுதிப் பகுதி (அதிகாரங்கள் 10-19), யூதப் போதகர்கள் கையாண்டுவந்த விவிலிய விளக்க முறையான

‘மித்ராஷ்’ என்னும் இலக்கிய வகைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆகும். இந்நூலில் மூன்று பிரிவுகளும் பத்தொன்பது அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**சீராக்கின் ஞானம்:**

சீராக்கின் ஞானம் (Book of Sirach) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். இந்நூல்கள் கத்தோலிக்கத் திருச்சபையாலும் மரபுவழாத் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறை ஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன. இந்நூலின் மூல பாடம் (செப்துவசிந்து) என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. செலூக்கியர் ஆட்சியின்போது கிரேக்க மொழி, பண்பாடு, வழிபாட்டுமுறை முதலியன யூதர்கள்மீது திணிக்கப்பட்டன. யூதர் பலரும் இவற்றை விரும்பி ஏற்கத் தொடங்கினர். இக்கட்டத்தில் சீராக்கின் மகனும் எருசலேமில் வாழ்ந்த மறைநூலறிஞருமான ஏசு, தம்மவரை யூத மறையில் உறுதிப்படுத்தி ஊக்குவிக்க எண்ணினார். உண்மையான ஞானம் இசுரயேலில்தான் உள்ளது; திருச்சட்டத்தைக் கடைப்பிடிப்பதில்தான் அது அடங்கும் என்பதை வலியுறுத்தி இந்நூலை எழுதினார். எனவே இந்நூல் எபிரேயத்தில் ‘சீராவின் மகனான ஏசுவின் ஞானம்’ அல்லது ‘பென் சீரா’ என வழங்குகின்றது. ஞானம் பற்றிய கருத்துக் குவியலைக் கொண்ட முதல் பகுதி, அன்றாட வாழ்வில் ஞானத்தைக் கடைப்பிடிக்கும்முறை பற்றிப் பேசுகிறது. இரண்டாவது பகுதி இசுரயேலின் மீட்பு வரலாற்றில் இடம்பெற்ற தலைவர்களைப் புகழ்வதோடு, அவர்களைப் பின்பற்ற அழைப்பு விடுக்கிறது. இந்நூலில் நான்கு பிரிவுகளும் ஐம்பத்தொரு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**பாரூக்கு:**

பாரூக்கு (Baruch) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். இந்நூல்கள் கத்தோலிக்கத் திருச்சபையாலும் மரபுவழி திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறைஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன. பாரூக்கு என்பதற்கு ‘பேறுபெற்றவர்’ என்பது பொருள்.

இறைவாக்கினர் எரேமியாவின் செயலரான பாரூக்கு இந்நூலை எழுதினார் என்பது மரபுவழிச் செய்தி. வெவ்வேறு கால கட்டங்களில் எழுதப்பட்ட ஐந்து சிறிய தனித்தனி பகுதிகள் முறையாகத் தொகுக்கப்பட்டுத் தனி நூலாகப் பாரூக்கின் பெயரில் வெளியிடப்பட்டன. இந் நூலின் மையப்பகுதி (பாரூ: 3:9 - 5:90) கவிதை நடையில் அமைந்துள்ளது. கடவுளுக்கு ஏற்புடையவர்கள் ஆனால் அடிமைத்தனத்தை முடிவுக்குக் கொண்டு வருவார் என இந்நூல் இசுரயேல் மக்களுக்கு உரைக்கின்றது. இந்நூலில் ஐந்து பிரிவுகளும் ஆறு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**தானியேல் (இ):**

தானியேல் (இணைப்புகள்) (Daniel) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த நூல்களுள் ஒன்றாகும். இந்நூல் கத்தோலிக்கத் திருச்சபையாலும் மரபுவழித் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறைஏவுதலால் எழுதப்பட்டதாக ஏற்கப்பட்டுள்ளது. தானியேல் நூலின் இணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ளது. தானியேல் என்பவர் இந்நூலின் மைய கதாபாத்திரம் ஆவார். தானியேல் நூல் விவிலியத்தின் கிரேக்கத் திருமுறையாகிய செப்துவசிந்து பதிப்பில் மூன்று பெரும் இணைப்புகளைக் கொண்டுள்ளது. அவை முறையே, இளைஞர் மூவரின் பாடல், சூசன்னா, பேல் தெய்வமும் அரக்கப்பாம்பும் என்பவையாகும்.

**1 மக்கபேயர்:**

1மக்கபேயர் (1 Maccabees) என்னும் நூல் பழைய ஏற்பாட்டுப் பகுதியாகிய இணைத் திருமுறைத் தொகுப்பைச் சேர்ந்த ஏழு நூல்களுள் ஒன்றாகும். 'மக்கபே' என்னும் எபிரேய மொழிப் பெயரிலிருந்து 'மக்கபேயர்' என்னும் சொல் பிறந்தது. 'மக்கபே' என்னும் சொல்லுக்குச் 'சம்மட்டி' என்பது பொருளாகும். காலப்போக்கில் யூதா மக்கபேயின் சகோதரர்கள், ஆதரவாளர்கள், யூதத் தலைவர்கள் ஆகிய அனைவரும் 'மக்கபேயர்' என அழைக்கப்பட்டனர். இந்நூல்கள் கத்தோலிக்கத் திருச்சபையாலும் மரபுவழித் திருச்சபையாலும் பிற விவிலிய நூல்களைப் போன்று இறைஏவுதலால் எழுதப்பட்டவையாக ஏற்கப்பட்டுள்ளன.

விவிலியத்தின் பகுதியாக இந்நூல்கள் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்தே ஏற்கப்பட்டன. கி.பி.397இல் கார்த்தேசு (Carthage) நகரில் நடந்த சங்கத்திலும், பின்னர் திரெந்து சங்கத்திலும் (கி.பி. 1546) இவை விவிலியத் திருமுறை நூல்களாக அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டன. இந்நூலில் ஐந்து பிரிவுகளும் பதினாறு அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**2 மக்கபேயர்:**

2மக்கபேயர் என்னும் இந்நூல் கிரேக்க மூல மொழியில் 1 Makkabáion என்றும், இலத்தீனில் '2 Machabaeorum' என்றும் உள்ளது. 'மக்கபே' என்னும் எபிரேய மொழிப் பெயரிலிருந்து 'மக்கபேயர்' என்னும் சொல் பிறந்தது. இந்நூல் 1 மக்கபேயர் முதல் நூலின் தொடர்ச்சியன்று; ஒரு வகையில் அதற்கு இணையானது. அந்தியோக்கு எப்பிபானின் தந்தை நான்காம் செலூக்குவின் ஆட்சி தொடங்கி நிக்கானோரை யூதா மக்கபே வெற்றி பெற்றது வரையிலான காலகட்டத்தில் நடந்த நிகழ்ச்சிகள் இங்கு இடம்பெறுகின்றன.இந்நூலில் வரலாற்றுக் கண்ணோட்டத்தைவிடத் திருவுரைப் பாணியில் அமைந்த இறையியல் கண்ணோட்டமே இதில்

முதலிடம் பெற்று அமைந்துள்ளது. இந்நூலில் ஏழு பிரிவுகளும் பதினைந்து அதிகாரங்களும் அமைந்துள்ளன.

**புதிய ஏற்பாடு:**

புதிய ஏற்பாடு (New Testament) என்பது கிறித்தவர்களின் புனித நூலான விவிலியத்தின் இரண்டாவது பகுதியாகும். புதிய ஏற்பாடு இயேசுவின் பிறப்புடன் ஆரம்பித்து, அவருடைய போதனைகளையும் அவர் புரிந்த அதிசயச் செயல்களையும் எடுத்துரைப்பதோடு, அவருடைய சாவு, உயிர்த்தெழுதல் ஆகியவற்றையும் விளக்குகிறது. தமது போதனையை எல்லா மக்களுக்கும் அறிவிக்க இயேசு தன் சீடர்களாகிய திருத்தூதர்களை அனுப்பினார்.கிறித்துவின் காலத்திலும் அவர் இறந்த ஒரு நூற்றாண்டுக்குள்ளும் எழுதப்பட்ட புனித நூல்தொகுப்பு 'புதிய ஏற்பாடு' என்று வழங்கப்படுகிறது.

**புதிய ஏற்பாட்டின் நூல் தொகுதிகள்:**

பழைய ஏற்பாட்டைப் போலவே புதிய ஏற்பாடும் பல நூல்கள் அடங்கிய தொகுப்பு ஆகும். இது பல எழுத்தாளர்களாலும் குழுக்களாலும் கி.பி. 45க்குப் பின்னும் கி.பி. 140க்கு முன்னும் எழுதப்பட்டு, சிறுகச் சிறுகச் சில நூற்றாண்டுகளாக ஒன்று சேர்க்கப்பட்டு, கிறித்தவத் திருச்சபையால் அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டது. விவிலியத்தின் பகுதியாக இந்நூல்கள் கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்தே ஏற்கப்பட்டன. கி.பி. 397 இல் கார்த்தேசு நகரில் நடந்த சங்கத்திலும், பின்னர் திரெந்து சங்கத்திலும் (கி.பி.1546) இவை விவிலியத் திருமுறை நூல்களாக அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டன. புதிய ஏற்பாட்டின் மூல பாடம் 'செப்துவசிந்து' என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. தொடக்க காலத்திலிருந்தே விவிலியம் இலத்தீன் மொழியில் பெயர்க்கப்பட்டது.

**புதிய ஏற்பாட்டு நூல்கள்:**

வில்லியம் டைன்டேலே (William Tyndale) எபிரேயம் கிரேக்க மொழிகளில் இருந்த புதிய ஏற்பாட்டை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர்.

புதிய ஏற்பாட்டில் 27 தனிப்பட்ட சிறிய நூல்கள் காணப்படுகின்றன. இச்சிறு நூல்கள் அனைத்திலும் இயேசு மையகர்த்தாவாக இருக்கிறார். கிறித்தவத்தின் எல்லா உட்பிரிவினரும் இவற்றை மாற்றமின்றி ஏற்றுக்கொள்கின்றனர். புதிய ஏற்பாட்டில் இயேசுவின் வரலாற்றைக் கூறும் நான்கு நற்செய்தி நூல்களும், இயேசுவின் சீடர்களான பேதுரு, பவுல் ஆகியோர் கிறித்தவ நற்செய்தியைப் பரப்பிய வரலாற்றை எடுத்துரைக்கிற திருத்தூதர் பணிகள் என்னும் ஒரு நூலும், படிப்பினை வழங்கும் இருபத்தொரு மடல்களும், மற்றும் ஒரு வெளிப்பாட்டு நூலும்

அடங்கியுள்ளன. கி.பி. 50களில், எபிரேய மற்றும் கிரேக்கக் கலாச்சாரம் நிலவிய பகுதிகளில் பேச்சு மொழியாயிருந்த கொயினே கிரேக்கத்தில் புதிய ஏற்பாட்டு நூல்கள் எழுதப்பட்டன. திருவிவிலியத்தில் திருமுறையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட அனைத்து நூல்களும் கி.பி. 150க்குள் எழுதப்பட்டதாகக் கருதப்படுகிறது.

**நற்செய்தி நூல்கள்:**

**மத்தேயு நற்செய்தி:**

இயேசு கிறித்து நிருவிய இறையாட்சி பற்றிய நற்செய்தியைத் திருத்தூதர் மத்தேயு முதன்முதலில் எழுதினார் என்றும் அதனை அரமேய மொழியில் எழுதினார் என்றும் திருச்சபை மரபு கருதுகின்றது. இந்நூல் புதிய ஏற்பாட்டின் முதல் நூல் ஆகும். ஆனால் இன்று கிடைத்திருக்கும் இந்நூல் ஒரு மொழிபெயர்ப்பு நூலாகத் தோன்றவில்லை. இயேசுவைப் பின்பற்றிய ஒரு திருத்தூதர் தாமே நேரில்கண்ட கேட்ட நிகழ்ச்சிகளை நூலாக வடித்திருக்கிறார் என்பதனை விட அவரது வழிமரபில் வந்த சீடரோ குழுவினரோ இதனைத் தொகுத்து எழுதியிருக்க வேண்டும் என்பதே சிறப்பு எனக் குறிக்கின்றது திருவிவிலியம். (புதிய ஏற்பாடு: ப.3)

யூதர்கள் எதிர்பார்த்திருந்த மெசியா இயேசுதாம் என யூதக் கிறித்தவர்களுக்கு அழுத்தமாக இந்நூல் எடுத்துரைக்கின்றது. கிறித்து திருச்சட்டத்தின் நிறைவு என வலியுறுத்தப்படுகிறது. இந்நூல் முன்னுரை முடிவுரை உட்பட ஐந்து பகுதிகளாகவும் இருபத்தெட்டு அதிகாரங்களாகவும் அமைந்துள்ளது.

**மாற்கு நற்செய்தி:**

நற்செய்தி நூல்களுள் இரண்டாவதான மாற்கு நற்செய்தியின் ஆசிரியர் யோவான் மாற்கு என்பது திருச்சபை மரபு. இவர் பர்னபாவின் உறவினர் ஆவார். தொடக்கக் காலத்தில் பவுலோடு பயணம் செய்தவர். இறுதிக்காலத்தில் அவருக்குத் துணையாக இருந்தவர். பேதுருவின் போதனைகளின் அடிப்படையில் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பது பலரின் கருத்தாகும். நற்செய்தி நூல்களுள் மாற்கு நற்செய்தி நூல்தான் முதலில் எழுதப்பட்டதாகும்.கி.பி. 64 முதல் கி.பி. 70 ஆம் ஆண்டிற்குள் இந்நூல் எழுதப்பட்டதாகும். இயேசுவே மெசியா (மீட்பர்) இறைமகன் என்னும் உறுதியில் பிற இனத்துக் கிறித்தவர்கள் வளர இந்நூல் பெரிதும் உதவுகிறது. இந்நூலில் முன்னுரை, முடிவுரையோடு நான்கு பகுதிகள் அமைந்துள்ளன. பதினாறு அதிகாரங்கள் உள்ளன.

**லூக்கா நற்செய்தி**:

நற்செய்தி நூல்களுள் மூன்றாவதான லூக்கா நற்செய்தியின் ஆசிரியர் சிரிய நாட்டு அந்தியோக்கியாவைச் சேர்ந்த லூக்கா என்பது திருச்சபை மரபு. இவர் மருத்துவம் புரிந்தவர். திருத்தூதர் பவுலோடு சேர்ந்து நற்செய்திப் பணி ஆற்றியவர். இவர் ஒரு பிற இனக் கிறித்தவர். இயேசுவைப் பற்றி முறையாகவும் முழுமையாகவும் வரலாற்றுப் பின்னனியோடும் யாவற்றையும் உறுதிப்படுத்தும் வகையில் இந்நூலை இவர் எழுதியுள்ளார். இந்நூல் மாண்புமிகு தியோபில்லுக்கு அர்ப்பணிக்கப்படுகிறது. நல்ல கிரேக்க மொழிநடையில் அமைந்துள்ளது. இது கி. பி. 70 ஆம் ஆண்டிற்குப் பின் எழுதப்பட்டது. இந்நூலின் அமைப்பு ஏழு பகுதிகளாகவும் இருபத்தி நான்கு அதிகாரங்களாகவும் அமைந்துள்ளது.

**யோவான் நற்செய்தி:**

நற்செய்தி நூல்களுள் நான்காவதான யோவான் நற்செய்தியின் ஆசிரியர் செபதேயுவின் மகனான யோவான் என்பது தொன்மையான கிறித்தவ மரபு ஆகும். இதனை எழுதியதாக நற்செய்தியே கூறும் அன்புச்சீடர் (அதி:21:24) இவராகத்தான் இருக்கவேண்டும். இவர் முதலில் திருமுழுக்கு யோவானின் சீடராக இருந்து பின் இயேசுவின் சீடராகிறார். இயேசுவோடு நெருக்கமாக இருந்த மூன்று திருச்சீடர்களுள் இவரும் ஒருவர். கிறித்துவிற்கு முந்தைய பழையன கழிந்து புதியன புகுந்து விட்டன என்பதை யோவானின் நற்செய்தி உணர்த்துகின்றது. இந்நூலின் காலம் கி.பி.90 ஆம் ஆண்டு ஆகும். இந்நூலில் எட்டு பகுதிகளும் இருபத்தொரு அதிகாரங்களும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் முதல் மூன்று நூல்களும் தமக்குள் உள்ளடக்கம், நடை போன்றவற்றில் மிகவும் ஒத்தவையாகும். எனவே அவை ஒத்தமை நற்செய்திகள் (Synoptic Gospels) என அழைக்கப்படுகின்றன. நான்காவது நூல் அவற்றிலிருந்து வேறுபட்ட பாணியில் உள்ளது.

**திருத்தூதர் பணிகள்:**

‘திருத்தூதர் பணிகள்’ என்னும் பெயரால் வழங்கும் இந்நூல் புதிய ஏற்பாட்டின் ஐந்தாவது நூலாகும். இந்நூல் இயேசுவின் மரணத்துக்குப் பின்னரான தொடக்கக் காலக் கிறித்தவரின் வாழ்வைச் சித்தரிக்கிறது. பேதுரு, பவுல் ஆகிய திருத்தூதர்கள் அறிவித்த படிப்பினையையும், பவுல் மேற்கொண்ட பயணங்களையும் இந்நூல் விரிவாகத் தருகிறது. இந்நூல் லூக்கா நற்செய்தியை எழுதியவராலேயே எழுதப்பட்டது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட கருத்தாகும். பவுல் கூறியவற்றை லூக்கா எழுதினார் என்பது மரபு. இந்நூலில் நான்கு பிரிவுகளும் இருபத்தெட்டு அதிகாரங்களும் உள்ளன. சாட்சிகளாய் இருப்பீர்கள் என்ற உயிர்த்த இயேசுவின் கூற்றே இந்நூலுக்கு மையச்செய்தியாக அமைகின்றது.

**தூய பவுல் உரோமையருக்கு எழுதிய திருமுகம்:**

தூய பவுல் உரோமையருக்கு எழுதிய திருமுகம் (Letter to the Romans) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் ஆறாவதாக அமைந்ததாகும். இம்மடல் தூய பவுல் எழுதிய பிற எல்லா மடல்களை விடவும் முதன்மை வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

விவிலியத்தில் உள்ள ஆழமான இறையியல் பகுதியாக விளங்குவது உரோமையர் திருமுகமாகும். தூய பவுல் எழுதிய போதனையின் சுருக்கம் இந்நூலில் அடங்கியுள்ளது. இத்திருமுகக் கருத்துகளின் அடிப்படையில் திருச்சபையின் இறையியல் கோட்பாடுகள் பல வடிவங்களில் வளர்ச்சியடைந்துள்ளன.

இதனைத் தூய பவுல் கைப்பட எழுதவில்லை; தெர்த்தியு என்பவரை எழுத்தாளராகக் கொண்டு எழுதியுள்ளார். இந்நூலில் அன்பு, கீழ்ப்படிதல்,ஞானம், விருந்தோம்பல், அமைதி, பகிர்வு, நன்னடத்தைகள் போன்ற அற விழுமியங்கள் பேசப்படுகின்றன. தூய ஆவியின் விடுதலை பற்றியும் இந்நூல் கூறுகின்றது. இந்நூல் ஏழு பிரிவுகள் பதினான்கு அதிகாரங்களைக் கொண்டமைந்துள்ளது.

**தூயபவுல் கொரிந்தியருக்கு எழுதிய முதல் திருமுகம்: (1கொரிந்தியர்)**

தூயபவுல் கொரிந்தியருக்கு எழுதிய முதல் திருமுகம் (First Letter [Epistle] to the Corinthians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் ஏழாவதாக அமைந்ததாகும். இம்மடலைத் தூய பவுல் கி.பி. 54-55ஆம் ஆண்டுகளில் எழுதியிருக்கலாம் என்பதாகக் கருதப்படுகின்றது. (புதிய ஏற்பாடு: ப.300)

திருத்தூதர் பவுலின் பெரிய திருமுகங்களில் ஒன்றான தூயபவுல் கொரிந்தியருக்கு எழுதிய முதல் திருமுகம் (1கொரிந்தியர்) இன்றைய சூழலுக்கு மிகவும் பொருத்தமுடைய அறிவுரைகளை வழங்குகிறது. அன்பு பற்றிய சிறந்த ஒரு கவிதை இம்மடலில் உள்ளது. (1 கொரி: 12:31-13:1-13) ஒழுக்கக்கேடாய் வாழ்ந்த கொரிந்தியரை நெறிப்படுத்துவதாய் அமைகின்றது. திருமணம், கன்னிமை, மணமுறிவு, மறுமணம் ஆகியவை பற்றியும் கூறுகின்றது. இந்நூலில் எட்டு பிரிவுகள் பதினாறு அதிகாரங்கள் அமைந்துள்ளன.

**தூயபவுல் கொரிந்தியருக்கு எழுதிய இரண்டாம் திருமுகம்: (2 கொரிந்தியர்)**

தூயபவுல் கொரிந்தியருக்கு எழுதிய இரண்டாம் திருமுகம் (Second Letter [Epistle] to the Corinthians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் ஏழாவதாக அமைந்ததாகும்.இம்மடலைத் தூய பவுல் கி.பி. 55-56ஆம் ஆண்டுகளில்

எழுதியிருக்கலாம் என்பதாகக் கருதப்படுகிறது. இந்நூல் தன்னிலை விளக்க மடலாக அமைந்து பவுலின் உள்ளத்தையும் உணர்வையும் தெளிவாகப் வெளிப்படுத்துகின்றது. கொரிந்தியர் மனம் மாறியபோது ஆறுதலால் நிறைந்து மனம் மகிழ்ச்சியடைவதையும் எடுத்துரைக்கின்றது. இந்நூல் எட்டுப் பிரிவுகளையும் பதிமூன்று அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**தூயபவுல் கலாத்தியருக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் கலாத்தியருக்கு எழுதிய திருமுகம் (Letter [Epistle] to the Galatians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் எட்டாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் நான்காவதாகவும் அமைந்துள்ளது. இம்மடலைத் தூய பவுல் கி.பி. 52-53ஆம் ஆண்டுகளில் எழுதியிருக்கலாம் என்பதாகக் கருதப்படுகின்றது.

கலாத்தியர் பவுலின் வாழ்க்கைக் குறிப்புகள் அடங்கிய மடல். கலாத்தியருக்கு எழுதிய திருமுகத்தில் தூய பவுல் தம் வாழ்க்கைக் குறிப்புகள் சிலவற்றைத் தருகின்றார். வழக்கமாக, பவுல் எழுதிய திருமுகங்களில் முதலில் கடிதத்தை எழுதுபவர் யார், அதைப் பெறுபவர் யார் என்னும் குறிப்புக்குப் பிறகு, வாழ்த்தும், நன்றியுரையும், கடவுளுக்குப் புகழுரையும் அமைந்திருக்கும். ஆனால் கலாத்தியருக்கு எழுதிய மடலில் பவுல் சுருக்கமாக வாழ்த்துத் தெரிவித்துவிட்டு, உடனடியாகக் கலாத்தியரிடம் குற்றம் காணுகின்றார். உணர்ச்சிவசப்பட்டவராக அவர்களைக் கடிந்துகொள்கின்றார். அவர்களைப் பார்த்து, ‘அறிவிலிகளான கலாத்தியரே’ என்று வசைமொழி கூறுகின்றார் (கலா: 3:1).

கடிதத்தின் இறுதியில் வாழ்த்துரை கூறுவது வழக்கம். ஆனால் இங்கோ பவுல் ‘இனிமேல் எவரும் எனக்குத் தொல்லை கொடுக்கவேண்டாம்’ (கலா: 6:17) என்று ஒருவித மனச்சலிப்போடு கூறிக் கடிதத்தை முடித்துவிடுகிறார். இந்நூலில் நம்பிக்கையால் மட்டுமே கடவுளுக்கு ஏற்புடையவர் ஆகிறோம், கிறித்தவர் தூய்மையாக்கப்படுவது நம்பிக்கையால் விளையும் கீழ்ப்படிதலால் என்றும் கிறித்துவைச் சார்ந்தோர் உரிமை வாழ்விற்கு அழைக்கப்பட்டவர்கள் என்றும் கிறித்தவ வாழ்வு கிறித்துவின் மீது கொண்ட நம்பிக்கையால் விளையும் அன்பில் உள்ளது என்றும் விளக்குகிறார். இதில் ஐந்து பிரிவுகள் ஆறு அதிகாரங்கள் காணப்படுகின்றன.

**தூயபவுல் எபேசியருக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் எபேசியருக்கு எழுதிய திருமுகம் (Letter to the Ephesians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பத்தாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் ஐந்தாவதாகவும் அமைந்துள்ளது.இம்மடல் தூய பவுல்

பெயரால் கி.பி. 80க்குப் பின் வேறொருவரால் எழுதப்பட்டிருக்கலாம் என்பது கருத்தாகும். பவுலே இம்மடலை எழுதினார் எனவும் கருதப்படுகிறது.

எபேசியர் திருமுகம் மிகவும் சிறந்த கருத்துகளைத் தன்னுள் கொண்டுள்ளது. திருச்சபை பற்றிய அழகான உருவகங்களை தருகின்றது. கடவுளின் திட்டம் என்பது மனித குலத்தை மட்டுமல்ல, படைப்பு அனைத்தையுமே கிறித்துவின் தலைமையில் கடவுளுடன் ஒப்புரவாக்குவது என்னும் உயரிய கருத்தை இத்திருமுகம் எடுத்துரைக்கின்றது. குடும்பவாழ்வு பற்றிச் சிறந்த அறிவுரைகளையும் வழங்குகின்றது. இத்திருமுகம் கொலேசையர் திருமுகத்துடன் நெருங்கிய தொடர்புடையது. பலர் இதனைக் கொலோசையர் திருமுகத்தின் விளக்கமாகக் கருதுகின்றனர். இது ஆழமான இறையியல் கட்டுரை எனக் கொள்வது சிறப்புடையதாகும். இந்நூலானது நான்கு பிரிவுகளையும் ஆறு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**தூயபவுல் பிலிப்பியருக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் பிலிப்பியருக்கு எழுதிய திருமுகம் (Letter to the Philippians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினொன்றாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் ஆறாவதாகவும் அமைந்துள்ளது. தூய பவுல்தாம் இம்மடலை எழுதியவர் என்பது விவிலிய அறிஞர்களின் ஒருமித்த கருத்து. இது கி.பி. சுமார் 55 அளவில் எழுதப்பட்டிருக்கலாம்.

பிலிப்பியருக்கு எழுதிய திருமுகம் ஒற்றுமை பற்றியும் மகிழ்ச்சி பற்றியும் அருமையான கருத்துகளை எடுத்துக்கூறுகிறது. கிறித்து இயேசுவின் வழியாய் அவற்றைப் பெற இயலும் என அழுத்தமாக எடுத்துரைக்கிறது. தம்மைத் தாழ்த்திப் பின்னர் தந்தையால் உயர்த்தப்பட்ட இயேசுவை முன்மாதிரியாகக் காட்டுகின்றார். நன்றியோடு கூடிய இறை வேண்டுதலைக் குறிப்பிடுகிறார். இந்நூலில் ஏழு பிரிவுகளும் நான்கு அதிகாரங்களும் காணப்படுகின்றன.

**தூயபவுல் கொலோசையருக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் கொலோசையருக்கு எழுதிய திருமுகம் (Letter to the Colossians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பன்னிரண்டாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் ஏழாவதாகவும் அமைந்துள்ளது. கொலோசையர் திருமுகத்திலேயே தூய பவுல்தான் இதன் ஆசிரியர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மடல் தூய பவுலின் பெயரால் கி.பி. 70-80 ஆண்டுகளில் அவரது சீடர் ஒருவரால் எழுதப்பட்டிருக்கலாம் என்பது கருத்தாகும். இதை மறுப்போரும் உள்ளனர்.

கொலோசையர், கிறித்து பற்றிய மடல். விவிலியத்தில் கிறித்தியல் விளக்கம் மிகுதியாய்க் கொண்ட நூல் கொலோசையர் திருமுகம் ஆகும். கிறித்து இல்லாமல் கிறித்தவர்களாக வாழ இயலாது என இத்திருமுகம் வலியுறுத்திக் கூறுகிறது. கிறித்தவர்கள் பழைய இயல்பைக் களைந்து புதிய இயல்பை அதாவது குடும்பம் மற்றும் பொது வாழ்வினில் தூய்மையைக் கடைபிடிக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. இந்நூல் ஐந்து பிரிவுகளையும் நான்கு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய முதல் திருமுகம்: (1 தெசலோனிக்கர்)**

தூயபவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய முதல் திருமுகம் (First Letter to the Thessalonians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதின்மூன்றாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் எட்டாவதாகவும் அமைந்துள்ளது. புனித பவுல் எழுதியவற்றுள் இதுவே முதலாவது திருமுகம். அவர் இதனைக் கி.பி. 51ஆம் ஆண்டில் எழுதினார். தொடக்ககால மடலாக இருப்பதால் இதில் இறையியல் வளர்ச்சி மிகுதியாக இடம் பெறவில்லை. இருப்பினும், உயிர்பெற்றெழுதல், ஆண்டவரின் இறுதி வருகை ஆகியவை பற்றிய இதன் கருத்துகள் முக்கியமானவை ஆகும். கடவுளுக்கு உகந்த வாழ்க்கை, பொது அறிவுரைகள் பலவும் இதனுள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் ஏழு பிரிவுகளையும் ஐந்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய இரண்டாம் திருமுகம்: (2தெசலோனிக்கர்)**

தூயபவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய இரண்டாம் திருமுகம் (Second Letter to the Thessalonians) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினான்காவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் ஒன்பதாகவும் அமைந்துள்ளது.

2 தெசலோனிக்கர் என்னும் திருமுகத்தைப் புனித பவுல் எழுதினாரா, வேறொருவர் எழுதினாரா என்பது பற்றிக் கருத்து வேறுபாடு உள்ளது. அகச் சான்றுகளை வைத்துப் பார்க்கும்போது, பவுல் இதனை நேரடியாக எழுதியிருக்க முடியாது என்று சொல்லத் தோன்றுகிறது. பவுலின் உள்ளக்கிடக்கையை அறிந்து கொண்டு, அவருடைய உணர்வுகளைப் புரிந்துகொண்டு, அவர் கருத்துகளில் ஊன்றி நின்று, திருமுகம் எழுதப்பட்ட காலகட்டத்தில் இரண்டாம் வருகைபற்றி பவுல் என்ன கூறியிருப்பார் என்பதை அவருடைய சீடர் ஒருவர் பவுல் பெயரல் திருமுகமாக எழுதியுள்ளார் எனக் கருத இடமிருக்கிறது. இவ்வாறு எழுதுவது அந்தக் காலத்தில் முறையாகக் கருதப்பட்டது. கி.பி. 52 ஆம் ஆண்டிற்கும் கி. பி. நூறாம் ஆண்டிற்கும்

இடைப்பட்ட காலத்தில் இது எழுதப்பட்டிருக்கலாம். இந்நூல் ஐந்து பிரிவுகளையும் மூன்று அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் திமொத்தேயுவுக்கு எழுதிய முதல் திருமுகம்: (1 திமொத்தேயு)**

தூயபவுல் திமொத்தேயுவுக்கு எழுதிய முதல் திருமுகம் (First Letter to Timothy) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினைந்தாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் பத்தாவதாகவும் அமைந்துள்ளது.

திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டு திருமுகங்களும், தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகமும் ஆயர் பணித் திருமுகங்கள் என வழங்கப்பெறுகின்றன. ஆயர்களான திமொத்தேயுவுக்கும் தீத்துவுக்கும் ஆயர் பணி பற்றி எழுதப்பட்டுள்ளதால் இவை இவ்வாறு பெயர் பெறுகின்றன.இந்நூல் நீதி, இறைப்பற்று, நம்பிக்கை, மன உறுதி, பணிவு, ஆகியவற்றை நாடித்தேடு என்று உரைக்கின்றது. (திமொத்:6:11) இந்நூல் ஐந்து பிரிவுகளையும் ஆறு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் திமொத்தேயுவுக்கு எழுதிய இரண்டாம் திருமுகம்: (2 திமொத்தேயு)**

தூயபவுல் திமொத்தேயுவுக்கு எழுதிய இரண்டாம் திருமுகம் (Second Letter to Timothy)என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினாறாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் பதினொன்றாவதாகவும் அமைந்துள்ளது.

திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டு திருமுகங்களும், தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகமும் ஆயர் பணித் திருமுகங்கள் என வழங்கப்பெறுகின்றன. இத்திருமுகத்தில் பவுலைக் குறித்த செய்திகள் பல உள்ளன. மன உறுதியுடன் இருத்தலே இத்திருமுகத்தின் மையக் கருத்தாக அமைகிறது. 'கடவுள் நமக்குக் கோழையுள்ளத்தினை அல்ல, வல்லமையும் அன்பும் கட்டுப்பாடும் கொண்ட உள்ளத்தையே வழங்கியுள்ளார்' (2 திமொ 1:7) என்று மடலாசிரியர் கூறுகிறார். இந்நூல் ஐந்து பிரிவுகளையும் நான்கு அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் தீத்துவுக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் தீத்துவுக்கு எழுதிய திருமுகம் (Letter to Titus) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினேழாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் பன்னிரண்டாவதாகவும் அமைந்துள்ளது. திமொத்தேயுவுக்கு எழுதப்பட்ட இரண்டு திருமுகங்களும், தீத்துவுக்கு எழுதப்பட்ட திருமுகமும் 'ஆயர் பணித் திருமுகங்கள்'என வழங்கப்பெறுகின்றன. இந்நூலில் கிறித்தவ நல்லொழுக்கத்துடன் அமைதியுடனும் அன்புடனும்

இருத்தல், பகைமை, வாக்குவாதம், பிளவுகள் ஆகியவற்றைத் தவிர்த்தல் ஆகியவை குறித்துப் பேசுகிறார். இந்நூல் ஐந்து பிரிவுகளையும் மூன்று அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**தூயபவுல் பிலமோனுக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் பிலமோனுக்கு எழுதிய திருமுகம் (Letter to Philemon) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பதினெட்டாவதாகவும், தூய பவுலின் திருமுகங்கள் வரிசையில் பதின்மூன்றாவதாகவும் அமைந்துள்ளது. இத்திருமுகம் பவுல் எழுதிய பதின்மூன்று மடல்களிலும் மிகச் சிறியதாகும். மூல பாடமாகிய கிரேக்கத்தில் இம்மடல் 335 சொற்களை மட்டுமே கொண்டுள்ளது. புதிய ஏற்பாட்டுத் திருமுகங்களுள் பரிந்துரை மடலாக விளங்குவது பிலமோனுக்கு எழுதப்பட்ட திருமுகமாகும். அழகிய சொல்லாட்சியுடன் நளினமான முறையில் பவுல் இச்சிறு மடலை எழுதியுள்ளார். கிறித்தவ அன்பு மன்னிப்பு மிகுந்ததாய், தீமை செய்தோரையும் அன்புடன் ஏற்றுகொள்வதாய் அமைய வேண்டும் எனும் உயரிய கருத்தை இத்திருமுகம் எடுத்துக் கூறுகிறது. இதில் இடம்பெற்றுள்ள ஓர் அதிகாரத்தில் 25 வசனங்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. இது கி. பி. 61 இல் எழுதப்பட்டது.

இத்திருமுகம் நேர்த்தியான முறையில் வரையப்பட்டுள்ளது. பழங்கால உரோமை, கிரேக்க இலக்கிய முறையில் இக்கடிதத்தில் வரும் பரிந்துரை அமைந்துள்ளது.

**தூயபவுல் எபிரேயருக்கு எழுதிய திருமுகம்:**

தூயபவுல் எபிரேயருக்கு எழுதிய திருமுகம் (Letter to the Hebrews) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் பத்தொன்பதாவது நூலாக அமைந்துள்ளது. எபிரேயருக்கு எழுதிய திருமுகத்திற்கும் பவுலின் திருமுகங்களுக்கும் இடையே ஒற்றுமைகள் இருப்பினும் வேற்றுமைகள் மிகுதியாக இருப்பதால் இத்திருமுகத்தைப் பவுல் எழுதியிருக்க இயலாது என அனைவரும் இப்போது ஒரு மனதாக ஏற்றுக் கொள்கின்றனர். அப்பொல்லோ எழுதியிருக்கலாம் என்பர் சிலர். இருப்பினும் யாரால் எழுதப்பட்டது என்னும் கேள்விக்குத் தெளிவான விடை காண இயலவில்லை. கிறித்துவின் மேன்மையே இந்நூலின் மையக் கருத்தாகும். முன்னுரையில் கிறித்து முழுமையான, முடிவான வெளிப்பாட்டைத் தருகிறார் எனக் கூறப்பட்டுள்ளது. இறைவாக்கினருக்கும் வானதூதருக்கும் பழைய உடன்படிக்கையின் இணைப்பாளரான மோசேக்கும் மேலானவராகக் கிறித்து காட்டப்படுகிறார். கிறித்துவின் குருத்துவம் பழைய ஏற்பாட்டுக் குருத்துவத்தினின்று முற்றிலும் மாறுபட்டதும் அதற்கு மேம்பட்டதுமாகும் எனச் சுட்டிக் காட்டப்படுகிறது. ஏனெனில் கிறித்துவின் குருத்துவம் பழைய ஏற்பாட்டின் வாக்குறுதியை நிறைவு செய்கிறது. இந்நூல் பத்து பிரிவுகளையும் பதிமூன்று அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

இதன் காலம் கி.பி 80 முதல் 85 ஆம் ஆண்டிற்குள் எழுதப்பட்டிருக்கலாம் என உரைக்கப்படுகிறது.

**பொதுத் திருமுகங்கள்**

புதிய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள திருமுகங்களுள் தூயபவுலோடு தொடர்புடையனவாய் வந்த திருமுகங்கள் பதினான்கு ஆகும். எனைய ஏழு திருமுகங்கள் பொதுத் திருமுகங்கள் எனப்படுகின்றது. இவை யாக்கோபு, 1, 2 பேதுரு, 1,2,3 யோவான், யூதா திருமுகங்கள் ஆகும்.

**யாக்கோபு எழுதிய திருமுகம்**:

யாக்கோபு எழுதிய திருமுகம் (Letter of James) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபதாவது நூலாக அமைந்துள்ளது. பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் யாகப்பர் எழுதிய நிருபம் என்றிருந்தது. யாக்கோபு என்னும் பெயர் ஆங்கிலத்தில் James என்றாயிற்று. யாக்கோபு திருமுகத்தின் ஆசிரியர் தம்மைப் பற்றிக் ‘கடவுளுக்கும் ஆண்டவராகிய இயேசு கிறித்துவுக்கும் பணியாளனாகிய யாக்கோபு என்று குறிப்பிடுகிறார்’ (யாக் 1:11). மரபுக் கருத்துப்படி யாக்கோபு ஆண்டவரின் சகோதரர்; எருசலேம் திருச்சபையின் தலைவர்; பவுலுடன் தொடர்புகொண்டிருந்தவர். இந்நூலில் காணப்படும் முக்கியக் கருத்து கிறித்தவர் ஒருவர் தம் அன்றாடக் கடமைகளைப் பிழையின்றிச் செய்து முடிக்க வேண்டும் என்பதாகும். நாவை அடக்குதல், அமைதி வாழ்விற்கான ஆர்வம் ஒருவரை ஞானியாகவும் தூயவராகவும் மாற்றுகிறது, பாவம் பிளவின் காரணம் என்ற கருத்துகளும் இம்மடலில் எடுத்துரைக்கப்படுகின்றன. இந்நூல் மூன்று பிரிவுகளையும் ஐந்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது.

**பேதுரு எழுதிய முதல் திருமுகம்: (1 பேதுரு)**

பேதுரு எழுதிய முதல் திருமுகம் (First Letter of Peter) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்தோராவது நூலாக அமைந்துள்ளது.பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் இராயப்பர் எழுதிய முதல் நிருபம் என்றிருந்தது. இத்திருமுகம் சின்ன ஆசியாவிலுள்ள கிறித்தவச் சபைகளுக்கு எழுதப்பட்டது என முதல் வசனத்திலிருந்து அறியப்படுகிறது. அங்கு யூதக் கிறித்தவர்களும் பிற இனத்துக் கிறித்தவர்களும் இருந்திருக்க வேண்டும். வாசகர்களுள் பெரும்பாலோர் ஏழைகளாக இருந்திருக்க வேண்டும். அவர்களிடையே அடிமைகளும் இருந்திருக்க வேண்டும்.இந்நூல் அவரவர் ஆற்ற வேண்டிய கடமைகள் பற்றியும் குடும்பத்தில், சமூகத்தில் கிறித்தவ நடத்தைகள் பற்றி எடுத்துரைக்கின்றது. இந்நூல் ஐந்து பிரிவுகளையும் ஐந்து அதிகாரங்களையும் கொண்டுள்ளது. காலம் கி.பி.70 ஆம் ஆண்டில் இருந்து 90 ஆம் ஆண்டில் எழுதப்பட்டது எனக் கருதப்படுகிறது.

**பேதுரு எழுதிய இரண்டாம் திருமுகம்: (2 பேதுரு)**

பேதுரு எழுதிய இரண்டாம் திருமுகம் (Second Letter of Peter) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து இரண்டாவது நூலாக அமைந்துள்ளது. பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் இராயப்பர் எழுதிய இரண்டாம் நிருபம் என்றிருந்தது. இந்நூல் ஆசிரியர் தம்மை இயேசு கிறித்துவின் பணியாளனும் திருத்தூதனுமான சீமோன் பேதுரு எனக் கூறுகின்றார். எனினும் பேதுருதான் எழுதினார் என்பது பற்றி ஐயப்பாடு உள்ளது. போலி இறைவாக்கினர், போலிப் போதகர்கள் பற்றி இந்நூல் எடுத்துரைக்கின்றது. இந்நூல் நான்கு பிரிவுகளையும் மூன்று அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது.

**யோவான் எழுதிய முதல் திருமுகம்: (1யோவான்)**

யோவான் எழுதிய முதல் திருமுகம் (First Letter of John) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து மூன்றாவது நூலாக அமைந்துள்ளது. பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் அருளப்பர் எழுதிய முதல் நிருபம் என்றிருந்தது. யோவான் என்னும் பெயரே ஆங்கிலத்தில் John என்று வழங்கப்படலாயிற்று.

இத்திருமுகம் பொதுத் திருமுகங்களில் ஒன்றாக இருப்பினும் வழக்கமான வாழ்த்து, வாசகர் பற்றிய குறிப்பு எதுவும் இதில் இல்லை. எனினும் இதன் வாசகர்கள் ஒரு குறிப்பிட்ட குழுவினராக அல்லது சபையினராக இருந்திருக்க வேண்டும். அங்கு முதியோர் இளையோர் அனைவரும் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்களை நம்பிக்கையில் முதியோராகவும் இளையோராகவும் கூடக் கருதலாம். இயேசு உண்மையில் மனிதராகவும் இருந்தார் என்று கூறி, அதை அவர்கள் நம்ப வேண்டும் என்கிறார் ஆசிரியர்.கடவுளிடம் அன்புகூர்பவர்கள் சகோதர சகோதரிகளிடமும் அன்புகூர வேண்டும் என அறுதியிட்டுக் கூறுகிறார் ஆசிரியர். அன்பு பற்றி மிகுதியாகப் பேசுவதால் இதை ‘அன்புக் கடிதம்’ எனலாம். இந்நூல் ஆறு பிரிவுகளையும் ஐந்து அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது

**யோவான் எழுதிய இரண்டாம் திருமுகம்: (2யோவான்)**

யோவான் எழுதிய இரண்டாம் திருமுகம் (Second Letter of John) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து நான்காவது நூலாக அமைந்துள்ளது. பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் அருளப்பர் எழுதிய இரண்டாம் நிருபம் என்றிருந்தது. யோவான் என்னும் பெயரே ஆங்கிலத்தில் John என்று வழங்கப்படலாயிற்று. யோவான் எழுதிய இரண்டாம் திருமுகம் 13 வசனங்களை மட்டுமே கொண்ட

மிகச் சிறிய திருமுகம். இது 'தேர்ந்தெடுக்கப்பட்ட பெருமாட்டிக்கு'எழுதப்பட்டுள்ளது. 'பெருமாட்டி' என்பது ஒரு தனிப்பட்ட திருச்சபையைக் குறிப்பதாகும். இப்பெருமாட்டிக்கு வேறொரு சகோதரியும் உள்ளார். இச்சகோதரி வேறொரு சபையைக் குறித்து நிற்கிறார். இத்திருமுகத்தின் ஆசிரியர் தாம் ஒரு மூப்பர் எனச் சொல்லிக் கொள்கிறார். இந்நூல் அன்பின் மேன்மை பற்றியும் எதிர்க் கிறித்துகள் பற்றிய எச்சரிக்கையையும் குறிப்பிடுகின்றது. இந்நூல் நான்கு பிரிவுகளைக் கொண்டது.

**யோவான் எழுதிய மூன்றாம் திருமுகம்: (3 யோவான்)**

யோவான் அல்லது யோவான் எழுதிய மூன்றாம் திருமுகம் (Third Letter of John) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து ஐந்தாவது நூலாக அமைந்துள்ளது. பழைய தமிழ் மொழிபெயர்ப்பில் இம்மடல் அருளப்பர் எழுதிய மூன்றாம் நிருபம் என்றிருந்தது.

யோவான் எழுதிய மூன்றாம் திருமுகம் 15 வசனங்களை மட்டுமே கொண்ட ஒரு மிகச் சிறிய திருமுகம். இத்திருமுகம் காயு என்னும் தனி நபருக்கு எழுதப்பட்டுள்ளது. இறையியல் கருத்துகள் இத்திருமுகத்தில் இல்லை. எனினும் தொடக்க காலத் திருச்சபை வாழ்வைப் புரிந்துகொள்ள இது பெரிதும் உதவுகிறது. இத்திருமுகம் மூப்பர் ஒருவரால் எழுதப்பட்டது. மூப்பரின் பெயர் கொடுக்கப்படவில்லை. தீமையைப் பின்பற்ற வேண்டாம், நன்மையையே பின்பற்றுங்கள் என்று அறிவுறுத்துகின்றது. இந்நூல் ஐந்து பிரிவுகளைக் கொண்டது.

**யூதா எழுதிய திருமுகம்:**

யூதா எழுதிய திருமுகம் (Letter of Jude) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து ஆறாவது நூலாக அமைந்துள்ளது. இத்திருமுகம் அனைத்துக் கிறித்தவர்களுக்கும் எழுதப்பட்டுள்ளது. இது காலத்தால் மிகவும் பிந்தியது; பேதுரு எழுதிய இரண்டாம் திருமுகத்தோடு மிகவும் தொடர்புடையது. இத்திருமுகத்தின் சில வசனங்கள் (யூதா:13,14,15) ஏனோக்கு நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

இத்திருமுகத்தின் ஆசிரியர் தம்மை, 'இயேசு கிறித்துவின் பணியாளனும் யாக்கோபின் சகோதரனுமாகிய யூதா' எனக் குறிப்பிடுகிறார். எனினும் இவர் திருத்தூதருள் ஒருவரான யூதாவாக இருக்க மிகுதியான வாய்ப்பு இல்லை. ஏனெனில் இத்திருமுகத்தில் திருத்தூதர்கள் கடந்த காலத்தவராகக் குறிப்பிடப்படுகின்றனர் (வச:17-18); நம்பிக்கை (விசுவாசம்) உண்மைகளின் தொகுப்பாகக் காட்டப்படுகிறது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டோடு தொடர்புடைய ஞான உணர்வுக் கொள்கைகள் கண்டிக்கப்படுகின்றன; இத்திருமுகம் நல்ல கிரேக்க மொழி நடையில் அமைந்துள்ளது. இந்நூல் நான்கு பிரிவுகளைக் கொண்டது.

**யோவானுக்கு அருளப்பெற்ற திருவெளிப்பாடு:**

யோவானுக்கு அருளப்பெற்ற திருவெளிப்பாடு (Book of Revelation) என்னும் நூல் கிறித்தவ விவிலியத்தின் இரண்டாம் பகுதியாகிய புதிய ஏற்பாட்டில் இருபத்து ஏழாவது நூலாக அமைந்துள்ளது. இதுவே புதிய ஏற்பாட்டின் கடைசி நூலும் ஆகும். பழைய புராடஸ்தாந்து மொழிபெயர்ப்பில் இந்நூல் 'வெளிப்படுத்தின விசேஷம' என்னும் பெயர்கொண்டிருந்தது.

புதிய ஏற்பாட்டின் இறுதி நூலாகிய திருவெளிப்பாடு வேறுபட்ட ஓர் இலக்கிய வகையைச் சார்ந்தது. இதில் அடையாளங்கள் மிகுதியாக உள்ளன. இத்தகு திருவெளிப்பாட்டு இலக்கிய வகை கி.மு. 2ஆம் நூற்றாண்டையொட்டித் தோன்றி வளர்ந்ததாகத் தெரிகிறது.

யூதர்கள் பிற இனத்தாரால் துன்புறுத்தப்பட்ட காலத்தில் நம்பிக்கையும் ஊக்கமும் ஆறுதலும் ஊட்டுவதற்காகவும் அக்கால நிகழ்ச்சிகளை ஒரு குறிப்பிட்ட பார்வையில் புரிந்துகொள்ள உதவுவதற்காகவும் திருவெளிப்பாட்டு வகை நூல்கள் உருவாயின. தானியேல் நூல் இத்தன்மை கொண்டது.

இந்நூலின் ஆசிரியர் தம்மை யோவான் எனக் குறிப்பிடுகிறார் (திவெ.1:1,4,9;22:8). தாம் ஒரு திருத்தூதர் என்றோ இயேசுவின் சீடர் என்றோ அவர் தம்மைப் பற்றிக் கூறிக் கொள்ளவில்லை. மொழிநடை, இலக்கணம், இறையியல் கருத்துகள் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்தால் இது நான்காம் நற்செய்தியை எழுதிய ஆசிரியரால் எழுதப்பட்டிருக்க இயலாது என்பது புலனாகின்றது. இந்நூல் இயேசுவை குரு என்றும் சிங்கம் என்றும் ஆட்டுக்குட்டி என்றும் குழந்தை என்றும் மணமகன் என்றும் விண்மீன் என்றும் குறிக்கின்றது. இந்நூல் எழுதப்பட்ட காலம் நீரோவின் காலம் (கி.பி. 54 – 68) எனக் குறிக்கப்படுகிறது. ஆனால் டொமிசியன் காலமாக (கி.பி. 89 – 96) இருக்கும் என்று கூறுவதே ஏற்புடையது என்பர். இதன் ஆசிரியர் பத்மு தீவில் இருந்து இதனை எழுதி இருக்க வேண்டும் என உரைக்கப்படுகின்றது. இந்நூல் பத்து பிரிவுகளையும் இருபத்திரண்டு அதிகாரங்களையும் கொண்டு அமைந்துள்ளது

**தொகுப்புரை:**

- தமிழ் அற இலக்கியங்களுள் தலைமைத்தன்மை உடையதாய் திருக்குறள் அமைந்திருத்தல் சங்க இலக்கியங்களிலும் நிகண்டுகளிலும் திருக்குறள்,

திருவள்ளுவர் குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளமை, திருக்குறளின் வெண்பா அமைப்பு முறை, திருக்குறளின் நூற்சிறப்பு, திருக்குறள் உரைகள், திருக்குறள் மொழிபெயர்ப்புகள், திருக்குறள் குறித்த சான்றோர் மொழிகள் போன்றவை ஆய்வின் மூலம் நிறுவப்பெற்றுள்ளன.

- சங்கம் மருவிய கால நூல்களாகிய திருக்குறள், நாலடியார்,நான்மணிக்கடிகை, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், முதுமொழிக்காஞ்சி, ஏலாதி என்னும் பதினொரு நூல்களும் தெளிவான வகைப்பாட்டில் அமைக்கப்பட்டிருப்பது ஆய்வின் வழி தெரிய வருகின்றது.

- இயேசு கிறித்துவின் வரலாறு, திருவிவிலியத்தின் தோற்றம், யாவே மரபு, எலோகிம் மரபு,இணைச்சட்டமரபு, குருக்கள் மரபு எனப்படும் மரபுகள் குறித்த பதிவுகள், திருவிவிலியத்தில் இடம்பெற்றுள்ள பிரிவுகள் போன்றவை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

- பழைய ஏற்பாடு கிறித்துவின் வருகைக்கு முன் முழுமையாகத் தொகுக்கப்பெற்றவை ஆகும். இவை நான்கு வகையானதாகப் பிரிக்கப்படுகின்றன. திருச்சட்ட நூல்கள் எனப்படுவன தொடக்க நூல், விடுதலைப் பயணம், லேவியர், எண்ணிக்கை, இணைச் சட்டம் என்பன ஆகும். வரலாற்று நூல்கள் எனப்படுபவை யோசுவா, நீதித் தலைவர்கள், ரூத்து, 1 சாமுவேல், 2 சாமுவேல், 1 அரசர்கள், 2 அரசர்கள், 1 குறிப்பேடு, 2 குறிப்பேடு, எஸ்ரா, நெகேமியா, தோபித்து, யூதித்து, எஸ்தர்; 1 மக்கபேயர், 2 மக்கபேயர் என்பனவாகும். யோபு, திருப்பாடல்கள், நீதிமொழிகள், சபை உரையாளர், இனிமைமிகு பாடல்; சாலமோனின் ஞானம்; சீராக்கின் ஞானம் என்பன ஞானநூல்கள் எனப்படுகின்றன. இறைவாக்கு நூல்கள் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. எசாயா, எரேமியா, பாரூக்கு, புலம்பல், எசேக்கியேல், தானியேல் போன்றன பெரிய இறைவாக்கினர் என்றும் ஓசேயா, யோவேல், ஆமோஸ், ஒபதியா, யோனா, மீக்கா, நாகூம், அபக்கூக்கு, செப்பனியா, ஆகாய், செக்கரியா, மலாக்கி என்பன சிறிய இறைவாக்கினர் என்றும் அழைக்கப்படுகின்றன என்பது தெரியவருகின்றது.

- புதிய எற்பாடு ஏசுவின் பிறப்பு முதல் தொடங்குகிறது. இதில் மொத்தம் இருபத்தேழு நூல்கள் இடம்பெற்றுள்ளன. அவை முறையே, நற்செய்தி நூல்கள் நான்கு, திருத்தூதர் பணி ஒன்று, தூய பவுல் எழுதிய திருமுகங்கள் பதினான்கு,

பொதுத்திருமுகங்கள் ஏழு, திருவெளிப்பாடு ஒன்று என்பனவாய் அமைகின்றன என்பது வெளிப்பட்டு நிற்கின்றது.

**சான்றெண் விளக்கம்**

1. மு.வரதராசன், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 13 – 14
2. பெருங்: பா. 2:28-33

3. பிங்கலம், 5:118

4. சிந்தா:1 204.∴4

5. மேலது, 3539: 1

6. சென்னைப் பல்கலைக்கழக தமிழ் பேரகராதி

7. புறம்:பா. 34

8. மேலது, பா. 278

9. பதிற்: 14: 12

10. சிலம்பு: மதுரைக்காண்டம், வஞ்சினமாலை : 3-4

11. மணி: சிறைசெய் காதை : அடிகள்: 59-62

12. தொல். பொருள். செய்யுள்: நூ. 108

13. ஔவையார் தனிப்பாடல் பா. 61

14. திருவள்ளுவ :கவிசாகரப் பெருந்தேவனார், பா.36

15. மு. வரதராசன், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக். 31 – 32

16. ஔவை: தனிப்பாடல்: பா. 60

17. மேற்கோள், தமிழண்ணல்,புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு.ப. 192

18. பழமொழி, மேற்கோள், ச. வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.91

19. திருவள்ளுவ: மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர் கிழார் பா. 34

20. மேலது, பரணர் பா. 6

21. மேலது, கபிலர் பா. 5

22. மேலது, அரிசில் கிழார் பா. 13

23. பழைய வெண்பா,மேற்கோள்,பாக்யமேரி,வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 174

24. மேற்கோள், தமிழண்ணல்,புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு.ப. 192

25. தங்கவயல் லோகிதாசன், திருக்குறளும் பிற இலக்கியங்களும், ப. 214

26. கு. மோகனராசு, திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும், ப. 237

27. தங்கவயல் லோகிதாசன், திருக்குறளும் பிற இலக்கியங்களும், ப. 212

28. மேற்கோள், ச. வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.91

29. மேலது, ப. 93

30. திவாகரம், XII, 31

31. தொல், எழுத்து, புள்ளிமயங்கியல் நூ. 53

32. சிலம்பு:2: 10: வெண்பா. 1

33. ச. வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.97

34. புறப்பொருள் வெண்பாமாலை, பொதுவியல்: 4

35. இலக்கண விளக்கம்: 91

36. சிந்தா: பா. 2546

37. ச. வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.95

38. தொல். பொருள்:புறத்: நூ. 77: 2

39. திவாகரம், X. 107

40. புறப்பொருள்: காஞ்சிப்பொதுவியல்: 1

41. புறப்பொருள்: நூ. 269

42. சகோ.அருண்ஞானப்பிரகாசம், சொல்லொன்று போதும் ப. 3

43. மேலது, ப. 9

44. மேலது,பக் 9 - 10

45. மேலது, ப. 45

## இயல் - 2

## தனிமனித அற விழுமியங்கள்

**அறிமுகம்:**

அற விழுமியம் எனப்படுவது ‘வாழ்வியல் மதிப்புகள்’ என்னும் பொருளைத் தந்து நிற்கும். அறம் என்பது பண்பினையும் விழுமியம் என்பது அதனால் விளையும் பயனையும் குறிப்பதாகும். மனித சமூகத்தினை நற்சிந்தனைகளின்வழி வாழ வைப்பது அறம்சார்ந்த விழுமியங்களே ஆகும். இத்தகைய அறச்சிந்தனைகள் தனிமனிதரிடம் இருந்து சமூகத்திற்கு பரவலாகின்றன. தனிமனிதன் என்பவன் தன்னை மட்டுமே சார்ந்தவன் அல்லன். அவன் சமூகத்தினைச் சார்ந்தவன். சமூகம் என்பது தனிமனிதக் கூட்டுறவால் கட்டமைக்கப்படுகிறது. இதன்வழி, தனிமனிதன் சமூகத்தினையும் சமூகம் தனிமனிதனையும் சாந்தே இயங்குகின்றன என்பது தெளிவுறும். எனவே நன்றின்பால் வயப்பட்ட ஒழுங்குமுறைகள் கொண்ட உலகம் இயங்கத் தனிமனித அறங்கள் இன்றியமையாதது என்பது வெளிப்பட்டு நிற்கும். ‘எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே’ என்பதுவே தமிழரின் அறம் சா்ர்ந்த நெறி ஆகும். இத்தகைய நெறியானது தமிழர்க்கு மட்டுமன்று. உலகலாவிய நிலையிலும் இத்தகைய கருத்தே அமைகின்றது, எனவே மானுடச் சமூகத்தினை நெறிப்படுத்துவதற்காகத் தோன்றிய உலக இலக்கியங்கள் தனிமனித அறத்தினைப் பெரிதும் வழியுறுத்துகின்றன. இந்நிலையில் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் தனிமனித அறவிழுமியங்களை ஆய்வதாய் இவ்வியல் அமைகின்றது.

**தனிமனிதனும் சமுதாயமும்**:

ஒரு தனிமனிதன் சீர்குலைகின்ற போது அதன் தொடர்வினையாக பல்வேறுபட்ட தனிமனிதர்கள் சீர்குலைந்து போகிறார்கள். சமூக உறவுகள் பாதிப்புறுகின்றன. தனிமனிதக் கூறுகளின் அசைவுகளுக்கு ஏற்பச் சமூகமும் இயங்கிக்கொண்டிருக்கின்றது, அது ஒரு உயிர்வாசி இல்லை என்றாலும் அதற்கும் இயக்கம் உண்டு.அதன் இயக்கத்தில் கண்ணுக்குத் தெரியாத அசைவுகள் இருக்கும். இந்த அசைவுகளை, இயக்கங்களைத் தீர்மானிப்பது தனிமனிதன்.இதுதான் தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையிலான தொடர்பு ஆகும்.

‘‘மனிதன் கூடி வாழும் இயல்புடையவன். அதனால் அவன் சமூக விலங்காகிறான்’’[1] என்கிறார் அரிஸ்டாட்டில்

தனிமனிதன் சமூகம் என்னும் இரு கூறுகள் சந்திக்குப் பொழுது தனிமனிதனை விடச் சமூகத்திற்குத்தான் அதிக முக்கியத்துவம் தரப்படல் வேண்டும். எனினும் சமூகத்தின் நலத்திற்காகத் தனிமனிதன் தன்னுடைய சில தேவைகளை விட்டுக் கொடுத்து அறவிழுமியம் சார்ந்த வாழ்வினை மேற்கொள்வது என்பது இன்றியமையாததாகிறது.

‘‘தனிமனித உரிமையைக் காப்பாற்றுவதற்குத்தான் சமுதாயம் தோன்றியது. ஆனாலும் சமுதாய உரிமைக்குக் கேடு வரும்பொழுது தனிமனித உரிமையைப் புறக்கணித்துச் சமுதாய

உரிமைக்குத்தான் முதன்மை தரவேண்டும்.''[2] எனக் குன்றக்குடி அடிகளார் விளக்குவதனால் அறியலாம். இத்தகைய விட்டுக்கொடுத்தல் என்னும் பண்பானது தனிமனிதன் வாழ்வியல் விழுமியங்களின்வழித் தன்னைக் கட்டமைத்துக் கொள்வதாலே வந்தமையும்.

''தனக்காக வாழ்பவன் சாதாரண மனிதன்.தன்னைச் சுற்றியுள்ள மற்றவர்களின் துன்பம் கண்டு உருகி அவர்களுக்கு உதவ முன் நிற்பவனே தரமான தனிமனிதன்.அவ்வாறு துன்பம் துடைக்கச் செல்லும்போது தனக்குத் துன்பம் ஏற்படக்கூடிய நிலை இருந்தால் அதையும் பொருட்படுத்தாமல் முன்செல்பவனே உயர்ந்த மனிதன்''[3] எனச் சாலை இளந்திரையன் குறிப்பிடுவது சுட்டுதற்குரியதாம். மேலும்,

''சமுதாய உணர்விலே மிக உயர்ந்த நிலையினை எட்டிய இனம் தமிழ் இனம். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று பேசியவன் தமிழ்மகன். தான் வாழும் உலகில் சான்றோர் பலர் வாழ்ந்ததால் தான் மூப்பெய்தவில்லை என்று நம்பியவன் தமிழன்.தனிமனிதனின் முயற்சிகளை விடச் சமுதாயத்தின் அறவொழுக்கம், நற்பண்புகளுமே மனித வாழ்வுக்கு உறுதுணையாவன என்று உணர்ந்தவன் தமிழன்''[4]

என்றும் எடுத்துரைக்கின்றார் சாலை இளந்திரையன். எனவே தனக்கென வாழாமல் பிறருக்கென வாழும் மாண்பு தனிமனிதன் தன்னைத் தகவமைத்துக் கொள்வதாலே வந்தமையும். எனவே தனிமனித அறம் என்பது சமூக அறத்திற்கு ஆணிவேராய் அமைகின்றது.

**அறத்தின்வழி நிற்றல்:**

பண்டைத் தமிழர் போற்றிய ஒழுகிய வாழ்வியல் விழுமியங்களுள் இன்றியமையாத இடத்தினைப் பெறுவது அறம் என்பது ஆகும். வாழ்வியல் விழுமியங்களை வகுத்துரைக்கும் போதும் அறம், பொருள், இன்பம் என அறத்திற்கே முதலிடம் தந்து போற்றினர் தமிழ்ச் சான்றோர்கள். மனித வாழ்வினைப் பண்படுத்தும் நூற்களின் பயனை வரையறுக்கும் இடத்து,

''அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே''[5]

என இலக்கணம் வகுத்தனர். மேலும்

''அறநெறி முதற்றே அரசின் கொற்றம்''[6]

என்கிற புறநானூற்றின் அடியும்,

''அரசியல் பிழையாது அறநெறி காட்டி
பெரியோர் சொன்ன அடிவழிப் பிழையாது''[7]

என்ற மதுரைக்காஞ்சியின் அடிகளும் தமிழர் வாழ்வில் அறம் பெற்றிருந்த இன்றியமையாத இடத்தினை வெளிப்படுத்தி நிற்கும். திருவள்ளுவர் வாழ்வியலுக்குத் தேவையான உறுதிப் பொருளாக அறத்தினைப் போற்றுங்கள் என்கிறார். அறம், பொருள், இன்பம் எனப்பெறும் மூன்றனுள் பொருளும் இன்பமும் போலாது, அறன், இம்மை, மறுமை,வீடு என்னும் மூன்றனையும் தருதலால் அறமே இம்மூன்றினும் வலிமையுடைத்து என்கிறார். இதனை,

"சிறப்புஈனும் செல்வமும்ஈனும் அறத்தினூஉங்கு

ஆக்கம் எவனோ உயிர்க்கு." (குறள்: 31)

என்ற திருக்குறளானது விளக்கி நிற்கும்.

"சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்

அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல"[8]

என்ற புறநானூற்றுத் தொடரும் மேற்கண்டதனோடு வைத்து எண்ணத்தக்கதாம். இத்தகைய அறத்தினைப் பொருளெனக் கொண்டோரிடம் அமையும் தன்மைகளைத் திரிகடுகம் விரித்துரைக்கும். வறியவர்க்கு, ஒருபொருளை ஈயும் செல்வமும் இவ்வுலகத்தின் பொருள்களின், நிலையாமையை, ஆராய்ந்து அறியும், வழியில் பொருந்துதலும் எல்லா உயிர்க்கும், துன்பம் அடைவதற்கு ஏதுவாகிய செயல்களைச் செய்யாத தூய்மையும் ஆகிய இம் மூன்றும், அறத்தை, அறியக்கூடிய மாந்தர்களுக்கு உண்டு என்பது திரிகடுகத்தின் நெறியாகும்.இதனை,

"இல்லார்க்கொன் றீயும் உடைமையும் இவ்வுலகில்

நில்லாமை யுள்ளும் நெறிப்பாடும் - எவ்வுயிர்க்கும்

துன்புறுவ செய்யாத தூய்மையும் இம்மூன்றும்

நன்றறியும் மாந்தர்க் குள" (திரி: 68)

என்ற பாடல்வழி அறிய முடிகின்றது. நாலடியார் இத்தகைய அறம் செய்வதற்கான காலத்தினை வரையறுக்கின்றது. அறம் செய்வது என்று முடிவு செய்வீர்கள் எனில் நாட்களைத் தள்ளிப்போடாமல் உடனே செய்வது சிறப்பாகும் என்பதனை அப்பாடல் உணர்த்தும். அறம் செய்வதனை, இன்றோ, அன்றோ, என்றோ என்று நினையாமல் மனிதர்க்குப் பின்னால் எமன் இருக்கின்றான் என்பதனை மதித்து, தீய செயல்களை நீக்குங்கள், மாட்சிமைப்பட்ட நல்லோர் கூறும் அறச் செயல்களை இயன்ற வகையினால் செய்யுங்கள் என்கிறது அப்பாடல்.

இவ்வாறு கூற்றுவன் எந்த நேரத்திலும் வருவான் என்று கருதி உடனே நல்லன செய்யவேண்டும் என்பதனை வெளிப்படுத்தி நிற்கும் பாடல்,

''இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது

பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி

ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்

மருவுமின் மாண்டார் அறம்'' ( நாலடி: 36)

என்பதாய் அமைகின்றது. சிறுபஞ்சமூலம், மனிதர்கள் நல்வாழ்வை அடைவதற்கான நன்னெறிகளை, கற்றுணர்ந்த சான்றோர்கள் தீய சொற்களைக் கூறுதல், பிறர்க்கு உரிய பொருளைக் கவர்தல், உண்மையல்லாத நெறியின்கண் சேரல், பிறரைப் பழிக்கும் சொற்களைக் கூறல், சான்றோரால் சொல்லப்பட்ட நல்ல அறிவுரைகளைக் கடந்து நடத்தல் போன்றவற்றைச் செய்தல் ஆகாது என வரையறுத்து உரைக்கின்றது. இதனை,

''வழிப்படரல் வாயல் வருந்தாமை வாய்மை

குழிப்படரல் தீச்சொற்க ளோடு-மொழிப்பட்ட

காய்ந்து விடுதல் களைந்துயக் கற்றவர்

ஆய்ந்து விடுதல் அறம்.'' (சிறு: 97)

என்ற பாடலானது வெளிப்படுத்தி நிற்கின்றது. தமிழ் அற இலக்கியங்கள் வரையறுத்து உரைக்கும் இத்தகைய செய்திகளைத் திருவிவிலியமும் வெளிப்படுத்தி நிற்றலைக் காணமுடிகின்றது. திருவிவிலியமும் மனிதர்கள் தீமையை விட்டு விலகி இருங்கள் என்று வலியுறுத்துகின்றது. மேலும் நன்மையைச் செய்யுமாறும், அத்தகைய நன்மை செய்வதனையே வாழ்வின் குறிக்கோளாய்க் கொண்டு அதனிலே தன் கவனம் முழுமையும் செலுத்தி வாழுமாறும் அறிவுரை பகர்கின்றது. இதனை,

''தீமையை விட்டு விலகி நன்மை செய்க! நல்வாழ்வை நாடி அதை அடைவதிலே கருத்துக் கொள்க!'' (1பேது: 3: 11) என வரும் அறவுரையால் அறிய முடிகின்றது.

மனித வாழ்க்கையானது அவ் மனித வாழ்க்கையால் அமைந்த ஆக்கத்தினைப் பெற்றுச் சிறப்பதற்கே அமைந்ததாகும். எனவே மனிதர்கள் தம் வாழ்நாளில் தன் பிறப்பிற்கான ஆக்கத்தினைத் தேடிச் செயல்களை இயற்றல் வேண்டும். அத்தகைய ஆக்கம் அமையும் திறமானது அறத்தால் அன்றிப் பிறதொன்றினால் இல்லை என்பது வள்ளுவரின் வாய்மொழி.

அதனின் மறுதலையாய் ஒருவர் அறத்தினைப் பேணாது வாழ்வராயின் அதனினும் கேடு பயப்பதும் பிறிதொன்றும் இல்லை. எனவே மறந்தும் அறம் செய்தலை நீங்காமை வேண்டும் என்பது பொய்யாமொழிப்புலவரின் அறிவுரையாகும்.இதனை,

"அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை

மறத்தலின் ஊங்கில்லையாங் கேடு." (குறள்: 2)

என்ற குறளானது எடுத்துரைத்து நிற்கும். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை திருவிவிலியத்திலும் காண முடிகிறது. அறத்தின் வழிநிற்கும் நல்லவர்கள் என்றும் அழிவதில்லை. எனவே நேர்மையாளராய் வாழ்தல் இன்றியமையாதது என்று தெளிவுபடுத்துகின்றது. இதனை,

"குற்றமற்றவர் எவராவது அழிந்ததுண்டா? நேர்மையானவர் எங்கேயாவது ஒழிந்ததுண்டா?"

( யோபு: 4: 7)

என்பதனால் அறியமுடிகின்றது.

மனிதர்கள் தத்தமக்கு இயலுந்திறத்தின் தன்மை கொண்டு அறத்தினை நீங்காமல் செய்தல் என்பது வேண்டும். இதனுள் குறிக்கப்படும் இயலுந் திறம் என்பது இல்லறம் பொருள் அளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தல் என்பதனையே ஆகும். இத்தகைய அறமாவது எய்தும் இடம் எனப்படுவது மனம், வாக்கு, காயம் என்பனவாம்.இம்மூன்றாலும் செய்யும் அறங்களாவன முறையே, நற்சிந்தையும் நற்சொல்லும் நற்செயலும் ஆகும். இதன் வழி, வள்ளுவர் அறத்தின் வழியினை விரித்துரைத்தார்.இதனை,

"ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே

செல்லும்வா யெல்லாஞ் செயல்" (குறள்: 33)

என்ற குறளானது எடுத்துரைக்கின்றது. மேலும் திரிகடுகம் இத்தகைய அறம் சார்ந்த செயல்கள் அமையுமாற்றை விரித்துக் குறிப்பிடுகின்றது. பொருளைப் பிறருக்குக் கொடுக்கும் பொருட்டு, செய்தல் வேண்டும், அறத்தின் வழியில், சேரும் பொருட்டு, பெருமையாகிய நூற்பொருளைக் கற்றல் வேண்டும், எத்தன்மைத்தாகிய சொல்லையும், அருளை விரும்பி, சொல்லுதல் வேண்டும். மேற்கண்ட இம் மூன்றும் நரக உலகைச் சேராமைக்குக் காரணமாகிய வழிகளாம் என இந்நூல் எடுத்துரைக்கின்றது.இதனை,

"ஈதற்குச் செய்க பொருளை அறநெறி

சேர்தற்குச் செய்க பெருநூலை" ( திரி: 90 )

என்ற பாடலானது வெளிப்படுத்தி நிற்கின்றது. முதுமொழிக்காஞ்சி அறம் செய்வது ஆயினும் அத்தகைய செயலும் அறத்தான் வருவதாய் அமைதல் வேண்டும். அத்தகைய நெறியினின்று நீங்கிய தன்மை உடையதாய் அமையும் ஈதல் சிறப்பினைத் தராது எனக் குறிப்பிடுகிறது.

"அறத்தாற்றி னீயாத தீகை யன்று" ( முதுமொழி: 8 )

திருவள்ளுவரும் ஒருவருக்கு அவர் செய்த அறஞ்சார்ந்த செயல்களினால் வருவதே இன்பமாகும். ஏனைய வழியில் வரும் இன்பங்கள் யாவும் துன்பங்களேயாம். மேலும் அவை புகழுடையனவும் அல்ல என விளக்கியுரைப்பார் (குறள்:39). இந்நூற்பாவிற்குப் பரிமேலழகர்,

"பாவத்தான் வரும் பிறனில் விழைவு முதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றும் ஆயினும், பின் துன்பமாய் விளைதலின் 'புறத்த' என்றார். அறத்தோடு வாராதன 'புகழும் இல' எனவே, வருவது புகழும் உடைத்து என்பது பெற்றாம். இதனான் அறம் செய்வாரே இம்மை இன்பமும் புகழும் எய்துவர் என்பது கூறப்பட்டது"[9] என உரை விளக்கம் தருவார். இதன் வழி அறத்தின்வழி நடப்பார் துன்பம் எய்துதல் அன்றி புகழும் பெறுவர் என்பது பெறப்படும். இதனை விளக்கும் குறட்பா,

"அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்

புறத்த புகழும் இல" (குறள்: 39)

என்பதாய் அமைகின்றது. திருவிவிலியமும் இத்தகைய அறம் சார்ந்த கருத்தினையே வலியுறுத்தும். ஒரு மனிதர் நன்றின்வழி நடப்பாராகில் அவரைத் துன்பம் வந்து சேரப்போவதில்லை. மேலும் அவருக்குத் தீமை செய்யும் தன்மை உடையோர் வரப்போவதும் இல்லை எனக் குறிப்பிடுகிறது. இதனை எடுத்துரைக்கும் வசனம்,

"நன்மை செய்வதில் நீங்கள் ஆர்வமுடையவராய் இருந்தால் உங்களுக்குத் தீமை செய்யப் போகிறவர் யார்?" (1 பேது: 3:13) என எடுத்துரைக்கும் திருவிவிலியம்.

என்பதாய் அமைகின்றது. அறம் செய்வது எனத் தலைப்பட்டான் முதற்கண் தன் மனத்திற் குற்றம் இல்லாதனாய் இருத்தல் வேண்டும். உலகின் கண் விளையும் தீச்செயல்களுக்கு எல்லாம் மனமே முதற்காரணமாய் அமைதலின் மனத்தின்கண் மாசின்மை வேண்டும் என வலியுறுத்துகின்றார் திருவள்ளுவர். இஃது தலையாய அறம் ஆகும். ஏனைய அறங்கள் யாவும் இவ்வறத்தின் கீழானவையே ஆகும் என்பது அவர்தம் வாக்காகும். மேலும் மனம் மாசுடையது ஆகின் மொழி, மெய்களால் செய்யப்படும் அறங்கள் பயனற்றதாய் அமையும் என்பதனைக் கருத்தில் கொண்டு திருவள்ளுவர் வலியுறுத்தி நிற்பதனை,

“மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்

ஆகுல நீர பிற” (குறள்: 34)

என்ற குறட்பா வெளிப்படுத்தி நிற்கும். மேலும் மனத்தின்கண் தோன்றும் மாசு யாது? என்பதனைப் பிறிதோர் குறளில் புலன்கள்மேல் செல்கின்ற அவாவாகிய அழுக்காறும் அவை காரணமாகப் பிறர்பால் வரும் வெகுளியும் அதுபற்றி வரும் கடுஞ்சொல்லும் ஆகிய இந்நான்கினையும் கடிந்து நீக்குவதே அறம் ஆகும் என விளக்கியுரைப்பார். இதனை,

“அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம்” (குறள்: 35)

என்ற குறள் விளக்கிடும். திருவிவிலியம், இத்தகைய செய்தியினை வலியுறுத்தி நிற்பதனை ஆயுமிடத்து அறிய முடிகின்றது. இத்தகைய சிந்தனையை,

“வீண்பெருமையைத் தேடாமலும் ஒருவருக்கொருவர் எரிச்சல் ஊட்டாமலும் ஒருவர் மீது ஒருவர் பொறாமைப்படாமலும் இருப்போமாக!” (கலா: 5 : 26)

என விளக்கி நிற்பதுடன் மனத்தளவில் மாசு இல்லாமல் வாழ்பவனே கடவுளின் அருகில் இருக்கிறான் என்று திருவிவிலியம் குறிப்பிடுகிறது.இதனை,

“அவரது திருத்தலத்தில் நிற்கக் கூடியவர் யார்? கறைபடாத கைகளும் மாசற்ற மனமும் உடையவர்” ( திரு:24:4) என்ற வசனமானது எடுத்துரைக்கின்றது.

**அடக்கமுடைமை:**

அடக்கம் என்பது மெய், மொழி, மனம் போன்றன தீநெறிக்கண் செல்லாது அடங்குதல் ஆகிய தன்மை ஆகும். இத்தகைய பண்பானது நடுவுநிலைமை உடையாருக்கே அமையும். இப்பண்பானது மனிதனை உயர் நிலைக்கு மாற்றும் கூறுகளுள் முதன்மையான இடத்தினைப் பெற்று அமைவது ஆகும். இதனால் திருவள்ளுவர் மனிதன் பெற்று உயர வேண்டிய உடைமைகளுள் ஒன்றாய் அடக்கம் என்பதனைக் குறித்தார். இத்தகைய பண்பு அமைந்த அதிகாரத்திற்கு ‘அடக்கமுடைமை’ என்றும் பெயரிட்டார், அடக்கம் மனிதனுக்கு மேன்மையைத் தரும் ஆற்றல் உடையது.மனிதனை தெய்வநிலைக்கு உயர்த்தும் பெற்றியை உடையது, எனவேதான் இத்தகைய அடக்கத்தினை தன் உடைமையாகக் கொண்டு உயர்ந்த பெருமக்கள் தெய்வங்களுக்கு ஒப்பாக உயர்த்தப்பட்டனர், வள்ளுவரும் இத்தகையோரை ‘அமரர்’ எனக் குறித்தார். அடக்கம் உடையாரின் சிறப்பினை உணர்த்த வரும் வள்ளுவரின் குறளானது

பிற்பகுதியில் அடங்காமையால் தோன்றும் இழிநிலையினையும் எடுத்துரைக்கின்றது. அடங்காமை என்னும் பண்பானது மீள இயலாத ஆரிருள் உய்த்துவிடும் என்பது அவர்தம் கூற்றாகும்.இதனை,

''அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை

ஆரிருள் உய்த்து விடும்'' (குறள்: 121 )

எனக் குறிப்பார் திருவள்ளுவர். ஒருவருக்கு அடக்கமின்மை என்பது பல்வேறு காரணங்களால் அமைந்த உயர்வுகளால் வந்தமையும். எனினும் செல்வத்தால் வந்தமையும் அடக்கமின்மை மிகுதி ஆதலின் ஒருவர் எத்தகைய செல்வமேன்மை வந்தமையினும் அடக்கம் பேணல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றார் திருவள்ளுவர். இதனை,

''எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்

செல்வர்க்கே செல்வம் தகைத்து.'' (குறள்: 125 )

என்ற குறட்பா வலியுறுத்தி நிற்கும். இத்தகைய அடங்கும் நெறியாவது, ''மெய்ம்முதல் மூன்றும் தன்வயத்ததாதல்''[10] என்னும் பரிமேலழகர் உரைக்குறிப்பும் ஈண்டு சுட்டுதற்குரித்தாம்.

இன்னாநாற்பது அடக்கத்தின் பெருமையை வலியுறுத்தி அடக்கம் இல்லாதார் அடையும் இழிநிலையினைச் சுட்டுகின்றது. ஐம்புலன்களையும் அடக்க இயலாதவனது பெருமிதம் துன்பத்தைத் தரும். முயற்சியில்லாதவன், தன்னையே மதிக்கும் மதிப்பு இன்னலைக் கொண்டு வந்து சேர்க்கும். அறிவுடையோர் அடக்கவும் அடங்குதலில்லாதவர்க்குக் கூறும் சொல்லானாது பெரும் துன்பத்தினைத் தந்து நிற்கும் என்று இந்நூல் விதந்து உரைக்கும். இதனை,

''அடக்க முடையவன் மீளிமை யின்னா

துடக்க மிலாதவன் றற்செருக் கின்னா

அடைக்கலம் வவ்வுத லின்னாவாங் கின்னா

அடக்க வடங்காதார் சொல்'' (இன்னா: 40)

என்பதனால் அறியமுடிகின்றது. இதனையே திருவிவிலியமும்,

''ஆண்டவனிடம் அச்சம் கொள்ளுதல் ஞானத்தைத் தரும் பயிற்சி. மேன்மை அடையத் தாழ்மையே வழி'' (நீதி: 15: 33)

''தன்னடக்கமில்லாத மனிதர் அரண் அழிந்த காவல் இல்லாப் பட்டணம்'' (நீதி: 25: 28)

என்றும் வலியுறுத்தி நிற்கின்றது.

**புலனடக்கம்:**

ஒரு மனிதன் உயர் நிலையினை அடைவதற்குக் காரணமாய் அமைவதும் இழிநிலையினை அடைவதற்குக் காரணமாய் அமைவதும் ஐம்புலன்களே ஆகும். எனவேதான் சான்றோர்கள் ஐம்புலன் அடக்கம் என்பதனைப் பெரிதும் வலியுறுத்துகின்றனர். ஏனெனில் மனத்தில் ஈகைகளுக்கான காரணிகளைக் கொண்ட வந்து சேர்ப்பதில் ஐம்புலன்கள் பெரிதும் பங்கு வகுக்கின்றன. எனவேதான் திருமூலரும் புலன்களைக்குறிக்குமிடத்துக் 'கள்ளப்புலன்' என்று குறித்தார்.

"உள்ளம் பெருங்கோவில் ஊனுடம்பு ஆலயம்

வள்ளல் பிரானுக்கு வாய் கோபுர வாசல்

தெள்ளத்தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்

கள்ளப் புலன் ஐந்தும் காளா மணிவிளக்கே"[11]

என்பது திருமூலரின் திருமந்திரம். இத்தகைய ஐம்புலன்களினையும் அடக்கல் என்பது இன்றியமையாதது என்பதனைத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்துகின்றன. திருவள்ளுவர்,

"அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல் வேண்டும்

வேண்டிய எல்லாம் ஒருங்கு என்று" (குறள்: 343)

குறிப்பிடுகின்றார். இதற்கு உரை எழுதும் பரிமேலழகர். "வீடு எய்துவார்க்குச் செவி முதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசை முதலிய ஐம்புலன்களையும் கெடுத்தல் வேண்டும், கெடுக்குங்கால் அவற்றை நுகர்தற்பொருட்டுத் தாம் படைத்த பொருள் முழுவதையும் ஒருங்கே விடுதல் வேண்டும். என உரைவிளக்கம் தருவார், மேலும் புலம் என்றது, அவற்றை நுகர்தலை. அது மனத்தைத் துன்பத்தானும் பாவத்தானும் அன்றி வாராத பொருள்கள் மேலல்லது வீட்டு நெறியாகிய யோகஞானங்களில் செலுத்தாமையின், அதனை அடல் வேண்டும் என்றும், அஃது அப்பொருள்கள் மேல் செல்லின் அந்நுகர்ச்சி விறகுபெற்ற தழல்போல் முறுகுவதல்லது அடப்படாமையின், 'வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும்' என்றும் கூறினார்"[12] எனவும் விளக்கம் செய்வார். எனவே மனிதன் தனது ஐம்புலன்களையும் அடக்குதல் என்பது இன்றியமையாததாகிறது. இத்தகைய ஐம்புலன்களுள் முதன்மைத்தன்மை பெறுவது கண் என்பதாகும். மனிதனின் மற்றைய புலன்கள் எல்லாம் நின்று பற்றும் தன்மை உடையதாய்

அமைய கண் ஒன்று மட்டும் சென்று பற்றும் பொறியாய் அமைகின்றது. மேலும் கண்ணானது மனிதன் பார்த்த ஒன்றினையே திரும்பத்திரும்பப் பார்க்கச் செய்து அவனைப் பாவத்தின் பக்கம் சேர்க்கின்றது என உரைக்கின்றன அற இலக்கியங்கள்.திருவிவிலியமும் கண்ணே தீயவற்றிற்கெல்லாம் காரணமாய் அமைகின்றது எனவும் அக்கண்ணால் தீமை விளையும் பொழுது அக்கண்ணினைப் பிடுங்கி எறிதல் வேண்டும் என்றும் வலியுறுத்தி நிற்கின்றது. இதனை,

''உங்கள் கண் உங்களைப் பாவத்தில் விழச்செய்தால் அதைப் பிடுங்கி எறிந்து விடுங்கள். நீங்கள் இரு கண் உடையவராய் நரகத்தில் தள்ளப்படுவதைவிட ஒற்றைக் கண்ணராய் இறையாட்சிக்கு உட்படுவது உங்களுக்கு நல்லது. (மாற்: 9: 47)

என்பதனால் அறியமுடிகின்றது. மேலும் ''உங்கள் கண்தான் உங்கள் உடலுக்கு விளக்கு. உங்கள் கண் நலமாய் இருந்தால் உங்கள் உடல் முழுவதும் ஒளி பெற்றிருக்கும். அது கெட்டுப்போனால் உங்கள் உடல் இருளாய் இருக்கும். ஆகையால் உங்களுக்கு ஒளி தரவேண்டியது இருளாய் இராதவாறு பார்த்துக் கொள்ளுங்கள்'' (லூக்:11:34) எனவும் உரைக்கின்றது திருவிவிலியம்.

கண் செய்யும் குற்றங்களுள் மிகவும் கீழ்மையானது தனக்கு உரிமை இல்லாத பிற பெண்டிர்பால் கொள்ளும் காமம் ஆகும். அத்தகைய காமமானது மனிதனின் அறச்சிந்தனையைச் சிதைத்து அவனைத் தவறான வழியில் தள்ளுகின்றது. எனவே காமத்தின் கொடுமையினைத் தமிழ் அற இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்திப் பேசுகின்றன. வில்லம்பும், தீயும், ஒளிர்கின்ற கதிர்களையுடைய சூரியனும், வெதும்பிச் சுட்டாலும், வெளிப்பொருளையே சுடும், ஆனால் காமம் மனத்தைச் சுடுதலால் காமம் அவற்றினும் அஞ்சப்படும் எனக் குறிப்பிடுகிறது நாலடியார்.இதனை,

''அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்

வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்; - வெம்பிக்

கவற்றி மனத்தைச் சுடுதலால், காமம்

அவற்றினும் அஞ்சப் படும்'' (நாலடி: 89)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். திருவிவிலியம் ஒரு மனிதன் தனக்கு உரிமையில்லாத பெண்ணினைத் தன் கண்ணால் பார்ப்பான் எனில் அவன் விபச்சாரம் செய்ததற்குச் சமமாவான் எனக் குறிப்பதனை,

''ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவனும் தன் இதயத்தில் அவளோடு விபச்சாரம் செய்தாயிற்று'' ( மத்:5:28)

என்ற வசனத்தின் மூலம் அறிய முடிகின்றது. மனிதனின் புலன்களுள் கண்ணினை அடுத்து மிக இன்றியமையாத இடத்தினைப் பெறுவது நாவாகும். ஆகும். ஒரு மனிதன் சிந்தனையில் உள்ளவற்றை எல்லாம் வெளிப்படுத்துவது நாவே ஆகும். ஒருவருடைய பெருமைக்கும் சிறுமைக்கும் அவரது நாவே காரணமாய் அமைகின்றது. எனவேதான் வள்ளுவர் மனிதன் எதனைக் காக்கத் தவறினாலும் நாவை மட்டுமாவது காத்தல் வேண்டும். இன்றேல் சொற்குற்றத்தின்பாற்பட்டு துன்புற நேரிடும் எனக் குறிப்பிடுகின்றார்.

''யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு'' (குறள்: 127)

மேலும் தீயவாகிய சொற்களின் பொருள்களால் பிறர்க்கு வரும் துன்பம் அவனுக்குப் பிற அறங்களால் உண்டாகிற நன்மையைத் தீதாய் மாற்றிவிடும் என்பார் திருவள்ளுவர்.இதற்கு உரை வகுக்கும் பரிமேலழகர் ''தீயசொல்லாவன தீங்கு பயக்கும் பொய்,குறளை, கடுஞ்சொல் என்பன''[13] என விளக்கம் செய்வார். இதன் வழியான் தீயவை யாவை? என்ற விளக்கத்தையும் பெறமுடியும்.இதனைச் சுட்டும் குறள்,

''ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்

நன்றாகா தாகி விடும்'' (குறள்: 128)

என்பதாகும். தீயினால் சுட்டபுண் உள் ஆறும், ஆனால் நாவினால் சுட்ட வடு எப்பொழுதும் ஆறாது. அதனாலேயே தீயினால் சுட்டதனைப் 'புண்' என்றும், ஆறாது கிடத்தலால் நாவினால் சுட்டதனை 'வடு' என்றும் வள்ளுவர் குறித்துரைத்தார். தீயும் கடுமையான சொல்லும் சுடுதல் தொழிலான் ஒத்ததன்மை உடையதாயினும் ஆறாமையால் தீயினும் கடுமையான சொல் கொடிது என்பதும் வெளிப்போந்து நிற்கும். இதனை உணர்த்தும் குறள்

''தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே

நாவினால் சுட்ட வடு'' (குறள்: 129)

என்பதாய் அமைகின்றது. நான்மணிக்கடிகை அறிஞர்கள் ஒருவனுடைய நன்மை தீமைகளை அவன் கூறும் சொற்களாலேயே அறிவர் எனக் குறிப்பிடும். இதனை,

''சொல்லான் அறிப வொருவனை'' ( நான்: 80 )

என்பதனால் அறிய முடிகின்றது. மேலும் மனிதரிடத்துத் தோன்றும் செயப்பாடுகளை வகுத்துரைத்து மொழியும் இவ் இலக்கியம் பதறிய நாக்கினால் நட்புக் கெடும் என்று

உரைக்கின்றது. நாவினால் விளையும் தீமையினை நான்மணிக்கடிகை முன்நிறுத்தியிருப்பதன் மூலம் நாவடக்கத்தின் இன்றியமையாமை வெளிப்பட்டு நிற்கும்.இதனை,

“நாவன்றோ நட்பறுக்குந் தேற்றமில் பேதை” (நான்: 81)

என்ற பாடலடியானது விளக்குகின்றது. திருவிவிலியமும் நாவினால் விளையும் கெடுதல்களைத் தெளிவாக எடுத்து இயம்புகின்றது. நாவானது திருவிவிலியத்தில் பாம்பைப் போன்றது (திரு:140:3) மனதை உடைக்கக் கூடியது(நீதி:15:4) வாழ்வையும் சாவையும் விளைவிக்கக் கூடியது (நீதி: 18:21) பொசுக்கும் நெருப்பு போன்றது (எசா:30:27) வில் போன்றது (எரே:9:3) கொல்லும் அம்பு போன்றது (எரே:9:8) என்றெல்லாம் குறிப்பிடப்படுகின்றது. மேலும் தன் வாயினையும் நாவினையும் காத்துக் கொள்ளாதாவனின் சமயப்பற்று பயனற்றது என்று குறிப்பிடுகிறது. இதற்கு,

“தாம் சமயப்பற்றுடையோர் என எண்ணிக் கொண்டிருப்போர் தம் நாவை அடக்காமல் இருப்பார் என்றால் தம்மையே ஏமாற்றிக் கொள்வர்.இத்தகையோருடைய சமயப்பற்று பயனற்றது” (யாக்:1:26)

என வரும் திருவிவிலிய வசனம் அரணாகும்.

அடுத்த நிலையில் மானுட சமூகத்திற்கு வேண்டிய அடக்கங்களுள் மிகவும் இன்றியமையாததாகக் குறிக்கப்படுவது மனவடக்கம் என்பதாகும். இவ்வுலகின்கண் வாழும் உயிர்களுள் மனிதனுக்கு மட்டுமே உரிய தனித்தன்மை உடைய பொருள் மனம் என்பது ஆகும். மனம் என்னும் சொல் ‘மன்’ என்னும் சொல்லில் இருந்து தோன்றியதாகும். மனம் என்ற ஒன்றினைப் பெற்றமையாலே மனிதன் ‘மனிதன்’ என்று அழைக்கப்பெற்றான். இதனைத் தொல்காப்பியம் எடுத்துரைக்கும்.

“ஆறறி வதுவே அவற்றொடு மனனே”[14]

இதற்கு உரை வகுக்கும் இளம்பூரணர், “மனத்தினாலறியப்படுவது இதுபோல்வன வேண்டுமெனவும். இது செயல் வேண்டுமெனவும், இஃது எத்தன்மையெனவும் அனுமானித்தல். அனுமானமாவது புகை கண்டவழி நெருப்புண்மை கட்புலன் அன்றாயினும் அதன்கண் நெருப்பு உண்டென்று அனுமானித்தல்” [15] என விளக்கியுரைப்பார். ஒன்று முதலாகிய ஐயறிவுயிர்கள் மனம் இல்லன என்று கூறியமைக்கு விளக்கம் தரும் பேராசிரியர்,

“ஒன்று முதல் ஐந்தீறாகிய பொறியுணர்வு மனமின்றியும் பிறப்பன போல வேறு கூறியது என்னையெனின் ஓரறிவுயிர்க்கு மனமின்மையின் அங்ஙனங் கூறினார் என்பது அதற்கு உயிர் உண்டாயின் மனமின்றாமோ எனின், உயிருடையவாகிய நந்து முதலாகியவற்றுக்கு செவி முதலாய பொறியின்மை கண்டிலையோ என்பது. அல்லதூஉம் தேன் நெய்யினை நாவின் பொறி

உணர்ந்தவழி இன்புற்றும், கண்ணுள் வார்த்து மெய்யுணர்வு உணர்ந்தவழித்துன்புற்றும், நறிதாயின மான்மதத்தினை மூக்குணர்வு உணர்ந்த வழி இன்புற்றும் , கண் உணர்வு உணர்ந்தவழி இன்பம் கொள்ளாமையும் வருதலின் அவை பொறி உணர்வெனப்படும். மன உணர்வும் ஒருதன்மைத்தாகல் வேண்டுமால் எனின், ஐயுணர்வின்றிக் கனாப்போலத் தானே உணர்வது மனவுணர்வெனப்படும், பொறி உணர்வு மனமின்றிப் பிறவாதெனின் முற் பிறந்தது மனவுணர்வாமாகவே பொறி உணர்வென்பது ஓர் அறிவின்றாகியே செல்லும் என்பது''[16] என விளக்கம் தந்து செல்வார், எனவே மனிதருக்கு மட்டுமே உரித்தாகிய மனத்தினை அடக்கி மாண்புறுதல் வேண்டும். அகத்தியரும்,

''மனமது செம்மையானால் மந்திரம் செபிக்கவேண்டா

மனமது செம்மையானால் வாயுவை உயர்த்த வேண்டா

மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டா

மனமது செம்மையானால் மந்திரம் செம்மையாமே''[17]

எனக் குறித்துரைப்பார்.

மனிதன் உடம்பால் வாழும் வாழ்க்கை குறைவு, மனதால் வாழும் வாழ்க்கைதான் மிகுதி''[18] எனக் குறிப்பார் மு.வ. மேலும் ''மனித மனம் வேம்பாக இருந்து கரும்பாக மாறலாம். புலியாக இருந்து பசுவாக மாறலாம்''[19] என்றும் குறிப்பிடுகிறார். திருவள்ளுவரும் இத்தகைய மனவடக்கத்தினைப் பெறாதவர் துன்புறுவர் எனக் குறிப்பதனை,

''நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர்'' (குறள்: 917 )

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தி நிற்கும். .மேலும் மனத்தின்கண் வெகுளி தோன்றாமல் காத்துக் கல்வியுடையவனாய் அடங்குதலை வல்லவனது செவ்வியை அறக் கடவுள் பாராநிற்கும் எனக் குறிப்பார். இதனால் இத்தகைய மனவடக்கம் உள்ளவனை அறக்கடவுள் தானே வந்தடைவார் என்பது பெறப்படும்.

''கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி

அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து'' (குறள்: 130)

திருவிவிலியம் மனவடக்கத்தினைப் பற்றிப் பெரிதும் பேசுகிறது. மனவடக்கம் கொண்டவர் எல்லாப் பாவங்களில் இருந்தும் விடுபட்டு நிற்கிறார் என்கிறது திருவிவிலியம். இத்தகைய செய்தியினை,

“நகரை அடக்குகிறவனை விடத் தன்னை அடக்குகிறவரே சிறந்தவர்” (நீதி:16:32) என்கிறது திருவிவிலியம். மேலும் ஒரு மனிதனின் மனமானது உண்மையாய தூய்மையுடன் இருக்கும்போது அடையும் மேன்மைகளையும் திருவிவிலியம் எடுத்தியம்புகிறது: மனமானது எவ்வாறு தீயன தோன்றுதற்கு இடமாய் அமைகின்றது என்பதனைத் திருவிவிலியம்,

“கொலை, விபச்சாரம், பரத்தமை, களவு, பொய்ச்சான்று, பழிப்புரை ஆகியவற்றைச் செய்யத் தூண்டும் தீய எண்ணங்கள் உள்ளத்தில் இருந்தே வெளி வருகின்றன. இவையே மனிதரைத் தீட்டுப்படுத்துகின்றன” (மத்:15:19-20) எனத் திருவிவிலியம் குறித்துரைக்கின்றது.

**இன்சொல்:**

மனிதர்களை விலங்குகளிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் கூறுகளுள் ஒன்று பேசும் திறன் என்பதாகும்.மனிதன் தன் சிந்தனைகளை, உள்ளத்து உணர்வுகளை, தேவைகளை, வெளிக்காட்டப் பயன்படும் கருவியே பேச்சு என்பதாகும்.இத்தகைய பேச்சினை வெளிக்கொணரும் அடிப்படைக் கூறாய்ச் ‘சொல்’ அமைகின்றது. பேச்சின் அடிப்படையாய் அமையும் சொற்கள் இனிமையாய்ப் பண்புடையதாய் அமைதல் என்பது இன்றியமையாதது ஆகும். ஒரு மனிதரின் பண்பாட்டுச் செழுமையை அவர் வாயினின்று தோன்றும் சொல்லே முடிவு செய்கின்றது. எனவேதான் திருவள்ளுவர் நிலத்தில் கிடந்தமையைக் கோல் காட்டுவது போல் நற்குலத்தில் பிறந்த மனிதர்களின் தன்மையை அவர்கள் வாயிலிருந்து தோன்றும் சொல் காட்டும் என மொழிகின்றார். நட்பினைக் கூட பகையாக மாற்றும் தன்மை கொண்டது கொடுஞ்சொல். பகையினையும் நட்பாக்கும் ஆற்றல் கொண்டது இன்சொல். எனவேதான் இன்சொல் பேசுதல் இன்றியமையாதது என்று தமிழ் நூல்கள் வலியுறுத்துகின்றன

“---------------------------------------------- வயவேந்தே
யாமே, நின் இகழ் பாடுவோர் எருத்தடங்கப்
புகழ் பாடுவோர் பொலிவு தோன்ற
இன்று கண்டாங்கு காண்கவம், என்றும்
இன்சொல் எண்பதத்தை ஆகுமதி பெரும!”[20]

என்பது புறநானூறு ஆகும். இன்சொல் என்பது மனத்தின் உவகையை வெளிப்படுத்தும் சொல் ஆகும்.இதற்கு பரிமேழலகர் “இன்சொலாவன; அன்போடு கலந்து வஞ்சனை இலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற்சொற்கள்.அன்புடைமையை வெளிப்படுத்தல். வாய்மை.

மெய்யுணர்ந்தார் நெஞ்சிற்கு எல்லாம் செம்மையுடைத்தாய்த் தோன்றலின் செம்பொருள் எனப்பட்டது”[21] என உரை விளக்கம் தருவார்.

“இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்

செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்” (குறள்: 91)

என்பது திருக்குறள் ஆகும். இத்தகைய இன்சொல்லானது ஒருவற்கு நட்புரிமை உண்டாகும்; இன்பமில்லாத, வன்சொல்லினால், கெட்ட கருத்து உண்டாகும்; நயமான சொல்லை யுடைய, நாவினால் இரக்க எண்ணம் உண்டாகும்; அவ்வருள் நெஞ்சத்தால், அழிவில்லாத, வீடு வந்தமையும் என்று குறிப்பிடும் நான்மணிக்கடிகை. இதனை.

“இன்சொலான் ஆகுங் கிழமை இனிப்பிலா

வன்சொலான் ஆகும் வசைமனம் - மென்சொலின்

நாவினால் ஆகும் அருள்மனம் அம்மனத்தான்

வீவிலா வீடாய் விடும்.”( நான்: 106 )

என்பதனால் அறிய முடிகின்றது. மேலும் ஒருவர் கொடுமையான வசைச்சொற்களைப் பயன்படுத்துவதால் அதனைப் பயன்படுத்தியவர்க்கு வசையே உண்டாகும் எனக் குறிப்பிடும் நான்மணிக்கடிகை. இதனை,

“வைததனால் ஆகும் வசையே” ( நான்: 103 )

என்பதனால் அறியலாம். ஏலாதி என்னும் அற இலக்கியம் அறநூலோர் நல்மாந்தர்க்கு உரியனவாகத் தொகுத்தளித்த குணங்களுள் இன்சொல் என்ற ஒன்றினையும் எடுத்துரைக்கின்றது. இதனால் சான்றோரால் மதித்துப் போற்றப்படும் ஆற்றல் கொண்டதாய் இன்சொல் இருத்தலை அறிய முடிகிறது. இதனை,

“சாதல் பொருள்கொடுத்த லின்சொற் புணர்வுவத்தல்” (ஏலாதி: 68)

என்ற பாடல் அடியானது உணர்த்தி நிற்கின்றது. தமிழ் அறநூல்கள் வலியுறுத்தி உரைக்கும் இத்தகைய செய்திகளைத் திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம் ஒரு மனிதன் தன்வாழ்வில் நல்லனவற்றைக் காண விரும்புவான் எனில் நீண்டநாள் வாழ விரும்புவான் எனில் வாழ்க்கையில் இன்பம் நிறைந்த நாட்களைக் காண விரும்புவான் எனில் தீச்சொல்லில் இருந்து தன் நாவைக் காத்துக் கொண்டு இன்சொற்களையே பேச வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. இத்தகைய செய்திகளை வலியுறுத்தி நிற்கும் திருவிவிலியத்தின் வசனங்கள்,

‘‘வாழ்க்கையில் இன்பம் காண விருப்பமா? வாழ்வின் வளத்தைத் துய்க்கும் வகையில் நெடுநாள் வாழ நாட்டமா? தீச்சொல்லின்று உன் நாவைக் காத்திடு! வஞ்சக மொழியை உன் நாவை விட்டு விலக்கிடு’’ (திரு:34: 12 – 13)

‘‘வாழ்க்கையில் இன்பம் காணவும் நல்ல நாட்களைக் காணவும் விரும்புவோர் தீச்சொல்களினின்று தம் நாவைக் காத்துக் கொள்க’’ (1பேது: 3:10) என்பதாய் அமைகின்றன.

இன்சொல் என்பது யார் அதனைப் பயன்படுத்துகின்றாரோ அவருக்கு மட்டும் பயன் தருவதன்று. அதனையும் தாண்டி அறம் தலைநிறுத்தவும் பயன்படுகின்றது.ஒருவர் இன்சொல் பேசுவாராகில் அவரது பாவங்கள் தேய அறம் வளரும். அறம் வளருவதன் மூலமாக பாவமானது நிலையின்றி அழியும் ஆதலின், ‘அல்லவை தேயும்’ என்றார் திருவள்ளுவர். மேலும் நல்லவற்றையே சொல்வார் ஆகினும் கடுஞ்சொற்களால் சொல்வாராகில் அது அறமாகாது என்பதும் பெறப்படும்.இத்தகைய அரிய செய்தியை விளக்கி நிற்கும் திருக்குறள்,

‘‘அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை

நாடி இனிய சொலின்’’ (குறள்: 96)

என்பதாகும். ஆசாரக்கோவை என்னும் அற இலக்கியம் நன்றியறிதல், பொறையுடைமை, இன்சொல், இன்னாதவற்றை எவ்வுயிர்க்குஞ் செய்யாமை, கல்வி, ஒப்புரவாற்றவறிதல், அறிவுடைமை, நல்லினத்தாரோடு நட்டல் எனப்படும் எட்டினையும் ஆசார வித்து (ஆசார:1) எனக் குறிப்பிடுகின்றது. இவ்வாறு சான்றோர்களால் சொல்லப்பட்ட, ஒழுக்கங்கட்கு வித்து எனப்படும் எட்டனுள் ஒன்றாய் இன்சொல் அமைந்திருப்பதில் இருந்து மனிதன் பின்பற்ற வேண்டிய அறவிழுமியங்களுள் இன்சொல் பெறுமிடத்தை அறிய முடிகிறது. திருவிவிலியம் ஒருவரின் இன்சொல்லிற்குக் கடுமையான கோபத்தினையும் மாற்றிவிடும் தன்மை உண்டு என மொழிகின்றது. இதனை,

‘‘கனிவான மறுமொழி கடுஞ்சினத்தையும் ஆற்றிவிடும்’’ (நீதி 15:1)

‘‘கனி மரத்தின் கண்காணிப்பைக் காட்டுகிறது. சொல் மனிதரின் உள்ளப் பண்பாட்டைக் காட்டுகின்றது’’ (சீராக்: 27: 6) என்பனவற்றால் அறிய முடிகின்றது. மேலும் பிறர் கூறும் இன்சொல் தனக்கு இன்பம் பயத்தலை அனுபவித்து அறிகின்றவன்; அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொல்லைச் சொல்வது என்ன பயன் கருதி? கடுஞ்சொல் பிறர்க்கும் இன்னாதாகலின், அது கூறலாகாது எனக் குறிக்கும் திருக்குறள்.இதனை,

‘‘இன்சொலால் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ

வன்சொல் வழங்கு வது'' (குறள்: 99)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கும். திருவிவிலியமும் ஒருவர் தன் வாயில் இருந்து இன்சொற்களைப் பேசவேண்டுமானால் உள்ளம் நிறைவாய் அமைதல் வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது. அத்தகைய உள்ளத்தின் நிறைவிற்கு அறம் சார்ந்த நெறி அமைதல் இன்றியமையாததாகும். அறம்சார்ந்த மனத்தில் இருந்து இனிமையுடைய வார்த்தைகளே பிறக்கும். கொடுமையான வார்த்தைகளாகிய உவர்நீர் சுரக்காது எனவும் குறிப்பிடுகிறது. இதனை,

''உள்ளத்தின் நிறைவையே வாய் பேசும்'' (லூக்: 6: 45)

''ஒரே ஊற்றில் இருந்து நன்னீரும் உவர் நீரும் சுரக்குமா'' (யாக்: 3: 10)

என்ற வசனத்தால் உணரமுடிகின்றது. கடல் சூழ்ந்து உலகத்தில், எல்லா மக்களுள்ளும் மேன்மையடைதலை, விரும்புபவன் பிறரை மேன்மைப்படுத்திச் சொல்லும் சொற்களைச் சொல்வானேயன்றித் தவிர்க்கமாட்டான் என்பதனை,

''ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்

ஓங்கல் வேண்டுவோன் உயர்மொழி தண்டான்'' (முதுமொழி: 10: 1)

என முதுமொழிக்காஞ்சியும் எடுத்துரைக்கும். இதன்வழித் தான் சிறப்படைய விரும்புவோன் பிறருடைய சிறப்புக்களை எடுத்துரைக்கப் பின்வாங்கமாட்டான் என்பது வெளிப்பட்டு நிற்கும்.இத்தகைய சிந்தனையை அடியொற்றியதாய்,

நல்லோர் தம் சொற்களின் பலனான நல் உணவை உண்கிறார் (நீதி: 13:2) என்ற திருவிவிலியக் கருத்துகள் அமைந்திருப்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது. ஒரு மனிதன் அறம் பயக்கும் இனிய சொற்களும் தன்னிடத்து இருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும் இன்னாத சொற்களைக் கூறுதல் என்பது இனிய கனிகள் தன் கைகளில் இருக்க அவற்றை நுகராது காய்களை நுகர்ந்ததற்குச் சமம் என்பதாய் வள்ளுவம் உரைக்கும்.

''இனிய உளவாக இன்னாத கூறல்

கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'' (குறள்: 100)

மேற்கண்ட குறட்பாவில் குறிக்கப்படும் செய்தியைத் திருவிவிலியம்,

''இனிய சொல் தேன்கூடு போன்றவை. மனத்திற்கு இனிமையானவை. உடலுக்கு நலம் தருபவை''

(நீதி:16:24)

எனக் குறிப்பிடுகின்றது.

**கொல்லாமை:**

ஓர் அறிவுடையன உயிர்கள் முதலாக ஐயறிவு உடைய உயிர்கள் ஈறாகக் கொல்லுதலைச் செய்யாமையே 'கொல்லாமை' என்று குறிக்கப்படுவதாகும்.,இதுமேற்கூறிய அறங்கள் எல்லாவற்றினும் சிறப்புடைத்ததாயும் கூறாத அறங்களையும் தன்னுள் அகப்படுத்தி நிற்கும் ஆற்றல் பெற்றதாயும் அமைந்ததாகும். எனவேதான் திருவள்ளுவர் இதனை இறுதியில் வைத்தார்.கொலைப்பாவம் விளைவிக்கும் துன்பத்தை ஏனைப் பாவங்களெல்லாம் ஒன்று கூடியும் விளைவிக்க மாட்டாது. ஈண்டுக் கொல்லாமை என்பது கொல்வதன் எதிர்ப்பதம் அன்று, கொல்லாமை என்பது அறங்களின் தொகுப்பு. உடலாலும், மனத்தாலும். மொழியாலும் பிற உயிர்களுக்கு யாதொரு துன்பமும் செய்யாமையே கொல்லாமை என்னும் விழுமியத்தின் அடிப்படை ஆகும்.பட்டினத்தார்

''கொல்லாமல் கொன்றதைத் தின்னாமல்''[22]

எனக் குறிப்பிடுவார். சிலப்பதிகாரம்

''ஊன்உண் துறமின், உயிர்க்கொலை நீங்குமின்''[23]

என்று குறிப்பிடுகிறது. இத்தகைய சிந்தனை மரபு நீதிஇலக்கியக் கால இலக்கியங்களிலும் காணப்படுகின்றது. திருவள்ளுவர் இதற்கெனக் கொல்லாமை, புலால் மறுத்தல் என்று இரு அதிகாரங்களைப் படைத்துள்ளார். பெரும்பாலும் தமிழ் இலக்கியங்களில் அறம் எனப்படுவது ஆருயிர் ஓம்பல், நோன்பு எனப்படுவது கொல்லாமை நோன்பு என்கிற கருத்தியலே முன் வைக்கப்படுகிறது. திருவிவிலியத்திலும் ஆருயிர் ஓம்பல் என்னும் அறவியல் கோட்பாடே பெரிதும் முன்மொழியப்படுகின்றது. திரிகடுகம் இந்த உலகத்தில் உண்மைத்தன்மையை உணராதவர்களைப் பட்டியலிடும். அத்தகையவர்கள் ஒன்றின் மாமிசத்தைத் தின்று கொண்டே உயிர்களிடத்தில், அருள் உடையவன் என்று சொல்பவனும் எத்தகைய முயற்சியும் செய்யாமல் விதி எல்லாவற்றையும் செய்யும் என்பவனும் ஒரு பயனைப்பெற வேண்டி வேள்வியில் ஓருயிரைக் கொலை செய்கிறவனும் ஆகிய இம் மூவருமே ஆவர் எனக் குறித்திடும். இதனை,

''ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பானும்'' (திரி: 36)

என்ற பாடல் அடியானது எடுத்துரைக்கும். இனியவை நாற்பது மனிதரின் வாழ்வில் இனிமை தருவனவற்றை விளக்கியுரைக்கும்.அதன் அடிப்படையில் மனிதனுக்கு இனிமையுடையனவாய் அமைவது ஓர் உயிரைக் கொல்லாமை என்பது ஆகும். இதற்கு,

“கொல்லாமை முன்இனிது” (இனியவை: 5)

என்ற பாடல் அடியானது சான்றாய் அமைகின்றது. ஓருயிரைக் கொன்று, அதன் தசையைத் தின்பவனுடைய நாக்கானது அற்று விழும் எனக் குறிக்கும் சிறுபஞ்சமூலம். இந்நூல் உணர்த்தும் இத்தகைய அறங்களுள் கொல்லாமை என்பது முதல்நிலையில் வைத்துக் குறிக்கப்பட்டிருப்பது கொல்லாமையின் சிறப்பினை விளக்கியுரைக்கின்றது.

“கொன்றுண்பா னாச்சாங் கொடுங்கரிப்போ வானாச்சாம் (சிறு: 9)

சிறுபஞ்சமூலத்தின் பிறிதோர் பாடல் கொல்லாமை என்பதனை வலியுறுத்துவதுடன் கொல்லாமையுடன் தொடர்புடைய பிற செயல்களையும் தவிர்த்தல் வேண்டும் என வரையறுக்கின்றது. அச்செய்தியானது முறையே ஓருயிரைக் கொன்றவன், பிறன் செய்யுங் கொலைக்கு உடம்பட்டு நின்றவன், நாணாமல் கொன்ற தசையை விலைக்குக் கொண்டவன், அங்ஙனம் கொல்லப்பட்டதன் ஊனைச்சமைத்தவன், சமைத்ததனை இட உண்டவன் என்று சொல்லப்படுகிற இந்த ஐவரிடத்தும், பாவமானது வந்தமையும் என்பதாகும்.இதனை,

“கொன்றான் கொலையை யுடன்பட்டான் கோடாது

கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்காற்-கொன்றதனை

அட்ட னிடவுண்டா னைவரினு மாகுமெனக்

கட்டெறிந்த பாவங் கருது” (சிறு: 69)

என்ற பாடல் எடுத்தியம்புகின்றது. இனியவை நாற்பது மனிதருக்கு இனிமை உடையனவற்றைக் உணர்த்தும் பொழுது மனிதர்கள் ஊனைத் தின்று தன்னுடைய ஊனைப் பெருக்காமை மிக இனிதாம் எனக் குறிப்பிடுகின்றது.

“ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்இனிதே” (இனியவை:4)

இவ்வாறு தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்தி உரைக்கும் ‘கொல்லாமை’ என்னும் அறத்தினைத் திருவிவிலியம் கட்டளையாய் உரைக்கின்றது. அது முறையே,

“கொலை செய்யாதே” (இணை: 5: 17)

“கொல்லப்படுவதற்கு இழுத்துச் செல்லப்படுவோரை தப்புவிக்கப் பார். கொலைக்களத்திற்குக் கொண்டு செல்லப்படுவோரைக் காப்பாற்றப் பார்” (நீதி: 24:11)

என்பதாய் அமைகின்றன. ஒருவர் இப்பிறவியில் நோய் உடம்புடன் வறுமையும் சேர்ந்த இழிதொழில் வாழ்க்கையினை உடையவராய் இருப்பதற்குக் காரணம் அவர் முற்பிறப்பில் உயிர்களைக் கொல்லும் தொழிலைச் செய்ததே ஆகும் என்பதற்கு,

''அக்கே போல் அங்கை யொழிய விரல் அழுகித் -

துக்கத் தொழுநோய் எழுபவே'' (நாலடி: 123)

என வரும் நாலடியார் பாட்டும் அரணாகும். ஏலாதி கொல்லாமைக்கு உடன்படாத ஒருவனின் தன்மையை,

''உடன்படான் கொல்லான் உடன்றார்நோய் தீர்த்து

மடம்படான் ----------'' ( ஏலாதி: 8 )

எனக் குறிப்பிடும். மேலும் கொலைபுரியாதவன் விண்ணவர்க்கு மேலானவானய்ச் சிறப்பிக்கப்படுவான் என்பதனை,

''கொலைபுரியான் கொல்லான் புலான்மயங்கான் -----

விண்ணவர்க்கு மேலாய் விடும்'' (ஏலாதி: 2)

எனவும் எடுத்துரைக்கும். இத்தகைய கருத்தினையே முன்மொழியும் திருவிவிலியம் ஒருவன் கொலைத்தொழில் புரிவானேல் தானும் அத்தகைய நிலையினையே அடைவான் எனவும் உயிர்க்கொலையைத் தவிர்த்தல் வேண்டும் எனவும் வலியுறுத்துகின்றது. இதனை,

''நீ கொலை செய்து கொள்ளை அடித்திருக்கிறாய் இல்லையா? எனவே ஆண்டவர் இவ்வாறு கூறுகிறார், நாய்கள் நபோத்தின் இரத்தத்தை நக்கிய அதே இடத்தில் அவை உனது இரத்தத்தை நக்கும்'' (1 அரசர்: 21: 19 )

''கொலை செய்யாதே!கொலை செய்கின்ற எவரும் தண்டனைத் தீர்ப்பிற்கு ஆளாவர் என்று முற்காலத்தவர்க்கு கூறப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டிருப்பீர்கள்'' (மத்:5:21) என வரும் வசனங்களால் அறிய முடிகிறது.

ஒருவன் கொல்லாமை என்னும் அறத்தினை எத்தகைய நிலையிலும் தவறாது பின்பற்றல் வேண்டும் என்பது அறநூல் துணிபாகும். வள்ளுவரும் கொலை செய்யாதவழி ஒருவனுக்குத் அவனுடைய உடம்பின் நீங்கிப் போகும் அளவிற்கு இடர்ப்பாடு வருமாயினும் பிறிதோர் இன்னுயிரை அதன் உடம்பின் நீக்கும் தொழிலைச் செய்யற்க! என வலியுறுத்துகின்றார்.

“தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தாம்பிறிது

இன்னுயிர் நீக்கும் வினை”. (குறள்: 327 )

இயேசு கிறித்து தான் சிலுவையில் அறையப்பட்ட காலத்தும்,

“தந்தையே! இவர்களை மன்னியும், ஏனெனில் தாங்கள் செய்வது என்னவென்று இவர்களுக்குத் தெரியவில்லை” (லூக்:23: 34) என உரைத்தது நின்றதனை இதற்குச் சிறந்த சான்றாகக் காட்ட முடிகின்றது.

**பொறையுடைமை:**

பொறையுடைமை என்பது ‘பொறுமை’ என்பதன் அடியாய் எழுந்த சொல்லாகும். பொறையுடைமை என்னும் அணிகலனைப் பெற்ற ஒருவர் தன்னைப் பற்றி மட்டும் சிந்திக்கமாட்டார், பிறரின் உணர்வுகளையும் மனத்துள் கொண்டு சிந்திப்பார். எனவே பொறுமையை அணிகலனாய்க் கொண்டு அமைந்திருப்பார்.சங்க இலக்கியங்களில் இச்சொல்லாட்சி பெரிதும் காணப்படுகிறது.

“தான் அது பொறுத்தல் யாவது வேனல்” [24]

“போற்றாரைப் பொறுத்தல்” [25]

“போற்றாரைப் பொறுத்தலும் சூழ்ச்சிய தகலமும்” [26]

இத்தகைய பொறுமையைக் கொண்டொழுகுபவரைப் “பொறுக்குநர்”[27] என்னும் சொல்லால் குறிப்பிடுகிறது புறநானூறு.

“பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்” [28]

என்கிறது கலித்தொகை.

“அடிக்கடி சலனப்படும் சிந்தைக்கு உறுதியளிப்பது பொறுமை. பொது இடங்களிலும் கொல்லையிலும் பலவகையிலும் பலரோடும் பழகுகின்ற உயிருக்கு எல்லையற்றது பொறுமையே ஆகும்”[29] என்ற கூற்று இந்த இடத்தில் ஒப்பு நோக்கத்தக்கதாகும். பொறுமை இல்லாதவரிடத்து அன்பும் அருளும் நிலைத்து இராது. எனவே ஒருவர் நிறைவுடைமை என்னும் பண்பினைப் பெற்று

உயர வேண்டுமானால் பொறுமை என்பதனை வாழ்வியல் அறமாய்க் கொண்டு ஒழுகல் வேண்டும் என அற இலக்கியமும் திருவிவிலியமும் உணர்த்துகின்றன.

தன் சினத்தை அடக்காமல் ஒருவன் தன் வாய்விட்டுச் சொல்லிய சினச்சொல், என்றைக்கும் அவனையே வருத்தும் என்பதனை அறிந்த பண்பட்ட கேள்வி ஞானத்தையுடையவர்கள் எத்தகைய நிலையிலும் பொறையுடையோராய் அமைந்திருப்பர் என உரைக்கும் நாலடியார். இதனை,

''காவா தொருவன்தன் வாய்திறந்து சொல்லுஞ்சொல்

ஓவாதே தன்னைச் சுடுதலால் - ஓவாதே

ஆய்ந்தமைந்த கேள்வி அறிவுடையார் எஞ்ஞான்றும்

காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து.'' (நாலடி: 63)

என்ற பாடலால் அறிய முடிகின்றது. பொறையுடைமை என்பது ஒருவன் தன்னால் வெல்ல இயலாத வலிமை உடையவன் மாட்டுப் பொறுமையுடையவனாய் இருத்தல் என்பதன்று. தன்னினும் எளியோர் மாட்டும் பொறுமை உடையவனாய் இருத்தலே ஆகும் என்பார் திருவள்ளுவர். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''செல்லிடத்துக் காப்பான் சினம் காப்பான் அல்லிடத்துக்

காக்கின் என்? காவாக்கால் என்?'' (குறள்: 301)

என்பதாகும். மனிதரிடத்து அமைய வேண்டிய ஒழுலாறுகளை வகைப்படுத்தி உரைக்குமிடத்து அனைவரையும் வெல்லும் வலிமையுடைய ஒருவன் பிறர் மாட்டுக் கொள்ளும் பொறையுடைமையே உயர்ந்ததாம் எனக் குறிப்பிடும் நாலடியார். இத்தகைய சிந்தனையை,

''---------------------------------எல்லாம்

ஒறுக்கும் மதுகை உரனுடை யாளன்

பொறுக்கும் பொறையே பொறை'' (நாலடி: 65)

என்பதனால் அறிய முடிகின்றது. இதனையே,

“உள்ளவுரம் இருந்தால் போதாது. பொறுமையுணர்வும் வேண்டும். அப்பொழுதுதான் நிலைத்த பயன்தரும் செயல்களைச் செய்ய இயலும். புலனடக்கம் பொறுமையுணர்வை வளர்க்கும்.எனவே, இரண்டும் ஒரு நாணயத்தின் இருபக்கங்களைப் போன்றது ஆகும்”[30] என அரிஸ்டாட்டில் விளக்குவார். திருவிவிலியம் இத்தகைய பொறுமையினையே உயர்ந்தது எனப் போற்றுகின்றது. இதனை,

“விவேகம் உடையவர் பொறுமையோடு இருப்பர்” (நீதி:14: 17) )

என்பதனால் அறிய முடிகின்றது.

உயர் குலத்தோர் தம்மினும் கீழ்மக்கள் தாழ்வான சொற்களைக் கூறிடினும் அதனால் சினம் கொள்ளமாட்டார்கள் என்கிறது நாலடியார். கீழ்மொழிகளைக் கூறும் கீழ்மக்களை நாயனையர் என்று இழித்துரைக்கின்றது. சினம் மிகுந்து நாயானது, தனது உடம்பினை வாயினால் கடித்துத் தசையைப் பிடுங்கும் பொழுதும் அதற்கு எதிராகத் தமது வாயினால் திருப்பி நாயைக் கடித்தவர்கள் இவ்வுலகத்தில் இல்லை: அதுபோல தகுதியான சொல் அல்லாமல் கீழ்மக்கள் தாழ்வான சொற்களைச் சொன்னாலும் மேன்மக்கள் தம் வாயினால் திருப்பி அத்தாழ்வான சொற்களைச் சொல்லமாட்டார்கள் எனக் குறிப்பிடுகின்றது.

“கூர்த்துநாய் கவ்விக் கொளக் கண்டும் தம் வாயற்

பேர்த்து நாய் கவ்வினார் ஈங்கில்லை” (நாலடி:70)

நான்மணிக்கடிகை, எந்நிலையிலும் பிறரைச் சினவாத பொறையுடைய உயர்ந்தோர் மாட்டே திருமகள் உறைவாள் எனச் சுட்டுவதற்கு,

“இனியவே செய்ப அமைந்தார் - முனியாதார்

முன்னிய செய்யுந் திரு” (நான்: 41 )

என்ற பாடல் அடிகள் அரணாகும். முதுமொழிக்காஞ்சி தன்னுடன் சினம் கொண்டாரோடு சினம் கொள்வதினும் தன்னை வளர்த்துக் கொள்ளுதலே உயர்ந்தது என்று குறிப்பிடுகிறது.

“செற்றாரைச் செலுத்தலிற் நற்செய்கை சிறந்தன்று” (முதுமொழி:9)

இதன்வழி, பகைவரைத் தண்டித்தலினும், ஒருவர் தன்னைப் பெருகச்செய்தல், சிறப்புடையதாம் என்பது பெறப்படும். சிறுபஞ்சமூலம் தனக்குப் பிறனொருவன் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளுதல், பெருமையுடைய செயலாகும். பிறர்செய்த, தீமையை நினைத்துக்கொண்டே இருத்தல், சிறுமையுடைய செயலாய் அமையும் எனக் குறித்து நிற்பதனை,

“பிழைத்தல் பொறுத்தல் பெருமை சிறுமை

யிழைத்ததீங் கெண்ணி யிருத்தல்” (சிறு:15)

என்ற பாடல் அடிகளானது விளக்கி நிற்கும். திருவிவிலியம் ஒருவன் தீமையோடு எதிர்த்து நிற்றல் என்பது உயர் மாண்பு அன்று என்று மொழிகின்றது. மேலும் பகைவனுக்கு அருளும் நன்னெஞ்சத்தினை ஒருவன் பெற வேண்டும் என்றும் வலியுறுத்துகிறது. இதனை,

“தீமை செய்வோரை எதிர்க்க வேண்டாம். மாறாக உங்களை வலக்கன்னத்தில் அறைபவனுக்கு மறுகன்னத்தையும் திருப்பிக் காட்டுங்கள். ஒருவர் உங்களுக்கு எதிராக வழக்குத் தொடுத்து உங்கள் அங்கியை எடுத்துக் கொள்ள விரும்பினால் உங்கள் மேல் உடையையும் அவர் எடுத்துக் கொள்ள விட்டுவிடுங்கள்.” (மத்:5:39 -40)

“அவர்களது தீச்செயலை நான் மன்னித்துவிடுவேன்; அவர்களுடைய பாவங்களை இனிமேல் நினைவு கூரமாட்டேன்” ( எரே: 31:33-34 )

என்ற திருவிவிலியத்தின் வசனங்கள் எடுத்துரைக்கும்.

மனிதன் தன் சால்புடைமையைக் காத்துப் போற்றும் வழியைச் சுட்டியுரைக்கும் திருக்குறள் ஒருவன் சால்புடைமையினின்று நீங்காமை இருப்பானாயின்; பொறை உடைமை அவனால் அழியாமல் காத்து ஒழுகப்படும் எனக் குறிப்பிடுகிறது.

“நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை

போற்றி ஒழுகப் படும்” (குறள்: 154 )

ஏலாதி, நெஞ்சடக்கம் உடைமையும், நல்லியல்பு உடைமையும், வறியார்க்கு ஒன்று கொடுத்தல் உடைமையும், பிறர் தனக்குத் தீங்கு செய்யுங்காற் பொறுத்தல் உடைமையும், பொய் கூறுதல், ஊனுண்ணுதல் ஆகியவற்றில் மறுத்தலுடைமையும், என்ற இவ்வியல்புகளையுடையவன் எல்லா உயிர்கட்கும் தாயினது அன்புபோலும் அன்பினையுடையவன் என்று அனைவராலும் போற்றத்தகும் சிறப்பினை உடையவன் ஆவான் எனக் குறிப்பிட்டுரைக்கின்றது. இதனை,

“நிறையுடைமை நீர்மை யுடைமை கொடையே

பொறையுடைமை பொய்ம்மை புலாற்கண் - மறையுடைமை

வேயன்ன தோளா யிவையுடையான் பல்லுயிர்க்கும்

தாயன்ன னென்னத் தகும்” (ஏலாதி: 6)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் சால்புடைய உயர்ந்தோர்கள் எளிதில் கோபம் கொள்ளாமல் இருப்பர். தாழ்ந்தோரே சினம் கொண்டு தன் கீழ்மையை வெளிப்படுத்தவர் என்று குறிப்பிடுகிறது. இதனை,

‘‘பொறுமையுள்ளவர் மெய்யறிவாளர், எளிதில் சினம் கொள்பவர் தம் மடைமையை வெளிப்படுத்துவார்’’ (நீதி: 14: 29) என்ற வசனமானது வெளிப்படுத்தி நிற்கின்றது.

இவ் உலகில் மனிதர் பிறரால் எந்நாளும் போற்றப்படும் தன்மை உடையவராய் அமைதல் வேண்டும் எனில் பொறுமை உடையவராய் இருத்தல் வேண்டும். பிறர் தமக்குத் தீங்கு செய்தவழிப் அதனைப் பொறுக்கமாட்டாது அவனைத் தண்டித்தாரை அறிவுடையார் ஒரு பொருளாக மனத்துக் கொள்ளமாட்டார், அதனைப் பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து கொள்வர் எனக் குறிப்பிடுவதனை,

‘‘ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்

பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து’’ (குறள்: 155)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கின்றது. திருக்குறளின் இத்தகைய சிந்தனையானது,

‘‘வலிமை உடையவரைவிட பொறுமை உடையவரே மேலானவர், நகரை அடக்குகிறவனை விடத் தன்னை அடக்குகின்றவறே சிறந்தவர்.’’ (நீதி:16: 32) என்ற திருவிவிலியத்தின் நீதிமொழிகளோடு ஒத்து அமைவதனை உணர முடிகிறது.

‘‘உள்ளத்தில் பெருமை கொள்வதை விட பொறுமையோடு இருப்பதே மேல்’’ (சபை: 7: 8) என்ற திருவிவிலியக் கருத்தோடு ஒத்தமைகின்றது.

தமக்குத் தீங்கு செய்தவனை ஒறுத்தார்க்கு உண்டாவது அவ்வொரு நாள் இன்பமே ஆகும். ஆனால் அதனைப் பொறுத்தார்க்கு உலகம் அழியுமளவும் புகழ் உண்டாகும். எனவே ஒருநாளை இன்பம் என்பது அந்நாள் ஒன்றினுள் கருதியதை முடித்துவிட்டோம் எனத் தருக்கியிருக்கும் பொய்யின்பமே ஆகும் என்பதனைத் திருக்குறள்,

‘‘ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்

பொன்றுந் துணையும் புகழ்’’ (குறள்: 156 )

என வலியுறுத்தி நிற்கும். இத்தகைய உயரிய பொருளைத் திருவிவிலியமும்,

‘‘பொறுமையுள்ளவர் தக்க காலம் வரும்வரை அமைதி காப்பர், பின்னர் மகிழ்ச்சி அவர்களுள் ஊற்றெடுத்துப் பாயும்’’ (சீரா:1:23) எனக் குறிப்பிடுகிறது.

**பயனில சொல்லாமை:**

சொல் என்பது மனிதர்களுக்கு அமைந்த மிகச்சிறந்த உடைமை ஆகும். அதனைத் தெளிந்து பயன்படுத்துதல் இன்றியமையாததாகும். பயனற்ற சொற்களைப் பயன்படுத்துபவர் அதன் மூலமாகவே சிறுமையடைவர். அதனால்தான் திருவள்ளுவரும் பயனில்லாத சொற்களைக் கூறுபவன் மகனன்று, மக்களுள் பதடி எனக் குறிப்பிடுகிறார். சமூகத்தில் உறவு பேணுதற்கும் உயர்வு காணுதற்கும் பயனில சொல்லாமை இன்றியமையாதது ஆகும். எனவேதான் வள்ளுவர் ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு என்றார்.அவ்வாறு சொல்லின்கண் வரும் சோர்வுகளுள் மிகவும் குறிப்பிடத்தக்கது பயனில சொல்லுதல் ஆகும். எனவே செல்லின் திறம் தெரிந்து பயனுடைய சொற்களையே பேசுதல் வேண்டும் என்பது அறநூல் துணிபாகும்.

பயனில சொல்லாமை என்பதற்கு ‘‘தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை. பொய்,குறளை,கடுஞ்சொல்,பயனில் சொல் என வாக்கின்கண் நிகழும் பாவம் நான்கனுள், பொய் துறந்தார்க்கு அல்லது ஒருதலையாகக் கடியலாகாமையின், அ∴து ஒழித்து இல்வாழ்வாரால் கடியப்படும் ஏனை மூன்றனுள், கடுஞ்சொல் இனியவை கூறலானும் குறளை புறங்கூறாமையானும் விலக்கி, நின்ற பயனில் சொல் இதனான் விலக்குகின்றார்’’ [31] என உரை விளக்கம் தருவார் பரிமேழலகர்.

ஒருவர் பயன் இல்லாத சொற்களைச் சொல்லுவாராயின், அவரது உயர்வும் நன்மதிப்பும் உடனே நீங்கும் என்பது திருக்குறள் ஆகும். இதனை,

‘‘சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை உடையார் சொலின்’’ (குறள்: 195)

என்ற குறள் விளக்கிடும். திருவிவிலியத்தின்,

‘‘மனிதர் பேசும் ஒவ்வொரு வீண் வார்த்தைக்கும் தீர்ப்புநாளில் கணக்குக் கொடுக்க வேண்டும்.- உங்கள் வார்த்தைகளைக் கொண்டே நீங்கள் குற்றம் அற்றவராகக் கருதப்படுவீர்கள்.’’ (மத்: 12: 36 – 37)

என்ற செய்தியானது திருக்குறள் செய்தியினை ஒத்தமைந்துள்ளது.

அறிவுடையார் பலரும் கேட்டு வெறுப்பதாகிய பயன் இல்லாத சொற்களைச் சொல்லுபவன் எல்லாரானும் இகழப்படுவான். இங்கு அத்தகையவன் அறிவுடையார் பலராலும் வெறுக்கப்படுவதுடன் ஏனையோராலும் இகழப்படுவான் ஆதலின் 'எல்லாரும் எள்ளப்படும்' என்றார் திருவள்ளுவர். இத்தகைய சிந்தனையைக் குறித்து நிற்கும் திருக்குறள்,

''பல்லார் முனியப் பயனில சொல்லுவான்

எல்லாரும் எள்ளப் படும்'' (குறள்: 91)

என்பதாகும். திருவிவிலியமும் ஒருவன் எத்தகைய தன்மை கொண்டவன் என்பது அவனுடைய சொற்களாலே அறியப்படும் எனச் சுட்டுகிறது. பயனில் சொல் பாராட்டுவானை இகழ்ந்து நிற்பதில் இவ்விரு நூல்களும் ஒத்தமைந்திருப்பதனை அறிய முடிகிறது.

'' நீ கூறியதைக் கேட்டு உன்னைக் கவனித்தோர் காலம் வரும்போது உன்னை வெறுப்பர்''

( சீராக்: 19:9 )

ஒருவன் பயன்படாத பண்பு இல்லாத சொற்களைப் பலரிடையில் சொல்வானாயின் அவை அவனிடத்து நீதியோடுபடாததாய் அமைவதுடன், அவனின் நற்குணங்களையும் நீக்கிவிடும் என்பது வள்ளுவரின் துணிந்த முடிவாகும். இதனை,

''நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்

பண்பிற்சொல் பல்லா ரகத்து''. (குறள்: 194)

என்ற குறள் வெளிக்காட்டும். வள்ளுவத்தின் இத்தகைய அறத்தினை,

''நாணயமாக நடந்து கொள்வோர் இடையூறின்றி நடப்பர்.கோணலான வழியைப் பின்பற்றுவோரே வீழ்த்தப்படுவர்'' ( நீதி: 10:9 )

என வரும் திருவிவிலியத்தின் நீதிமொழிகளும் விளக்கி நிற்றலை அறிய முடிகிறது. மேலும் அறிதற்கு அரிய பயன்களை ஆராயும் சிறப்புடைய அறிவினையுடையார், மிக்க பயனுடைய சொற்கள் அல்லாத சொற்களைச் சொல்லமாட்டார்கள் என அறிவுடையோரின் செயல்திறனை விளக்கிடும் திருக்குறள். இதனுள் குறிக்கப்படும் அறிதற்கு அரிய பயன்களாவன, வீடு பேறும், மேற்கதிச் செல்லும் பயனும் முதலாயின ஆகும். 'பெரும்பயன் இல்லாத' என வள்ளுவர் குறித்தமையால் பயன் சிறிது உடையன எனினும் அவை போற்றப்படாது என்பது வெளிப்போந்து நிற்கும். இத்தகைய உயரிய சிந்தனையை,

''அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்

பெரும்பயன் இல்லாத சொல்.'' (குறள்: 198)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம் நல்லவர்களின் சொல்லானது பெரும்பயனைத் தரும் ஊற்றாய் அமைந்து பயன் தரும். பொல்லாரின் சொல்லோ பயனற்ற கேடு விளைவிக்கும் சொல்லாய் அமைந்திருக்கும் என்று குறிப்பிடுகின்றது. இதனை,

''நல்லாரின் சொல் களிக்கும் ஊற்றாகும்.பொல்லாரின் பேச்சிலோ கொடுமை மறைந்திருக்கும்''

( நீதி: 10: 11 )

''நல்லாரின் சொற்கள் தூய வெள்ளிக்குச் சமம். பொல்லாரின் எண்ணங்களோ பதருக்குச் சமம். நல்லாரின் சொற்கள் பிறருக்கு உணவாகும். செருக்கு நிறைந்தோரின் மதிக்கேடு அவர்களை அழித்துவிடும'' (நீதி: :10: 20- 21) என்ற வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

நல்லவர்கள் பயனின் நீங்கிய சொற்களை மறந்தும் சொல்லார். அத்தகைய மாசற்றவர்களின் சொல்லின்வழி நன்மையே வெளிப்பட்டு நிற்கும் என்பதனை,

''பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த

மாசறு காட்சி யவர்''. (குறள்: 199)

என்ற திருக்குறள் உணர்த்திடும். இத்தகைய சிந்தனையே,

''நல்லவர்கள் நல்ல கருவூலத்திலிருந்து நல்லவற்றை வெளிக்கொணர்வர், தீயவரோ தீய கருவூலத்திலிருந்து தீயவற்றை வெளிக்கொணர்வர்'' (மத்: 12: 35)

''என் வார்த்தைகளெல்லாம் நேர்மையானவை,

உருட்டும் புரட்டும் அவற்றில் இல்லை'' (நீதி: 8::8)

என வரும் திருவிவிலிய நீதிமொழிகளில் காணப்படுகிறது. ஒருவர் உயர்வடைய வேண்டுமாயின் சொற்களில் பயன் உடைய சொற்களைச் சொல்லுதல் வேண்டும். சொற்களில் பயன் இல்லாத சொற்களைச் சொல்லாமல் நீக்குதல் சிறப்பினைத் தந்து நிற்கும் என்பதனை,

''சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க

சொல்லிற் பயனிலாச் சொல்'' (குறள்: 200 )

என்ற திருக்குறள் எடுத்துக்காட்டும்.

"பொன்னையும் முத்துக்களையும் விட அறிவுயர்ந்த பேச்சே விலையுயர்ந்த அணிகலன்"

(நீதி: 20: 15)

"தக்க வேளையில் சொன்ன சொல் வெள்ளித்தட்டில் வைத்த பொற்கனிக்குச் சமம்"

(நீதி: 25: 11)

என்ற திருவிவிலியத்தின் நீதிமொழிகள் திருக்குறள் கருத்தினை அடியொற்றி அமைகின்றன.

**தீவினை அச்சம்:**

வினைசெய்தல் என்பது மனித இனத்திற்கு இன்றியமையாத பண்பு ஆகும். மனித சமூகம் உயிர்ப்போடு இருக்கின்றது என்பதனை அதன் வினை சார்ந்த செயலூக்கமே வெளிப்படுத்தி நிற்கின்றது. எனவே தான் சங்க இலக்கியம்,

"வினையே ஆடவர்க்கு உயிரே"[32]

என்று குறித்துரைக்கின்றது. இத்தகைய வினை நல்வினை, தீவினை என்னும் இருபெரும் பிரிவுகளைக் கொண்டமைந்ததாகும். வினை இயற்றும் மனிதர்க்கும் அம்மனிதர் சார்ந்த சமூகத்திற்கும் நல்லதைத் தருமானால் அதனை 'நல்வினை' என்றும் அதற்கு மறுதலையாய்த் தீமையைத் தருமானால் அதனைத் 'தீவினை' என்றும் வரையறுக்கப்படுகிறது. இவற்றுள் நல்வினை இயற்றுதல் போலத் தீவினையிலிருந்து விலகி நிற்றல் என்பதும் இன்றியமையாததாகும். இதனைத் 'தீவினை அச்சம்' என்பர் ஆன்றோர். நல்வினை ஆற்ற தேவைப்படுவது 'நசை' என்னும் விருப்பம் ஆகும். ஆனால் தீவினையினின்று விலகத் தேவைப்படுவது அதனால் ஏற்படும் விளைவினை எண்ணிய 'அச்சமே' ஆகும். எனவே அதனைச் சான்றோர் 'தீவினை அச்சம்' எனக் குறித்தனர்.

மனிதன் தனக்கு இன்பம் பயத்தலைக் கருதிச் செய்யும் தீவினைகள், பின் அதனை ஒழித்துத் துன்பமே தருதலால் அத்தன்மையாகிய தீவினைகள் தீயினும் அஞ்சப்படும் என்பது திருக்குறள். தீயானது பிறிதொரு காலத்தும், பிறிதொரு நாட்டிடத்தும் பிறிதோர் உடம்பினும் சென்று சுடுதல் இல்லாமையானும் தீவினை அவ்வாறு சுடும் தன்மை உடையது என்பதாலும் தீயினும் அஞ்சப்படும் என உரைத்தார் வள்ளுவர்.

"தீயவை தீய பயத்தலால் தீயவை

தீயினும் அஞ்சப் படும்''         (குறள்: 202)

ஏலாதி எவனொருவன் எப்பொழுதும், பொய் சொல்லால், ஊனுண்ணல், கள்ளுண்ணல், போன்றவற்றை ஒழித்து, தீய செயல்களைச் செய்யாமலும், சிறியாரது கூட்டத்தைச் சேராமலும் பிறரை நிந்தியாமலும் இருப்பானாகில் அவனுக்கு, அறிவுத் தரும் நூல்கள், தேவையில்லை என்று எடுத்துரைக்கும். இதனுள் இயல்பிலே அறிவுடையான் கொண்ட ஒழுகும் மேன்மைகளுள் தீய செயல்கள் செய்யாது இருத்தல் ஒன்றாய்ச் சுட்டப்படுதல் வழித் தீயன செய்யாமையின் இன்றியமையாமை உணரப்படும். இதனை,

''பொய்யான் புலாலொடு கட்போக்கித் தீயன

செய்யான் சிறியா ரினஞ்சேரான் - வையான்

கயலியலுண் கண்ணாய் கருதுங்கா லென்றும்

அயல வயலவா நூல்'' ( ஏலாதி: 14 )

என்ற பாடலானது விளக்கியுரைக்கும். திருவிவிலியமும் மனத்தில் தீயனவற்றிற்கு இடம் கொடாதே என்று அறிவுரை பகர்கின்றது. இதனை,

''உள்ளத்தில் வன்மத்திற்கு இடங்கொடாதே;

மூடரின் நெஞ்சமே வன்மத்திற்கு உறைவிடம்" (சபை: 7:9)

என்பதனால் அறிய முடிகிறது.

ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாது இருத்தல் வேண்டும். அதனை விடுத்து எண்ணுவானாயின், அவனுக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும் என்பது திருக்குறள் ஆகும்.

''மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்

அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.'' (குறள்: 204)

இதனையே,

''தீயவை நாடுவோரிடம் தீமைதான் வந்தடையும்'' ( நீதி: 11: 27 )

''தீமை செய்தோரைத் தீமை திருப்பத் தாக்கும்.

அது எங்கிருந்து வருகிறது என்பது அவர்களுக்கே தெரியாது''(சீரா:27: 27 )

எனத் திருவிவிலியம் விளக்கிடும். தான் வறியவன் என்று கருதி ஒருவன் அதனைத் தீர்த்தற்பொருட்டுப் பிறர்க்குத் தீவினைகளைச் செய்யாது இருத்தல் வேண்டும். அதனை விடுத்து செய்வானாயின் மீண்டும் வறியன் ஆக அமைவான். இதற்குப் பொருளான் வறியன் எனக் கருதித் ஒருவன் தீயவை செய்வானாயின் அப்பொருளால் மட்டுமேயன்றி நற்குண நற்செய்கைகளாலும் வறியனாவான் எனவும் பொருள் கொள்ள முடிகின்றது. எனவே இதன்வழி, இருவகை வறுமையும் தந்து நிற்றலால் தீவினைகளைத் தவிர்த்தல் இன்றியமையாதது என்று உணர்த்தும் திருக்குறள்

''இலன் என்று தீயவை செய்யற்க செய்யின்

இலனாகும் மற்றும் பெயர்த்து'' (குறள்: 205)

என்பதாகும். திருவிவிலியமும் ஒருவன் தீவினை செய்வானாகில் அத்தீமையாலே அழிவான் என்றும் அத்தீமைகளில் இருந்து ஒருவன் தப்புதல் என்பது இயலாது என்றும் எடுத்துரைக்கின்றது. இதனை,

''நீங்கள் தொடர்ந்து தீமை செய்தால்

நீங்களும் உங்கள் அரசனும் அழிந்து விடுவீர்கள்'' (1சாமு: 12: 25)

''அவர்கள் தீமைகளைச் செய்து விட்டுத் தப்ப முடியுமோ'' (திரு: 56: 7)

என வரும் திருவிவிலிய வசனங்களால் அறிய முடிகிறது. ஒருவருக்கு உறுதி தரும் அறிவுரைகள் எல்லாவற்றுள்ளும் தலையாய அறிவுரை என்று நல்லோரால் போற்றி உரைக்கப்படுவது தம்மைச் செறுவார் மாட்டும் தீவினைகளைச் செய்யாது விடுதல் என்பதே ஆகும். அவ்வாறு விடுதற்குக் காரணம் ஆகிய அறிவை 'விடுதல்' என்றும், செய்யும் வழியிருந்தும் 'செய்யாது' நீங்கவே தமக்குத் துன்பம் வாராது என உய்த்துணர்தலின், அதனை 'அறிவினுள் எல்லாம் தலை' என்றும் கூறினார் வள்ளுவர். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய

செறுவார்க்கும் செய்யா விடல்.'' (குறள்: 203)

என்பதாய் அமைகின்றது.

''தீமையினின்று விலகு: நல்லது செய்

எந்நாளும் நாட்டில் நிலைத்திருப்பாய்'' (திரு: 37: 27)

எனவரும் திருவிவிலியத்தின் திருப்பாடல் மேற்கண்ட திருக்குறள் கருத்துகளோடு ஒத்த தன்மை உடையனவாய் அமைகின்றது.

**அன்புடைமை:**

இந்த உலகில் வாழ்கின்ற ஒவ்வொரு தனிமனிதனும் பின்பற்றப்பட வேண்டிய இயல்பூக்கங்களுள் மிகவும் இன்றியமையாதது ஒரு மனிதன் பிற மனிதன் மீது செலுத்தும் அன்பே ஆகும். எனவேதான்,

''அன்பின் வழியது உயிர்நிலை; அ∴து இலார்க்கு

என்புதோல் போர்த்த உடம்பு'' (குறள்:80)

எனக் குறிப்பிடுவார் திருவள்ளுவர். அவ்வாறு அன்பு நிறையும் பொழுதுதான் மனித வாழ்க்கை முழுமை பெறுகின்றது.

''என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்

பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்

அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி

என்பொன் மணியினை எய்தவொண் ணாதே''[33]

என்பது திருமந்திரம்.

''அன்பு என்பது தான் அல்லாமை தான் அற்று நிற்கும் நிலைமை, தான் கெட்டு நிற்கும் நிலைமை, தான் அதுவாகும் நிலைமை, அது தானாகும் நிலை என்றெல்லாம் பொருள் கொள்ள நிற்பதான ஒப்புயர்வற்ற தமிழ்ச் சொல் ஆகும். தான் அதுவாகும் நிலைமை அல்லது அது தானாகும் நிலைமை எய்துவது. அறிவு நெறி பற்றி நிற்போருக்கு அறிவு நூலுணர்வோடு பல்லாண்டுகள் மாறுபாடின்றி இடையறாதப் பழக்கத்தாலும் முயற்சியாலும் கூடுவதாகும்''[34]

மனிதன் எத்தகைய அறிவுடையவனாக இருந்தாலும் அன்பு என்பது இல்லையேல் பயன் இல்லை. மனிதம் என்பது அறிவுத்தொகுதி இல்லை என்றும் மாறாக மனிதத்தன்மை உடையதே ஆகும்.

‘‘மனிதனுடைய பண்புகளும் குணங்களும் ஒன்றாகச் சேர்ந்ததுதான் மனிதம்’’[35] எனக் குறிப்பார் மார்க்சிம் கார்க்கி.

இத்தகைய அன்புடைமை என்பதுதான் மனிதநேயம் என்னும் சொல்லாலும் அடையாளப்படுத்தப்படுகிறது.

‘‘ ‘நே’ என்னும் சொல்லிற்கு அன்பு, அருள், நேயம் என்றும் நேயம் என்னும் சொல்லிற்கு அன்பு, பக்தி, உறவு, நன்மை என்றும் பொருள் தருகிறது’’[36] கழகத்தமிழ் அகராதி.

‘‘மனித இனத்தின் துன்பங்களையும் துயரங்களையும் குறைத்து இன்பங்களை அதிகரிப்பதே மனித இனநலக் கோட்பாட்டின் அடிப்படைத் தத்துவமாகும்’’[37] என்கிறது வாழ்வியல் களஞ்சியம்

‘‘அன்பு அன்பையே எதிர்பார்க்கும்: அன்புக்கு நிகர் அன்பே! உலகைப்பெற்றாலும் அன்பை விலை பேச இயலாது’’ [38] என்பார் குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

‘‘அறத்தின்பயன் மனிதநேயம் ஆகும்’’ [39]

“Having or showing kindness or understanding especially to a person or animal that is suffering ) (பிற மனிதரின் - உயிரின் துன்பத்தினை உணர்தலும் உறழ்தலும் மனிதநேயமாக வழங்கப்பெறும’’[40] என்கிறது ஆக்ஸ்போர்டு அகராதி. இத்தகைய அன்பின் சிறப்பினை,

‘‘அன்பு பொறுமையுள்ளது, நன்மை செய்யும், பொறாமைப்படாது, தற்புகழ்ச்சி கொள்ளாது, இறுமாப்பு அடையாது, அன்பு இழிவானதைச் செய்யாது, தன்னலம் நாடாது., எரிச்சலுக்கு இடம் கொடாது, தீங்கு நினையாது, அன்பு தீவினையில் மகிழ்வுறாது, மாறாக உண்மையில் அது மகிழும். அன்பு அனைத்தையும் பொறுத்துக் கொள்ளும். அனைத்தையும் நம்பும்.’’ (1கொரி:13: 4- 7)

என மொழியும் திருவிவிலியம்.

அன்பில்லாதவர் எல்லாப் பொருள்களையும் தமக்கே பயன்படுத்துவர்; அன்புடையாரோ பிறிதின் கிழமைப்பொருள்களை மட்டுமன்றித் தற்கிழமைப் பொருளாகிய தம் உடம்பையும் பிறர்க்குப் பயன்படுத்துவர் என்பதனை,

‘‘அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்

என்பும் உரியர் பிறர்க்கு’’. (குறள்: 72)

என்ற திருக்குறள் வெளிப்படுத்தி நிற்கும். தன் தம்பியால் தன் நாடு கொள்ளப்பட்டுக் காட்டிற்போய்த் தங்கியிருந்த குமணன், தன்னைப்பாடிய பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர்க்குத் தன்தலையை வெட்டிக்கொண்டுபோய்த் தன் தம்பியிடங் காட்டிப் பெரும் பொருள் பெறுமாறு தன் வாளைக் கொடுத்த வரலாற்றைக் கூறும் புறநானூற்றுப் பாடல் மேற்கண்ட குறளுக்குச் சான்றாகும். இதை,

''பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்

நாடிழந் ததனினு நனியின் னாதென

வாள்தந் தனனே தலையெனக் கீயத்

தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்'' [41]

என அப்புலவர் பாடியதினின்று அறிந்து கொள்ளமுடிகிறது. இனி, பாரி தன்னையும் பரிசிலர்க்குத்தர அணியமாயிருந்ததும் இத்தகைய செயலாம்.

''பறம்பு பாடின ரதுவே யறம்பூண்டு

பாரியும் பரிசில ரிரப்பின்

வாரே னென்னான் அவர்வரை யன்னே''.[42]

என்ற கபிலர் பாடலும் மேற்கண்ட குறளுக்குச் சான்றாய் அமையும். திருவிவிலியம் ஒருவன் தன்மாட்டு அன்பு செய்தல்போல பிறர் மாட்டும் செய்தல் வேண்டும் என வலியுறுத்துகின்றது. இதனை,

''உன்மீது நீ அன்பு கூர்வதுபோல உனக்கு அடுத்து இருப்பவர் மீதும் அன்பு கூர்வாயாக''

(மத்:22:39)

''அன்பில்லாதவனைக் கடவுள் அறிந்து கொள்ளவில்லை. எனெனில் கடவுள் அன்பாய் இருக்கிறார்'' (1யோவா:4:8)

என்ற வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. அறத்தெய்வம் அன்பில்லாத உயிரை எலும்பில்லாத உடம்பை வெயில் எரித்தாற் போல் எரிக்கும் எனக் குறிக்கும் திருவள்ளுவம். இதன் வழி, வெயில் வந்தபோது எலும்பில்லா உடம்பு துன்புறுவதுபோல. வினைப்பயன் வந்தபோது அன்பு செய்யா மக்களுயிர் துன்புறும் என்பது பெறப்படும். அன்பு செய்யாமையாவது அதற்கு மறுதலையான தீமை செய்தல் என்பதாம். இதனை,

''என்பில் அதனை வெயில்போலக் காயுமே

அன்பில் அதனை அறம்'' (குறள்: 77)

எனப்படும் திருக்குறள் வெளிப்படுத்தும். இத்தகைய கருத்தினைத் திருவிவிலியத்திலும் காண முடிகின்றது. ''நான் மானிடர் மொழிகளிலும் வானதூதரின் மொழிகளிலும் பேசினாலும் அன்பு எனக்கில்லையேல் ஒலிக்கும் வெண்கலமும் ஓசையிடும் தாளமும் போல ஆவேன்''

(1கொரி:13: 1)

என்ற வசனம் அன்பின் அருமையை எடுத்துரைக்கின்றது.

உள்ளத்தில் அன்பில்லாத உயிர் வாழ்க்கை என்பது பாலை நிலத்தின் கண் பட்டுப்போன மரம் தளிர்த்தாற் போன்றது என உரைக்கின்றது திருவள்ளுவம். இதனை,

''அன்புஅகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்

வற்றல் மரந்தளிர்த் தற்று'' (குறள்:78)

என்ற குறட்பாவினால் அறியலாம். முதுமொழிக்காஞ்சியும் அன்புடைமையை விரும்பியிருப்பார்க்கு, பிறருக்கு விருப்பமாகிய பொருளைக் கொடுப்பது எளிது எனக் குறிக்கின்றது.

''ஈரம்வெய் யோர்க்கு நசைகொடை யெளிது.'' (முதுமொழி: 3)

மேலும் இனியவை நாற்பது,

''------ பங்கமில் செய்கையர் ஆகி பரிந்து யார்க்கும்

அன்புடைய ராதல் இனிது (இனியவை: 9)

என எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் அன்பின் அருமையை,

''இறைவாக்கு உரைக்கும் ஆற்றல் எனக்கு இருப்பினும்,

மறைபொருள்கள் அனைத்தையும் அறிந்தவனாய் இருப்பினும்,

அறிவெல்லாம் பெற்றிருப்பினும், மலைகளை இடம்பெயரச் செய்யும்

அளவுக்கு நிறைந்த நம்பிக்கை கொண்டிருப்பினும்

என்னிடம் அன்பு இல்லையேல் நான் ஒன்றுமில்லை.'' (1 கொரி:12:31-13:13)

என வலியுறுத்துகின்றது.

ஆருயிர்களுக்கு என்போடு இயைந்த தொடர்பென்பது அன்போடு இயைந்த வழக்கே ஆகும் என விளக்கும் நிற்கும் திருக்குறள்.

இக்குறள்,

''அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு

என்போடு இயைந்த தொடர்பு'' (குறள்:73)

என்பதாய் அமைகின்றன. அன்பு என்பது இல்லையாகில் மனித வாழ்வால் ஒரு பயனும் இல்லை எனத் திருக்குறளில் வலியுறுத்தப்படும் கருத்தினைத் திருவிவிலியம்,

''என் உடைமையை எல்லாம் நான் வாரி வழங்கினாலும் என் உடலையே சுட்டெரிப்பதற்கென ஒப்புவித்தாலும் என்னிடம் அன்பு இல்லையேல் எனக்கு பயன் ஒன்றும் இல்லை.'' (1கொரி:13:3) என அறிவுறுத்தி நிற்கின்றுத.

உடம்பினுள் அகத்தின்கண் நிற்கும் உறுப்பாகிய அன்புடையர் அல்லாதார்க்கு ஏனைப் புறத்தின்கண் நிற்கும் உறுப்பாகிய இடனும், பொருளும், ஏவல் செய்வாரும் முதலாயின எல்லாம் ஒரு உதவியும் செய்யாது என்பதனை,

''புறத்துறுப்பு எல்லாம் எவன்செய்யும் யாக்கை

அகத்துறுப்பு அன்பில் அவர்க்கு'' (குறள்: 79)

என்ற திருக்குறளின் மூலம் எடுத்துரைப்பார் வள்ளுவர். அன்பு துணையாவது அறத்திற்கே என்று சொல்லுவர் அறியாத சிலர். ஆனால் அவ்வாறு அன்று. மறத்திற்கும் அவ்வன்பே துணையாகும். ஒருவன் செய்த பகைமைபற்றி உள்ளத்து மறம் நிகழ்ந்துழி, அவனை நட்பாகக் கருதி அவன் மேல் அன்புசெய்ய அது நீங்குமாகலின், மறத்தை நீக்குதற்கும் துணையாம் என்பார் திருவள்ளுவர். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை,

''அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்

மறத்திற்கு அ∴தே துணை.'' (குறள்: 76)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கும். திருவிவிலியமும் அன்புடையாரின் நற்செயல்களை,

''அடுத்திருப்பவர்க்கு தீங்கிழைக்காது,

ஆகவே அன்பே திருச்சட்டத்தின் நிறைவு'' (உரோ:13:10)

எனக்கூறி எடுத்துரைத்து ஆற்றுப்படுத்துகின்றது.

**கள்ளாமை:**

கள்ளாமை என்பது பிறர் உடைமையாயிருக்கும் எந்தப் பொருளையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை ஆகும். கருதலும் செய்தலோடு ஒத்ததன்மை உடையதாய் அமைதலின் திருவள்ளுவர் 'கள்ளாமை' எனக் குறித்தார்.

பிறன் பொருளைக் கவர்தலாகிய குற்றத்தினைத் தம் நெஞ்சால் கருதுதலும் பாவம் நிறைந்த செயலாகும். எனவே பிறனொருவன் பொருளை அவன் அறியா வகையால் வஞ்சித்துக் கொள்வோம் என்று கருதுதல் வேண்டாம் எனத் திருக்குறள் வலியுறுத்தும்.

''உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்

கள்ளத்தால் கள்வேம் எனல்'' (குறள்:282)

''உன் கடவுளாகிய ஆண்டவர் உனக்களிக்கும் நாட்டில் உன் வாழ்நாட்கள் நீடிக்கும்படி களவு செய்யாதே. பிறர்க்கு உரியது எதையும கவர்ந்திட விரும்பாதே'' (விடுதலை: 20: 14 -15)

திருடர், பேராசை உடையோர், குடிவெறியர், பழிதூற்றுவோர் கொள்ளை அடிப்போர் ஆகியோர் இறையாட்சியை உரிமையாக்கிக் கொள்வதில்லை (1 கொரி: 6- 9)

என்ற திருவிவிலிய வசனம் மேற்கண்ட திருக்குறள் கருத்தினை ஒத்தமைந்துள்ளதனை அறிய முடிகின்றது.

களவினால் பெறப்பட்ட பொருள், வளர்வது போலத் தோன்றும். ஆனால் தன் எல்லையைக் கடந்து அது கெடும். எனவே களவினால் பொருள் கொண்டு உயர்வோம் என நினைத்தல் வேண்டாம் என்பது திருக்குறள் தரும் செய்தியாகும். இதனை,

''களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து

ஆவது போலக் கெடும்''. (குறள்: 283 )

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கின்றது. ஆசாரக்கோவை பிறர் மனையாளை நயத்தல், கள்ளுண்ணல், சூதாடுதல், கொலை செய்தல் போன்றன எத்தகைய தீநெறியைத் தருமோ அதனைப் போன்று பிறன் பொருளைக் கவர்தலாகிய செயலும் தீய நெறியைத் தந்து நிற்கும் என்று குறிப்பிடுகின்றது. மேலும் அறனறிந்தவர்கள் மனத்தாலும் இத்தகைய செயல்களைச் செய்யக் கருதமாட்டார்கள். அவ்வாறு அவர்கள் கருதுவார்களாயின் நல்லொழுக்கம்

இல்லாதவர்களென்று பலரால் இழக்கப்படுதல் மட்டுமன்றி நரகத்தின்கண்ணும் சென்று சேர்வர் எனவும் குறிப்பிடுகிறது. இத்தகைய கருத்தினை,

''பிறர்மனை கட்களவு சூது கொலையோ

டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார் - திறனிலரென்

றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்

செல்வழி யுய்த்திடுத லால்''( ஆசார: 37)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் தமிழ் அற இலக்கியங்கள் குறித்தற் போன்றே பிறர் பொருள் வெளவுதல் ஆகிய செயல் ஒருவனின் மனத்தினைக் கெடுத்து விடுகிறது. எனவே மனிதர்கள் திருடுதலைக் கைவிட்டுக் கொடுக்கும் தன்மை உடையவராய் வாழ்தல் வேண்டும் எனக் குறிப்பிடுகிறது. இதனை,

''தீமையின் கவர்ச்சி நன்மையானவற்றை மறைத்துவிடுகிறது, அலைக்கழிக்கும் இச்சை மாசற்ற மனத்தைக் கெடுத்து விடுகிறது'' (சால: 4: 12)

''வஞ்சனையால் தேடிய பொருள் குறைந்துபோம்'' ( நீதி:13:11 )

என்பதனால் அறிய முடிகிறது.

பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்வதில் உள்ள மிகுதியான விருப்பமானது அப்பொழுது இனிதுபோலத் தோன்றித் தான் பயன் கொடுக்கும் பொழுது தொலையாத இடும்பையைக் கொடுக்கும் என்பது திருக்குறள் அறிவுறுத்தும் நெறியாகும். இதனை,

''களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்

வீயா விழுமம் தரும்.'' (குறள்: 284)

என்பதால் அறிய முடிகின்றது. திருவிவிலியமும் களவு செய்யாமல் ஒருவரை ஒருவர் வஞ்சிக்காமல் கடவுளின் பெயரால் பொய்ச்சத்தியம் செய்து கடவுளுக்கு இழுக்கு ஏற்படுத்தாமல் இருங்கள்! என்று அறிவுறுத்துவதுடன் தீய வழியில் செயல்படுபவன் அவ்வழியாலே அழிவான் என்றும் குறிப்பிடுகிறது. இதனை,

''களவு செய்யாமலும் பொய் சொல்லாமலும் ஒருவரை ஒருவர் வஞ்சியாமலும் என் பெயரால் பொய் ஆணையிட்டு உங்கள் கடவுளின் பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தாமலும் இருங்கள்''

( லேவி: 19: 11 )

உன் நிலத்தின் எல்லையைத் தள்ளித் தள்ளி திக்கற்றவர்களின் நிலத்தை எடுத்துக் கொள்ள முயலாதே ( நீதி: 23: 10 )

என வரும் வசனங்கள் எடுத்துரைத்து நிற்கின்றன.

திருட்டு எண்ணம் தோன்றுவதற்கு வறுமை, பசி என்பதனைக் காரணமாகச் சுட்டும் திருவிவிலியம் அதற்காகத் திருடுவதனை நியாயப்படுத்தவில்லை. திருடுபவர் இம்மையில் தண்டனையையும் மறுமையில் என்றும் வேதனையுள்ள நரகத்தைச் சேர நேரிடும் என்று குறிப்பிடுகிறது. இத்தகைய திருவிவிலியக் கோட்பாடு திருக்குறள் போன்ற அறநூல்கள் குறித்து நிற்கும் 'கள்ளாமை' என்னும் அறத்தினோடு ஒத்து அமைவதனைக் காணமுடிகிறது.

ஒழுக்கம் உடைய சான்றோர்க்கு, ஓருயிரைக் கொல்லுதலும், திருடுதலும், கொடிய காம வாழ்க்கையும் உண்டாகாது எனக் குறிக்கும் ஏலாதி.

''நிலையளவி னின்ற நெடியவர்தா நேரா

கொலைகளவு காமத்தீ வாழ்க்கை'' (ஏலாதி: 29)

நான்மணிக்கடிகை என்னும் அற இலக்கியம்,

''கள்ளாமை வேண்டும் கடிய வருதலால்'' (நான்: 88)

என வலியுறுத்தி நிற்கின்றது. திருவிவிலியம் இத்தகைய தீய வாழ்க்கையை உடையவர்களின் தன்மையையும் அவர்களின் முடிவினையும், நல்லவர்கள் நல்லனவே போற்றும் தன்மை உடையவராய் அமைந்திருப்பதனையும் எடுத்துரைக்கின்றது.

பழைய ஏற்பாட்டில் ஆமான் என்பவனும் (யோசு:7:1-20) புதிய ஏற்பாட்டில் அனனியா சப்பிராள் என்பவர்களும் (திருத்:5:1-26) பணத்தைத் திருடி பின்னர் அதை மறைத்தப் பொய் கூறியதால் இறைமக்கள் முன் நிற்க முடியாமல் இறந்து போகின்றனர் எனத் தீயவர்களின் தன்மையையும் முடிவினையும் காட்டுகின்றது.

**வெகுளாமை:**

உலகில் பெரும்பான்மையான மனிதர்களிடத்துக் காணப்படும் குணம் வெகுளி என்பதாகும். இது மனிதர்களுக்கு இடையேயான அன்பினைக் கெடுத்து பகையினை வளரச் செய்கிறது. இதனால் ஒவ்வொரு தனிமனிதனையும் உறுப்பினராய்க் கொண்ட சமூகம் அமைதியின்மையைப் பெறுதற்கு ஏதுவாய் அமைகின்றது. இத்தகைய வெகுளி தோன்றுதற்கு

காரணியாய் அமைவது பிறர்மாட்டு நாம் கொள்ளும் மிகுதியான விருப்பத்தின் காரணமாய் அமைந்த எதிர்பார்ப்பு, ஏமாற்றமாய் அமையும் சூழலே என்பது வெளிப்போந்து நிற்கும். இத்தகைய வெகுளியானது யார்மாட்டு செலுத்தப்படுகிறதோ அவரை மட்டும் பாதிப்பதில்லை. செலுத்துபவரையும் சேர்த்தே பாதிக்கின்றது. எனவே யார் மாட்டும் நன்மை தராத வெகுளியை வெல்ல வேண்டும் என்று அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்துகின்றன.

பல சுடரை உடைய பேரெரி வந்து சேர்ந்ததைப் போன்று இன்னாதவற்றை ஒருவன் செய்தாலும் அவனை வெகுளாமல் ஒருவன் இருப்பானாயின் அது அத்தகையவனுக்கு நன்மையான செயலாகும் எனக் குறிக்கும் திருக்குறள். இதனை,

''இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்

புணரின் வெகுளாமை நன்று'' (குறள்: 308)

என்பதால் அறிய இயலுகின்றது. நான்மணிக்கடிகை ஒன்றைக் கெடுப்பது என்று முடிவு செய்தால் சினத்தைக் கெடுத்து விடுக! என்று அறிவுரை பகர்கின்றது.இதனை

''கெடுப்பின் வெகுளி கெடுத்து விடல்'' (நான்: 82)

என்ற அடியானது எடுத்துரைக்கின்றது. நாலடியார் நல்லோர் தன்மையையும் தீயோர் தன்மையையும் விரித்துரைக்கின்றது. தனக்கு இணையில்லாதவர்கள் தம்மை இணையாகக் கருதிக்கொண்டு, தகைமையல்லாத சொற்களைச் சொன்னால், சிறந்தவர்கள் மனம் புழுங்கிச் சினந்து கொள்ள மாட்டார்கள். ஆனால் கீழ்மக்களோ ஆராய்ந்து அத்தகைமையற்ற சொல்லை மனத்தாற் பலகாலும் நினைத்து, ஊரிலுள்ளவர்கள் கேட்கும்படி ஆங்காங்கே சொல்லித் திரிந்து,அதனால் மேன்மேலும் பெருகுங் கோபத்தினால் உடம்பு துடித்து அருகிலிருக்குந் தூணில் மோதிக் கொள்வார்கள் என்கிறது. இதனை உணர்த்தும் பாடல்,

''நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்

வேர்த்து வெகுளார் விழுமியோர் - ஓர்த்தனை

உள்ளத்தான் உள்ளி உரைத்துராய் ஊர்கேட்பத்

துள்ளித்தூண் முட்டுமாம் கீழ்.'' (நாலடி:64)

என்பதாகும். தமிழ் அறநூல்கள் விரித்துரைக்கும் வெகுளாமை என்னும் கருத்தினை திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றது. இதனை,

‘‘இப்பொழுது நீங்கள் சினம், சீற்றம் தீமை அனைத்தையும் அகற்றி விடுங்கள்.பழிப்புரை, வெட்கக்கேடான பேச்சு ஆகிய எதுவும் உங்கள் வாயிலிருந்து வரக்கூடாது’’ (கொலோ: 30: 3)

என்ற திருவிவிலிய வசனத்தின்மூலம் அறிய முடிகின்றது. ஒருவனுடைய வெகுளியானது தன்னைவிட வலியார்மேல் வருமானால் அது அவருக்கே தீதாகும். மற்றைய எளியோர் மேல் வருமானால் அதனின் தீயன பிற இல்லை என்கிறார் வள்ளுவர். எனவே எந்நிலையிலும் சினம் கொள்ளாது இருத்தலே சிறப்புடையதாம் எனத் திருக்குறள் வலியுறுத்துவதனை,

‘‘செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்

இல்அதனின் தீய பிற’’. (குறள்:302)

என்ற குறள் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் இத்தகைய சிந்தனையை வலியுறுத்தி நிற்பதற்கு,

‘‘ஆண்டவர் முன் அமைதியுடன் காத்திரு, தம் வழியில் வெற்றி காண்போரையும் சூழ்ச்சிகள் செய்வோரையும் பார்த்து எரிச்சல் கொள்ளாதே, வெஞ்சினம் கொள்ளாதே’’ (திரு:37:7-8) என்ற வசனம் அரணாகும். மேலும் திருவிவிலியம் அரசனின் கோபத்தினை மரணதூதனுக்கும் சிங்கத்தின் கர்ச்சிப்புக்கும் ஒத்ததாய்க் குறிப்பிடுகின்றது (நீதி: 16:14)

சினத்தைத் தன் ஆற்றல் உணர்த்துவதற்குரிய குணம் என்று கொண்டவன் அவ்வாற்றலை இழத்தல் நிலத்தின்கண் அறைந்த அவனின் கை அந்நிலத்தையுறுத்தல் தப்பாதவாறு போலத் தப்பாது, எனவே சினத்தினைப் பொருளெனக் கொள்ளல் வேண்டாம் என்பார் வள்ளுவர்.

‘‘சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.’’ (குறள்:307)

திருவிவிலியம் வெகுளி, சினம் என்னும் பொருள்கள் இரண்டும் விரும்பத்தக்கவை அல்ல. அவற்றைப் பொருளென நல்லோர் பற்றார் எனவும், சினமுற்ற காலத்தும் பாவம் செய்யாதீர்கள் என்றும் குறிப்பிடுகின்றது. இதனை,

‘‘வெகுளி சினம் இரண்டும் வெறுப்பிற்குரியவை. பாவிகள் இவற்றைப் பற்றிக் கொள்கிறார்கள்’’

(சீரா: 27: 30 )

‘‘சினமுற்றாலும் பாவம் செய்யாதிருங்கள். பொழுது காய்வதற்குள் உங்கள் சினம் தணியட்டும்’’

(எபே: 4: 27 )

என வரும் வசனங்கள் விளக்குகின்றன.

ஒருவன் தன்னைத்தற்காத்துக் கொள்ள விருப்பம் உடையவனாகில் முதலில் தன் சினத்தினைக் காத்துக்கொள்ளல் வேண்டும். அவ்வாறு காவாது அமைவான் ஆகில் அது சினம் கொண்டவனையே சேர்த்து அழிக்கும். மேலும் அச்சினம் கொண்டவருடன் சேர்ந்து அமைந்தவர்கள் என்னும் தன்மையால் அவன் சார்ந்த இனத்தையும் சுடும் என்பது வள்ளுவரின் கருத்து ஆகும். வள்ளுவர் ‘சினமென்னும் நெருப்பு’ என்ற விதந்து உரைத்தமையால் உலகத்து நெருப்பு, தான் சேர்ந்த இடத்தையே சுடும். ஆனால் இந்நெருப்புச் சேராத இடத்தையும் சுடும் என்னும் கருத்து வெளிப்போந்து நிற்கிறது. இதனை,

‘‘தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்

தன்னையே கொல்லும் சினம்.’’ (குறள்: 305)

‘‘சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்

ஏமப் புணையைச் சுடும்.’’ (குறள்: 306)

என்ற திருக்குறள்கள் வெளிப்படுத்தி நிற்கும். திருவிவிலியமும் இத்தகைய சிந்தனைகளையே உணர்த்துகின்றது. இதனை,

‘‘விறகின் தன்மைக்கு ஏற்ப அது பற்றியெரியும். சினம் பூசலின் தன்னைக்கு ஏற்ப பற்றியெரியும். மனிதரின் வலிமையைப் பொறுத்து அவர்களின் சீற்றம் அமையும். அவர்களின் செல்வத்தைப் பொறுத்து அவர்களது சினம் பெருகும்’’ (சீரா: 28: 10)

என்ற வசனம் எடுத்துரைக்கின்றது. முகத்தில் தோன்றும் மலர்ச்சியையும் அகத்தில் தோன்றும் மகிழ்ச்சியையும் அழிக்கின்ற சினத்தைக் காட்டிலும் வேறு பகை ஒருவனுக்கு இல்லை என்கிறார் திருவள்ளுவர். ஒருவனுக்கு மலர்ச்சியும் மகிழ்ச்சியும் கெடுவதால் மனித உறவும் பாதிக்கப்படும். எனவே சினம் கொள்ளற்க! என்பது வள்ளுவம். மேலும் சினம் கொள்பவர் துறவி ஆயின் புறப்பகையினை வென்றாலும் உட்பகையாய் நின்று அருள் முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித் துன்பமும் எய்துவித்தலான், அவர்க்குச் சினத்தின் மிக்க பகை இல்லை என்பதும் வெளிப்பட்டு நிற்கும்.இத்தகைய கருத்தினை முன்மொழியும் திருக்குறள்,

‘‘நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்

பகையும் உளவோ பிற.’’ (குறள்: 304)

என்பதாகும். திருவிவிலியமும் மனத்தில் ஏற்படும் சீற்றம் முதலாய குணங்களை வெல்லவேண்டும் என்று வலியுறுத்துகின்றது. இதனை,

‘‘மனக்கசப்பு, சீற்றம், கூச்சல், பழிச்சொல் எல்லாவற்றையும் தீமை அனைத்தையும் உங்களை விட்டு நீக்குங்கள்’’ (எபே:4:31) என்பதனால் அறியமுடிகிறது.

**வாய்மை:**

மனிதனின் உயர்ந்த செயல்பாடுகளுக்கு எல்லாம் மிகப்பெரும் அடித்தளமாய் அமைவது வாய்மையே ஆகும். இதனால் இவ் உலகின்கண் தோற்றம் பெற்றுள்ள அனைத்துச் அறநூல்களும் வாய்மையைப் பெரிதும் வலியுறுத்துகின்றன. வாய்மையில்லாதவனின் வழிபாடு எந்தவிதப் பயனையும் தந்து விடாது என்பது சமயங்கள் வலியுறுத்தும் அடிப்படை மாண்பு ஆகும். இத்தகைய வாய்மை எனப்படுவது மூன்று வகையினைத் தன்னுள் கொண்டதாய் அமையும். அவை முறையே ‘‘வாய்மை, உண்மை, மெய்மை என்பனவாகும்.வாயின் தன்மை வாய்மை, உள்ளத்தின் தன்மை உண்மை, மெய்யின் செயலின் தூய்மை மெய்மை’’[43] என்பதாம்.

‘‘உள்ளத்திலுள்ள உண்மையை வாயால் கூறவேண்டும். அதுவே வாய்மை எனப்படும். உள்ளத்தில் உள்ளதற்கும் வாயால் கூறுவதற்கும் பொருந்தியவாறே செயலிலும் ஒழுக வேண்டும். அதுவே மெய்மை எனப்படும். உள்ளத்தில் உண்மை வாயில் வாய்மை, செயலில் மெய்மை என வாழும் வாழ்வே ஒருவருக்கும் தீங்கில்லாமல் எல்லாரிடத்தும் அருள்கொண்டு வாழும் வாழ்க்கை ஆகும். ஆகையால் வாய்மை சிறந்த அறமாகும்’’[44] என்ற மு.வ. அவர்களின் கருத்து ஈண்டு சுட்டுதற்குரித்தாம்.

இதன்வழி, வாய்மை என்பது புறத்தே அமைவது என்பதும் உண்மை என்பது அகத்தே அமைவது என்பதும் மெய்மை என்பது அகத்திலிருந்து புறத்தே வெளிப்படுவது என்பதும் பெறப்படும். எனவே ஒரு மனிதனின் வாழ்வில் இம்மூன்று தன்மைகளும் அமைந்திருத்தல் இன்றியமையாததாகும். ஒருவன் தன் மனத்தினோடு பொருந்திய வாய்மையைச் சொல்வானாகில் மிக உயர்ந்தவனாய்ப் போற்றப்படுவான். மேலும் அவனுடைய சிறப்பானது உலகத்து இன்பங்களையெல்லாம் வெறுத்துத் தன் ஐம்புலன்களையும் அடக்கி தவம் செய்யும் தவமுடையவரின் பெருமையினை விடவும் தன்னிடத்து உள்ளவற்றைப் பிறருக்கு ஈந்து அதனாலய பெருமையினை அடையும் தவமுடையவரின் பெருமையினை விடவும் உயர்ந்து நிற்கும். தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் இத்தகைய தன்மையையே பெரிதும் வலியுறுத்துகின்றன. திருவள்ளுவர் வாய்மை எனப்படுவது யாது? என்பதற்குத் தெளிவான விளக்கம் அளிக்கின்றார்,

‘‘வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்

தீமை இலாத சொலல்'' (குறள்: 291)

'வாய்மை' என்னும் சொல்லிற்குப் பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல் என்பது வள்ளுவர் தரும் வரையறை ஆகும். மேலும் வாய்மையினை வலியுறுத்த முற்படும் வள்ளுவர் ஒருவன் பிறர் அறியவில்லை என்பதற்காகப் பொய் கூறுதல் என்பது கூடாது, ஏனெனில் அவன் உரைக்கும் பொய் பிறர் அறியார் ஆயினும் அவன் மனத்திற்குத் தெரியும். அத்தகைய மனமே மிகப்பெரும் சான்றாய் நின்று அவனைப் பழிவாங்கும் என்றும் விளக்கியுரைக்கின்றார். இதனை

''தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்

தன்நெஞ்சே தன்னைச் சுடும்.'' (குறள்: 293)

என்பதனால் அறிய முடிகின்றது. பொய்யுரைத்தானின் நெஞ்சமானது மிகப்பெரும் சான்றாய் நின்று அவனை வருத்தும் என்பதனை,

''கண்டவர் இல்லென உலகத்துள் உணராதார் -

தங்காது தகைவின்றித் தாம் செய்யும் வினைகளுள் -

நெஞ்சு அறிந்த கொடியவை மறைப்பவும் மறையாவாம் -

நெஞ்சத்திற் குறுகிய கரி இல்லை ஆகலின்''[45]

என்ற கலித்தொகையின் அடிகளும் உணர்த்தி நிற்கின்றன. மேலும் திருவள்ளுவர் உள்ளத்தால் பொய்யாது வாழ்பவன் அடையும் உயர்நிலையினையும் எடுத்துரைப்பார். உள்ளத்தால் எவனொருவன் பொய்யாது ஒழுகுகின்றானோ அவன் இந்த உலகத்து உள்ள உள்ளங்களில் எல்லாம் உயர்ந்து நிற்பான் என்பது அவர் தரும் விளக்கம் ஆகும்.இத்தகைய அறிவுறுத்தலைத் தரும் திருக்குறள்

''உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்

உள்ளத்துள் எல்லாம் உளன்''. (குறள்: 294)

என்பதாகும். ஆசாரக்கோவை ஐயம் தீர்ந்த அறிவுடையவர், பொய் பேசுதல், கோட்சொல்லுதல், பிறர் பொருளைக் கைக்கொள்ளுதல், பொறாமை கொள்ளுதல் எனப்பெறும் நான்கினையும், சிந்திக்கமாட்டார்கள். அதனை விடுத்து அச்செயல்களைச் சிந்திப்பாராயின் அவர்களை

இம்மையில் பிச்சையெடுக்கும்படி வறுமையடையச் செய்து, மறுமையில் அருமையான நரகத்திலும் செலுத்திவிடும், தெய்வமும் அழித்துவிடும் என்று குறிப்பிடுகிறது.இதனை,

''பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கும்

ஐயந்தீர் காட்சியார் சிந்தியார் (ஆசார: 38)

என்ற பாடலானது விளக்கியுரைக்கும். திருவிவிலியம் வாய்மையால் விளையும் நன்மையினை,

''அன்பும் வாய்மையும் தீவினையைப் போக்கும்'' (நீதி:16:6)

எனக் குறிப்பிடுகின்றது. ஒருவர் தம்மால் கொடுக்க இயலாத ஒரு பொருளை இரப்போர்க்கு இல்லை என்று கூறிவிடுதல் பழியாகாது. அஃது உலகத்தின் இயற்கையேயாகும். ஆனால் உதவுபவர் போலக் கூறிக் காலம் நீட்டித்துப் பின் பொய்த்துவிடுதல் என்பது ஒருவர் செய்த நன்றியை மறந்தாரது குற்றத்தை ஒப்பதாய்த் தீமையைத் தந்துவிடும் என்பது நாலடியார் கூறும் அறவுரையாகும். இதனை,

''இசையா ஒருபொருள் இல்லென்றல் யார்க்கும்

வசையன்று வையத் தியற்கை - நசையழுங்க

நின்றோடிப் பொய்த்தல் நிரைதொடீஇ! செய்ந்நன்றி

கொன்றாரின் குற்ற முடைத்து'' (நாலடி:111)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் மனிதர்கள் தங்களால் இயன்றதை முடியும் எனவும் இயலாததை இல்லையென்றும் உரைத்து விடுங்கள், பொய்யுரைக்காதீர்கள் என வலியுறுத்தி உரைப்பதனை.

''ஆகவே நீங்கள் பேசும்போது ஆம் என்றால் ஆம் எனவும் இல்லை என்றால் இல்லை எனவும் சொல்லுங்கள். இதைவிட மிகுதியாகச் சொல்வது எதுவும் தீயோனிடமிருந்து வருகிறது:''

(மத்: 5: 37 )

என்னும் வசனமானது வெளிப்படுத்திக் காட்டுகின்றது. மறந்தும் பொய் உரைக்கும் வாயானது இம்மையின்கண் வந்தமையும் நலன்களை எல்லாம் அழித்து விடும். நரகத்து ஆழ்த்திவிடும். மலர்மேல் வாசம் செய்யும் திருமகளை நீக்கிவிடும் என்று குறிப்பிடுகிறது சிறுபஞ்சமூலம். இதற்கான சான்றாய்,

''இம்மை நலன் அழிக்கும்; எச்சம் குறைபடுக்கும்;

அம்மை அரு நரகத்து ஆழ்விக்கும்; மெய்ம்மை

அம் தேயும்; பின்னும், அலர்மகளை நீக்கும்;-

மறத்தேயும் பொய் உரைக்கும் வாய்.'' (சிறு: – புறத்திரட்டு - 311)

என்ற பாடலானது அமைந்துள்ளது. திருவிவிலியம் தமிழ் அறநூல்கள் குறித்துரைக்கும் கருத்தினையே வெளிப்படுத்தி நிற்கிறது என்பதற்குச் சான்றாதாரமாய்,

''பொய்யை விலக்கி ஒருவரோடு ஒருவர் உண்மை பேசுங்கள்'' (எபே:4: 25 )

என்ற திருவிவிலியத்தின் வசனம் அமைந்துள்ளது.

''மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு

தானஞ்செய் வாரின் தலை'' ( குறள்:295)

என்ற குறட்பாவினுள் அமைந்த மனத்தொடு வாய்மை என்பதற்கு,

''மனத்தொடு பொருந்துதல் - மனத்திற்கு ஏறுதல். புறமாகிய மெய்யால் செய்யும் அவற்றினும் அகமாகிய மனம் மொழிகளால் செய்யும் அது பயனுடைத்து என்பதாம்''[46] என உரை விளக்கம் தரும் பரிமேலழகரின் உரைக்குறிப்பு சுட்டுதற்குரித்தாம். பிறர் தீங்கு கருதி உண்மையும் பேசாதவனாகவும் இகழாதவனாகவும் தனக்குத் தீமை செய்தாரையும் புறத்தில் அவமதித்துப் பேசாதவனாகவும் ஒருவருக்கு நேர்ந்த இடுக்கண்களை ஒழிக்கும் பொருட்டு நடந்த உண்மையைச் சொல்லாதவனாகவும் தன்னிடத்திலுள்ள பொருள்களை வாய் விட்டுச் சொல்லாதவனாகவும் நண்பனிடத்தும் தன் வறுமைத் துன்பத்தைச் சொல்லாதவனாகவும் உள்ள ஒருவன் இந்த உலகத்தைவிட்டு வானுலகிற் கூடியுள்ள தேவர்கட்குத் தலைவனாகிய இந்திரனாவான் என்பதனை,

''பொய்யுரையான் வையான் புறங்கூறான் யாவரையும்

மெய்யுரையா னுள்ளனவும் விட்டுரையான் - எய்யுரையான்

கூந்தன்மயி லன்னாய்! குழீஇயவான் விண்ணோர்க்கு

வேந்தனா மிவ்வுலகம் விட்டு'' (ஏலாதி: 33)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம்,

“என் வார்த்தைகளை நீங்கள் தொடர்ந்து கடைபிடித்து வந்தால் உண்மையில் என் சீடர்களாய் இருப்பீர்கள், உண்மையை அறிந்தவர்களாயும் இருப்பீர்கள், உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கும்.” (யோவா:8:31 - 32)

என வலியுறுத்தி உரைக்கின்றது. இந்நில்லா உலகில் நிலைத்த பேற்றினைத் தரவல்லது புகழே ஆகும். இதனை,

“மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்

தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே; -----

பொய்யாமை அன்ன புகழ் இல்லை எய்யாமை

எல்லா அறமும் தரும்.” [47]

என வரும் புறநானூற்றுப்பாடல் விளக்கியுரைக்கும். தம்மிடம் உள்ள பொருளினைக் பிறருக்கு ஈந்து புகழ் என்னும் பயனைக் கொண்டோர் பலருண்டு. ஆனால் வள்ளுவர் மற்றைய எல்லாப் புகழும் பொய் சொல்லாமையால் அமையும் புகழுக்கு இணையில்லை என்று விரித்துரைப்பார். மேலும் இல்லறத்திற்கான பொருள் ஈட்டல் முதலிய செயல்களாலும் துறவறத்திற்குப் பேண வேண்டிய உண்ணாமை முதலிய செயல்களாலும் தன்னை வருத்திக் கொண்டு பெற வேண்டிய புகழினைப் ‘பொய்யாமை’ என்னும் அறமானது எளிமையாய்த் தானே தரும் ஆதலின் ‘எல்லா அறமும் தரும்’ என்றார். இதனை,

“பொய்யாமை அன்ன புகழ் இல்லை எய்யாமை

எல்லா அறமும் தரும்” (குறள்: 296)

என்ற திருக்குறள் வலியுறுத்தி நிற்கின்றது. மேலும் மனிதன் தனக்குப் புகழ் தருகின்ற எல்லா அறங்களையும் தன் வாழ்நாளில் செய்தல் என்பது இயலாத காரியம். அவ்வாறு செய்யாது ஒழிவானாகில் செய்யாமை என்னும் குறை வந்து சேரும். எனவே அத்தகைய குறைபாட்டினை நீக்கிப் புகழினைப் பெற வேண்டுமாகில் எல்லா அறங்களையும் கொண்டு வந்து தரும் பொய்யாமையைப் பின்பற்றினால் போதும் என்கிறார் வள்ளுவர். இதனை,

“பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற

செய்யாமை செய்யாமை நன்று” (குறள்: 297)

என்ற குறளானது எடுத்துரைக்கின்றது. மேலும் மனிதன் இறத்தல் எளியது, அதற்கு முன் நல்லோன் எனப் பெயர்படைத்தல் அரியது, நல்ல பொருளை விரும்பி அதனையடைதல் எளியது, வாய்மையைத் தனக்குக் காப்பாகக் கொண்டொழுகுவது அரியது, தனக்குத் துணையாவதாகிய பெருந்தவத்திற்குச் செல்வது எளியது, நிட்டை கைகூடும் வரை நிலைத்தல் அரியது, தெளிந்த ஞானியரான விடத்தும் ஐம்புலன்களையும் வென்று அவித்தலை எளிய காரியமாகச் செய்தல் அரியதாகும் என உரைக்கின்றது ஏலாதி. இதன்வழி அரியதாயினும் பொய்யாமை என்பதனைப் போற்றி ஒழுகுதல் வேண்டும் என்பது பெறப்படும். இத்தகைய பாடல்,

''சாவ தெளிதரிது சான்றாண்மை நல்லது

மேவ லெளிதரிது மெய்போற்றல் - ஆவதன்கண்

சேற லெளிது நிலையரிது தெள்ளியராய்

வேற லெளிதரிது சொல்'' (ஏலாதி: 39)

என்பதாகும். திரிகடுகம் ஒருவன் தனக்குச் செய்த நன்றியின் பயனை, அளந்தறியாத, நாணமில்லாதவனும்; சான்றோர் முன் அறநிலையத்தில் பொய்ச் சொல்லை உரைப்பானும் நற்செய்கை இல்லாதவனாய் ஒருவன் அடைக்கலப் பொருளை, கைப்பற்றிக் கொள்பவனும்; ஆகிய இந்த மூவரும், தம் மக்களை இழந்து வருந்தி உயிர் வாழ்வார்.எனவே இவற்றைச் செய்யற்க என்று வலியுறுத்துகின்றது. (திரி: 62)

இவ் உலகின் கண் மனிதரால் பின்பற்றப்படவேண்டியன என வரையறுத்து உரைக்கப்படும் தூய்மை இரண்டு வகைப்பட்டதாகும். அவை முறையே புறத்தூய்மை, மனத்தூய்மை என்பனவாகும். புறத்தினால் அமையும் அழுக்குகளை நீரினால் கழுவித் தூய்மை செய்தல் என்பது எளிதாகும். ஆனால் மனத்தின்கண் அமையும் அழுக்குகளைத் தூய்மை செய்தல் என்பது அவ்வளவு எளிமை உடைய செயல் அன்று என்பதனை,

''மனம் வெளுக்க வழியில்லை, -- எங்கள் முத்து

மாரியம்மா, எங்கள் முத்து மாரி!!'' [48]

என வரும் பாரதியாரின் பாட்டு வலியுறுத்தி நிற்கும். ஆனால் வள்ளுவர் மனத்தினைத் தூய்மை செய்யும் ஆற்றல் வாய்மைக்கே உண்டு என்கிறார். மேலும் ஒருவனின் மனத்தூய்மை அவனது வாய்மையால் காணப்படும் என்றும் குறிப்பிடுகிறார்.

''புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை

வாய்மையால் காணப் படும்'' (குறள்: 298)

என்னும் குறட்கருத்து ஈண்டு ஒப்புநோக்கத்தக்கதாகும். இதனைத் திருவிவிலியம்,

வெளிவேடக்காரரே! ஐயோ உங்களுக்குக் கேடு ஏனெனில் நீங்கள் கிண்ணத்தையும் தட்டையும் வெளிப்புறத்தில் தூய்மை ஆக்குகிறீர்கள். ஆனால் அதன் உட்புறத்தையோ கொள்ளைப் பொருள்களால் நிரப்புகிறீர்கள் (மத் 23: 25 – 28) எனக் குறிப்பிடுகிறது.

வாய்மை இத்தகைய சிறப்புடைய தன்மையை உடையதாய் அமைந்தமையாலே சான்றோர்கள் அதனை உள்ளத்துள் உண்மை என்னும் ஒளியை உண்டாக்கும் விளக்கு என்று போற்றினர். வள்ளுவர் புறத்து இருள் கடியும் உலகத்தார் விளக்குகள் எல்லாம் விளக்கு ஆகா, சான்றோர் என அமைந்தார்க்கு விளக்காவது மனத்து இருள் கடியும் பொய்யாமை ஆகிய விளக்கே ஆகும் எனக் குறிப்பார். (குறள்: 299) இதற்கு உரை விளக்கம் தரும் பரிமேழலகர்,

''உலகத்தார் விளக்காவன: ஞாயிறு, திங்கள், தீ என்பன. இவற்றிற்குப் போகாத இருள் போகலின் பொய்யா விளக்கே விளக்கு என்றார். அவ்விருளாவது அறியாமை. பொய்யாத விளக்கு என்பது குறைந்து நின்றது. பொய் கூறாமையாகிய விளக்கு என்றவாறு. இனி இதற்குக் 'கல்வி முதலியவற்றான் வரும் விளக்கம் அல்ல: அமைந்தார்க்கு விளக்கமாவது பொய்யாமையான் வரும் விளக்கமே என்று உரைப்பாரும் உளர்'''[49] என விதந்து உரைப்பார். திருக்குறளாலும் பரிமேழலகர் உரைக்குறிப்பாலும் வாய்மையின் அருமைப்பாட்டினை அறிய முடிகின்றது. திரிகடுகம், வாய்மையைப் போற்றாது பொய் கூறி ஒழுகுபவன், தான் கொள்ளுதற்குரிய பொருளை வெ.்.கிக் குடிகளை வருத்துகின்ற வேந்தன், ஒருவனுக்கு மனையாளாய் இருந்து அவன் சொல், மனையென்னும் இரண்டின் எல்லையைக் கடப்பவள் ஆகிய மூவரும் விரைந்து மழையைக் குறைக்கின்ற கோளாவார்கள் எனக் குறிக்கிறது. இதற்கு,

''கொள்பொருள் வெ.்.கிக் குடியலைக்கும் வேந்தனும்
உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்
வல்லே மழையருக்குங் கோள்'' (திரி: 50)

என்ற பாடல் அரணாகும். வாய்மை உடைமை என்னும் பண்பானது செல்வமுடைமையைக் காட்டிலும், சிறந்தது என்கிறது முதுமொழிக்காஞ்சி,

''வண்மையிற் சிறந்தன்று வாய்மை யுடைமை'' (முதுமொழி: 4)

தமிழ் அறஇலக்கியங்கள் மனிதன் பின்பற்ற வேண்டிய அறவிழுமியங்களுள் வாய்மை என்பதனை முதலிடத்து வைத்துப் போற்றுவதைப் போன்றே திருவிவிலியமும்,

''ஒருவரோடு ஒருவர் பொய் பேசாதீர்கள். ஏனெனில் நீங்கள் பழைய மனித இயல்பையும் அதற்குரிய செயலையும் களைந்து விட்டு புதிய மனித இயல்பை அணிந்திருக்கிறீர்கள்''

(கொலோ: 3: 9) எனக் குறித்துப் போற்றுகின்றது.

**ஒழுக்கமுடைமை**:

மனித சமூகம் பின்பற்ற வேண்டிய அறங்கள் யாவற்றிலும் தலையாயது ஒழுக்கம் என்பதாகும். இத்தகைய ஒழுக்கம் இன்றி வேறு அனைத்து அறங்களைப் பின்பற்றினாலும் அதனால் ஒரு பயனும் விளையாது. எனவேதான் ஒழுக்கம் தலையாய அறனாய்ப் போற்றப்படுகின்றது. ''நற்குடியில் பிறந்து நல்லுறவுகளை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்கிற கருத்துடையவர்கள் தங்களுடைய உடம்பு அழியும் அளவிற்குத் துன்பம் வந்தபோதும் தமது உயரிய கொள்கையைக் கைவிடமாட்டார்கள்'' [50] எனக் குறிப்பார் சற்குணவதி.

ஒழுக்கத்தினால் உயர்வு வரும் ஆதலால் ஒழுக்கம் உயிரினும் உயர்ந்தது என்பது வள்ளுவரின் கூற்றாகும். 'உயிர் உலகில் உள்ள எல்லாப் பொருளினும் சிறந்தது ஆயினும், ஒழுக்கம் போல விழுப்பம் தாராமையின் உயிரினும் ஓம்பப்படும்' என்பார் வள்ளுவர்.

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்

உயிரினும் ஓம்பப் படும்'' (குறள்: 131)

நல்லொழுக்கம் உடையார் செல்வரைப்போல் நன்மதிப்பும், வாழ்க்கையில் இடுக்கணின்மையும், உயர்வும் புகழுமான இம்மை நலங்களையும் பெற்றிடுதல் உறுதியாதலின் அதனைத் 'திருவொக்கும்' எனக்குறிக்கும் நான்மணிக்கடிகை. இதனை,

''திருவொக்குந் தீதில் ஒழுக்கம் பெரிய

அறனொக்கும் ஆற்றின் ஒழுகல்'' (நான்: 8)

என்ற பாடல் விளக்கி நிற்கும்.மேலும் இந்நூல் தகுதியுடையோர் எத்தகைய சூழல் வந்தமைந்தாலும் தனக்குத் தகுதியுடைய ஒழுக்கங்களைத் தள்ளாது பின்பற்றுதல் வேண்டும் என்றும் வலியுறுத்துகின்றது.நாலடியார் கடமையொழுங்கை அறிந்தொழுகுங்கள்; நமன் வருதற்கு

அஞ்சி ஒழுகுங்கள்; பிறர் கூறும் வன்சொற்களைப் பொறுத்துக் கொள்ளுங்கள்; வஞ்சித்தொழுகுதலைக் காத்துக் கொள்ளுங்கள். செய்கை தீயவரது நட்பை வெறுத்து ஒதுக்குங்கள். எக்காலத்திலும் பெரியார் வாயிலிருந்து வரும் நன்மொழிகளை ஏற்று ஒழுகுங்கள் என ஒழுக்க முறைகளின் தன்மைகளை எடுத்துரைத்து அதன்வழி ஒழுக வலியுறுத்துகின்றது.இதனை விளக்கும் பாடல்,

''அறிமின் அறநெறி; அஞ்சுமின் கூற்றம்:

பொறுமின் பிறர்கடுஞ்சொல்; போற்றுமின் வஞ்சம்;

வெறுமின் வினைதீயார் கேண்மை; எஞ்ஞான்றும்

பெறுமின் பெரியார்வாய்ச் சொல்'' (நாலடி: 172)

என்பதாகும். திருவிவிலியமும் மனிதர்கள் இவ்வுலக வாழ்க்கையைத் துய்க்கும்பொழுது அறநெறியைக் கடைப்பிடித்தல் வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. சபை உரையாளர்,

''இளையோரே, இளமைப் பருவம் மகிழ்ச்சியோடிருப்பதற்கே. இளமையின் நாள்களில் உள்ளக் களிப்புடனிருங்கள். மனம் விரும்புவதைச் செய்யுங்கள்; கண்களின் நாட்டத்தை நிறைவேற்றுங்கள். ஆனால், நீங்கள் செய்கிற ஒவ்வொரு செயலுக்கும் உரிய தீர்ப்பைக் கடவுள் வழங்குவார் என்பதை மறவாதீர்கள். மனக் கவலையை ஒழியுங்கள். உடலுக்கு ஊறு வராதபடி காத்துக் கொள்ளுங்கள்'' (சபை: 11:9-10). எனக் கூறி மாந்தர்களை ஆற்றுப்படுத்துகின்றார்.

இவ்வாறு வரையறுக்கப்படும் ஒழுக்கம் பலதிறப்பட்டதாய் அமையும். அவைமுறையே தான் பிறந்த குடும்பத்திற்குரிய ஒழுக்கம், இனத்திற்குரிய ஒழுக்கம், நாட்டிற்கு உரிய ஒழுக்கம், சமயத்திற்கு உரிய ஒழுக்கம் என்பனவாகும். இந்நிலையில் ஒவ்வொருவரும் தான் பிறந்த குலத்திற்கு உரிய ஒழுக்க முறையினைப் பெற்றிருப்பர். எந்த நிலையிலும் அதற்கு இழுக்கு வந்தமையாவண்ணம் ஒழுக்கத்தைப் பேணல் வேண்டும்.அவ்வாறு பேணாதவர் பிறந்த குலம் உயர்ந்ததாய் அமையினும் அதனால் பயன் வந்தமையாது, இழிந்த பிறப்பாய் மாறி அமைந்து விடும் எனக் குறிப்பார் வள்ளுவர்.எனவே ஒருவன் கல்வியால் வந்தமையும் தன்மைகளை மறந்தான் ஆயினும் அவனை ஏற்றுக் கொள்ளலாம். ஏனெனில் பின்னால் அவற்றை நினைவுறுத்திப் பயன்பெறல் என்பது எளிதாகும். ஆனால் தன் ஒழுக்கத்தின் இருந்து பிறழ்வான் ஆயின் அவனை எக்காரணம் கொண்டு ஏற்றுக் கொள்ளல் இயலாது என்பதனை,

''ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்

இழிந்த பிறப்பாய் விடும்'' (குறள்: 133)

“மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்” (குறள்:134)

என்ற திருக்குறள்கள் எடுத்துரைக்கும். முதுமொழிக்காஞ்சி, ஆர்கலி உலகத்து மனிதர் எல்லார்க்கும், ஒழுக்கமுடைமை என்பது நூல்களைக் கற்றலைக் காட்டிலும் சிறந்ததாம் எனக் குறிப்பதனை,

“ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்

ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.” (முதுமொழி: 1:1 )

என்ற பாடலானது முன்மொழிகின்றது. ஒழுக்கத்தினை ஒருவர் தன் வாழ்வின் உயரிய கூறாய்க் கொண்டு ஒழுகுவார் ஆயின் மேன்மையினை எய்துவர். அதனை விடுத்து ஒழுக்கத்தினைக் கொண்டொழுகாராயின் மிகப்பெரிய பழியை எய்துவர் என்பதனைத் திருவள்ளுவர்,

“ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்

எய்துவர் எய்தாப் பழி” (குறள்: 137)

எனக் குறிப்பார்.

திருக்குறளின் இத்தகைய சிந்தனையைத் திருவிவிலியம்,

“பழிச்சொல்லையும் இழிவையும் என்னிடமிருந்து அகற்றியருளும். ஏனெனில் உம் ஒழுங்குமுறைகளை நான் கடைபிடித்துள்ளேன்” (திரு: 119:22)

“அவர்தந்த ஒழுங்குமுறைகளைக் கடைபிடிப்போர் பெறுபெற்றோர்” திரு: 119:2)

எனச் சுட்டியுரைக்கின்றது.

நூல் வழக்கிலும் உலக வழக்கிலும் தெரிந்து கொள்ள வேண்டுவன தெரிந்து கொண்டு, அடக்கமுடையவராய், அஞ்சத்தக்க நிலைகளுக்கு அஞ்சித் தமக்குத் தகுதியாகத் தாமே பொருந்தும் செயல்களை உலகம் பயன்கொண்டு மகிழும்படி செய்து, மகிழ்ந்து வாழ்க்கை நடத்தும் ஒழுக்கமுடையார் எந்தக் காலத்திலும் துன்பமடைந்து உயிர்வாழ்வது இல்லை என ஒழுக்கத்தின் மேன்மையை உரைக்கும் நாலடியார் பாடல்,

“அறிவ தறிந்தடங்கி அஞ்சுவ தஞ்சி

உறுவ துலகுவப்பச் செய்து - பெறுவதனால்

இன்புற்று வாழும் இயல்பினார் எஞ்ஞான்றும்

துன்புற்று வாழ்தல் அரிது'' (நாலடி: 74)

என்பதாய் அமையும். மேலும் ஆசாரக்கோவை இத்தகைய சிறந்த ஒழுக்கமுடையார் செய்யும் செயல்களை எடுத்துரைக்கின்றது, விருந்தினரும் மிக மூத்தோரும் பசுக்களும் பிள்ளைகளும் என்று சொல்லப்பட்ட இவர்கட்கு உணவு கொடுத்தல்லது நல்லொழுக்கத்தினின்றும் பிழையாதவர் உண்ணார் என்பது அந்நூல் குறிக்கும் செய்தியாகும்.

''விருந்தினர் மூத்தோர் பசு சிறை பிள்ளை

இவர்க்கூண் கொடுத்தல்லா லுண்ணாரே யென்றும்

ஒழுக்கம் பிழையா தவர்'' (ஆசார: 21)

திருவிவிலியமும் ஒழுக்கமுடையவரின் சொல்லும் செயலுமே உயர்ந்ததாய் அமைய வேண்டும் என்று குறிப்பிடுகிறது. இதனை,

''உங்கள் வலக்கண் உங்களைப் பாவத்தில் விழச்செய்தால் அதைப் பிடுங்கி எறிந்து விடுங்கள்.'' (மத்:5:29) என்ற வசனங்கள் விளக்கியுரைக்கும். ஒருவன் தன்னை ஈன்றவளின் பசியைக் கண்டு வருந்தும் நிலையை அடைந்தாலும் சான்றோர் பழிப்பதற்குக் காரணமாகிய இழிவுற்ற செயல்களைச் செய்தல் கூடாது எனத் திருக்குறள் வலியுறுத்துவதற்கு,

''ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க

சான்றோர் பழிக்கும் வினை'' (குறள்: 656)

என்ற குறள் சான்றாகும். திருவிவிலியமும் நல்லொழுக்கத்தின் பிறிதாகிய தீயொழுக்கத்தினைப் பெரிதும் பழிக்கின்றது. திருட்டு எண்ணம் தோன்றுவதற்கு வறுமை, பசி என்பதனைக் காரணமாகச் சுட்டும் திருவிவிலியம் அதற்காகத் திருடுவதனை நியாயப்படுத்தவில்லை. திருடுபவர் இம்மையில் தண்டனையையும் மறுமையில் நிலையான வேதனையுள்ள இடத்தினையும் சேர நேரிடும் என்று குறிப்பிடுகிறது, இதனை,

''திருடுகிறவன் இனித் திருடாமல் இருக்கட்டும். மாறாக தேவையில் உழல்வோருக்குப் பகிர்ந்து கொடுக்கத் தங்கள் பொருள் இருக்கும் வகையில் தங்கள் கைகளால் நேர்மையோடு பாடுபட்டு உழைக்கட்டும். '' (எபே: 4:28)

என்ற வசனம் விளக்கியுரைக்கும். ஒழுக்கத்தினை எதனாலும் அழிவுபடாமல் பேணி வருந்தியும் காத்தல் வேண்டும். ஏனெனில் அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து, அவற்றுள் இருமைக்கும். துணையாவது அவ்வொழுக்கமே ஆகும் என வலியுறுத்தும் வள்ளுவம். திருவள்ளுவரின் இத்தகைய கருத்தினை,

"பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்

தேரினும் அ∴தே துணை" (குறள்: 132)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கின்றது. நான்மணிக்கடிகையும் ஒருவர் தம் உயர்ந்த கொள்கைகளாகிய ஒழுக்கத்திலிருந்து தவறுவாராகில் அது அவருக்கு மட்டுமன்றி அவர் பிறந்த குலத்திற்கே தீதாய் முடிந்து விடும் எனக் குறிக்கிறது.

"-------------------------------------------------நல்லார்

நலந்தீது நாணற்று நிற்பிற் குலந்தீது

கொள்கை யழிந்தக் கடை" ( நான்: 95)

திருக்குறளும், நான்மணிக்கடிகையும் வலியுறுத்தும் இத்தகைய அறமானது,

"மகனே, நீ செய்வது அனைத்திலும் கவனமாய் இரு.

நீ பெற்ற பயிற்சிக்கு ஏற்றவாறு நல்லொழுக்கம் உடையவனாய் இரு.

உனக்குப் பிடிக்காத எதையும் பிறருக்குச் செய்யாதே.

அளவு மீறி மது அருந்தாதே; குடிபோதைப் பழக்கத்துக்கு ஆளாகாதே."

( தோபி: 4:14-18 )

என்ற திருவிவிலியக் கருத்தோடு ஒத்து அமைவதனை அறிய முடிகிறது.

ஒழுக்கம் உடையவர்கள் மறந்தும் தீய சொற்களைத் தம் வாயால் சொல்லமாட்டார்கள். அவ்வாறு சொல்லாது இருத்தலே சிறந்த ஒழுக்கப்பாடாகும் என்பது வள்ளுவம்.

"ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாதே தீய

வழுக்கியும் வாயாற் சொலல்" (குறள்: 139)

.இத்தகைய தீய சொற்கள் எனப்படுவன "பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய் முதலியனவும், வருணத்திற்கு உரிய அல்லனவும் ஆம்."[51] என உரைவிளக்கம் தருவார் பரிமேலழகர்.

மேற்கண்ட திருவள்ளுவரின் கருத்தினோடு,

''தீய நட்பு நல்லொழுக்கத்தைக் கெடுக்கும். அறிவுத் தெளிவுடன் இருங்கள். நேர்மையுடன் நடந்து கொள்ளுங்கள், பாவம் செய்யாதீர்கள்'' (1கொரி:15:33) என்ற திருவிவிலியக் கருத்து ஒத்தமைவதனை அறியமுடிகின்றது.

**பணிவுடைமை:**

தமிழ் அறநூல்கள் ஒவ்வொரு தனிமனிதனிடமும் இருக்கவேண்டிய உடைமைகள் எனக் குறித்துச் சொல்வதில் மிகவும் இன்றியமையாத இடத்தினைப் பெற்றது பணிவுடைமை என்பதாகும்.எனவே தான் இதனைப் பணிவு எனக் குறிக்காது 'பணிவுடைமை' எனக் குறித்தார் திருவள்ளுவர். சமூகத்தில் வாழும் மாந்தர் பலரும் பலவிதமான உயர் மதிப்புகளைப் பெற்றிருப்பர். ஆனால் இத்தகைய உயர் மதிப்பானது அதனை உடையவரிடத்துத் தாம் பிறரினும் மேம்பட்டவர் என்னும் ஆணவத்தை உருவாக்குமாகில் அது அவருக்கு அழிவைத் தேடித்தரும். எனவே அத்தகைய அழியாமைக்கூறு வந்தமையாது காத்துக்கொள்ளுதல் ஒவ்வொரு தனிமனிதருக்கும் இன்றியமையாதது ஆகும். இத்தகைய காப்பானது பணிவுடைமை என்னும் பண்பாலே வந்தமையும். எனவேதான் சான்றோர்கள் பணிவுடைமை என்பதனை மனித இனத்திற்கு வலியுறுத்திச் சென்றனர். தமிழ் அற நூல்களிலும் திருவிவிவிலியத்திலும் இத்தகைய வலியுறுத்தல்கள் மிகுதியும் காணப்படுகின்றன.

பெருமையுடையோர் எந்தக்காலத்திலும் தன்னை முதன்மைப்படுத்திக் கூறும் செருக்கின்றி அடக்கமாய் இருப்பர். ஆனால் சிறுமையுடையோரோ எல்லாக்காலத்தும் தம்மை மெச்சி உயர்வுபடுத்தியே கூறுவர். இதன்வழி, பணிவுடைமை பெரியோர் இயல்பு என்பதும் தன்னை உயர்த்திப் பேசுவது சிறியோர் இயல்பு என்பதும் வெளிப்போந்து நிற்கும். இதனை,

''பணியுமாம் என்றும் பெருமை சிறுமை

அணியுமாம் தன்னை வியந்து'' (குறள்: 978)

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தி நிற்கின்றது. திருவிவிலியத்தில் பணிவுடைமை என்ற உயர்ந்த பண்பானது இறைவனின் திருவுளத்தினை மகிழ்வித்து ஏற்றம் தரும் ஆற்றல் பெற்றது என்றும் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

''இந்தப் சிறுபிள்ளையைப் போலத் தம்மைத் தாழ்த்திக் கொள்பவரே விண்ணரசில் மிகப்பெரியவர்'' (மத்:18:4)

''ஏழையரின் உள்ளத்தோர் பேறுபெற்றோர். ஏனெனில் விண்ணரசு அவர்களுக்குரியது.''

(மத்: 5:3)

என வரும் வசனங்களால் அறிய முடிகின்றது.

பெருமைக் குணமாவது பெருமிதத்திற்கேற்ற சிறப்பிருந்தும் அதை இயல்பெனக் கொண்டு அமைந்திருத்தல் ஆகும். சிறுமைக் குணமாவது ஒரு சிறப்பும் இல்லாதிருந்தும் அதைத் தன் மேல் ஏற்றிக்கொண்டு செருக்கின் எல்லைவரை சென்றுவிடுதல் ஆகும் எனப் பெருமைக்கும் சிறுமைக்கும் இடையிலான வேறுபாட்டினைத் திருக்குறள்,

“பெருமை பெருமிதம் இன்மை சிறுமை

பெருமிதம் ஊர்ந்து விடல்” (குறள்: 979) ,

என விரித்துரைக்கும். திருவிவிலியமும்,

“ஒரு மனிதரின் கீழ்படியாமையால் பலர் பாவிகள் ஆனதுபோல் ஒருவரின் கீழ்ப்படிதலால் பலர் கடவுளுக்கு ஏற்புடையவர்கள் ஆவார்கள்.” (உரோ:5:19)

என இறைவனுக்குக் கீழ்ப்படிதலின் இன்றியமையாமையைக் குறிப்பிடுகிறது. ஒருவன் இறைவனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பது முதன்மையானதாய்த் திருவிவிலியம் உரைப்பதனை இதன்வழி அறியமுடிகிறது.

இந்த உலகின்கண் வாழும் அனைவருக்கும் பணிவுடைமை என்பது சிறந்த பண்பாகும். அவர்களுள் செல்வம் உடையோராய் அமைவர் எனின் அவர்களின் செல்வங்கள் யாவற்றினும் சிறந்ததாய்ப் பணிவுடைமை அமையும் என்பார் வள்ளுவர்.

“எல்லாருக்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்

செல்வர்க்கே செல்வம் தகைத்து” (குறள்: 125)

திருவிவிலியம் திருக்குறளின் இத்தகைய சிந்தனையை,

“மேன்மை அடையத் தாழ்மையே வழி” ( சபை: (14:33)

தம்மைத்தாமே உயர்த்துகிறவர் எவரும் தாழ்த்தப்பெறுவர். தம்மைத்தாமே தாழ்த்துகிறவர் எவரும் உயர்த்தப்பெறுவர். (மத், 23:12)

என எடுத்து மொழிகின்றது.

**புறங்கூறாமை:**

ஒருவர் இல்லாதபோது அவரைப் பற்றி இகழ்ந்து பேசுவது ‘புறங்கூறுதல்’ எனப்படும். தம் கண்முன்னே நேர்மையான உணர்வோடு உண்மையைப் பேசுவது போன்று சொல்லிப் பின்னால் இழித்துப் பேசுதலைப் புறஞ்கூறுதல் என்ற சொல் குறிக்கும். தன்னலம், கோழைத்தனம், நடிப்பு, ஏமாற்று, வஞ்சகம் போன்றவை புறங்கூறலின் கூறுகள் ஆகும். கோள் சொல்லுதல் என்பது புறங்கூறலின் சிறிது வேறுபட்டது என்றாலும் கோள் சொல்லுதலையும் புறங்கூறலில் அடக்குவர். இட்டுக் கட்டிப் புறம் பேசுதலைக் கோள்மூட்டல், மூட்டல், புறணி, பொரணி பேசுதல், குறளை எனவும் கூறுவர். கோள் சொல்லுதலும் புறங்கூறுதலும் நோக்கத்தால் வேறுபட்டன.ஒருவருடைய புகழும் தகுதியும் மறைத்தற்பொருட்டு திரித்துக் கூறுதல் புறங் கூறுதல். கோள் அவருக்குத் தீமை விளைக்கும் நோக்குடன் அவர் செய்த தவறுகளையும் பிறரிடம் கூறுதல். பிறரைக் கடிந்து கூறுவதையும் இன்சொற்களால் கூற வேண்டும் என்று வலியுறுத்தும் வள்ளுவர், பிறர்முன்னிலையில் ஒருவரைப் புகழ்ந்தும் அவர் இல்லாதபோது புறத்தே இகழ்ந்து பேசுவதைப் பெருங்குற்றம் என்கிறார். புறங்கூறுபவர்களைப் புன்சொல் உரைப்பான் எனக் குறள் இகழ்கிறது.

ஒருவரைப் பொய்ம்மையாக வஞ்சக இன்சொல் பேசிப் புகழ்ந்துரைத்து வாழ்வு நடத்தவேண்டிய கட்டாயத்தில் இருக்கும்பொழுதும், தெளிவு, துணிவு, ஆகிய நற்பண்புகள் இல்லாதபோதும் புறங்கூறல் தோன்றும். ஒருவரின் கருத்தை நேரிடையாகப் பேசி மறுக்கும் திறனும் நெஞ்சுரமும் இல்லாமல், அதே நேரம் தன் கருத்தை மிகைப்படுத்த முனையும்போது புறங்கூறுவர். பிறரைத் தாழ்த்தினால் தன்நிலை உயரும் என்ற பிழையான எண்ணத்தினாலும் புறங்கூறத் தோன்றும்.இத்தகைய புறம் பேசுதல் என்பது இருவகைத் தன்மை கொண்டதாய் அமையும். அவை முறையே, கோள் சொல்லுதல், குண்டுனி பேசுதல் என்பதாம். இதனை விளக்கம் செய்ய வரும் வேதநாயகர் ‘‘புறங்கூறுதல் கோள் சொல்லுதலும், குண்டுனி பேசுதலும் என இருவகைப்படும். மேலாளனிடம் பணியாளனைப் பற்றி தீதாகக் கூறுவது கோள். சோம்பேறிகளும் பெண்டிரும் வேலையில்லாத காலத்தில் தீதாகப் பேசி மகிழ்வது குண்டுனி’’ என விளக்கம் செய்வார்.[52] புறநானூறும் இத்தகைய புறங்கூறலை,

‘‘வழிபடுவோரை வல் அறிதீயே:

பிறர்பழி கூறுவோர் மொழி தேறலையே’’[53]

எனக் குறித்து நிற்கும். அறத்தினைப் பற்றி வாயாலும் சொல்லாதவனாய் ஒருவன் தீய செயல்களையே செய்து வந்தாலும் அவன் பிறரைப் பழித்துக் கூறாதவன் என்று சொல்லும்படி வாழ்தல் இனிதாகும் என்பதனைத் திருக்குறள்,

‘‘அறங்கூறான் அல்ல செய்யினும் ஒருவன்

புறங்கூறான் என்றல் இனிது'' (குறள்:181)

என எடுத்துரைக்கின்றது. ஒருவன் எப்பொழுதும் பொய் சொல்லாமல் ஊனுண்ணலும், கள்ளுண்ணலும், ஆகியவற்றை ஒழித்து, தீய செயல்களைச் செய்யாமலும், சிறியாரது கூட்டத்தைச் சேராமலும் பிறரைப் பற்றிப் புறங்கூறாமலும் இருப்பனாயின் அவனுக்கு அறிவு நூல்கள்,வேண்டுவன அல்ல எனக் குறிக்கும் ஏலாதி (ஏலாதி: 14)தமிழ் அறநூல்கள் குறிப்பிடும் புறங்கூறாமை என்னும் அற விழுமியத்தைத் திருவிவிலியமும் மற்றவர்களைக் குற்றவாளியாகக் கூறுபவன் தன்னையே குற்றவாளியாகக் கூறக் காண்பான் என்றும் அவன் பிறரை நடத்துகிறபடியே அவனும் நடத்தப்படுவான் என்றும் குறிப்பிடுகிறது. மேலும் ஒருவன் குறை கூறின் அவனைப் பற்றியும் கூறப்படும் என்று அறிவுறுத்திப் புறங்கூறலை நீக்குமாறு குறிப்பிடுகின்றது. இதனை,

''ஒருவர் நாவினால் எதை விதைக்கிறாரோ அதையே உண்பர், தம் பேச்சின் விளைவை அவர் துய்த்தாக வேண்டும்'' (நீதி: 18: 20) எனக் குறிக்கும் திருவிவிலியம்.

புறங்கூறுவார் தாம் காணும் பிறர் குற்றம்போல் தம்குற்றத்தையுங் காண்பாராயின் நிலைபெற்ற மக்களுயிர்க்கு வரக்கூடிய துன்பமில்லை என்பதான சிந்தனையைத் திருக்குறள்,

''ஏதிலார் குற்றம்போல் தம்குற்றங் காண்கிற்பின்

தீதுண்டோ மன்னும் உயிர்க்கு'' (குறள்: 190)

என எடுத்துரைக்கின்றது. அயலாரையும் பகைவரையுங் குறிக்கும் 'ஏதிலார்' என்னும் சொல், இங்குப் பிறர் என்னும் பொருள்பட நின்றது. பிறர் குற்றம் போல் தம் குற்றமும் காணுதலின் அருமையை நோக்கிக் 'காண்கிற்பின்' என்றார் வள்ளுவர். அவ்வாறு கண்டவழித் தீவினை நிகழாதாதலின் அதனால் துன்பமுமிராது என்பதும் உணர்த்தப்பட்டது. திருவள்ளுவரின் இத்தகைய கருத்தானது,

''உங்கள் கண்ணில் இருக்கும் மரக்கட்டையைப் பார்க்காமல் உங்கள் சகோதரர் அல்லது சகோதரியின் கண்ணில் இருக்கும் துரும்பை நீங்கள் கூர்ந்து கவனிப்பதென்ன'' (மத்:7:3)

என்ற திருவிவிலியக் கருத்துடன் ஒத்தமைவதைக் காண முடிகின்றது.

சிறுபஞ்சமூலம் உலக இன்பமானது, செல்வப் பொருளுடையவனிடத்து உண்டாகும், நல்லொழுக்கம் அருள் உடையான் கண்ணதே ஆகும், அத்தகைய அருளுடையவன் பழிக்கப்படுந் தீய செயல்களைச் செய்யான், தீவினையைச் செய்ய மனத்திலும் நினையான், புறங்கூற்றுச் சொற்களையும், மற்றையவர் காதுகளில், செலுத்தி, பிழைக்க மாட்டான் என்று வலியுறுத்தி உரைக்கின்றது. இதனை,

“ ---------------------------------புறமொழியு

முய்யான் பிறர்செவிக் குய்த்து”.( சிறு: 2)

என்ற சிறுபஞ்சமூலத்தின் பாடலானது வெளிக்காட்டுகின்றது. திருவிவிலியம் புறங்கூறிப் பிழைக்கும் மனிதர்களை வெளிவேடக்காரர்கள் என்று பழித்துரைக்கின்றது. அவர்கள் பிறரின் இரகசியத்தை வெளிப்படுத்துபவர்கள் என்றும் அவர்களின் வார்த்தைகள் விளையாட்டுப் போல இருந்தாலும் பெரும் துன்பத்தை விளைவிக்கும் என்று குறிப்பிடுகிறது.இதனை,

“புறங்கூறுவோரையும் இரட்டை நாக்குக் கொண்டோரையும் சபி. அமைதியில் வாழ்ந்த பலரை அவர்கள் அழித்து விட்டார்கள்” (சீராக்: 28: 13)

என வரும் திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கின்றன. நேரில் நின்று இரக்கம் இல்லாமல் கடுமையாகப் பேசினாலும் பேசுக. ஆனால் ஒருவர் நேரில் இல்லாத பொழுது எந்தப் பழியையும் அவர்மேல் எடுத்துச் சொல்லக் கூடாது என்கிறது திருக்குறள்

“கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க

முன்னின்று பின்நோக்காச் சொல்” (குறள்: 184)

என்பது அத்தகைய திருக்குறள் ஆகும். ஆனால் புறங்கூறித் திரிபவர்கள் திருந்தமாட்டார்கள். புறங்கூறுதலில் பெரிதும் மகிழ்ச்சியுறுவர். இதனை,

“புறணி என்பது பலருக்கு அறுசுவை உண்டி உண்பது போலாம். அதை அவர்கள் பேராவலோடு விழுங்குவார்கள்” (நீதி: 26: 22) என்ற திருவிவிலிய வசனம் எடுத்துரைக்கும்.

**இன்னாசெய்யாமை:**

மனிதன் பிற உயிரின் துன்பத்தினைத் தன்னுடைய துன்பமாய்க் கருதுகிற பொழுது தன் நிலையிலிருந்து உயர்வு பெறுகிறான். அதனை விடுத்துப் பிற உயிருக்கு இன்னல் இழைத்து அதன் துன்பம் கண்டு மகிழ்வுறும் பொழுது தாழ்நிலையை அடைகிறான். எனவேதான் மனிதனை உயர் நிலைக்கு உயர்த்த விரும்பும் இலக்கியங்கள் ‘இன்னா செய்யாமை’ என்பதனை வலியுறுத்திச் செல்கின்றன. இன்னா செய்யாமை என்பது ஒருவன் தன் சிந்தையால் செயலால், பேச்சால் பிற உயிர்களுக்கு இன்னல் இழைக்காது இருத்தலைக் குறித்து நிற்பதாகும்.

தமக்கு இன்னாதவற்றைச் செய்தாரைத் துறந்தார் ஒறுக்கும் தன்மையாவது இன்னா செய்தார் தாமே நாணுமாறு அவர்க்கு இனிய உவகைகளைச் செய்து அவ்விரண்டனையும் மறந்துவிடுதல் என்பதாகும். இதனை,

"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண

நன்னயம் செய்து விடல்" (குறள்:314)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கும். திருக்குறளின் இத்தகைய உயர்ந்த சிந்தனையை அடியொற்றியதாகத் திருவிவிலியக் கருத்துகளும் அமைந்துள்ளன.

"தீமை உங்களை வெல்லவிடாதீர்கள். நன்மையால் தீமையை வெல்லுங்கள்"

(உரோ:12:21)

பேதுரு இயேசுவை அணுகி,

"ஆண்டவரே, என் சகோதரர் சகோதரிகளுள் ஒருவர் எனக்கு எதிராகப் பாவம் செய்துவந்தால் நான் எத்தனை முறை அவரை மன்னிக்க வேண்டும்? ஏழு முறை மட்டுமா? எனக் கேட்டார்.

அதற்கு இயேசு அவரிடம் கூறியது: "ஏழுமுறை மட்டுமல்ல; எழுபது தடவை ஏழுமுறை என நான் உனக்குச் சொல்கிறேன்.

உங்களுள் ஒவ்வொருவரும் தம் சகோதரர் சகோதரிகளை மனமார மன்னிக்கா விட்டால் விண்ணுலகில் இருக்கும் என் தந்தையும் உங்களை மன்னிக்க மாட்டார்." (மத்: 18:21.22:35)

என வரும் பகுதிகளும் மேற்கண்ட கருத்திற்குச் சிறந்த சான்றாதாரங்களாய் அமைகின்றன.

பிறிதோர் உயிர்க்கு வரும் இன்னாதவற்றைத் தம் உயிர்க்கு வந்தனபோலக் கருதிக் காக்காத இடத்துத் துறந்தார்க்கு உயிர் முதலியவற்றை உள்ளவாறறிந்த அறிவினான் ஆவதொரு பயன் ஒன்றும் இல்லை என்கிறது திருக்குறள். இதனை.

"அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்

தன்நோய்போல் போற்றாக் கடை" (குறள்:315)

என்ற திருக்குறள் வெளிப்படுத்தும். திருக்குறள் கருத்தினோடு இயைந்ததாகவே திருவிவிலியக் கருத்தும் அமைந்துள்ளது. இதனை,

"யாராவது பாவத்தில் விழ நேர்ந்தால் என் உள்ளம் கொதிப்தில்லையா" (2கொரி:11:29) என வரும் வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கும். தம் உயிர்க்கு இன்னாதன வேண்டாதவர்கள், பிறிதோர் உயிர்க்கு இன்னாதன செய்யமாட்டார்கள் என உரைக்கிறது வள்ளுவம்.

"நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்

நோயின்மை வேண்டு பவர்'' (குறள்:320)

மேற்கண்ட திருக்குறளின் கருத்தினை அடியொற்றியதாய்த் திருவிவிலியமும்,

''ஒருவர்க்கொருவர் அன்பும் கருணையும் காட்டுங்கள்;

கைம்பெண்ணையோ, அனாதையையோ,

அன்னியரையோ, ஏழைகளையோ ஒடுக்க வேண்டாம்;

உங்களுக்குள் எவரும் தம் சகோதரனுக்கு எதிராகத்

தீமை செய்ய மனத்தாலும் நினைக்க வேண்டாம்.'' (செக்: 7:9-10)

''உங்கள் பகைவரிடம் அன்பு கூருங்கள். உங்களை வெறுப்போருக்கு நன்மை செய்யுங்கள். உங்களைச் சபிப்போருக்கு ஆசி கூறுங்கள். உங்களை இகழ்ந்து பேசுவோருக்காக இறைவனிடம் வேண்டுங்கள்'' (லூக்: 6: 27 – 28) என எடுத்துரைக்கின்றது.

**தொகுப்புரை:**

- ஒரு தனிமனிதன் சீர்குலைகின்ற போது அதன் தொடர்வினையாகப் பல்வேறுபட்ட தனிமனிதர்கள் சீர்குலைந்து போகின்றனர். சமூக உறவுகள் பாதிப்புறுகின்றன. தனிமனிதக் கூறுகளின் அசைவுகளுக்கு ஏற்பச் சமூகமும் இயங்கிக் கொண்டிருக்கின்றது. அது ஒரு உயிர்வாசி இல்லை என்றாலும் அதற்கும் இயக்கம் உண்டு. அதன் இயக்கத்தில் கண்ணுக்குத் தெரியாத அசைவுகள் இருக்கும். இந்த அசைவுகளை, இயக்கங்களைத் தீர்மானிப்பது தனிமனிதன். எனவே தனிமனித அற விழுமியம் இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது.

- தனிமனிதன் சமுதாயத்தில் பெறும் இடம், தனிமனிதன் அறவிழுமியத்தைப் பின்பற்றவேண்டியதன் இன்றியமையாமை, அறத்தின்வழி நிற்றல், தனிமனிதன் அடக்கத்தை உடைமையாய்க் கொள்ளல், கண், நா, மெய் போன்ற புலன்களை அடக்கி ஒழுகலின் இன்றியமையாமை, இன்சொற் பயிறலின் சிறப்பு, கொல்லாமை என்னும் நல்லறத்தைப் பேணிக்கொள்ளலின் சால்பு போன்றவற்றை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி உரைக்கும் தன்மையை ஆய்வதன்வழி அறிய முடிகின்றது.

- தனிமனிதன் தன் வாழ்வியல் விழுமியங்களாய்ப் பொறையுடைமையைப் பொருளெனப் போற்றிக் கொள்ளல், பயனில சொல்லாமையைப் பின்பற்றலின்

உயர்வு, தீய செயல்களைச் செய்வதற்கு அச்சம் கொள்ளல், அன்புடைமை அறனெனப் போற்றி ஒழுகல், கள்ளாமை, வெகுளாமை,வாய்மை, ஒழுக்கமுடைமை என்னும் உயரிய நெறிகளைப் பின்பற்றி வாழ்தல், பணிவுடைமை பண்பினைப் பெறல், புறங்கூறாமையைப் போற்றிக் கொளல், இன்னாசெய்யாமை என்னும் இயல்பைப் கொண்டொழுகல் போன்றவற்றைப் போற்றி வாழ்தல் வேண்டும் என்பதனை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஒப்புநோக்கி ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளது

**சான்றெண் விளக்கம்**

1. எஸ். சாவித்திரி, சமூகவியல் ப.1
2. குன்றக்குடி அடிகளார், சொல்லமுதம் ப. 56
3. சாலை இளந்திரையன் - சமுதாய நோக்கு ப.28
4. மேலது, ப. 4
5. நன்: எழுத்து, நூ. 10
6. புறம்: பா. 9
7. மதுரை: அடிகள்: 191 - 192
8. புறம்: பா. 31
9. பரிமேலழகர், குறள்: 39 இன் உரை
10. பரிமேலழகர், குறள்: 125 இன் உரை
11. திருமந்: 1823
12. பரிமேலழகர், குறள்: 343 இன் உரை
13. பரிமேலழகர், குறள்: 127 இன் உரை
14. தொல்: பொருள்:நூ. 571
15. தொல்: பொருள்:நூ. 571 இன் இளம்பூரணர் உரை
16. .தொல். பொருள். 582. பேராசிரியர் உரை
17. அகத்தியர், ஞானம், 2: 1

18. மு.வரதராசனார்: நெஞ்சில் ஒரு முள், ப.171
19. மேலது, ப.410
20. புறம்:பா. 40
21. திருக்குறள், இனியவை கூறல், பரிமேழலகர் உரை
22. பட்டினத்தார், தில்லை, பா.6
23. சிலம்பு: வரம்தருகதை, வரி: 189
24. நற் : பா. 354: 1
25. கலி, பா.132: 14
26. புறம்: பா. 2: 7
27. மேலது, பா. 63: 8
28. கலி:பா. 133
29. திரு.வி.க. வள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் ப. 169
30. க.த. திருநாவுக்கரசு, சான்றோர் கண்ட திருவள்ளுவர் ப. 165
31. குறள், பயனில சொல்லாமை, பரிமேழலகர் உரை
32. குறுந்:பா.135: 1
33. திருமந்: 90
34. மொ. அ. துரை அரங்கசாமி, அன்புநெறியே தமிழர் நெறி, பக். 31 - 32
35. எம். சோலையன், தமிழ் இலக்கியத்தில் மனித நேயம்,ப.100
36. கழகத்தமிழ் அகராதி. ப.625
37. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-12 ப.591
38. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்,தமிழ்ப் பண்பாடு, ப.46
39. ----- திருக்குறளில் அறிவுத் துறைகள், ஜைன இளைஞர் மன்றம்,ப.71
40. New Oxford University Dictionary p. 335
41. புறம்:பா. 165: 10 – 13
42. மேலது,பா.108: 4-6
43. திருக்குறள் உரைக்களஞ்சியம்,பக்.157 – 158
44. மு.வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பக்.385 – 386
45. கலித்.நெய்தல்.பா.8
46. பரிமேலழகர், குறள் 295 இன் உரை
47. புறம்: பா. 165
48. பாரதி, முத்துமாரி -2
49. குறள்: 299 பரிமேலழகர் உரை
50. சற்குணவதி.மு.தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள், ப.45

51. பரிமேலழகர், திருக்குறள்:139 இன் உரை

52. வேதநாயகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், ப. 510

53. புறம்: பா. 10: 1 – 6 )

## இயல் - 3

## இல்லற அற விழுமியங்கள்

தனிமனித அற விழுமியங்களின் வழித் தன் வாழ்வினைக் கட்டமைத்துக் கொண்ட மனிதன் அத்தனிமனித மாண்புகளின்வழிப் பெற்ற அறம் சார்ந்த விழுமியங்களைப் பயன்படுத்திப் பார்க்கும் பணிமனையே இல்லறம் என்பது ஆகும். மனிதன் தன்னலம் நீத்து, மனைவி, குழந்தைகள், உறவினர் எனப் பிறர் நலம் கருதி வாழும் மனிதனாய் ஏற்றம் பெருவதில் இல்லறத்தின் பங்கு மிகச் சிறப்பிற்குரியதாம். இவ் இல்லறத்தின் மூலம் மனிதன் கொண்டும் கொடுத்தும் கற்ற மாண்புகளே அம்மனிதனின் சமூகச்செயல்பாடுகளுக்கு அச்சாணியாய் அமைகின்றன. எனவேதான் மனிதனை ஆற்றுப்படுத்தத் தோன்றிய இலக்கியங்கள் இல்லற விழுமியங்களையும் வரையறுத்து உரைக்கின்றன. அத்தகைய சிந்தனையின் அடிப்படையில் தமிழ் அறஇலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் அறம் சார்ந்த இல்லறவிழுமியங்களை ஆய்ந்துரைப்பதாய் இவ்வியல் அமைகின்றது.

**குடும்பமும் சமுதாயமும்:**

உலகில் மனித இனம் மிக நீண்ட பரிணாம வரலாற்றைக் கொண்டதாகும். அத்தகைய மனித சமூகத்தின் தொன்மையான நிறுவனங்களுள் ஒன்றே குடும்பம் என்பதும் ஆகும்.

51. பரிமேலழகர், திருக்குறள்:139 இன் உரை
52. வேதநாயகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், ப. 510
53. புறம்: பா. 10: 1 – 6 )

## இயல் - 3

## இல்லற அற விழுமியங்கள்

தனிமனித அற விழுமியங்களின் வழித் தன் வாழ்வினைக் கட்டமைத்துக் கொண்ட மனிதன் அத்தனிமனித மாண்புகளின்வழிப் பெற்ற அறம் சார்ந்த விழுமியங்களைப் பயன்படுத்திப் பார்க்கும் பணிமனையே இல்லறம் என்பது ஆகும். மனிதன் தன்னலம் நீத்து, மனைவி, குழந்தைகள், உறவினர் எனப் பிறர் நலம் கருதி வாழும் மனிதனாய் ஏற்றம் பெருவதில் இல்லறத்தின் பங்கு மிகச் சிறப்பிற்குரியதாம். இவ் இல்லறத்தின் மூலம் மனிதன் கொண்டும் கொடுத்தும் கற்ற மாண்புகளே அம்மனிதனின் சமூகச்செயல்பாடுகளுக்கு அச்சாணியாய் அமைகின்றன. எனவேதான் மனிதனை ஆற்றுப்படுத்தத் தோன்றிய இலக்கியங்கள் இல்லற விழுமியங்களையும் வரையறுத்து உரைக்கின்றன. அத்தகைய சிந்தனையின் அடிப்படையில் தமிழ் அறஇலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் அறம் சார்ந்த இல்லறவிழுமியங்களை ஆய்ந்துரைப்பதாய் இவ்வியல் அமைகின்றது.

**குடும்பமும் சமுதாயமும்:**

உலகில் மனித இனம் மிக நீண்ட பரிணாம வரலாற்றைக் கொண்டதாகும். அத்தகைய மனித சமூகத்தின் தொன்மையான நிறுவனங்களுள் ஒன்றே குடும்பம் என்பதும் ஆகும்.

‘Family’ என்னும் சொல் ஒருவருக்கொருவர் தங்களிடையே உறவுக் கொண்டுள்ள மனிதர்களின் குழுவினைக் குறிக்கிறது.

‘‘எந்தவோர் இனக்குழு பகுதியிலும் குடும்ப அமைப்பு இடம் பெறாமல் இல்லை. எனவே குடும்பம் என்னும் அமைப்பே மலர்ச்சிக் காலத்தில் தோன்றிய குலம் போன்ற அமைப்புகளைக் காட்டிலும் உலகலாவிய நிலையிலும் சமுதாயவியல் நிலையிலும் தோன்றி முக்கியத்துவம் பெற்று அழியா நிலையில் உள்ளது என்பது மானோஸ்கியின் கருத்தாகும்.’’[1]

மனிதன் தான் மட்டும் தனித்துச் செயல்படுவது என்பது இயலாது, அவன் எந்த ஒரு சூழலிலும் பிற குழுக்களுடன் சேர்ந்தே பயணப்படவேண்டியவனாய் உள்ளான். அத்தகைய குழுக்களில் முதலிடம் பெறுவது குடும்பம் என்பதாகும்.

‘‘குடும்பம் என்பது கணவன்,மனைவி, குழந்தைகள் என்று உறவுகளின் அடிப்படையில் கூடி வாழ்வது ஆகும். ஓர் ஆணும் ஒரு பெண்ணும் திருமணம் என்ற சடங்குமூலம் உருவாகும் அமைப்பே குடும்பம் எனப்பெறும்’’ [2]

‘‘குடும்பத்தில்தான் அவனுடைய வாழ்க்கையின் பெரும்பகுதி அமைகின்றது, பிறப்பிலிருந்து இறப்புவரை அவன் இக்குழுவோடு இணைப்பு வைத்துள்ளான். அவனுடைய உடல், உள்ளத் தேவைகளைப் பெரிதும் நிறைவேற்றி அவனுடைய வாழ்க்கையை அமைத்துக்கொடுப்பது குடும்பமே’’[3]

பல குடும்பங்களின் தொகுப்பே சமுதாயம்.குடும்பங்கள் என்ற நீர்த்துளிகளின் சக்தியே சமுதாயம் என்ற ஆற்றலின் இயக்கத்திற்கு அடிப்படையானது. குடும்ப அமைப்பும் அதன் போக்கும் சமூக உறவைப் பாதிக்கவல்லது என்பது இன்று சமூகவியலார் ஒப்புக்கொண்ட உண்மை’’ [4] எனச் சுட்டிக் காட்டுகின்றனர்.

இல்லறம் என்பது ஓர் ஆணும் பெண்ணும் தலைமக்களாய்த் தன் மக்களுடன் வாழ்வது மட்டுமன்று. பிறருக்கு உதவி செய்யும் வண்ணம் வாழ்வதுமே ஆகும். குடும்பம் என்ற அமைப்பினைத் தமிழ்ச் சொல்லகராதி,

‘‘உறவு, ஒருகுடில் உள்ளவர், மனைவி, வீடு, சம்சாரம், உறைவிடம், குடி, இனத்தார், ஒரு குடிசையில் உள்ளோர்’’[5] என வரையறுக்கிறது.

‘‘குடும்பம் தாய், தந்தை, குழந்தைகள் ஆகியோரைக் கொண்ட ஒரு குழுவாகும். குழந்தைகளைப் பெற்று அவர்களை வளர்ப்பதற்காக ஏற்பட்ட திட்டவட்டமான தொடர்புகளின்

உறவமைந்த குழுவே குடும்பம்.இக்குடும்பத்தை இரத்த உறவின் அடிப்படையில் அமைந்த சமுதாய நிறுவனமாகக் குறிப்பிடலாம் என்பது சமூகவியலாளரின் கருத்தாகும்”[6]

“குடும்பம் என்னும் அமைப்பு மிக நெருங்கிய உறவுடையது ஆகும். சமூகம் குடும்பத்தின் வளர்ப்புப் பண்ணை”[7]

குடும்பத்தில் உறவுண்டு. ஒழுங்கு உண்டு, ஒருமைப்பாடு உண்டு, அஃதோர் அமைப்புக் கால்கொள்ளும் இடம் குடும்பம்.

“தனிமரம் தோப்பாகிவிட முடியாது, அதுபோல ஒரு மனிதன் மட்டும் குடும்பம் ஆகிவிட முடியாது, ஆனால் எந்த ஒரு மனிதனும் ஏதோ ஒரு குடும்பத்தின் உறுப்பினராக இருந்தே ஆக வேண்டும”.[8]

“செங்கல்லும் சிமிண்டும் இரும்பும் மரமும் கொண்டு நாம் பணத்தின் வலிமையால் வீட்டைக் கட்டிவிட்டால் மட்டும் போதாது. குடும்பத்தைக் கட்டிவிட்டு வாழத் தெரிய வேண்டும். அன்பாலும் நம்பிக்கையாலும் இதைச் செய்ய இயலும்.வீட்டைக் கட்டுவது புறவாழ்வின் வெற்றி, குடும்பத்தை உருவாக்குவதுதான் அகவாழ்வின் வெற்றி”[9] என்கிறார் அகிலன்.

“குடும்பத் தொண்டில் அன்பு பெருகும்.தியாகம் கால்கொள்ளும். இத்தொண்டு நாட்டுத் தொண்டுக்கும் உலகத் தொண்டுக்கும் கடைக்கால்” [10]

**திருமணம்:**

ஆண் பெண் இருபாலரையும் இணைக்கும் முறையான அமைப்பே திருமணம் ஆகும். இது ஒரு சமூக அங்கீகாரம், குடும்ப அமைப்புக்கு ஒரு தோற்றுவாய் அல்லது நுழைவாயில் ஆகும்.

குடும்பம் திருமணம் என்ற ஆதாரத்தின் மீது அமைந்துள்ளது, எனினும் அது திருமணத்துடன் குறிக்கப்பட்டு விடுவதில்லை. அது பல தலைமுறைகளைச் சேர்ந்த மரபுவழிக் கிளைகளின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொண்டிருக்கும். பிறப்பு முதல் இறப்பு வரை அதனோடுதான் அவர்கள் தொடர்ச்சியாகத் தொடர்பு கொள்கின்றனர். ஏனெனில் இது மக்களின் உயிரியல், உளவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது, அதனாலே குடும்பம் எனும் அமைப்பு, இடம், காலம், அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகலாவிய பண்பாகத் திகழ்கிறது.

பிறப்பிலிருந்தே நமக்குக் குடும்பம் பல வசதிகளையும் வாய்ப்புகளையும் தந்து நம்மைக் காத்து வளர்த்து வருகிறதென்றாலும் நம்முடைய முழுப்பொறுப்பு திருமண வாழ்வில் இருந்துதான் தொடங்குகிறது.

‘‘குடும்பம் என்னும் அமைப்பானது ஓர் ஆணும் பெண்ணும் அவர்களது சமுதாய மரபுப்படி மணவாழ்க்கையில் ஈடுபடும் நிலையால் மட்டுமே தோன்ற முடியும். அவ்வாறு இணைந்தால்தான் அச்சமுதாயத்தில் அவர்கள் குடும்பமாக ஏற்றுக் கொள்ளப்படுவார்கள்’’[11]

‘‘குடும்பம் என்ற சிறிய குழுவில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் குறைந்த அளவு உறுப்பினராக இருத்தல் வேண்டும். இந்நிலையில் ஆணும் பெண்ணும் கணவன் - மனைவி என்ற ஓர் உறவு நிலையை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்’’ [12]

திருமணம் என்பது வெறும் உடலின்பம் தரும் பிணைப்பு மட்டுமன்று, காதல், கருணை, தியாகம், சகிப்புத்தன்மை, மன்னிக்கும் மனப்பான்மை என்ற எல்லா அம்சங்களிலும் இருவர் என்ற குறைந்தபட்சக் கூட்டு வாழ்க்கையில் மனிதனைப் பக்குவப் படுத்தக் கூடிய பந்தம் அது.

‘‘இறைவழியையும் இயற்கையின் நோக்கையும் அமைப்பையும் பிறவற்றையும் கூர்ந்து நோக்கும் போது ஒருத்தி ஒருவனுடனும் ஒருவன் ஒருத்தியுடனும் கூடி வாழ்வதே அறமாகும். அதுவே வாழ்வதற்குரிய இயற்கையாகும். இயற்கை அறம் என்ற தலைப்பில் பொறித்தேன்’’[13] என்பார் திரு. வி. க.

எனவே இல்லறம் என்பது இன்பம் என்பதனை மட்டும் நோக்கமாகக் கொண்டதல்ல. அதனையும் தாண்டி அறம் செய்தல் என்பதனை நோக்கமாகக் கொண்டது என்பதனை அறிய முடிகிறது,

திருமணம் என்பது அவ்வப்போது ஏற்படும் உடல் உறவைத் தீர்த்துக் கொள்வதோ, சில காலத்திற்குத் தேவைப்படுகின்ற நல்லதொரு கூட்டாளியைத் தேடிக் கொள்வதோ அல்ல. இது நிரந்தரமான நிலைகுலையாத ஒரு சங்கமம். மனைவியின் நற்குண நற்செய்கைச் சிறப்பே இல்லறத்திற்கு மங்கலமாவதாகும். நல்ல அறிவுடை மக்கட்பேறு அதற்கு அணிகலமாவதாய் அமையும் எனக் குறிக்கும் திருக்குறள். இதனை

‘‘மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்

நன்கலம் நன்மக்கட் பேறு.’’ (குறள்: 60)

என்பதன் வழி அறிய இயலுகின்றது. திருவள்ளுவர் திருமணத்தினை ‘மங்கலம்’ என்று குறிப்பிடுகிறார். இது ‘மங்கலம் என்ப மனைமாட்சி’ என்னும் தொடரால் தெரியவரும். இதனுள் குறிப்பிடப்படும் ‘மங்கலம்’ என்னும் சொல் திருமணம் என்பதனையே குறித்து நின்றது. இதனை,

‘‘மங்கலநாண்’’[14]

என்ற தொடரும் சிலப்பதிகாரத்தின் முதல் காதையாய் அமையும் பகுதி ‘மங்கல வாழ்த்துக்காதை’ என அமைதலும் உறுதிப்படுத்தும். சிலப்பதிகாரத்தின் இக்காதையானது கோவலன் - கண்ணகி திருமண நிகழ்வினையும் அதனை ஒட்டிய நிகழ்வுமுறைகளையுமே உணர்த்தி நிற்கின்றன. மேலும் ‘‘மங்கலநாண், மங்கல வாழ்த்து என்னும் சொற்றொடர்களை வைத்து மங்கலம் என்னும் சொல் திருமணத்தினையே உணர்த்தி நிற்கிறது’’[15] என்பார் வ.உ.சிதம்பரம் பிள்ளை. ‘‘மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்’’[16] என்று சிலம்பும் உரைக்கும். இனியவை நாற்பது என்னும் இலக்கியம், மனைவி உள்ளமும் கணவனுள்ளமும் மாறுபாடின்றி ஒன்றுபடக் கூடுமாயின் இல்வாழ்க்கையானது இனிமையுடையது என்று குறிப்பிடுகிறது. அங்ஙனம் மாட்சிமைப்படாதாயின் யாக்கை முதலியன நில்லாமையை ஆராய்ந்து, தாமதிக்காமல் அகம் புறமாகிய இருவகைப் பற்றுகளையும் விடுதல், மிக இனிதாம் எனக் குறித்து நிற்கும்.இதனை,

‘‘உடையான் வழக்கினி தொப்ப முடிந்தால்

மனைவாழ்க்கை முன் இனிது மாணாதா மாயின்

நிலையாமை நோக்கி நெடியார் துறத்தல்

தலையாகத் தான்இனிது நான்கு’’ (இனியவை:2)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. கணவன், மனைவியர் உள்ளம் ஒப்பமுடிதல் அருமை ஆதலின் ‘ஒப்ப முடிந்தால்’ எனக் குறித்தார்.

இனியவை நாற்பதின் ஆசிரியர் இதனை,

‘‘காதல் மனையாளுங் காதலனும் மாறின்றித்

தீதி லொருகருமஞ் செய்பவே - ஓதுகலை

எண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கல்தான்

கண்ணிரண்டும் ஒன்றையே காண்’’[17]

என நன்னெறியும்,

"மருவிய காதல் மனையாளுந் தானும்

இருவரும் பூண்டுய்ப்பி னல்லான் - ஒருவரான்

இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடஞ்

செல்லாது தெற்றிற்று நின்று"[18]

என அறநெறிச்சாரமும் விளக்கி நிற்றலை ஒப்புநோக்கி உணரமுடிகின்றது.திரிகடுகம் ஒரு இல்லறத்தின்கண் வாழும் கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் தம் செயல்நலத்தால் உயர்த்துபவராய் அமைதல் வேண்டும். அவ்வாறு அமையார் எனில் அத்தகைய இல்லறம் பயனற்றதாம் எனக் குறிப்பிடும். திருவிவிலியமும் திருமணம் என்பது இரு உள்ளங்களின் அன்பின் பிணைப்பாகவும், அது மணமக்கள் இருவருக்கும் மதிப்பினைத் தருவதாகவும் அமைய வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது. இதனை,

"திருமணத்தை அனைவரும் உயர்வாக மதியுங்கள்.

மணவறைப் படுக்கை மாசுறாமல் இருக்கட்டும்" (எபி: 13 - 14)

என வரும் எபிரேயர் குறிப்புகளால் அறியமுடிகின்றது.

**அறமும் இல்லமும்:**

அறம் என்பது 'அறு' என்னும் வினைச்சொல் அடியாகப் பிறந்ததே ஆகும்.இச்சொல்லிற்கு அறுத்துச்செல், வழியை உண்டாக்கு, உருவாக்கு, துண்டி, வேறுபடுத்து எனப் பலபொருள்கள் வழங்கி வருகின்றன[19] அறம் என்பது ஆங்கிலத்தில் எதிக்ஸ் (Ethics) என்று வழங்கப்படுகிறது. நல்ல அல்லது தீய செயல்கள் மூலம் தானே வெளிப்படும் மக்களுடைய நடத்தையைப் பற்றிய ஆய்வியல் கலையே 'எதிக்ஸ்' எனப்படும். தமிழில் இதனை 'அறவியல்' என்று குறிப்பிடலாம்.

"மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் முழுநிறை வடிவமே அறம் எனப்படும். பிறவிதோறும் மனிதனைப் பற்றிக் கொண்டு வரும் தீவினையை அறுத்தெறிவதே அறம்"[20] என்ற ஆன்மிக விளக்கமும் இதற்குத் தரப்படுவதுண்டு.

"அற உணர்வு என்பது வாழும் நெறி, ஒழுக்கம், கடமை, ஈகை என்ற மூன்று உயர் நோக்கங்கள் இணைந்ததுதான் அறம்"[21] என்று வேதாத்திரி மகரிஷி குறிப்பிடுகிறார். மனித வாழ்வைப் பல நிலைகளில் செம்மைப்படுத்துவன அறங்கள். எல்லாம் வல்ல முழுமுதற்

பொருளான தெய்வநிலையை அனுபவ அறிவாக உணர்ந்தவர்கள் அந்த அடிப்படையில் மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்று குறிப்புகள் கொடுத்துள்ளார். அந்த குறிப்புகள்தாம் அறமெனப்படுகின்றன எனவும் விளக்கம் தருகிறார்''.[22]

''மனிதன் உயிரோடு வாழ உணவும் தன்மானத்தோடு வாழ ஒழுகலாறும் உயிர்நாடியாகும். இதுதமிழர் மரபு. ஒழுகலாறு தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள மற்றவர்களோடு கலந்து பழகும் போது நடுநிலை மாறாமல் நமக்கு நாமே முறையாக வகுத்துக் கொண்ட கட்டுப்பாடுகள். அறவோர் வகுத்த ஒழுகலாறுகள்தான் கட்டுப்பாடுதான் அறநெறி''[23]

''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்

ஆகுல நீர பிற'' (குறள்:34)

என்ற குறளில் அறம் என்பதற்கு 'மனத்தூய்மை' என்று பொருள் உரைக்கின்றார்.

''அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்

இழுக்கா இயன்றது அறம்'' (குறள்:35)

என்ற குறளில் பொறாமை, தேவையற்ற ஆசை, சினம், கடுமையான சொற்கள் போன்றவற்றை நீக்கி வாழ்வதே அறம் என்கிறார் திருவள்ளுவர். மேலும்

''அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்

பிறவினை எல்லாம் தரும்'' (குறள்:321)

என்ற குறளில் எவ்வுயிரையும் கொல்லாமை தான் அறம் என்கிறார்..மணிமேகலை அறம் என்பதற்கு,

''அறம் எனப்படுவது யாதெனக் கேட்பின்

மறவாது இதுகேள்: மன்னுயிர்க்கு எல்லாம்

உண்டியும் உடையும் உறையுளும் அல்லது

கண்டது இல்''[24]

என விளக்கம் தருகின்றது.மேலும் அறம் செய்தலின் விளை பயனை மணிமேகலை,

''நல்லறம் செய்தோர் நல்லுலகு அடைதலும்

அல்லறம் செய்தோர் அருநரகு அடைதலும்

உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்''[25]

எனவும் வரையறுத்து குறிப்பிடுகின்றது.

''ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம்

உபசாரம் உறவு சீலம்

வழுக்கு இலாத்தவம் தானங்கள்

வந்தித்தல் வணங்கல் வாய்மை

அழுக்கு இலாத் துறவு அடக்கம்

அறிவொடு அர்ச்சித்தல் ஆதி

இழுக்குஇலா அறங்கள் ஆனால்

இரங்குவான் பணி இடங்கள்''[26]

என 'அறம்' என்ற சொல்லுக்கு பல பொருள்களை அருணந்தி சிவாச்சாரியார் குறிப்பிடுகிறார். அறம் என்பதற்கு நல்வினை, ஐயம் (பிச்சை) வறியோர்க்கு இனாம் கொடுப்பது, நோயாளிக்கு மருந்து ஈதல்,நலம், இன்பம், தகுதி, கற்பு, நோன்பு, புண்ணியம், ஞானம், அறச்சாலை, அறத்தெய்வம், கூற்றுவன் எனப் பதினைந்து பொருள்கள் குறிக்கப்படுகின்றன.[27] இத்தகைய அறம் என்பது இல்வாழ்க்கை மேற்கொள்வார்க்கு இன்றியமையாத பண்பு ஆகும். எனவேதான் 'இல்' என்பதனுடன் 'அறம்' என்பது சேர்க்கப்பெற்று 'இல்லறம்' எனக் குறிக்கப்பட்டது. எனவே அறன் இல்லாத இல்வாழ்க்கை என்பது சிறப்புடையது அன்று என்பதனைத் திருக்குறள்,

''அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அ∴தும்

பிறன்பழிப்பது இல்லாயின் நன்று'' (குறள்:49)

என வரையறுத்து உரைக்கின்றது. இக்கருத்தினை அடியொற்றியே ஔவையாரும்,

''இல்லறம் அல்லது நல்லறம் அன்று''[28]

என்று குறிப்பிடுகிறார். அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை என்னும் குறளுள் பிறன்பழிப்பது இல்லாயின் நன்று என்பதனுள் அமைந்துள்ள பிறன்பழிக்கும் இல்வாழ்க்கை

விருந்தோம்பாமையாலும் பிறனில் விழைவாலும் வரைவின் மகளிர் தொடர்பாலும் பிறவற்றாலும் வருவதாகும். எனவே அவற்றை நீக்கி வாழ்தலே சிறப்புடையதாம் என்பது இதன்வழி வெளிப்போந்து நிற்கின்றது.

“இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தலே அறம், அதற்கு மாறுபட்டு வாழ்தல் மறம். ஒருவன் ஒருத்தியுடனும் ஒருத்தி ஒருவனுடனும் வாழ்வது இயற்கை அறம் என்று இதுகாறும் சொல்லப்பட்டு வந்தது. இவ் இயற்கை அறத்தை உலகம் இல்லறம் என்று சொல்கிறது.இல்லறம் என்பது அறக் கூறுகள் யாவும் சேர்ந்த ஒரு முழுமை என்க”[29] எனத் திரு.வி.கல்யாண சுந்தரனார் விளக்கம் தருகிறார்.

தமிழ்ச் சமுகம் குடும்ப அமைப்பு முறையைப் போற்றிய சமூகம் ஆகும். தமிழரின் பண்டய வாழ்க்கை முறையில் கூட்டுக்குடும்ப அமைப்பு முறையே பெரும்பாலும் இருந்திருக்கின்றது: அதே நேரம் தனிக் குடும்ப அமைப்பு முறையினையும் பார்க்க முடிகின்றது.

தாயானவள் மனிதன் வாழும் ஆண்டுகளுக்கு மேல் வாழ்கின்றேன், என் உயிர் இன்னும் செல்லவில்லையே’ என்று நொந்துகொண்டு, நூல் விரிந்து கிடப்பது போன்ற வெள்ளை மயிருடன், தடி ஊன்றி நடந்தும் முற்றத்துக்குக்கூடப் போகமுடியாதவளாக இருக்கிறாள். மனைவியோ பச்சைக் கைக்குழந்தையுடன் பசியோடு வருந்துகிறாள். குழந்தையோ தாயின் மார்பில்பால் பெறாது வருந்துவது என்கிற செய்தியை உணர்த்தும் பெருஞ்சித்திரனாரின்,

“வாழும் நாளொடு யாண்டுபல உண்மையின்,
தீர்தல்செல் லாது, என் உயிர் எனப் பலபுலந்து,
கோல்கால் ஆகக் குறும்பல ஒதுங்கி,
நூல்விரித் தன்ன கதுப்பினள், கண் துயின்று,
முன்றிற் போகா முதுர்வினள் யாயும்;
பசந்த மேனியொடு படர்அட வருந்தி,
மருங்கில் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடிய முலையள்”[30]

என்ற பாடல் கூட்டுக் குடும்ப வாழ்க்கை முறைக்குப் பெரிய சான்றாகும்.மேலும்

“மேனாள் உற்ற செருவிற்கு இவள்தன்ஐ

யானை எறிந்து களத்தொழிந்தனனே’’[31]

என்பதன் வழி தந்தையும் குடும்ப உறுப்பினன் என்பது வெளிப்பட்டு நிற்கும்.

‘‘நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை

எடுத்தெறி ஞாட்பின் இமையான’’[32]

என்ற புறநானூற்றின் பாடல் அடிகள் போர் மறவர் குடியில் பாட்டன், தந்தை, மகன் என் மூன்று தலைமுறையினர் இணைந்திருந்த கூட்டுக் குடும்ப அமைப்பினைக் காட்டுகின்றது. சிலப்பதிகாரத்தில் இடம்பெற்றுள்ள கோவலன், கண்ணகி இல்லற வாழ்க்கையானது தனிக்குடும்ப வாழ்க்கை முறைக்குச் சான்றாகும். பழந்தமிழரின் வாழ்வியல் முறைகளுள் இடம்பெற்றிருந்த கணவன், மனைவி, உறவு முறைமை வேறு எங்கும் காணக்கிடைக்காததாகும்.

‘‘இம்மை மாறி மறுமை ஆகினும்

நீயாகியர் என் கணவனை

யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே’’[33]

என்ற பாடலானது மறுமையிலும் கணவன், மனைவி, உறவு தொடர்தல் வேண்டும் என்னும் பெண்மையின் பெருமையினை வெளிப்படுத்துகின்றது. தமிழ்ச்சமூகம், இல்லறமுறைமை என்பது பல பிறவிகள் தொடர்ந்துவருவது என்று நம்பியது.இத்தகைய இல்லற வாழ்வில் கணவன், மனைவி இருவருக்கும் கடமைகள் இருந்தன.

‘‘வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்

மனையுறை மகளிர்க் காடவர் உயிரென

நமக்குரைத் தோருந் தாமே

அழாஅல் தோழி அழுங்குவர் செலவே’’[34]

இத்தகைய உயர்ந்த இல்லற நெறியானது இளமை தீர்ந்து முதுமை எய்தியக் கண்ணும் அன்பகலாத துணைமையோடு தொடரும்.

மனித வாழ்க்கையின் நோக்கம் இன்பம். அது ஐம்புல இன்பமாகிய நிலையிலின்பமும் உயிரின்பமாகிய நிலையுளின்பமும் என இருவகைப்படும். முன்னது சிற்றின்பம். பின்னது பேரின்பம். முன்னது அவாவினை நெறிப்படுத்துவது. இருவகை அற வாழ்க்கையுள் இல்வாழ்க்கை

இயல்பானது, துறந்தார்க்கும் துணையாவது. ஐம்புல இன்பங்களை ஆரத் துய்த்துக் கொண்டே முறைப்படி நடந்தால் வீடுபேற்றையும் அளிக்கவல்லது. அத்தகைய இல்லறத்தின் சிறப்புக்களைக் கூறும் சிறு பகுதி இல்லறவியல் பின்னது அவாவினை அறவே ஒழித்து அறவழியில் பிழையாது நின்று பெறத்தக்க இன்பம் பேரின்பம். அதனால் வரும் அறம் துறவறம் எனப்பட்டது. இவற்றுள் இல்லறத்தைப் பற்றிக் கூறும் பகுதி இல்லறவியல். சிற்றின்பம், அறிந்தே பேரின்பம் அறிதல் இயல்பு. சிற்றின்பத்தின் நிலையாமை உணர்ந்து தெளிந்த பிறகே பேரின்பத்தில் மனம் செல்லும். அவாவை நெறிப்படுத்திய பிறகே அதனை ஒழிக்க இயலும். எனவே இல்லறமே யாவற்றினும் முதன்மை உடையதாய் அமைகின்றது.

இல்லறமே அருள்நெறியின் அறப்பணியின் தொடக்கம் ஆகும். இல்லம் மக்களின் அருள்நெறிப் பயிற்சி சாலை. அறப்பணிப் பயிற்சிக்கூடம் எனல் சாலவும் பொருந்தும். எனவேதான் வள்ளுவர் இரு வகை அறத்துள்ளும் தவஞ்செய்வாரைத் தவநெறியில் ஒழுகச் செய்தானும் தன் அறத்தினின்று தவறாத, இல்லறவாழ்க்கை அத்தவஞ் செய்வார் நிலையினும் மிகுந்த பொறைத் திறனையுடையது எனக் குறிப்பார். இதனை,

‘‘ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை

நோற்பாரின் நோன்மை உடைத்து’’ (குறள்:48)

‘‘இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்

முயல்வாருள் எல்லாந் தலை’’ (குறள்:47)

என வரும் திருக்குறள்கள் எடுத்துரைத்து நிற்கின்றன. சிறுபஞ்சமூலம் மனைவியோடு கூடிவாழும் இல்வாழ்க்கை எனப்படுவது இல்லறம் துறவறமாகிய இரண்டில் நல்லதாகும். அது நல்ல துறவறத்தாரோடும் வைத்து எண்ணப்படுவதாகும். நல்ல துறவறத்தார்க்கு, சமைத்து, பகிர்ந்திட்டு, பிறகு தாமும் உண்டு, மிகவும் இனிதாக முற்பிறப்பில் வாழ்ந்தவர்களே, இப்பிறப்பில், சமைத்திட்டுண்டு, மிகுதியாக வாழ்ந்திருப்பவர் எனக் குறிப்பிடுகின்றது. சிறுபஞ்சமூலத்தின் இத்தகைய சிந்தனையை,

‘‘புல்லறத்தி னன்று மனைவாழ்க்கை போற்றுடைத்தே

நல்லறத்தா ரோடு நடக்கலா - நல்லறத்தார்க்

காட்டிட்டுண் டாற்றவாழ்ந் தார்களே யிம்மையில்

அட்டிட்டுண் தாற்றவாழ் வார்.'' (சிறு:92)

என்ற பாடலின்வழி அறிய முடிகின்றது. நான்மணிக்கடிகையும் மழையில்லாமல் உலகத்தில் மக்கட்கு நலமில்லை. அம்மழை தானும், தவஞ் செய்யும் தவத்தார் இல்லாத இருப்பிடங்களில், பெய்வதில்லை. அத்தவஞ்செய்தலும், செங்கோலரசன் இல்லாதவிடத்து, நிகழ்தலில்லை; அச்செங்கோலரசனும், குடிமக்கள் இல்லாதவிடத்து, இலனாவான் என இல்லறத்தானே எல்லாவற்றினும் தலைமைத்தன்மை உடையவனாவான் எனக் குறிப்பிடுகின்றது. இதனை உணர்த்தும் பாடல்,

''மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும்

தவமில்லார் இல்வழி இல்லை தவமும்

அரச னிலாவழி இல்லை அரசனும்

இல்வாழ்வார் இல்வழி யில்.'' (நான்: 46)

என்பதாகும். அத்தகைய இல்லறமானது பிறராற் பழிக்கப்படாத தூய்மையுடைத்தாயின் மிக நன்றாம் எனவும் குறிப்பிடுகிறார். மேலும் திருக்குறளானது ஒருவனது இல்லறவாழ்க்கை அவனுக்கும் அவன் வாழ்க்கைத்துணைக்கும் இடைப்பட்ட இருதலைக் காதலையும் அவர் கருத்தொருமித்துப் பிறர்க்குச் செய்யும் அறவினைகளையும் உடைத்தாயின் அவ்வுடைமை அவ்வாழ்க்கைக்கு முறையே தன்மையும் பயன்விளைவுமாகும் எனக் குறிப்பிட்டுரைக்கும். இதற்கு,

''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை

பண்பும் பயனும் அது'' (குறள்: 45)

என்ற திருக்குறள் அரணாகும். இல்லறவாழ்க்கை என்பது இருபகடுகளால் இழுக்கப்பெறும் சகடத்தின் ஒழுக்கம் போன்றதாகும். எனவே கணவன் மனைவியரிடைப்பட்ட இருதலையன்பு அதன் பண்பாயிற்று. அதனாற் செய்யப்படும் அறம் அதன் பயனாயிற்று என்பது இதன்வழி வெளிப்போந்து நிற்கின்றது. திருக்குறள் ஒருவன் இல்லறவாழ்க்கையை அதற்குரிய அறநெறிப்படி நடத்துவானேயானால் அவ் இல்லறத்திற்குப் புறம்பாகிய துறவு நெறியிற் போய்ப் பல்வகையில் துன்புறுவதல்லது சிறப்பாகப் பெறும் பயன் யாது என விளக்கியுரைக்கும். இவ்வாறு அறநெறிப்பட்ட இல்லறத்தின் பெருமையைக் கூறும் திருக்குறள்,

''அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்

போஒய்ப் பெறுவது எவன்'' (குறள்:46)

என்பதாகும். இதனுள் குறிக்கப்படும் அறத்தாறு என்னும் சொல்லிற்கு ‘‘அறத்தாறு என்றது விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, புறங்கூறாமை, பயனிலசொல்லாமை, தீவினை யச்சம், ஒப்புரவறிதல், ஈகை என்னும் பதினாறின் தொகுதியை ஆகும். இல்லறத்தாலும் வீடுபேறுண்டாமென்பது தமிழர் கொள்கையாதலின், துறவறத்தினால் மட்டும் வீடுபெற முடியும் என்னும் ஆரியக் கொள்கையை மறுத்து, இல்லறத்தில் தானும் இன்புற்றுப் பிறர்க்கும் ஒல்லும் வகையால் அறவினை ஒவாதே செல்லும் வாயெல்லாம் செய்து இறுதியில் பேரின்பமும் பெறுவதாயிருக்க; துறவறத்திற் போய்ப் பசிபட்டினியாலும் தட்பவெப்ப மிகையாலும் துன்புற்றும் ஒருவர்க்கும் ஒருவகையிலும் உதவாதும், கூடாவொழுக்கத்திற் காளாகியும், ஒருகால் இறுதியிற் பிறவாவீடுபெறினும் சிறப்பாகப் பெறுவது எதுதானென்று வினவுகின்றார் ஆசிரியர். சிவனடியார் பலர் இல்லறத்தில் நின்றே வீடு பெற்றாரென்று பெரிய புராணங் கூறுதல் காண்க’’[35] என உரை வகுப்பார் தேவநேயப்பாவாணர். திருவிவிலியமும் கணவனும் மனைவியும் அன்பு கொண்டு தமக்குள் ஒருமித்து அறம் செய்து வாழும் வாழ்வே சிறந்தது என்பதனை,

‘‘கணவன் தன் மனைவிக்கு மனைவாழ்கைக்கு உரிய உரிமைகளைக் கொடுக்கவேண்டும். அதுபோல மனைவியும் தம் கணவனுக்குக் கொடுக்கவேண்டும’’ ( 1 கொரி:7:3-4)

என வரும் வசனத்தின் வழி விளக்கியுரைக்கின்றது. திருவள்ளுவர் இல்லறத்தானின் கடமைகளையும் வலியுறுத்தி உரைப்பார். இறந்த முன்னோர் வழிபாடு, தெய்வம், விருந்தினர், சுற்றம், தன் குடும்பம் எனப்படுபவர்களைப் போற்றி வாழ்தல் என்பது இல்லறத்தானின் கடமை என்பதனை,

‘‘தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு

ஐம்புலத்தாறு ஓம்பல் தலை’’ (குறள்: 43)

என்ற திருக்குறள் வெளிப்படுத்தி நிற்கின்றது. இதற்குத் தேவநேயப்பாவாணர் ‘‘முதற்காலத் தமிழகமாகிய குமரிநாடு பல்வேறு கடல்கோள்களால் மூழ்கிப் போனமையால், அது இருந்த தென்றிசை கூற்றுவன் திசையாகவும் இறந்தோரின் இருப்பிடமாகவும் கொள்ளப்பட்டது. தென்புலத்தார்க்குச் செய்யும் அறவினையாவது, அவர் ஆவி ஆறுதலும் மகிழ்வும் அடைதற்பொருட்டு, அவர் இறந்த நாளில் தெய்வத்திற்குப் படைப்பது போல் அடையாள முறையிற் சில உண்டிகளை அவர்க்கும் படைத்து, அவர் பெயரால் துறவியர்க்கும் இரப்போர்க்கும் சிறந்த உணவும் புத்தாடையும் உதவுதல். தெய்வம் என்றது அவரவர் உளநிலைக் கேற்றவாறு சிறுதெய்வமும் பெருந்தேவனும் கடவுளுமாகிய மூவகைத் தேவுகளை.

கோயிற்கும் அடியார்க்கும் செய்யும் தானங்களும் தெய்வ வழிபாட்டின் பாற்படும் விருந்து என்றது புதிதாக வரும் மதிப்புள்ள அயலாரை. அவரை வரவேற்றுச் சிறந்த உணவளிப்பது இக்காலத்து வழக்கற்றது. அயலூரினின்று வந்த உறவினர்க்குச் சிறந்த உணவளிப்பது கைம்மாறு கருதிய கடமையேயன்றி அறமாகாது. தன் என்றது தன்னையுந்தன் குடும்பத்தையும் 'உண்டி முதற்றே யுணவின் பிண்டம்' (புறம் - 18). 'உடம்பாரழியின் உயிரா ரழிவர்' (திருமந்திரம், 724) ஆதலால், பிறருக்குத் தொண்டு செய்பவன் தன்னையும் பேணிக் கொள்ளல் வேண்டும் 'தனக்கு மிஞ்சித் தானம்' ஆதலால், ஒருவன் தன் குடும்பத்தைக் கவனியாது பிறரைப் பேணுதலும் அறமாகாது"[36] எனக் குறிப்பார். கலித்தொகையும்,

"ஆற்றுதல் என்பது அலந்தார்க்கு உதவுதல்"[37]

எனக் குறிக்கும். ஏலாதி, வழி நடப்பவர்க்கு உணவும், மிக்க சுமையைத் தாங்கிக் களைத்தவர்க்கு உணவும், நோயிற் கிடப்பவர்க்கு உணவும், உறவினர்க்கு உணவும் வானுலகிலுள்ள தென்புலத்தார்களுக்கு உணவும், அயல்நாட்டிலிருந்து வந்தவர்களுக்கு உணவும், கெடுதலில்லாமல் அமைத்துக் கொடுத்தவன் தனக்குரிய மனையில், செம்மையாய் வாழ்வான் என அறவுரை பகரும். இதனை.

"நடப்பார்க்கூ ணல்ல பொறைதாங்கி னார்க்கூண்
கிடப்பார்க்கூண் கேளிர்க்கூண் கேடின் - றுடற்சார்ந்த
வானகத்தார்க் கூணே மறுதலையார்க் கூணமைத்தான்
தானகத்தே வாழ்வான் றக" (ஏலாதி: 71)

என்ற பாடலானது எடுத்துரைக்கும்.திருவிவிலியமும் அறநூல்கள் உரைக்கும் இத்தகைய கருத்தினை ஒத்ததாய்,

"உன் சகோதரனுக்கும் உன் நாட்டில் உள்ள வறியவருக்கும் தேவையில் உள்ளோருக்கும் உன் கையைத் தாராளமாய்த் திற" (இணை: 15: 11) எனக் குறிப்பிடுகின்றது.

**இல்லறத்தில் பெண்:**

இயற்கையின் படைப்புகளில் பெண் சிறப்பு வாய்ந்தவள் ஆவாள். பெண் இடம்பெறாத இலக்கியப்படைப்புகளோ சமூக நிகழ்வுகளோ இல்லை எனலாம். பெண் சமூகத்தில் போற்றப்படவேண்டியவள் ஆவாள். திருவள்ளுவர்,

''பெண்ணின் பெருந்தக்க யாவுள'' (குறள்: 54)

எனப் போற்றியுரைப்பார். நச்சினார்க்கினியர்,

''பெண்மையாவது கட்புலனாயதோர் அமைதித்தன்மை'' [38]

என உரை வகுப்பார். மனித சமூகத்தின் தோற்றத்திற்கும் தொடர்ச்சியான நிலைப்பாட்டிற்கும் பெண்ணே முதன்மைக் காரணியாய் அமைகின்றாள். பெண்ணிடம் காணப்படும் தாய்மை என்னும் உணர்வே மனிதனை விலங்கினின்று பிரித்துக் காட்டுகிறது. இதனை,

''தாய்மை என்னும் உணர்ச்சியே விலங்கினின்று மனிதன் தோன்றியதன் முதற்படி எனக் கூறலாம்'' [39]

என்பார் சாந்தி சச்சிதானந்தம். இத்தகைய சிறப்புடைய பெண் அவளின் சிறந்த குண இயல்புகளால் ஆண்களால் போற்றப்பட வேண்டும். பெண் வெறும் அழகுப்பொருளாய்ப் பார்க்கப்படுவது சமூகத்தில் இருந்து நீங்குதல் வேண்டும். இதனை,

''மனித இனம் மகளிரை ஆடவர்க்குரிய களியாட்டப் பொருளாகக் கருதாமல் நிலைத்த அழகின் பெட்டகமாக நோக்க வேண்டும்''[40]

என்று குறிப்பிடுகிறார் திரு. வி.க. எனவே ஆணும் பெண்ணும் சம உரிமை பெறுதல் வேண்டும். ஆணுக்குப் பெண் அடிமை என்ற சிந்தனை மனித அறிவாற்றலுக்கு முற்றிலும் முரணானது, இத்தகைய சிந்தனைப் போக்கு மனித இனத்தின் தோல்வியையே காட்டுகிறது.

''தாயுரிமை தூக்கி எறியப்பட்டது பெண்ணினம் உலக வரலாற்று ரீதியில் பெற்ற தோல்வியாகும். ஆண் வீட்டிலும் ஆட்சியின் கடிவாளத்தைக் கைப்பற்றினான்.பெண் இழிநிலைக்குத் தள்ளப்பட்டாள். ஆணின் உடலின்ப வேட்கைக்குக் கருவியானாள். கேவலம் குழந்தை பெறுகின்ற சாதனமாக ஆகிவிட்டாள்.இது பெண்களின் நிலையை கீழே இறக்கிவிட்டது,''[41] ஆனால் தமிழ் அற இலக்கியங்கள் பெண்மை போற்றப்படுதல் வேண்டும் என்று உரைப்பதுடன் இல்லறத்தில் பெண்ணின் கடமைகளையும் முன்மொழிகின்றன. ''திருக்குறளில் இடம்பெற்றுள்ள 'வாழ்க்கைத்துணைநலம்' என்னும் அதிகாரம் மனைவியே குடும்பத் தலைவியாக இருந்து இல்லறம் நடத்தும் நிலையை எண்ணியே ஆளப்பட்டதாகத் தோன்றுகிறது''[42] என்பார் காமாட்சி சீனிவாசன். திருவள்ளுவர் மனைத்தக்க மாண்புடைய தன்மை கொண்டவளாய்த் தன் கணவனின் வளத்தக்கவளாய் அமைபவள் வாழ்க்கைத் துணைவியாகிய மனைவி, பிற தெய்வத்தைத் தொழாது தன் கணவனைத் தெய்வம் எனத் தொழுது எழுவாளாயின் பெய் என்று சொல்ல மழை பெய்யும் என்று குறிப்பிடும். இதனை,

“தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்

பெய்யெனப் பெய்யும் மழை.” (குறள்: 55)

என வரும் திருக்குறள்கள் எடுத்துரைக்கும். திரிகடுகமும் மழையைப் பெய்யெனச் சொன்னதும் பெய்ய வைக்கும் ஆற்றல் கொண்டவர்கள் என்று சிலரைச் சுட்டி உரைக்கின்றது. அதன் படி கொண்ட கணவனுடைய குறிப்பறிந்து நடக்கின்ற மனைவி, தான் மேற்கொண்ட விரதங்களைச் முறைப்படிச் செய்யும் துறவி, தீங்கினை நீக்கிக் குடிகளுக்கு நன்மையானவற்றைச் செய்யும் அரசன் ஆகிய இம்மூவரும், மழையைப் பெய் என்று சொல்ல மழை பொழியச் செய்யும் ஆற்றல் கொண்டவர்கள் என்பது வெளிப்படுகிறது. திரிகடுகம் இம்மூவருள் கணவன் குறிப்பறிந்து நடக்கும் மனைவியை முதல் நிலையில் வைத்துக் குறித்திருப்பதில் இருந்து மனைவியின் இன்றியமையாமை உணர முடிகின்றது. இதனை,

“கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி கொண்டன

செய்வகை செய்வான் தவசி கொடிதொரீஇ

நல்லவை செய்வான் அரசன் இவர்மூவர்

பெய்யெனப் பெய்யும் மழை” (திரி: 96)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். மேலும் தன் குடும்பத்தின் தன்மை அறியாது செயல்படும் மனைவியானவள் அக்குடும்பத்தினைத் அழிக்கும் தன்மை உடையவள் ஆவாள் என்பதனை,

. “---------------------------------------------------------பொய்தெள்ளி

அம்மனை தேய்க்கும் மனையாளும் இம்மூவர்

இம்மைக் குறுதியில் லார்” (ஏலாதி:49)

என்ற பாடலின் வழியும் ஏலாதி எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் கணவனும் மனைவியும் ஒருவர் பிறருக்குச் செய்ய வேண்டிய கடமையை இல்லறத்தில் செய்து இன்புற்று வாழ்தல் வேண்டும் என்று வலியுறுத்துகிறது. இதனை,

“மனைவிக்குத் தம் உடலின்மேல் அதிகாரம் இல்லை. கணவனுக்கே அந்த அதிகாரம் உண்டு. அப்படியே கணவனுக்குத் தம் உடல்மேல் அதிகாரம் இல்லை. மனைவிக்கே அந்த அதிகாரம் உண்டு” (1கொரி:7.: 4)

என்பதனால் அறிய முடிகின்றது. மேலும் திரிகடுகமானது சினத்தால் எதிர்நின்று பேசும் மனைவி, ஒழுக்கமில்லாத ஏவலாள், பகை கெடாது நிற்கும் சுற்றம் போன்றன முற்பிறப்பின் ஊழ்வினை என்பது போல முதுமைப் பருவம் வரைக்கும் வந்து துன்பம் செய்யும் எனக் குறிக்கும். மேற்கண்ட மூன்று கருத்துகளுள் கணவனை எதிர்த்து நிற்கும் மனைவியை முதுமை வரைத் துன்பம் செய்யும் செயல்களுள் முன்நிறுத்தி இருப்பதன்வழி அவளே பிற துன்பங்களினும் கொடுமைமிக்க துன்பம் செய்பவள் என்பது வெளிப்போந்து நிற்கின்றது. இதனை,

''எதிர்நிற்கும் பெண்ணும் இயல்பியல் தொழும்பும்

செயிர்நிற்குஞ் சுற்றமும் ஆகி - மயிர்நரைப்ப

முந்தைப் பழவினையாய்த் தின்னும் இவைமூன்றும்

நொந்தார் செயக்கிடந்த தில்'' (திரி:67)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம் அறிவுள்ள பெண்களின் சிறப்பினையும் அறிவற்ற பெண்களின் இழிவினையும் எடுத்துரைப்பதுடன் அவர்கள் செயல் தன்மைகளையும்,

''ஞானமுள்ள பெண்கள் தம் இல்லத்தைத் கட்டி எழுப்புகின்றனர். அறிவற்றவரோ தம் கைகளைக் கொண்டே அதை அழித்து விடுகின்றனர்'' ( நீதி: 14: 1) என எடுத்து மொழிகின்றது.

ஒரு மனைவியானவள் கடமையினை, கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவற்றால் பேணி இருவர் மாட்டும் நன்மை அமைந்த புகழ் நீங்காமல் காத்து நிற்கும் நற்குண நற்செய்கைகளினும் கடைப்பிடிப்பவளாய் அமைதல் வேண்டும் என்பதனைத் திருக்குறள்,

''தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற

சொற்காத்துச் சோர்விலாள் பெண்'' (குறள்: 56)

என எடுத்துரைக்கும். முதுமொழிக்காஞ்சி கணவனுடைய குணத்தை அறிந்து அதற்கேற்றபடி நடவாதவள், மனைவியாகமாட்டாள் என்பதனை.

''ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்

நீரறிந் தொழுகாதாள் தார மல்லள்'' (முதுமொழி:5:1)

என எடுத்து மொழிகின்றது.

“சமுதாயத்தில் பெண் ஒரு மதிப்புமிக்க பயனுள்ள அங்கமாவாள். அவள் பிறருக்கு முன்மாதிரியாய் இருக்கும் பட்சத்தில் அவள் ஒரு நல்ல மனைவியாக, நல்ல தாயாக. வீட்டை நன்கு நிர்வகிப்பவளாக, இருப்பதில் நிறைவைத் தருபவள்”[43] என்பார் சில்வியா பீல்டுமேன். திருவிவிலியம் ஒரு நல்ல மனைவி கணவனுக்கு நன்மைகளையே தன் வாழ்நாள் முழுமையும் செய்கின்றாள் என்பதனை,

“நல்ல மனைவி தன் வாழ்நாள் முழுவதும் அவனுக்கு நல்லதையே செய்வாள். சுறுசுறுப்புடன் அவள் வேலை செய்வாள். அயர்வின்றி நாள் முழுவதும் ஊக்கமுடன் உழைப்பாள். எளியவனுக்கு உதவி செய்யத் தன் கையை நீட்டுவாள். வறியவனுக்கு வயிறார உணவளிப்பாள். தன் இல்லத்தின் அலுவல்களில் கண்ணும் கருத்துமாக இருப்பாள்.” (நீதி: 31: 12, 17, 20, 29)

என வரும் வசனத்தின் மூலம் எடுத்துரைக்கின்றது.

பெண்ணிற்கு அமைய வேண்டிய வாழ்வியல் ஒழுக்கங்களுள் மிகவும் இன்றியமையாதது கற்பு என்பதாகும். கற்பு என்பதற்கு,

“கற்பு – புதிய கூட்டுறவான கணவனே இனி உயிர்த்துணைவன் எனவும், அவனோடு கூடிவாழும் இல்வாழ்வே சிறந்தது கொள்ளும் மன உறுதி”[44]

“இவையே கற்பென்னும் கலங்கா நிலைமை”[45]

என விளக்கம் அளிப்பர் சான்றோர். கற்பு என்பது தன்னைத்தான் கொண்டொழுகும் தன்மை உடையதோர் பண்பு ஆகும். எனவேதான் வள்ளுவர் தன்னைக் காத்துக் கொள்ளாத பெண்ணைச் சிறையில் வைத்தும் காத்தல் என்பது இயலாது என்று உரைக்கின்றார். இதனை உணர்த்தும் திருக்குறள்,

“சிறைகாக்கும் காப்புஎவன் செய்யும் மகளிர்

நிறைகாக்கும் காப்பே தலை” (குறள்: 57)

என்பதாகும். திரிகடுகம் கற்பு நெறி இன்றி இல்லத்தின் எல்கை கடந்து வெளியேறும் பெண்ணானவள் மழையினைக் கெடுக்கும் கோள் ஆவாள் எனக் குறிப்பிடுகின்றது. இதன்வழி கற்புநெறியில் இருந்து தவறிய பெண்ணானவள் தன் இல்லத்தில் வாழ்பவர்களுக்கு மட்டுமன்று. சமூகத்திற்கும் தீங்கு பயப்பவளாய் அமைகின்றாள் என்பதனை.

“-----------------------------------------------------------------

இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்

வல்லே மழையருக்குங் கோள்'' ( திரி: 50 )

என்ற பாடலானது வெளிப்படுத்தும். எனவேதான் திருவள்ளுவர்,

''பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்

திண்மையுண் டாகப் பெறின்.'' (குறள்: 54)

எனக் குறித்தார். திரிகடுகம் ''பெண்ணுக்கு அணிகலம் நாணுடைமை'' (பா.52) எனக் குறிப்பிடும். திருவிவிலியமும் ஒருபெண்ணிற்கு உண்மையான அழகு எனப்படுவது புறத்தோற்றத்தால் வருவது அன்று. மனத்தின் பண்புகளால் அமைவது என்று குறித்து நிற்கும். இதனை,

''முடியை அழகுபடுத்தல் பொன்நகைகளை அணிதல் ஆடைகளை அணிதல் போன்ற வெளிப்படையான அலங்காரமல்ல. மாறாக மனித உள்ளத்தில் மறைந்திருக்கும் பண்புகளாகிய பணிவும் அமைதியுமே உங்களுக்கு அழியாத அலங்காரமாய் இருக்கட்டும்'' (1பேது:3:3 - 4) என வரும் வசனங்களால் அறிய முடிகின்றது.

இல்லத்தலைவியானவளிடத்து நல்ல பண்புகள் அமையாது ஒழியின் அவ்வில்லத்தான் எத்தகைய செல்வத்தினைப் பெற்று இருந்தாலும் அதனால் ஒரு பயனும் விளையப்போவதில்லை என்பதனை,

''இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்

இல்லவள் மாணாக் கடை'' (குறள்: 53 )

என வரும் திருக்குறள் எடுத்துரைக்கும். முதுமொழிக்காஞ்சி,

''தாரமா ணாதது வாழ்க்கை யன்று'' (முதுமொழி: 2)

எனக் குறிக்கும். நாலடியார் மேகங்கள் தவழும் உயர்ந்த மாளிகையாய்ச் சிறப்பமைந்த பாதுகாப்புடையதாய் மணிகளால் இழைக்கப்பட்ட விளக்குகள் அங்கங்கும் இருந்து ஒளிவிடினும் பயனில்லை. மாட்சிமை வாய்ந்த விரும்பத்தக்க மனைவி இல்லாத வீடு கண்கொண்டு பார்த்தற்கியலாததொரு கொடிய காடாகும் என்பதனை,

''மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்

இழைவிளக்கு நின்றமைப்பின் என்னாம்? -விழைதக்க

மாண்ட மனையாளை யில்லாதான் இல்லகம்

காண்டற் கரியதோர் காடு'' (நாலடி: 361)

என்ற பாடல்வழி எடுத்துரைக்கின்றது. தமிழ் அறஇலக்கியங்களின் இத்தகைய சிந்தனையை அடியொற்றியதாய்த் திருவிவிலியமும்,

''நல்ல மனைவியே உங்களுக்குக் கிடைக்கும் நல்ல சொத்து, ஆண்டவருக்கு அஞ்சி நடப்போர் பெறும் செல்வங்களுள் ஒன்றாக அவளும் அருளப்படுவாள்'' (சீராக் 26: 3)

எனக் கூறி மாந்தரை ஆற்றுப்படுத்துகின்றது.

புகழை விரும்பிய இல்லாளை மனைவியாகப் பெறாதவர்க்குத் தம்மை இகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்க ஏறு போல நடக்கும் பெருமித நடை இல்லை எனத் திருக்குறள் குறிப்பதனை,

''புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்

ஏறுபோல் பீடு நடை'' (குறள்: 59)

என்பதனால் அறிய இயலும். திருவிவிலியம் ஒரு கணவன் தான் பெருமையுறும் வண்ணம் நல்லியல்புகளை உடைய மனைவியைப் பெறுவது கடவுளால் அவனுக்கு அருளப்பெற்ற வரம் என்றும் அத்தகைய மனைவியே கணவனை மகிழ்விக்கின்றாள் என்றும் அறிவுறுத்துகின்றது. இதனை,

''தன் கணவனை மதிக்கும் மனைவியை ஞானி என அனைவரும் கண்டு கொள்வர், தன் கணவனை மதிக்காத செருக்குற்ற மனைவியை இறைப்பற்றில்லாதவள் என்று அனைவரும் அறிந்து கொள்வர், நல்ல மனைவியை அடைந்த கணவன் பேறுபெற்றவன் ஆவான். அவனுடைய வாழ்நாளின் எண்ணிக்கை இருமடங்காகும்'' (சீராக்:26: 29) என்பதனால் அறிய முடிகின்றது. மேலும் திருவிவிலியம்,

''விவேகமுள்ள மனைவியோ ஆண்டவர் அளிக்கும் கொடை (நீதி: 19.14) என்றும் நல்ல மனைவியை அடைந்தவன் நலமடைவான் (நீதி:18.22) என்றும் திறமை வாய்ந்த மனைவியை பவளத்தை விடப் பெரும் மதிப்புடையவள் (நீதி:31.10) உன் இல்லத்தில் உன் துணைவியார் திராட்சைக் கொடி போல் இருப்பாள்'' (திரு:128.3) எனவும் குறிப்பிடுகின்றது. மேலும் அவளை மணந்த கணவன் ஊர்ப்பெரியோருள் ஒருவனாய் இருப்பான். மக்கள் மன்றத்தில் புகழ் பெற்றவனாயும் இருப்பான் (நீதி: 31: 23) எனவும் குறிக்கின்றது.

திரிகடுகம் மண்ணுலகத்தில், பெரிய, புகழை நிலைநிறுத்தினவனும், பெண்களுள் குற்றமற்ற சிறப்புடைய கற்புடையவளை மனைவியாகப் பெற்ற கணவனும், உண்ணப்படுகின்ற நீர் குறைவு இன்றி கிணறுகளைத் தோண்டி வைத்தவனும், ஆகிய இம் மூவரும் எக்காலத்தும் இறவாத, புகழ் உடலை பெற்றவராவார் என்பதனை,

''மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்

பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானும் - உண்ணுநீர்

கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்

சாவா உடம்பெய்தி னார்'' (திரி: 16)

என்ற பாடலின்வழி விளக்கியுரைக்கின்றது. திருவிவிலியம் நற்பண்புகள் அமைந்த மனைவியின் சிறப்புகளை,

''பண்புள்ள மனைவி தன் கணவனுக்கு மணிமுடியாவாள் இழிவு வருவிப்பவள் அவனுக்கு எலும்புருக்கி போலிருப்பாள்'' (நீதி: 12: 4) என அறிவுறுத்துகின்றது. மனைமாட்சியுடைய மனையாளில்லாத மனை பாழ்மனையை ஒக்கும் என்பதனை,

''-----------------------------பாழொக்கும்

பண்புடையாள் இல்லா மனை'' (நான்: 101)

என விளக்கிடும் நான்மணிக்கடிகை.மனையாளுக்கு மாட்சியாவது நற்குண நற்செயல்கள் ஆகும். அந்நற்செயல்கள் முறையே, துறவிகளை ஆதரித்தல், விருந்தினரை உபசரித்தல், ஏழைகளிடத்து அருளுடைமை முதலியனவாகும் என்பதனை,

''விருந்தும் ஆகிஅம் மெய்மை அன்பினோடு

இருந்து நோக்கி நொந்து இறைவன் சிந்தியா

பொருந்து நன்மனைக்கு உரிய பூவையைப்

பிரிந்தளாய் கொலோ நீயும் பின்'' [46]

என்ற கம்பராமாயணப்பாடலும் உணர்த்துகின்றது. பெண்கள் தம் கணவனை வழிபாடு செய்வார் ஆயின் புத்தேளிர் வாழும் உலகின் கண் அவரால் பெருஞ்சிறப்பினைப் பெறுவர் எனத் திருக்குறள் பெண்டிரைப் போற்றியுரைத்தமைக்கு,

‘‘பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்

புத்தேளிர் வாழும் உலகு.’’ (குறள்: 58)

என்ற குறளானது சான்றாம். திருவிவிலியம் கணவன்மேல் உண்மையான பற்றுக்கொண்ட மனைவியின் சிறப்பினை,

‘‘பற்றுள்ள மனைவி தன் கணவரை மகிழ்விக்கின்றாள், அவன்தன் வாழ்நாள் முழுவதும் அமைதியாகக் கழிப்பான்’’ (சீராக்: 26:2) என எடுத்து மொழிகின்றது. மேலும்,

‘‘பெண்கள் அன்பினுடைய நாகரிகத்துக்கான விதைகளை விதைப்பவர்கள். மரியாளுடைய தாய்மை இதயம், எல்லா மனித துரதிஸ்டங்களுக்கும் திறந்தே உள்ளது, மேலும், பெண்ணினுடைய ஆளுமை வளர்ச்சியானது பெண்களைக் கருணைக்கான அர்ப்பணிப்பிற்கு அழைத்துச் செல்கின்றது என்பதையும் நினைவுபடுத்துகின்றது. இவ்வாறு, இதயத்தினுடைய மதிப்பீட்டினால் மிகவும் தூண்டப்பட்டு பெண்ணானவள் தன்னையே கொடுப்பதற்கான ஒருஉயர்ந்த பண்பைக் காட்டுகின்றாள். பெண்மை ஆளுமையை உறுதிசெய்வதற்காக தன்னையே மாதிரியாகக் கொடுக்கின்ற (offering selfish models for affirming the feminine personality) நம் காலகட்டத்தல் வாழ்கின்ற அனைவருக்கும் ஒளியூட்டக்கூடிய மற்றும் புனிதம் நிறைந்த ஆண்டவருடைய தாயினுடைய உருவமானது, மற்றவர்களுக்காக தன்னையே கொடுப்பதனால் மற்றும் தன்னையே மறப்பதனால் மட்டுமே ஒருவருடைய வாழ்க்கைக்கான இறைத்திட்டத்தின் உறுதியான முழுமையை அடைவது சாத்தியமாகும் என்பதைக் காட்டுகின்றது. ஆகவே, மனிதத் துன்பத்தினுடைய சூழ்நிலைகளுக்கு ஆறுதலையும் இரக்கத்திற்கான உணர்வுகளையும் மரியாளுடைய பிரசன்னம் தூண்டுகின்றது. மற்றும் ஏழைகள், நோயாளிகள் மற்றும் தேவையில் இருக்கின்ற துன்பப்படும் அனைவருடைய வலியையும் போக்குவதற்கான ஆர்வத்தையும் பெண்களில் எழுப்புகின்றது. மரியாளோடு கொண்டுள்ள சிறப்பு உறவின் மூலம் வன்முறைக்கு அன்பினால் பதில் தரக்கூடிய நாகரிகத்தினுடைய விதைகளை உலகத்தில் விதைப்பதன் மூலம், வரலாற்றின் அநேக தருணங்களில் பெண்ணானவள் கடவுளுடைய நெருங்கிய உடனிருப்பை, பாவத்தினாலும் பகைமையினாலும் காயப்படுத்தப்பட்ட மனிதகுலத்தினுடைய எதிர்பார்ப்புக்களுக்குத் தன்னுடைய நன்மைத்தனம் மற்றும் சாந்த குணத்தினால் உணரச்செய்கின்றாள்’’[47] எனப் போப்ஜான்பால் உரைப்பதன்மூலம் பெண் இல்லறத்தின்கண் செய்து பெற வேண்டிய தியாகத்தின் பெருமையினை திருவிவிலியம் மரியாளின் வாழ்க்கையின்வழி எடுத்துரைத்து நிற்பதனை அறிய முடிகின்றது.

**இல்லறத்தில் ஆண்:**

தமிழில் தோற்றம் பெற்றுள்ள அற இலக்கியங்கள் ஓர் ஆண்மகனானவன் தன்மேல் அன்பு பாராட்டுகின்ற பெண்ணின்பால் ஆழ்ந்த காதல் கொண்டவனாய் இருத்தல் வேண்டும் என அறிவுறுத்துகின்றன. திருக்குறள் தலைவன் தன் தலைவிக்கும் தனக்குமான அன்புறவினை உயிருக்கும் உடம்பிற்குமான தொடர்பாக எடுத்துரைத்துச் சிறப்பிக்கின்றான். இதன்வழி, உயிரும் உடம்பும் ஒன்றினை ஒன்று நீங்கி வாழாதது போலத் தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் நீங்கி வாழும் தன்மை உடையவர்கள் இல்லை என்பது பெறப்படும்.

“உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன

மடந்தையொடு எம்மிடை நட்பு” (குறள்: 1122)

திருவிவிலியமும் இத்தகைய தன்மை கொண்ட தலைவன், தலைவியரைக் காட்டுகிறது. மேலும் திருக்குறள் தலைவன் போல ஆண்கள் தங்கள் மனைவியை நேசித்து வாழ வேண்டும் என்றும் அறிவுறுத்துகிறது.

இதனை,

“இவளே என் எலும்பின் எலும்பும் தசையின் தசையும் ஆவாள்” (தொடக்:2:23)

“அப்போது அவள் கணவர் எல்க்கானா அவளை நோக்கி அன்னா! ஏன் அழுகிறாய்? நீ உண்ணவில்லை ? நீ என் மன வருத்தம் அடைகிறாய்? நான் உனக்குப் பத்துப் புதல்வரை விட மேலானவன் அன்றோ ? என்பார். (1சாமு:1:8)

அவ்வாறே ஆண்களே! உங்கள் மனைவியர் வலுக்குறைந்தவர்கள் என்பதை நீங்கள் உணர்ந்து, அவர்களோடு இணைந்து வாழுங்கள்.வாழ்வு தரும் அருளுக்கு உடன் உரிமையாளராக இருப்பதால் அவர்களுக்கு மதிப்புக் கொடுங்கள், அப்போதுதான் நீங்கள் தடையின்றி இறைவேண்டல் செய்யமுடியும்” (1பேது:3:7) எனவரும் திருவிவிலியச் செய்திகளால் அறிய முடிகிறது.

திருக்குறள் காட்டும் தலைவன் தன் தலைவியுடன் தன் உறவானது உயிரிடத்து உடம்பிற்கு உரிய தொடர்பு என உவமை காட்டுகிறான். மேலும் அவள் தன்னை விட்டு நீங்குவது உயிர் உடலை விட்டு நீங்குவதற்கு ஒப்பானது என்றும் உரைக்கின்றான். இதனை,

“வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்

அதற்கன்னள் நீங்கும் இடத்து” (குறள்:1124 )

என்ற திருக்குறள் எடுத்துக்காட்டும். திருவிவிலியமும் ஒரு நல்ல கணவன் தன் மனைவிக்குச் செய்ய வேண்டிய அன்பின் மாண்பினைச் சுட்டுகின்றது.

''திருமணமான ஆண்களே! ---- தன் மனைவியின் மீது அன்பு கொள்கிறவர் தன் மீதே அன்பு கொள்கின்றவர் ஆவார். தம் உடலை எவரும் வெறுப்பதில்லை. அதைப் பேணி வளர்க்கிறார். (எபே:5.25 -29) என வரும் வசனங்கள் மேற்கண்ட கூற்றிற்குச் சிறந்த அரணாகும்.

புணர்ச்சி இனிதாதற்கு வேண்டியதாகிய ஊடல், அதனை அளவறிந்து நீங்கல், அதன்பின் நிகழ்வதாய புணர்ச்சி என்னும் இவைதாம் வரைந்து கொண்டு காமத்தை இடைவிடாது எய்தியவர் பெற்ற பயன்கள் ஆகும் என்பதனைத் திருக்குறள்,

''ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்

கூடியார் பெற்ற பயன்'' (குறள்: 1109 )

என எடுத்துரைக்கும்.

''வாழ்க்கை என்பது தனித்திருப்பது அல்ல. சார்ந்திருப்பது, ஒருவரைச் சார்ந்திருப்பதல்ல. ஒருவருக்கு ஒருவர் சார்ந்திருப்பது என இறையன்பு சுட்டுவதாய் வாஸந்தி குறிப்பிடுவார்.''[48] இவ்வாறு சார்ந்து வாழும் வாழ்க்கையில் திருக்குறள் உணர்த்தும் செய்தியினை அடியொற்றியே திருவிவிலியமும் ஒரு கணவன் நன்கு உண்டு, உடுத்தித் தனக்குக் கிடைத்த வாழ்நாள் முழுவதும் மனைவியுடன் இன்புற்று இருத்தல் வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது. இதனை,

''ஆகவே, நீ நன்றாய்ச் சாப்பிடு… எப்போதும் நல்லாடை உடுத்து... இவ்வுலக வாழ்க்கை வீணெனினும், உனக்குக் கிடைத்துள்ள வாழ்நாள் முழுதும் நீ உன் மனைவியோடு இன்புற்றிரு... நீ செய்ய நினைக்கும் செயல் எதுவோ அதைச் செய்; அதையும் உனக்கு ஆற்றல் இருக்கும்போதே செய்'' (சபை: 9: 7-10) என வரும் வசனங்களால் அறியலாம்.

**பெற்றோரின் கடமை:**

இல்லறத்தில் பெற்றோர்கள் என்பவர்கள் தங்கள் குழந்தைக்கு சிறந்த 'வழிகாட்டியாய் அமைகின்றார். குழந்தைகள் அவர்களிடமிருந்து வாழ்க்கைக்குத் தேவையான பல விடயங்களை கற்றுக் கொள்கிறார்கள். ஆதலால் பெற்றோர்கள் பிழையின்றியும், தவறின்றியும் நடக்க வேண்டும். ஏனெனில், அவர்களது செயலைப் பின்பற்றியே அவர்களது பிள்ளைகள் வளரப் போகின்றனர் என்பதை அவர்களது மனதில் பதித்துக் கொள்ள வேண்டும்.

“குடும்பம் என்கிற சமூக அமைப்பில் குழந்தைகள் பிறக்கின்றனர். குழந்தைகள் பாதுகாப்பும் பயிற்சியும் குடும்பத்தில் தரப்படுகிறது. குழந்தை பிறப்பிற்குப் பிறகு தாய் தந்தையர் கவனிப்பும் பல வருடங்களுக்குத் தேவைப்படுகிறது. குடும்ப வாழ்ககையில்தான் குழந்தைகள் தங்கள் சமூகத்தில் இடம்பெறும் பண்பாடுகளைப் பற்றி அறிந்து கொள்கிறார்கள்” [49] என்கிறார் வாஸந்தி மேலும்,

“வளரும் சூழல் இளம்பருவத்தில் குழந்தைகளின் மனதில் ஏற்படுத்தும் தாக்கங்கள் அவர்கள் ஆழ்மனத்தில் நன்கு பதிந்து விடுகின்றன. இவ்வாறு ஆழ்மனத்தில் உறையும் எண்ணங்கள் பின்னர் குமரப்பருவத்தில் அவர்கள் ஆளுமையை உருவாக்குவதில் பெரும்பங்கு வகிக்கின்றன. இந்த ஆளுமை வலுவாகவும் வெளிப்படலாம். சிதைவாகவும் வெளிப்படலாம்”[50] எனவும் குறிப்பார் க. த. திருநாவுக்கரசு. எனவேதான் தமிழ் இலக்கியங்கள்,

“அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்”[51]

என்றும் போற்றுகின்றன. ஈன்று புறந்தருதல் தாயின் கடமையாகின்றது. குழந்தைகளைச் சான்றோனாக உயரச் செய்வது தந்தையின் கடமைகளுள் மிகவும் இன்றியமையாததாக அமைகின்றது. தந்தை என்பவன் மகனைக் கண்டிக்கும் இடத்துக் கண்டித்தும் அன்பு காட்டும் இடத்து அன்பு காட்டியும் வளர்த்தல் வேண்டும். உலகின் சிறந்த தகுதிகளை மகன் பெறுமாறு ஆற்றுப்படுத்துதல் வேண்டும். இங்கு தகுதி என்பது “அன்பு. அன்பின் படர்வான பாசம், நடுநிலைமை, அடக்கமுடைமை, சமுதாய அறிவு, குறிப்புணர்தல், பிறர்க்கு உதவும் மனப்பான்மை, பிறருக்கு உதவும் செயற்பண்பு, தன்னலமற்ற தொண்டு மனப்பான்மை, கால இடச்சூழுலுக்குகேற்றபடி நடக்கும் திறமை, தடைகளைத் தாங்கி முயற்சியில் தளராப் பொறுமை, வெற்றி கிட்டும் வரை விடாதுழைக்கும் விடா முயற்சி, முன்னறிந்து செயலாற்றும் திறம், திட்டமிட்டுச் செயலாற்றும் பண்பு ஆகியவற்றை உட்கொண்ட முழுமைத்தொகுதி ஆகும்.”[52] இத்தகைய சிறப்புகளைப் பெற்றவனே சான்றோன் எனப்படுவான். திருவள்ளுவர் மேற்கண்ட உயரிய பண்பு நலன்களோடு மகனை வளர்த்தெடுத்து கற்றோர் நிரம்பிய அவையிடத்து முந்தியிருக்கச் செய்தல் தந்தையின் கடமை என அறிவுறுத்துகின்றது. இதனை.

“தந்தை மகற்காற்று நன்றி அவையத்து

முந்தி இருப்பச் செயல்” (குறள்:76)

என்பதனால் அறிய முடிகின்றது. பழமொழி நானூறும்

“எந்நெறியானும் இறைவன் தன் மக்களை

செந்நெறிமேல் நிற்பச் செயல் வேண்டும’’ (பழமொழி:332)

என எடுத்துரைக்கும். திருவிவிலியமும் ஒரு தந்தையாகப்பட்டவன் தன் மகனைச் சிறந்தவனாய் வளர்த்தெடுப்பதற்கு பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது.

‘‘எவர் களங்கமற்ற நேர்மையான வாழ்க்கை நடத்துகின்றாரோ அவருடைய பிள்ளைகள் அவருடைய காலத்திற்குப் பின் நற்பேறு பெறுவார்கள்’’ (நீதி: 20-: 7)

‘‘முதியோருக்கு அவர்களுடைய பேரப்பிள்ளைகள் மணிமுடி போன்றவர்கள்.பிள்ளைகளின் பெருமை அவர்களின் தந்தையரே’’ (நீதி: 17: 6)

‘‘இன்று நான் உனக்குக் கட்டளையிடும் இவ் வார்த்தைகள் உன் உள்ளத்தில் இருக்கட்டும். நீ அவற்றை உன் பிள்ளைகளின் உள்ளத்தில் பதியுமாறு சொல். உன் வீட்டில் இருக்கும்போதும் உன் வழிப்பயணத்தின் போதும் நீ படுக்கும் போதும் எழும் போதும் அவற்றைப் பற்றிப் பேசு’’ (இணை:6:6-7) எனக் குறிப்பிடுகின்றது திருவிவிலியம்.

**இல்லறத்தில் நன்மக்கள்:**

இல்லற வாழ்வின் பயன் நன்மக்களைப் பெறுவது ஆகும்.எனவேதான் வள்ளுவர் இல்லறத்தின் மதிப்பாக மக்கட்பேற்றினை வைத்துள்ளார். இதற்கு உரைவகுக்கும் பரிமேலழகர், ‘‘அ.தாவது இருபிறப்பாளர் மூவரானும் இயல்பாக இருக்கப்படும் கடன் மூன்றனுள் முனிவர் கடன் வேள்வியாலும் தேவர் கடன் வேள்வியானும் தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் அல்லது இறுக்கப்படாமையின் அக்கடன் இறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல் அதிகார முறையை மேலே பெறப்பட்டது’’[53] என்பார்.

‘‘விருந்தோம்பலுக்கு அடுத்த நிலையில் நன்மக்களைப் பெறுவது இல்வாழ்க்கையின் பெருநோக்கமாகக் கருதப்பட்டது, மக்களைப் பெறுவது இப்பிறவியில் புகழையும் தங்கள் குடிவழி அறம் நிலைக்கவும் வழிவகுக்கும் என்று அவர்கள் நம்பினர்’’[54] என்பார் க.த. திருநாவுக்கரசு. எனவேதான் மனைமாட்சியின் நன்கலம் ‘நன்மக்கட்பேறு’ என்பதனை,

‘‘மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்

நன்கலம் நன்மக்கட் பேறு’’ (குறள்: 60)

என்னும் திருக்குறளில் வைத்து உரைத்தார் திருவள்ளுவர். திருவிவிலியம்

‘‘பிள்ளைகள் ஆண்டவர் அளிக்கும் செல்வம் மக்கட்பேறு

அவர் அளிக்கும் பரிசில்'' (திரு: 127:3)

எனக் குறிப்பிடுகிறது. திருக்குறள் இவ்வுலகில் குழலின் இசையும் யாழின் இசையும் அருமையுடைத்து என்று மொழிபவர்கள் தங்கள் குழந்தையின் மழலைமொழிகளைக் கேளாதவர்களே ஆவர் என்பதனை,

''குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்

மழலைச்சொல் கேளா தவர்'' (குறள்: 66)

என வரும் திருக்குறள் வழி விளக்கும். திருவிவிலியம் குழந்தைகளின் மொழியானது பெற்றோருக்குப் பகைவரை அடக்கும் வலிமையையும் தரும் என்பதனை,

''பாலகரின் மழலையிலும் குழந்தைகளின் மொழிகளிலும் வலிமையை உறுதிப்படுத்தி உம் பகைவரை ஒடுக்கினீர், எதிரியையும் பழிவாங்குவோரையும் அடக்கினீர்'' (திரு: 8:2 )

என்ற திருப்பாடல் வசனத்தின் மூலம் எடுத்துரைக்கின்றது. மேலும் திருக்குறளானது இவ்வுலகில் வாழ்கின்ற மாநிலத்தவர்க்குத் தம் அறிவினும் தம் மக்கள் அறிவுடையராக இருத்தல் பெரும் மகிழ்ச்சியைத் தரும் செயலாகும் என்பதனை,

''தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து

மன்னுயிர்க்கு எல்லாம் இனிது'' (குறள்: 68)

என எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம் அறிவுள்ள நன்மக்களைப் பெற்ற தந்தையின் மகிழ்வினை,

''நீ உன் தந்தையையும் தாயையும் மகிழ்விப்பாயாக;

உன்னைப் பெற்றவளைக் களிகூரச் செய்வாயாக" (நீதி: 23:24-25)

என வரும் வசனங்களின்வழி எடுத்துரைக்கின்றது. மேலும் நன்மக்களைப் பெறாத பெற்றோர் அடையும் இழிவினை.

''நற்பயிற்சி பெறாத மகளைப் பெற்ற தந்தை இகழ்ச்சி அடைவார்,

அத்தகைய மகளோ அவருக்கு இழிவைக் கொணர்வாள்'' (சீராக்: 22:3)

என்றும் சுட்டுகின்றது. ஒருவன் பெறும் பேறுகளுள் அறிதற்குரிய மக்களைப் பெறுதலே சிறப்புடைத்து என்பதனையும் உணர்த்தும் திருக்குறள்,

“பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த

மக்கட்பேறு அல்ல பிற.” (குறள்: 61)

என்பவையாகும். மேலும் நாலடியார்,

“சிதலை தினப்பட்ட ஆல மரத்தை

மதலையாய் மற்றதன் வீழுன்றி யாங்கு

குதலைமை தந்தைக்கண் தோன்றிற்றான் பெற்ற

புதல்வன் மறைப்பக் கெடும்” (நாலடி: 197)

எனக் குறிக்கும். திருவிவிலியமும்,

“ஞானமுள்ள மகன் தன் தந்தையை மகிழ்விப்பான்.அறிவற்ற மகனோ தன் தாயை இகழ்வான்” (நீதி:15:20) என உணர்த்துகின்றது. ஆசாரக்கோவை, நன்மகன் எனப்படுபவன் அரசன், ஆசிரியன், தாய், தந்தை, தனக்கு மூத்தோன் என்பவர்களைத் உயர்ந்தவர்களாகப் போற்றி அவர்களைத் தேவரைப்போலத் தொழுதெழுதல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறது.

இதனை விளக்கும் பாடல்,

“அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன்

நிகரில் குரவர் இவரிவரைத்

தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே

யாவருங் கண்ட நெறி” (ஆசார:16)

என்பதாகும். திருவிவிலியம் நன்மகன் எனப்படுபவன் தாயையும் தந்தையையும் மதித்து நடத்தல் வேண்டும் எனக் குறிப்பதுடன் தன் பெற்றோரைக் கொடுமைப்படுத்தும் மகன் வெட்கக்கேட்டையும் இழிவையும் பெறுவான் என்றும் உணர்த்துகின்றது. இதனை.

“உன் தந்தையையும் தாயையும் மதித்து நட” (விடுதலை:20:21)

என்ற திருவிவிலிய வசனத்தின் மூலம் அறிய முடிகின்றது. மேலும் திருக்குறள் ஒருமகன் தன் தந்தைக்கு செய்ய வேண்டிய உதவி யாதெனில் அவனை மகனாகப் பெறுவதற்கு இவன் தந்தை

என்ன தவம் செய்தானோ? எனப் பிறர் புகழ்ந்துரைக்கும்படி சிறப்புப் பெறுதலேயாகும் எனக் குறிக்கும். இதனை உணர்த்தும் திருக்குறள்,

"மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை

என்னோற்றான் கொல்எனும் சொல்" (குறள்: 67)

என்பதாகும்.

"நேர்மையான பிள்ளையின் தந்தை மிகவும் களிகூர்வார்;

ஞானமுள்ள பிள்ளையைப் பெற்ற தகப்பன்

அவர் பொருட்டு மகிழ்ச்சி அடைவார்." (சபை: 23:24-25)

"உம் இல்லத்தில் உம் துணைவியார் கனிதரும் திராட்சைக் கொடி போல் இருப்பார். உண்ணும் இடத்தில் உம் பிள்ளைகள் ஒலிவ மரக் கன்றுகளைப்போல் உம்மைச் சூழ்ந்திருப்பர்" (திரு:128:3) என வரும் திருவிவிலியத்தின் வசனங்கள் மேற்கண்ட திருக்குறள் கருத்துகளை ஒத்தமைகின்றன.

**விருந்தோம்பல்:**

ஆணும் பெண்ணும் மனமொன்றி வாழும் இல்லற வாழ்வின்கண் ஆற்ற வேண்டிய அரும் பணிகளுள் மிகவும் இன்றியமையாதது விருந்தோம்பல் என்பதாகும். விருந்து என்பது புதிது என்னும் பொருளில் நிற்றலை,

"விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"[55]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். விருந்தோம்பல் என்பதற்குத் தமிழ் அகரமுதலி "புதிதாய் வருபவரை உண்டி முதலியவற்றால் போற்றுதல்"[56] என்று பொருள் உரைக்கின்றது. கௌரா தமிழ் அகராதி "வேளாண்மை, புதிதாய் வருபவரை உண்டி முதலியவற்றால் உபசரிக்கை"[57] என்று பொருள் உரைக்கின்றது. "தனக்கு இன்னா, பிறர்க்கு இன்னா என்பதனை உணர்ந்து போற்றும் அருளுரை நெறியின் அடிப்படைப்பண்பே விருந்தோம்பலாகும்"[58]

விருந்து என்பது இல்லினுள் புதிதாய் வருபவராகிய விருந்தினரையும் வரவேற்றுப் போற்றுதல் என்னும் தன்மையது ஆகும். திருக்குறள் மனைவியோடு காட்டிற்குச் செல்லாது இல்லத்தில் இருந்து பொருள்களைப் போற்றி வாழும் செயல்கள் எல்லாம் விருந்தினரைப் பேணுதல் பொருட்டே ஆகும் என்பதனை,

“இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி

வேளாண்மை செய்தற் பொருட்டு” (குறள்: 81)

என வரும் குறட்பாவால் உணர்த்தும். திரிகடுகம் விருந்தினர் இல்லாமல் உண்ட பகற்பொழுதானது அறிவுடையோருக்கு நோயாய் அமையும் என்பதனை,

“விருந்தின்றி உண்ட பகலும் திருந்திழையார்-

நோயே உரனுடை யார்க்கு” (திரி: 44)

என எடுத்துரைக்கின்றது. ஆசாரக்கோவை இன்முகத்துடன் வரவேற்றல், இனிய சொல் கூறுதல், போன்ற விருந்து போற்றலின் தன்மைகளை எடுத்துக் கூறுகின்றது. (ஆசாரக்கோவை – 54) திரிகடுகம் மனைவி என்பவள் விருந்தினரைப் போற்றலால் கணவனுக்கு நட்பினளாவாள். மேலும் நாள்தோறும், இல்லறத்தை வழுவாது காத்தலால், பெற்ற தாயும் ஆவாள். தொல்குடியின் மக்களைப் பெறுதலால் மனையாளாவாள். இவ்வாறு விருந்தோம்பல் முதலிய இம் மூன்று செயல்களும் கற்பு உடைய பெண் மேற்கொண்ட, கடமைகளாம் எனச் சுட்டுகின்றது. இதனை எடுத்துரைக்கும் பாடல்,

“நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்

இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் - தொல்குடியின்

மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்

கற்புடையாள் பூண்ட கடன்” (திரி: 64)

என்பதாம். திருவிவிலியம் இவ்வாறு விருந்தினர்களை வரவேற்று விருந்தளிக்கும்போது நடந்து கொள்ள வேண்டிய தன்மையினை,

“அவர்கள் விருந்தோம்பல், நன்மையில் நாட்டம், கட்டுப்பாடு, நேர்மை, அர்ப்பணம், தன்னடக்கம் ஆகியவற்றைக் கொண்டிருக்க வேண்டும்” (தீத்: 1 : 8) என்று வரையறுக்கின்றது.

திருவள்ளுவர் அனிச்சப்பூ மோந்த பொழுதேயன்றிக் குழையாது, ஆனால் விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர் என்பதனை,

“மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து

நோக்கக் குழையும் விருந்து” (குறள்: 90)

என்ற குறள்வழி எடுத்துரைப்பார். இதன் மூலம் விருந்தினரைச் சேய்மைக்கண் கண்டபொழுது இன்முகமும் அவர்கள் அருகில் வந்தவழி இன்சொல்லும் விருந்து போற்றும் வழி நன்று ஆற்றலும் என்பன விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்று பண்புகள் ஆகும் என்பது தெரிய வரும். இவற்றுள் இன்முகம் இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடி நீங்குதலின், தீண்டியவழி அல்லது வாடாத அனிச்சப் பூவினும் விருந்தினர் மெல்லியர் என்பது பெறப்படும். இதனால் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது. திருவிவிலியம்,

''முணுமுணுக்காமல் ஒருவருக்கொருவர் விருந்தோம்புங்கள்( 1 பேதுரு: 4: 9)

என அறிவுறுத்துகின்றது. அமிழ்தமே ஆயினும் தன்னை நோக்கி வந்த விருந்து தன் இல்லின் புறத்ததாக இருக்கத் தானே உண்ணுதல் என்பது விரும்பும் செயலன்று என்பதனை,

''விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா

மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'' (குறள்: 82)

என்ற குறளானது வெளிப்படுத்தி நிற்கும். ஆசாரக்கோவை என்னும் இலக்கியம், நல்லொழுக்கத்தில் இருந்து தவறாதவர்கள் விருந்தினர், மூத்தோர், பசுக்கள், பறவைகள், பிள்ளைகள் என்று சொல்லப்பட்ட இவர்களுக்கு, உணவு கொடுக்காமல் எக்காலத்திலும் தாம் உண்ணமாட்டார்கள் எனக் குறிக்கும்.

இதனை உணர்த்தும் பாடல்,

''விருந்தினர் மூத்தோர் பசுசிறை பிள்ளை

இவர்க்கூண் கொடுத்தல்லா லுண்ணாரே யென்றும்

ஒழுக்கம் பிழையா தவர்'' (ஆசார: 21)

என்பதாகும். மேலும் இந்நூலானது விருந்து போற்றும் நாட்களையும் சுட்டியுரைக்கின்றது. தனது கலியாண நாளின்கண்ணும், தேவர்களுக்குரிய சிறப்பு நாளின் கண்ணும், பிதிரர்கட்குச் சிறப்புச் செய்யும் நாளின் கண்ணும், விழா நாளின்கண்ணும், வேள்வி செய்யும் நாளின்கண்ணும், எனப்படும் ஐவகைப்பட்ட காலத்தும், விருந்திற்கும் விருந்தினர்க்கும், சோறிடுக என உரைத்து நிற்பதனை,

''பெய்க விருந்திற்குங் கூழ்'' (ஆசார: 48)

என்ற பாடலால் அறிய முடிகின்றது. திருவிவிலியம் ஒருவன் தன் மனையகத்து வந்த விருந்தினர்களைப் போற்றிய பின்பே தான் உண்டல் வேண்டும் என்பதனை,

''விருந்தினர்களுள் நீயும் ஒருவனாக நடந்து கொள்

முதலில் மற்றவர்களைக் கவனி: பிறகு நீ

பந்தியில் அமர்ந்து கொள்'' (சீராக்:32:1)

என அறிவுறுத்துகின்றது. திருக்குறள் எவனொருவன் சென்ற விருந்தைப் பேணிப் பின் வருவிருந்தைப் பார்த்திருக்கின்றானோ அவன் வானிலுள்ளார்க்கு நல் விருந்து ஆவான் என்பதனை,

''செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்

நல்விருந்து வானத் தவர்க்கு'' (குறள்: 86)

என உணர்த்திடும். ஏலாதி, தன்னிடத்து விரும்பி வந்தோருக்கு இல்லையென்னாது இசைந்தமட்டும் உதவுவோனைத் தேவர்கள் தங்களுடனிருந்து மகிழ விரும்புவர் எனக் குறிக்கும். இதனை வெளிப்படுத்தும் பாடல்,

''-----------------------------------------------நசையவர்க்குக்

கூடுவ தீவானைக் கொவ்வைபோல் செவ்வாயாய்

நாடுவர் விண்ணோர் நயந்து'' (ஏலாதி: 34)

என்பதாகும். திருவிவிலியம் அன்னியரை வரவேற்று விருந்து போற்றுகிறவர்கள் வானதூதர்களை மகிழ்ச்சிப்படுத்துகிறார்கள் என்பதனை,

''அன்னியரை வரவேற்று விருந்தோம்ப மறவாதீர்கள், இவ்வாறு விருந்தோம்பியதால் சிலர் தங்களை அறியாமலே வான தூதர்களை மகிழ்ச்சிப்படுத்தியதுண்டு'' (எபி: 13: 2)

என எடுத்துரைக்கின்றது. ஏலாதி கடன்பட்டவர்களுக்கும், தம்மைக் காப்பவர் ஒருவரும் இல்லாதவர்களுக்கும், பொருள் இல்லாதவர்களுக்கும், கால் முடம்பட்டவர்களுக்கும், முதியவர்களுக்கும் பெற்றோர் இல்லாதவர்களுக்கும் மனமியைந்து அன்புடையவர்களாய்த் தம் வீட்டில் உணவு கொடுப்பித்து உண்பவர், பூமியின்மீது நால்வகைப் படைகளையுமுடைய மன்னர்களாய் மனைவி மக்களுடன் கூடி இன்பமுடன் வாழ்வார்கள் என்பதனை,

''கடம்பட்டார் காப்பில்லார் கைத்தில்லார் தங்கான்

முடம்பட்டார் மூத்தார்மூப் பில்லார்க் - குடம்பட்

டுடையரா யில்லுள் ஈத்துண்பார் மண்மேல்

படையராய் வாழ்வார் பயின்று'' (ஏலாதி: 53)

எனக் குறிப்பிடும். திருவிவிலியம்,

''நீர் விருந்து அளிக்கும்போது ஏழைகளையும் உடல் ஊனமுற்றறோரையும் கால் ஊனமுற்றோரையும் பார்வையற்றோரையும் அழையும். அப்போது நீர் பேறு பெற்றவர் ஆவீர். ஏனென்றால் உமக்குக் கைம்மாறு செய்ய அவர்களிடம் ஒன்றுமில்லை. நேர்மையானவர்கள் உயிர்த்தெழும்போது உமக்குக் கைம்மாறு கிடைக்கும்'' (லூக்:14:13:14) என அறிவுறுத்துகின்றது.

**ஒப்புரவறிதல்:**

மனிதனிடத்துக் காணப்பட வேண்டிய உயரிய பண்புகளுள் ஒப்புரவறிதல் என்பது இன்றியமையாதது ஆகும். மனிதன் தன்னை அறிதல் என்பது மட்டும் அவனை முழுமை கொண்ட மனிதனாய் மாற்றாது. தன்னைச் சார்ந்திருக்கும் உலகத்தினை அறிதல் என்பதும் அதற்கு நலம் விளையும் வண்ணம் தன்னைத் தகவமைத்துக் கொள்ளுதல் என்பதும் இன்றியமையாதது அகும். மனிதநேயம் எனக் குறிக்கப்படுவதும் இத்தகைய தன்மையே ஆகும்.

''பிற மனிதரின் அகத்தை உணர்தலும் உறவுகளும் மனித நேயமாக வழங்கப்பெறும் என்கிறது'' [59] ஆக்ஸ்போர்ட் அகராதி.

''மனித இனத்தின் துன்பங்களையும் துயரங்களையும் குறைத்து இன்பங்களை அதிகரிப்பதே மனிதன் என்ற கோட்பாட்டின் அடிப்படை தத்துவம் ஆகும'' [60] என்பதே வாழ்வியல் களஞ்சியம் தரும் விளக்கம் ஆகும்.

''சகமனிதன் மீது கொண்ட அன்பும் மதிப்பும் போன்றவை மனிதநேயம்''[61] என்பது க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் கூறுகிறது. மனிதநேய மாண்பினை கணியன் பூங்குன்றனாரின் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்''[62] என்ற பாடல் தெளிவாக விளக்குகிறது. உலக மக்கள் அனைவரும் உறவினர்கள், உலகம் ஒன்றேயாகும் என்கிற எண்ணம் மனித நேயத்தினுடைய வெளிப்பாடாகும்.

"உலக மக்களிடையே ஒற்றுமை ஓங்கும் மானுடம் போற்றுவதே மனிதநேயம்"[63] எனப்படும் என்ற கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

பரிமேலழகர் "உலக நடையினை அறிந்து செய்தல்.. உலகநடை வேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யுந் தன்மைத்தாகலின், ஒப்புரவு அறிதலென்றார்"[64] எனத் திருக்குறளின் ஒப்புரவு அறிதல் என்னும் அதிகாரத்திற்கு உரை வகுப்பார். மேலும் பரிமேலழகரின் மேற்கண்ட குறிப்பின் வழி ஒப்புரவறிதல் என்பது உலகநடை வேதநடை போன்ற அறநூல்களில் கூறப்படும் தன்மையைப் பின்பற்றி நடத்தல் மட்டுமன்றி தானே தன் அறிவினால் தெளிந்தவற்றைக் கொண்டும் நடத்தல் என்பதும் தெரியவரும்.

ஒப்புரவு செய்வானும் செய்யாதானுமாகிய இருவகைச் செல்வருள், செய்பவனே உயிரோடு கூடி வாழ்பவனாவன், செய்யாதவன் செத்தாருள் ஒருவனாகக் கருதப்படுவான் என்பது திருக்குறள் தரும் அறமாகும். மேலும் உயிருக்குரிய அறிவும் செயலும் இன்மையாயின் நடைப்பிணமென்றும் கருதப்படாது பிணமென்றே இழிந்திடப்படுவான் என்பதனையும் குறிப்பால் உணர்த்தினார் திருவள்ளுவர். அவ்வாறு ஒப்புரவு செய்பவன் தனக்கு என்ன கைம்மாறு வரும் எனக் கருதாது மழையினைப் போல உதவுதல் வேண்டும் என்று குறித்துப் போவார் திருவள்ளுவர்.இதனை,

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு

என்ஆற்றுங் கொல்லோ உலகு" (குறள்: 211 )

என்ற திருக்குறள் விளக்கி நிற்கும். திருவிவிலியமும் திரும்பப் பெற்றுக் கொள்ளும் எண்ணத்துடன் வழங்கப்படும் உதவியினால் ஒரு வகைப் பயனும் விளையப்போவதில்லை எனக் குறிப்பிட்டுரைக்கும்.

"உங்களிடம் கேட்கும் எவர்க்கும் கொடுங்கள்

உங்களுடைய பொருள்களை எடுத்துக் கொள்வோரிடம்

அவற்றைத் திருப்பிக் கேட்காதீர்கள்" (லூக்: 6: 30)

என்ற திருவிவிலிய வசனங்கள் மேற்கண்ட கூற்றிற்குச் சான்றாதரங்களாய் அமையும்.

ஆசாரக்கோவை என்னும் அற இலக்கியம் தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமை, பொறுமை, இன்சொல், எல்லா உயிர்க்கும் துன்பந்தருபவற்றைச் செய்யாதிருத்தல், கல்வி, ஒப்புரவு மிக அறிதல், அறிவு உடைமை, நல்ல இயல்புள்ளவர்களுடன் நட்புச் செய்தல் என்னும்

இவ்வெட்டு வகையும், அறிஞர்களாற் சொல்லப்பட்ட,ஒழுக்கங்கட்கு வித்து ஆகும் எனக் குறிப்பிடுகிறது. இதனை,

‘‘ஒப்புர வாற்ற வறிதல் ----

சொல்லிய ஆசார வித்து’’ (ஆசார: 1)

என்ற பாடலானது விளக்கியுரைக்கின்றது.

‘‘ஏழைக்கு இரங்கி உதவி செய்கிறவர் ஆண்டவனுக்குக் கடன் கொடுக்கின்றார்,

அவர் கொடுத்ததை ஆண்டவரே திருப்பித் தந்து விடுவார்’’ (நீதி:19: 17 )

‘‘நீயோ உன் எதிரி பசியாய் இருந்தால் அவனுக்கு உணவு கொடு.அவன் தாகத்தோடு இருந்தால் அவன் குடிக்கக்கொடு. இவ்வாறு செய்வதால் அவன் தலைமீது எரிதழலைக் குவிப்பாய்’’

( உரோ: 12: 20 )

என வரும் திருவிவிலிய வசனங்கள் திருக்குறளும் ஆசாரக்கோவையும் வலியுறுத்தி நிற்கும் அறங்களை வலியுறுத்துவதாய் அமைந்துள்ளது.

உலகிலுள்ள உயிர்களையெல்லாம் விரும்பி ஒப்புரவு செய்யும் பேரறிவுடையான் செல்வமானது ஊரில் வாழ்பவர்களின் குடிநீர்க்குளம் நிரம்பினாற் போன்றதாகும். இருதிணையுயிர்களிடத்தும் அன்பு செய்பவனைப் பேரறிவாளன் என்றார் வள்ளுவர், மேலும் ஊருணி என்ற உவமத்தால் மாபெரும் செல்வம் என்பதும் ஒப்புரவாளன் வாழுங் காலமெல்லாம் எல்லார்க்கும் என்றும் எளிதில் உதவும் என்பதும் பெறப்படும். இதனை,

‘‘ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்

பேரறி வாளன் திரு’’ (குறள்:215)

என்ற திருக்குறள் வழி அறிய முடிகின்றது. இவ்வாறு திருக்குறள் வலியுறுத்தி நிற்கும் அறமானது திருவிவிலியத்தாலும் உரைக்கப்படுவதனை,

‘‘ஈகைக் குணம் கொண்டோர் வளமுடன் வாழ்வார், குடிநீர் கொடுப்போர் குடிநீர் பெறுவார்’’

(நீதி: :11 25)

‘‘மிகச் சிறியோராகிய என் சகோதரர் சகோதரிகளுள் ஒருவருக்கு நீங்கள் செய்ததையெல்லாம் எனக்கே செய்தீர்கள் என உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்’’. (மத்: 25: 40)

என வரும் வசனங்களால் அறியமுடிகிறது.

ஒப்புரவாளன் முயற்சி செய்து பெற்ற செல்வம் முழுதும்; தகுதியுடையார்க்குப் பல்வகையிலும் உதவி செய்தற் பொருட்டே அமைந்ததாகும். இதனால், இடைவிடாது முயற்சி செய்து மேன்மேலும் பொருளீட்டாது இருந்துண்ணும் சோம்பேறித்தனமும், தகுதியில்லாதவர்க்குச் செய்யும் தவறான வேளாண்மையும் விலக்கப்பட்டன. ஒப்புரவாளனுக்கு இடைவிடா முயற்சி வேண்டுமென்பதனை,

''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு

வேளாண்மை செய்தற் பொருட்டு'' (குறள்:212)

என்ற திருக்குறள் வழி அறிய முடிகின்றது. திருவிவிலியமும் நற்செயல்கள்வழி பொருள் ஈட்டி அதனைத் தாராள உள்ளத்தோடு வழங்கவேண்டும் என்று அறிவுறுத்துகின்றது.இத்தகைய அறிவுரையினை,

''அவர்கள் நல்லதைச் செய்து நற்செயல்கள் என்னும் செல்வத்தைச் சேர்ப்பார்களாக, தங்களுக்கு உள்ளதைத் தாராள மனத்தோடு பகிர்ந்தளிப்பார்களாக'' (1திமொ: 6:18)

என்ற திருவிவிலிய வசனத்தால் அறிய முடிகின்றது. மேலும் செல்வம் ஒப்புரவு செய்யும் பெருந்தகையாளனிடம் சேருமானால் அது வேர்முதல் கொழுந்துவரை எல்லாவுறுப்பும் பல்வேறு நோய்க்கு மருந்தாகித் தப்பாது பயன்படும் மரத்தை ஒத்ததாய் அமைந்து பயன் தரும்.மரத்தை மருந்தென்றமையால் அதன் உறுப்புக்களெல்லாம் மருந்தாதல் அறியப்படும். இதனை,

''மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்

பெருந்தகை யான்கண் படின்'' (குறள்: 217)

''பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்

நயனுடை யான்கண் படின்'' (குறள்: 216)

என வரும் திருக்குறள்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. மேற்கூறியவற்றில் ஊருணியென்பது எல்லார்க்கும் பயன்படும் செல்வத்தையும், பழுமரம் என்பது பலர்க்குப் பயன்படும் செல்வத்தையும் மருந்து மரம் என்பது சிலர்க்குப் பயன்படும் செல்வத்தையும் குறிக்குமென்று கொள்ளலாம். இங்ஙனம் பயனளவில் வேறுபடுவது செல்வத்தின் அளவையும் ஒப்புரவாளரின் குறிக்கோளையும் பொறுத்ததாகும். திரிகடுகமும் இத்தகைய உயர்ந்த தன்மை அமைந்தோர் வைரம் பாய்ந்த மரத்திற்குச் சமமாவர் என்று குறிப்பிடுகின்றது. வள்ளன்மையை அணியாக

மேற்கொண்டவனிடத்துள்ள, செல்வமும் உள்ளத்தில் கேட்டதனை நினைத்துப் பார்க்கும் இயல்புடையவன் கற்ற நூற்புலமையும்; பிறர் தன்னைச் சார்ந்தவிடத்து, அவர்க்குச் செய்யத் தக்க காரியத்தை அறியும் தலைமகனும் ஆகிய இம் மூவரும், பொந்தில்லாமல், வயிரம் பற்றிய, மரம் போல அசைவற்றவராவர் என்பது அத்தகைய பாடல் ஆகும். இப்பாடலுள் குறிக்கப்படும் மூன்று உறுதிப் பொருள்களுள் முதல் பொருளாய் வள்ளண்மை உடையவன் செல்வம் குறிக்கப்பட்டிருப்பது ஒப்புரவு அறிதலின் முதன்மையை விளக்கி நிற்கிறது. இதனை வலியுறுத்தும் பாடலானது,

''வள்ளன்மை பூண்டான்கண் செல்வமும் உள்ளத்

துணர்வுடையா னோதிய நூலும் - புணர்வின்கண்

தக்க தறியுந் தலைமகனும் இம்மூவர்

பொத்தின்றிக் காழ்த்த மரம்'' (திரி: 75)

என்பதாகும். திருவிவிலியம் மனிதர்கள் ஒப்புரவு உடையவர்களாய்ப் பிறருக்கு உதவுதல் வேண்டும் என்கிறது. மேலும் இந்த உலகத்தின் செல்வம் முழுமையையும் இறைவனிடம் இருந்தே கொடையாகப் பெற்றீர்கள். அதனைப் பிறருக்குக் கொடையாக வழங்குங்கள் என்றும் அறிவுறுத்துகின்றது. இதனை,

''நலம் குன்றியோரைக் குணமாக்குங்கள். இறந்தோரை உயிர் பெற்று எழச் செய்யுங்கள்.தொழுநோயாளரை நலமாக்குங்கள். பேய்களை ஓட்டுங்கள்.கொடையாகப் பெற்றீர்கள். கொடையாகவே வழங்குங்கள்'' (மத்: 10: 18)

என்ற திருவிவிலிய வசனங்கள் விளக்கி நிற்கும்.

**பிறன்மனை நோக்காமை:**

இன்பம் என்பது உயிர்களுடைய இயல்பூக்கமாய் அமைந்து உலகில் உயிர் பெருக்கத்திற்குக் காரணமாக அமைகின்றது. எனவேதான் தொல்காப்பியரும்,

''எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது

தான் அமர்ந்து வரவும் மே வற்றாகும்''[65]

என்று குறிப்பிடுகிறார். எனினும் இக் காம உணர்வானது ஒருவழிப்பட்ட தன்மையை உடையதாக அமைந்திருக்க வேண்டும். அத்தகைய அறவழிப்பட்ட நிகழ்வைத் தருவதற்காக மனித சமூகத்திற்கு அமைக்கப்பட்டதே 'இல்லறம்' என்கிற நெறியாகும்.

"மனிதனின் காம உணர்வுகளை வெளிப்படுத்தச் சான்றோர் அமைத்த நெறி இல்லறம் என்னும் நல்லறம். இந்த கட்டுப்பாட்டில் பெண்மைக் கற்பும் ஆண்மை ஒழுக்கமும் நிறுத்தப்படுகின்றன" [66]

என்ற கூற்று ஈண்டு ஒப்புநோக்கிச் சிந்திக்கத்தக்கதாகும். அறியாமை, சிந்தனையற்ற தன்மை, மன அடக்கம் என்ற மூன்று காரணங்களே மனிதன் பிறன்மனை நயத்தற்குக் காரணங்களாய் அமைகின்றன. இறைவன் தந்த உள்ளத்தில் ஒருவன், ஒருத்தி என்கிற நினைப்பு இருக்கும். அதுவே இயற்கையும் ஆகும். அதனை விடுத்து மாற்றான் மனைவியை விரும்பும் காமுகரின் செயலானது வீட்டில் காய்த்துப் பழுத்து உள்ள பலாக்கனி இருக்க அதனை உண்ணாமல் காட்டில் ஈச்சம் பழத்தை உண்பதற்குச் சமமானது என்று திருமூலர் குறிப்பிடுகிறார்.

"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைத் காமுறு காளையர்
காய்ச்சு பலாவின் கனி உண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்திற்கு இடர் உற்றவாறே" [67]

திருவள்ளுவரும்,

"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற வொழுக்கு" (குறள்: 148)

எனக் குறிப்பிடுவார். ஏலாதி,

"கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்மனைமேல்
செல்லான் சிறியார் இனஞ்சேரான் (ஏலாதி: 19)

என வலியுறுத்துகிறது. மனுமுறை கண்ட வாசகத்தில் வள்ளலாரும் கூட,

"பெண் ஆசை என்கிற பெரும்பேயும்" [68]

என்று கூறி இரங்குகின்றார்.

" ஓவியம் அமைந்த நகர் தீ உண உளைந்தாய்;
கோ இயல் அழிந்தது என வேறு ஒரு குலத்தோன்
தேவியை நயந்து சிறை வைத்த செயல் நன்றோ?
பாவியர் உறும்பழி இதின் பழியும் உண்டோ!"[69]

என்பது கம்பராமாயணம் ஆகும். திருக்குறள்,

"உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்" (குறள்: 282)

எனக் குறிப்பிடுகின்றது. நாலடியார், பிறன் மனைவியை விரும்புதல் என்பது அவள் இல்லத்துப் புகும்போது அச்சம், திரும்பிவரும்போது அச்சம், நுகரும்போது அச்சம் பிறர்க்குத் தெரியாமல் காத்துக் கொள்ளுதல் அச்சம் என எப்பொழுதும் அச்சம் தரும் தன்மையையுடையதாகும். எனவே இவற்றைக் கருத்தில் கொள்ளாமல் ஒருவன் பிறன் மனைவியை விரும்பியொழுகுதல் சிறப்புடையது அன்று என்று எடுத்துரைக்கின்றது. இதனை,

"புக்க விடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்கு மிடத்தச்சம் தோன்றாமற் காப்பச்சம்
எக்காலும் அச்சம் தருமால் எவன்கொலோ
உட்கான் பிறன்இல் புகல்" (நாலடி: 83)

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. இன்னாநாற்பது என்னும் அறஇலக்கியம்

"பிறன்மனையாள் பின்னோக்கும் பேதைமை யின்னா" (இன்னா: 38)

எனக் குறிப்பிடுகின்றது. திருவிவிலியமும் பிறன்மனை நயத்தல் என்னும் கேட்டினை அறவே சாடுகின்றது. பிறன்மனை நயந்து அவளை மனத்தால் எண்ணுதல்கூட துன்பம் தரும் செயலாகும் என உணர்த்தும் திருவிவிலியம். இதற்கு,

"ஒரு பெண்ணை இச்சையுடன் நோக்கும் எவரும் தம் உள்ளத்தால் ஏற்கனவே அப்பெண்ணோடு விபச்சாரம் செய்தாயிற்று." (மத்:5:28)

என வரும் வசனம் சான்றாகும். மேலும் திருக்குறள் பிறனுக்குப் பொருளாகிய தன்மையுடையாளைக் காதலித்து ஒழுகுகின்ற அறியாமை, உலகத்தில் அறநூலையும் பொருள் நூலையும் ஆராய்ந்து அறிந்த சான்றோரிடத்து இல்லை என்பதனை.

''பிறன்பொருளாள் பெட்டுஒழுகும் பேதைமை ஞாலத்து

அறம்பொருள் கண்டார்கண் இல்'' (குறள்: 141)

என எடுத்துரைக்கின்றது. ஆசாரக்கோவை தம் கண்ணின் ஒளியும், புகழும் கெடாமல் இருக்க விரும்புவோர், மின்னலின் ஒளியையும், விழுகின்ற எரிநட்சத்திரத்தையும், வேசியரது, ஒப்பனையையும், பாரார் எனக் குறித்து நிற்பதற்கு,

''மின்னொளியும் வீழ்மீனும் வேசையர்கள் கோலமுந்

தம்மொளி வேண்டுவார் நோக்கார்'' (ஆசார: 51)

என்ற பாடல் அரணாகும். திருவிவிலியம் பிறன்மனையை நோக்காதே என்று அறவுரை பகர்கின்றது. இதனை,

''பிறன் மனையாளோ உயிரையே வேட்டையாடி விடுவாள். ஒருவன் தன் மடியில் நெருப்பை வைத்திருந்தால் அவனது ஆடை எரிந்து போகாமல் இருக்குமா? தழல்மீது சென்றால் கால் வெந்து போகாமல் இருக்குமா? பிறன்மனை நயப்பவன் செயலும் இத்தகையதே. அவளைத் தொடும் எவனும் தண்டனைக்குத் தப்பமாட்டான் (நீதி:6: 26: 29)

என வரும் வசனம் எடுத்துரைக்கின்றன. திருக்குறளின் பிறிதோர் குறள் இல்வாழ்வான் என்பவன் பிறருக்கு உரிமை பூண்டு நிற்கும் பெண்மையை விரும்பாதவனே ஆவான் எனக் குறிக்கின்றது. திருக்குறள் இவ்வாறு உரைத்தற்கு,

''அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்

பெண்மை நயவா தவன்'' (குறள்: 147 )

என்பது சான்றாகும்.

''பிறர் மனைவியைக் காமுறாதே!'' (இணை: 5: 21)

என வரும் இணைச்சட்டம் மேற்கண்ட திருக்குறட் கருத்தோடு ஒத்தமைவதனை அறிய முடிகின்றது. பிறன் மனையாளை நோக்காத பெரிய ஆண்தகைமை, சான்றோருக்கு அறனும் ஆகும், நிரம்பிய ஒழுக்கமும் ஆகும் என்பதனை,

“பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு

அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு” (குறள்: 148)

என்ற திருக்குறள் வெளிப்படுத்துகின்றது.

“அழகான பெண்ணிடம் இருந்து உன் கண்ணைத் திருப்பிக் கொள்

பிறன் மனைவியின் அழகை உற்று நோக்காதே” (சீராக்: 9:8)

என வரும் திருவிவிலியக் கருத்தானது மேற்கண்ட திருக்குறள் கருத்தோடு ஒத்தமைந்தது. தன்னை ஐயுறாதவரின் இல்லத்தின்கண் பிறன்மனை நயந்து நிற்பவர் உயிரோடு உள்ளவர் ஆயிடினும் இறந்தவர்க்குச் சமம் ஆவார் என்பார் திருவள்ளுவர். இதனை.

“விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்

தீமை புரிந்தொழுகு வார்” (குறள்: 143)

என்பதாய்த் திருக்குறள் எடுத்துரைக்கும். திருவிவிலியமோ பிறன்மனை நயப்பவரும் அந்தப் பெண்ணும் உயிரோடு இருக்கத் தகுதியற்றவர்கள். அவர்கள் கொல்லப்படவேண்டியவர்கள் என்பதனை,

“அடுத்தவன் மனைவியோடு உடலுறவு கொள்பவனும் அந்தப் பெண்ணும் கொலை செய்யப்பட வேண்டும்: (லேவி: 20: 10) என்ற வசனத்தின்வழி எடுத்துரைக்கின்றது.

**கடமையைச் செய்தல்:**

ஒவ்வொரு தனிமனிதனும் தன் வாழ்நாளில் பின்பற்ற வேண்டிய உயரிய செயல்களுள் குறிப்பிடத்தக்கது கடமையைச் செய்தல் என்பதாகும்.வாழ்நாளின் பணிகள் யாவற்றிலும் முதன்மையாய் நிற்பது தனக்கு நியமிக்கப்பெற்றுள்ள கடமையைக் குறைவின்றி நிறைவேற்றுதல் என்பதாகும். “கடமையைக் காப்பது என்பது கடுமைதான். கடுமை என்னும் சொல்லிலிருந்து கடமை என்பது தோன்றி வகையிலிருந்தே ஈது அறியப்படும்.ஆக்கம் கெடுவதானாலும் பொருத்தம் சிதைவதானாலும் வாழ்க்கையில் கடமைச்செயல்கள் தவிர்க்கமுடியாதவை. அன்பு அற்ற நிலையினும் அருள் தவிர்ந்த வகையினும் கடமையை மீறிச் செல்லும் போக்குப் பழிப்புக்கு இடமாகும்”[70] என்ற கருத்து ஈண்டு சுட்டுதற்குரியதாம். தமிழரின் வாழ்வியல் மரபில் கடமையைச் செய்தல் என்பது சிறப்பிடம் பெற்றிருந்தமையை,

“ஈன்றுபுறந் தருதல் என்றலைக் கடனே

சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே

ஒளிறுவாள் அருஞ்சமம் உருக்கிக்

களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" [71]

என்ற புறநானூறுப்பாடல் எடுத்துரைக்கின்றது. இதனுள் குறிக்கப்படும் தலைக்கடன் என்னும் சொல்லானது தலையானது என்னும் பொருளில் வந்து நிற்கும். அகநானூற்றின் பாடல் ஒன்றும் தாயின் கடமையைச் சுட்டும்பொழுது ஈன்று புறம் தந்தவள் என்றே பேசுகிறது:

"ஈன்றுபுறந் தந்தவெம்மு முள்ளாள்" [72]

திருக்குறளில் வள்ளுவர் பல இடங்களில் கடமைகளை வலியுறுத்திச் செல்கிறார். "பார்ப்பன் பிறப்பொழுக்கம் குன்றக்கெடும், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும், துறந்தாரின் நோற்கிற்பலர், பயனில சொல்லாமை நன்று, கைம்மாறு வேண்டா கடப்பாடு, கடன் அறிந்து காட்சியவர், உயிரஞ்சா மறவர், மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை, கடன் என்ப நல்லவை எல்லாம், உண்டலினும் உண்டல் அற இனிது என்பனவற்றில் எல்லாம் கடமை பலகோணங்களில் உள்ளதாக அழகரடிகள் தம் உரையில் குறிப்பிடுகிறார்". [73]

திருவிவிலியம் கடமையைச் செய்தலின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றது, கடவுளை வணங்குதல் முதற்கடன், ஓய்வு நாட்களை தூய்மையாகக் கடைபிடித்தல், கொலை, விபச்சாரம், களவு, பொய்சாட்சி, போன்றவற்றை மேற்கொள்ளாதிருத்தல், தாயையும் தந்தையையும் மதித்தல் என்பவை கட்டளைகளாகக் குறிக்கப்பட்டாலும் கடமைகளாகவே குறிக்கப்பட்டன.பழைய ஏற்பாட்டில் கூறப்பட்ட கற்பனைகள் புதிய ஏற்பாட்டில் இரண்டு கற்பனைக்குள் அடக்கிக் காட்டப்படுகின்றன. பவுலடியார் உரோமையருக்கு எழுதிய திருமுகத்தில் இதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். பழைய ஏற்பாட்டில் கட்டளைகளாகக் குறிக்கப்பட்டவை புதிய ஏற்பாட்டில் கடவுளால் அன்பின் கடமைகளாகக் குறிக்கப்பட்டன. விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் அமைந்த கடமையாற்றுதல் என்பது அச்சத்தின் அடிப்படையிலானவவையாக அமைகின்றன. ஆனால் புதிய ஏற்பாட்டில் கடமை என்பது அன்பு, நல்மனம் இவற்றின் அடிப்படையிலானதாகக் கட்டமைக்கப்படுகிறது. தாய், தந்தை, கணவன், மனைவி குழந்தைகள், நண்பர்கள் போன்றோருக்கான கடமைகள் அன்பின் அடிப்படையிலும் அலுவலர்கள்

முதாளிகளுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் நல்லமனட்சாட்சியின் அடிப்படையிலும் அமைந்தனவாக இருத்தல் வேண்டும் என்று விவிலியம் குறிப்பிடுகிறது.

**துறவு:**

குடும்பம் என்பது இல்லறம் ஆகும். இல்லறம் என்பது அறத்தின் ஒரு கூறாகும். இத்தகைய இல்லறத்திற்கு மறுதலையாக துறவறத்தினைக் குறிப்போர் உண்டு. ஆனால் இதனைத் திரு. வி க. மறுத்துரைக்கின்றார். ‘‘மனமாசினின்று நீத்தல் இல்லறத்தின் ஒரு கூறு: இல்லறத்தின் பற்பல நோக்கங்களில் ஒன்றாயிருப்பது நீர்தல் அல்லது துறவு, இத்துறவு இல்லறத்திற்கு வேறுபட்டு எங்ஙனம் நிற்கும்? ஆகவே துறவு என்பது இல்லறம் என்னும் அறத்தின் ஒரு கூறு என்றே கொள்க’’[74] என்பார் திரு.வி.க.

‘‘இல்லறத்தில் நின்று அறத்துடன் வாழ்வது எளிது, ஆனால் துறவறத்தில் அவ்விதம் வாழ்தல் மிகக் கடினம்.இல்லறத்தில் தவறி விட்டாலும் மன்னிப்புண்டு. துறவறத்தில் தவறிவிட்டால் மன்னிப்பில்லை. துறவு நிலை உள்ளவன் கரடுமுரடான மலையில் சென்று வெற்றி காணவேண்டும்.அதனால்தான் இல்லறத்தை அறமென்ற சொல்லால் போற்றிய வள்ளுவர் துறவறத்தைப் பாராட்ட அதேபோல் ஒரு சொல் கிடைக்காமல் துறந்தார்நிலை என்று குறிப்பிடுகிறார். துறவு என்பது சொல்லுக்கும் சிந்தனைக்கும் அப்பாற்பட்டது’’[75] என்பார் அருணாசலதேசிகர்.

‘‘புறமாகிய செல்வத்தின்கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணும் உளதாம் பற்றினை, அவற்றது நிலையாமை நோக்கி, விடுதல், துறவு எனப்படும்’’[76] என்று விளக்கம் தருவார் பரிமேலழகர்.

‘‘செல்வமும் உடம்பும் நிலையாமை எனக் கண்டபின் திருவருள் ஒன்றே நிலையெனத் துணிந்து அதனில் நெருக்கம் கொள்ளுதல் துறவு எனப்படும். அருளில் நெருங்குங்கால் நிலையாமைப் பொருள்களில் உள்ளம் பற்றுவிட்டு விடுவதால் துறவு என்பது விடுதல் என்னும் பொருளிலும் வந்தது, இதனை ‘‘திருவருளோடு நெருங்க நெருங்க செல்வம் யாக்கை முதலியவற்றில் பற்று நீங்கி வருகிறது, விளக்கொளியால் இருள் நீங்குவது போன்றது இது’’[77] என விளக்குவார் அழகரடிகள்.

ஒருவன் யாதொரு பொருளின் யாதொரு பொருளின் நீங்கினான் எனில் அவன் அப்பொருளால் துன்பம் எய்துதல் இல்லாமல் இருப்பான் என்பதனைத் திருக்குறள்,

‘‘யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்

அதனின் அதனின் இலன்'' (குறள்: 341)

எனக் குறிக்கும். திரிகடுகம் துறவியானவன் தீங்கினை, நீக்கி, குடிகளுக்கு நன்மையானவற்றைச் செய்பவன் எனக் குறிப்பிடுகிறது. மேலும் இத்தகைய துறவியும் கணவன் குறிப்பறிந்து நடக்கும் மனைவியும் நீதி தவறாத அரசனுமே மழை பெய்தற்குக் காரணம் ஆவர் எனக் குறிக்கும்.இதனை,

''செய்வகை செய்வான் தவசி

பெய்யெனப் பெய்யும் மழை'' (திரி: 96)

என்ற பாடலானது விளக்கியுரைக்கின்றது. திருவிவிலியமும் துறவிகளை தீய நாட்டத்தால் சீரழிந்து உள்ள நிலைகளில் இருந்து விடுபட்டு இறைவழிபாட்டில் பங்குபெறுங்கள் என்று அறிவுரை கூறி நிற்பதனை,

''தீயநாட்டத்தால் சீரழிந்துள்ள உலகை விட்டு விலகி ஓடி இறைத்தன்மையில் பங்கு பெறுங்கள். இதற்கென்று கடவுள் நமக்கு உயர் மதிப்பிற்குரிய மேலான வாக்குறுதிகளை அளித்துள்ளார்.'' (2பேதுரு 1-4) என்ற வசனத்தால் அறியமுடிகிறது. மேலும் பொருட்கள் மேல் உள்ள பற்றினை விடாதவர்க்குத் துன்பம் தீர்தல் என்பது இயலாது என்பதனை,

''பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்

பற்றி விடாஅ தவர்க்கு'' (குறள்: 347)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கின்றது. திரிகடுகம் புலன்கள்மேற் போகாமல் நிறுத்தப்படும், நெஞ்சுடையவனுக்கு, வறுமை பயப்படும்; அறத்தையே, நினைக்கின்றவனுக்கு,பாவம், அஞ்சும் என் குறிப்பிடும். இதனை உணர்த்தும் பாடலாக ,

''நிறைநெஞ் சுடையானை நல்குர வஞ்சும்

அறனை நினைப்பானை அல்பொருள் அஞ்சும்'' (திரி: 72)

என்பது அமைகின்றது. திருவிவிலியம் பொருளாசையை விட்டு விலகுங்கள் எனக் குறிப்பதனை,

''பொருளாசையை விட்டு விலகி வாழுங்கள். உள்ளதே போதும் என்றிருங்கள். ஏனெனில் நான் ஒருபோதும் உன்னைக் கைவிடமாட்டேன்.உன்னை விட்டு விலகமாட்டேன்'' (எபி: 13: 5)

என்ற எபிரேயர் கூற்றானது விளக்கி நிற்கின்றது. தான் அல்லாத உடம்பை 'நான்' என்றும், தன்னோடு இயைபு இல்லாத பொருளை 'எனது' என்றும் கருதி, அவற்றின்கண் பற்றுக் கொண்டு மனிதர்கள் அலைகின்றனர். அவ்வாறு இல்லாது நான், எனது என்னும் பற்றினை நீக்கி

உலகப்பொருள்கள்மேல் உள்ள ஆசையினை நீக்கி, அம்மயக்கத்தில் இருந்து விடுபடுபவர்களே வானோர்க்கும் எய்தற்கு அரிய வீட்டுலகத்தை எய்த இயலும் என்பதனைத் திருக்குறள்,

''யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு

உயர்ந்த உலகம் புகும்'' (குறள்: 346)

என எடுத்துரைக்கும். திருவிவிலியமும் இவ்வுலக மாந்தர்கள் உலகப்பொருள்கள்மேல் உள்ள பற்றினை நீக்கி உடலின் இச்சைகளுக்கு ஆட்படாமல் இறைவனை சிந்தித்து உய்வு பெறுதல் வேண்டும் என்பதனை,

''இவ்வுலகில் செல்வர்களாய் இருப்பவர்களுக்கு இவ்வாறு கட்டளையிடு. அவர்கள் மேட்டின்மை உணர்வு கொள்ளலாகாது, நிலையில்லாச் செல்வத்தில் நம்பிக்கை வைக்காமல் நம்முடைய இன்பத்திற்காகவே எல்லாவற்றையும் நிறைவாக அளிக்கும் கடவுளை மட்டும் எதிர்நோக்கி இருக்க வேண்டும்'' (1 திமோ: 6: 17)

''ஆகவே உடலின் இச்சைகளுக்கு உங்களைக் கீழ்படியச் செய்யும் பாவம் சாவுக்குரிய உங்கள் உடம்பின் மேல் ஆட்சி செலுத்த விடாதீர்கள்'' (உரோ: 6: 12)

என எடுத்துரைக்கின்றது. இறைவனின் திருவருளைப் பெற்று வீட்டின்பம் பெறுதல் வேண்டும் என்று முயல்பவர்கள் செவி, கண், மூக்கு, நா, தோல் முதலிய ஐம்பொறிகட்கு உரியவாய ஓசை, காணல், நுகர்தல், சுவையுணர்தல், மெய்யின்பம் ஆகிய ஐம்புலன்களால் ஆகிய இன்பத்தினைக் கெடுத்து அவற்றின்று நீங்குதல் வேண்டும். அவ்வாறு அன்றி இவ் ஐம்புலன்களுள் ஏதேனும் ஒன்றின் இன்பத்திற்கு ஆட்பட்டாலும் அவர்கள் துன்பம் எய்தி வீட்டின்பத்தைப் பெறும் தகுதியை இழப்பர் என்பதனைத் திருக்குறள்,

''அடல்வேண்டும் ஐந்தின் புலத்தை விடல்வேண்டும்

வேண்டிய எல்லாம் ஒருங்கு.'' (குறள்: 343)

என்பதன் வழி எடுத்துரைக்கின்றது. திருவிவிலியம் மெய்யின்பத்தைப் பெரிதெனக் கொண்டு சிற்றின்பங்களில் மூழ்கி இருந்தவர்கள் இறைவனால் தண்டிக்கப்பெற்றமையை,

''அவர்களைப் போலவே சோதோம், கொமோரா அவற்றின் சுற்றுப்புற நகரங்கள் ஆகியவற்றின் மக்கள் பரத்தைமையிலும் இயற்கைக்கு மாறான சிற்றின்பங்களிலும் மூழ்கியிருந்தார்கள்.ஆகவே அவர்கள் என்றும் அணையாத நெருப்பில் தண்டிக்கப்பட்டார்கள். அவர்கள் நமக்கொரு பாடமாய் உள்ளார்கள்'' (யூதா 1 : 7) என்ற வசனத்தின் மூலம் எடுத்துரைத்து நல்வழி காட்டுகின்றது.

**தொகுப்புரை:**

- குடும்பம் திருமணம் என்ற ஆதாரத்தின் மீது அமைந்துள்ளது,எனினும் அது திருமணத்துடன் குறிக்கப்பட்டு விடுவதில்லை. அது பல தலைமுறைகளைச் சேர்ந்த மரபுவழி கிளைகளின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொண்டிருக்கும்.பிறப்பு முதல் இறப்பு வரை அதனோடுதான் அவர்கள் தொடர்ச்சியாகத் தொடர்பு கொள்கின்றனர். ஏனெனில் இது மக்களின் உயிரியல், உளவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது, அதனாலே குடும்பம் எனும் அமைப்பு, இடம், காலம், அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகலாவிய பண்பாகத் திகழ்கிறது என்னும் செய்தியானது ஆய்வின் வழி பெறப்படுகின்றது.

- குடும்ப அமைப்பானது சமுதாயத்தில் பெறுகின்ற இடம், இல்வாழ்க்கையின் அடிப்படைக்கூறாய் அறம் அமைதல், இல்லறத்தில் பெண் பெறும் மதிப்புகள், வாழ்க்கைத் துணைநலமாய் அமையும் பெண் பின்பற்ற வேண்டிய கற்புடைமை என்னும் ஒழுகலாறு, சொற்காத்துச் சோர்விலள் ஆகும் பெண்ணின் சிறப்பு, தற்கொண்டானையும் காக்கும் தகைவுடைமை, சுற்றம் பேணல், விருந்தினரைப் போற்றல், வளத்தக்க வாழ்க்கைத்துணை ஆதல், நாணுடைமை என்னும் நலம் பெற்றுச் சிறத்தல், ஈன்று புறந்தருதல் போன்ற பெண்மைக்குரிய அற

விழுமியங்களை அற இலக்கியமும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஆய்வின் வழிப் பெறப்படுகின்றது.

- இல்லறத்தில் ஆண்மகன் மனைவியின்பால் அன்பு பாராட்டல், இல்லறத் தலைமக்கள் நல்ல பெற்றோராய் அமைந்து சான்றோனாகிய மகனைச் சமூகத்திற்கு வழங்கல், இல்லறத்தின் நன்கலமாய் அமையும் நன்மக்களுக்குரிய கடமைகள், இல்லறத்தார் பின்பற்ற வேண்டிய ஒப்புரவு என்னும் பண்பு, தலைவன் கொண்டொழுக வேண்டிய பிறன்மனை நோக்காப் பேராண்மை, கடமையாற்றலின் மாண்பு, இல்லறத்தின் குறிக்கோள்களுள் ஒன்றாய துறவறத்தினை மேற்கொள்ளலின் மேன்மை போன்ற அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையினை ஒப்புநோக்கி ஆய்வதன் மூலம் அறிய முடிகிறது.

.

**சான்றெண் விளக்கம்**


1. பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல் ப. 336
2. நித்யா அறவேந்தன்,தமிழ் - இந்தி சிறுகதைகளில் சமூகம் ப.15
3. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி – 7 ப. 599
4. Robert L.Sutharland – Sociology , p; 244
5. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப. 18
6. R. M. Macver,Society a Text Book of Sociology p.45
7. எஸ். கே. பாங்கல் கில்பர்ட், சமூகவியலாளரின் அடிப்படைக் கோட்பாடுகள், ப. 121
8. தி. பாக்கியமுத்து, தமிழ் நாவல்களில் குடும்ப சக்தி, ப.1
9. அகிலன், வெற்றியின் ரகசியங்கள், ப. 191
10. மேலது, ப.192
11. சி.பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல்,ப. 336
12. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி – 7 ப. 591
13. திரு.வி.க. பெண்ணுரிமை அல்லது வாழ்க்கைத்துணைநலம் ப.181
14. சிலம்பு: 1: மங்கல வாழ்த்துப் பாடல் : அடி: 47

15. வ.உ.சிதம்பரம் பிள்ளை, திருக்குறள் 30 ஆவது குறளின் உரை ப. 67

16. சிலம்பு: அந்திமாலை சிறப்புசெய் காதை: அடி: 50

17. நன்னெறி பா. 6

18. அறநெறிச்சாரம்: பா. 164

19. கழகத்தமிழ் அகராதி – ப. 293

20. க.த திருநாவுக்கரசு, குறள்- நீதி இலக்கியம் - ப – 23

21. வேதாத்திரி மகரிஷி, இறை உணர்வும் அறநெறியும், ப. 3

22. மேலது, ப.4

23. சுப. தங்கமுத்து ( க.ஆ ) சங்ககாலச் சமுதாயம் அமைப்போம், பவள விழா மலர், ப. 42

24. மணி: பாத்திரம் பெற்ற காதை: அடிகள்: 116 -117

25 மேலது - ஆதிரை பிச்சையிட்ட காதை: வரிகள்: 88 – 90

26. அருணந்தி, சிவஞான சித்தியார்: சூ. 271

27. செந்தமிழ் சொற்பிறப்பியல் அகராதி ப. 124

28. கொன்றை: பா:4

29. திரு.வி.கல்யாண சுந்தரனார், பெண்ணின் பெருமை, ப. 203

30. புறம், பா: 159

31. மேலது, பா. 279

32. மேலது, பா: 290

33. குறுந், பா. 49

34. குறுந், பா: 135

35. தேவநேயப்பாவாணர், குறள் 46 இன் உரை

36. மேலது, குறள் 43 இன் உரை

37. கலி: பா.133: 6

38. நச்சர், தொல், பொருள்: நூ. 2 இன் உரை

39 சாந்தி சச்சிதானந்தம், பெண்ணின் சுவடுகள்: ப.23

40. திரு.வி.க., பெண்ணின் பெருமை ப. 24

41. மார்க்சிஸ்ட், தத்துவ மாத இதழ்: ப.24

42. காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் அறம் ப. 45

43. Sylvia Feldman – The Rights Women p.86

44. திருக்குறள் - உரைக்களஞ்சியம் ப.65

45. பரிமேலழகர், குறள் 974 இன் உரை

46. கம்பர்: பா. 3820

47. Pope John Paul II, Mary sheds light on role of women, L'Osservatore Romano, weekly Edition in English, 13December 1995, p.11.

48. மேற்கோள்: வாஸந்தி, யாதுமாகி, ப.34

49. மேற்கோள், வாஸந்தி, யாதுமாகி, ப. 37

50. க.த. திருநாவுக்கரசு, உளவியல் நோக்கில் இலக்கியத் திறனாய்வு ப. 14

51. கொன்றை: பா.1

52. காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் அறம் ப. 75

53. பரிமேலழகர், குறள் - புதல்வரைப் பெறுதல், அதிகார விளக்கம்

54. க.த. திருநாவுக்கரசு தமிழர் பண்பாடு ப. 160

55. தொல். பொருள். செய்யுள்: 551

56. தமிழ் அகர முதலி

57. கௌரா தமிழ் அகராதி

58. க.த. திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு – ப. 22

59. Having or showing kindness or understanding especially to a person or animal that is suffering – New oxford university dictionary p. 335

60. வாழ்வியல் களஞ்சியம் - தொகுதி 12, ப. 591

61. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி ப.1091

62. புறம்: பா. 192

63. வே.முத்துலக்குமி – பண்பாட்டுச் சிந்தனைகள் ப. 108

64. பரிமேலழகர் குறள், ஒப்புரவறிதல், அதிகார விளக்கம்.

65. தொல். பொருள் நூ: 1168

66. மாணிக்கவாசகம் ( க.ஆ) யாக்கை நிலையாமை, ஏழாவது திருமந்திர மாநாட்டு மலர்,ப.75

67 திருமந்: 201

68. மனுமுறை கண்ட வாசகம்: வரி: 4

69. கம்பர், பா. 6246

70. அழகரடிகள்: திருக்குறள் அறம் ப. 80

71. புறம் பா. 312

72. அகநா. பா. 35

73. அழகரடிகள், திருக்குறள் அறம்: ப.80

74. திரு.வி.க. பெண்ணின் பெருமை (அல்லது) வாழ்க்கைத் துணைநலம் ப. 181

75. அருணாசல தேசிகர், திருவள்ளுவர் வாக்கு ப. 291

76. பரிமேலழகர், திருக்குறள் - துறவு அதிகார விளக்கம்

77. அழகரடிகள், திருக்குறள் அறம் ப.20

## இயல் - 4

## சமூக அற விழுமியங்கள்

ஒவ்வொரு தனிமனிதனும் தான் பின்பற்றுகின்ற அறம்சார்ந்த விழுமியங்களால் பெருமை அடைகின்றான். அத்தகைய தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற இடமே குடும்பம் என்று அழைக்கப்படுகின்றது. இக்குடும்ப அமைப்பு முறையில் தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற பொழுது குடும்பத்திற்கான அறவிழுமியங்களைப் பின்பற்றுவது இன்றியமையாததாகின்றது. குடும்பத்திற்கான அறவிழுமியங்களைக் காத்துக் கட்டமைப்பதில் தனிமனித விழுமியங்களும் பெரும் பங்காற்றுகின்றன என்பது மறுக்கவியலாத உண்மை ஆகும். இந்நிலையில் தனிமனித அற விழுமியங்களில் இருந்து தோற்றம் பெறும் குடும்ப விழுமியங்கள் சமூக விழுமியங்களைக் கட்டமைப்பதில் பெரிதும் முன்நிற்கின்றன. எனினும் தனிமனிதனும் குடும்பமும், சமூகம் என்கிற பொதுத்தளத்தில் ஒன்றிணைகிறபோது சமூகத்திற்கான பல அறவிழுமியங்களைப் பின்பற்ற வேண்டியது கடப்பாடு ஆகின்றது. எனவே இலக்கியங்கள் அத்தகைய விழுமியங்களை வரையறுத்து உரைப்பதுடன் பின்பற்ற வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றன. இத்தகைய கருத்தியலின் அடிப்படையில் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் சமூகவிழுமியங்களை ஆய்ந்து வெளிப்படுத்துவதாய் இவ்வியலானது அமைகின்றது.

### மனிதனும் படைப்பும்:

“மனித குலச் சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட சூழலில் வாழ்கின்றவன் மனிதன். அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நேரடியாகவோ மறைமுகமாகவோ அவனுடைய படைப்புகள்

69. கம்பர், பா. 6246

70. அழகரடிகள்: திருக்குறள் அறம் ப. 80

71. புறம் பா. 312

72. அகநா. பா. 35

73. அழகரடிகள், திருக்குறள் அறம்: ப.80

74. திரு.வி.க. பெண்ணின் பெருமை (அல்லது) வாழ்க்கைத் துணைநலம் ப. 181

75. அருணாசல தேசிகர், திருவள்ளுவர் வாக்கு ப. 291

76. பரிமேலழகர், திருக்குறள் - துறவு அதிகார விளக்கம்

77. அழகரடிகள், திருக்குறள் அறம் ப.20

## இயல் - 4

## சமூக அற விழுமியங்கள்

ஒவ்வொரு தனிமனிதனும் தான் பின்பற்றுகின்ற அறம்சார்ந்த விழுமியங்களால் பெருமை அடைகின்றான். அத்தகைய தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற இடமே குடும்பம் என்று அழைக்கப்படுகின்றது. இக்குடும்ப அமைப்பு முறையில் தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற பொழுது குடும்பத்திற்கான அறவிழுமியங்களைப் பின்பற்றுவது இன்றியமையாததாகின்றது. குடும்பத்திற்கான அறவிழுமியங்களைக் காத்துக் கட்டமைப்பதில் தனிமனித விழுமியங்களும் பெரும் பங்காற்றுகின்றன என்பது மறுக்கவியலாத உண்மை ஆகும். இந்நிலையில் தனிமனித அற விழுமியங்களில் இருந்து தோற்றம் பெறும் குடும்ப விழுமியங்கள் சமூக விழுமியங்களைக் கட்டமைப்பதில் பெரிதும் முன்நிற்கின்றன. எனினும் தனிமனிதனும் குடும்பமும், சமூகம் என்கிற பொதுத்தளத்தில் ஒன்றிணைகிறபோது சமூகத்திற்கான பல அறவிழுமியங்களைப் பின்பற்ற வேண்டியது கடப்பாடு ஆகின்றது. எனவே இலக்கியங்கள் அத்தகைய விழுமியங்களை வரையறுத்து உரைப்பதுடன் பின்பற்ற வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றன. இத்தகைய கருத்தியலின் அடிப்படையில் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் சமூகவிழுமியங்களை ஆய்ந்து வெளிப்படுத்துவதாய் இவ்வியலானது அமைகின்றது.

### மனிதனும் படைப்பும்:

“மனித குலச் சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட சூழலில் வாழ்கின்றவன் மனிதன். அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நேரடியாகவோ மறைமுகமாகவோ அவனுடைய படைப்புகள்

அவனுடைய காலத்தைப் பிரதிபலிக்கின்றன. மேலும் சமுதாய வரலாற்று மரபின் ஒரு காலகட்டத்தில் தோன்றுகின்ற குறிப்பிட்ட இலக்கியப் படைப்பாளியின் அனுபவ உணர்வுகளைப் பெற்று வருகின்றது"[1]

என்ற கூற்று இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கதாகும். இலக்கியம் என்பதே படைப்பாளி வாழ்கின்ற காலத்தினுடைய பிரதிபலிக்கின்ற கண்ணாடியாக அமைகின்றது. படைப்பாளி காலச்சமூகத்தின் நிகழ்வுகளை இலக்கியம் அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறது என்பதனை,

"நிகழ்காலச் சிக்கல்களை, சமகாலத்து வாழ்க்கைப் பிரச்சினைகளை ஆடிபோல் விளக்கிக் காட்டவல்லன இலக்கியங்கள்"[2] என்ற கூற்று உறுதிப்படுத்தும்.

மனிதனுடைய ஆளுகை சமுதாயத்தின் மேலும் சமுதாயத்தின் ஆளுகை தனி மனிதன் மீதும் இருகப்படிந்து ஒன்றையொன்று மாற்றிக் கொண்டே இருக்கின்றன என்பதால் மனிதனும் சமுதாயமும் பிரிக்க முடியாத ஒன்றாக அமைகின்றன. படைப்பாளி தனது காலச் சமுதாயத்தில் விளங்குகின்ற பழக்கவழக்கங்கள், நடைமுறைகள், சீர்கேடுகள் போன்றவற்றைத் தன் படைப்புகளில் வெளிப்படுத்துவதால் இலக்கியம் சமுதாய அளவுகோலாக மாறுகின்றது.

**சமுதாயம்**

"ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கையைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் தொகுதியே சமுதாயம் எனப்படும். சமுதாயம் சமூகத்திற்குள் அடங்குவதாகும். தம்மைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதற்கும் அழியாமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக்குழு சமூகம் எனப்படும். உலகிலுள்ள மானுடர் அனைவரும் ஏதாவது ஒரு சமூக அமைப்பிற்குள் இடம்பெறுவர்"[3]

மு.வ சமுதாயம் "நாகரிகம் வளர, வளர, மனிதர் சிறு கூட்டமாக இருந்து பெரிய சமூகமாக வாழும் நிலைக்கு உயர்ந்துள்ளனர், வரவர சிறு நாடுகள் பலவும் குடும்பத்தனி உறுப்புகள் போல் ஆகி உலகமே ஒரு பெருஞ்சமுதாய அமைப்பாக உருவாகிறது"[4]

"ஓர் ஒழுங்கின் அடிப்படையில் ஒரே சிந்தனை, ஒரே எண்ணம், என ஒன்றுபட்டு ஒரே இடத்தில் தங்களின் வாழ்க்கை முறை கொண்டவர்களாகத் தங்களுக்குத் தேவையான விஷயங்களைத் தாங்களே பங்கிட்டு நிறைவேற்றிக் கொள்பவர்களாக வாழக்கூடிய ஒரு குழுவான மக்களைச் சமுதாயம் என அழைக்கலாம். ஒரு நாட்டில் அல்லது பல்வேறு நாடுகளில் வாழக் கூடிய ஒரே மாதிரியான வாழ்க்கை முறைகள் கொண்டவர்களையும் சமுதாயம் என்றழைக்கலாம்"[5]

‘‘ஆதியில் சமுதாயம் என்பது கிடையாது, மனிதர் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தினர். அங்குச் சட்டமும் ஒழுங்கும் கிடையாது. ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும் மற்றொருவனுக்கு விரோதமாய் இருந்தது.இதன் விளைவாக மனிதனுடைய வாழ்வு அருவருப்பானதாகவும் மிருகத்தனமானதாகவும் குறுகியதாகவும் இருந்தது, தங்களுடைய தன்மையைக் கருதி ஒரு சமுதாய உடன்படிக்கைக்கு வருவது நல்லது என்று எண்ணினார்கள். ஒவ்வொருவரும் தங்களது உரிமையை விட்டுக் கொடுத்தார்கள்.தங்கள் பாதுகாப்பை நிச்சயப்படுத்த ஓர் அரசனுக்குக் கீழ்ப்படிய ஒப்புக் கொண்டார்கள். இப்படியாக சமுதாயம் பிறந்தது என்பர்’’[6]

சமுதாயம் என்னும் சொல்லுக்குப் பலர் தங்கள் கருத்துகளை முன்வைக்கின்றனர்.

‘‘சமுதாயம் என்ற சொல் வடமொழி கலந்த தமிழ்ச் சொல்லாகும். இது சமு + தாயம் எனப் பிரியும். சமு என்றால் கூட்டம் தாயம் என்பது தாய் என்ற சொல்லோடு ஆம் விகுதி சேர்வதால் வருவது. எனவே சமுதாயம் என்பதற்கு தாய்வழி பெரிய கூட்டம் என்று பொருள் கொள்ளலாம் என சமுதாயம் விவரிக்கப்படுகிறது சமுதாயம் என்பது உறவினர்களின் அமைப்பு முறையாகும் மனித இனத்தில் காணப்படும் உறவினர்களின் அமைப்பு முறையே சமுதாயம் எனப்படும்.’’[7]

சமுதாயம் என்ற சொல்லுக்கு ‘‘கூட்டம், சங்கம், பொதுவானது, மக்களின் திரள்,பொருளின் திரள்,உடன்படிக்கை’’[8] எனப் பல பொருள்களையும் கழகத்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

‘‘மக்கள் பலர் கூடி வாழும் இனக்குழுவே சமுதாயம் எனப்படும். சமுதாயம் என்ற சொல்லில் உள்ள ‘தாயம்’ என்ற சொல் உரிமை எனப் பொருள்படுவதாகத் தமிழ் அகராதி கூறுகின்றது.’’[9]

சமுதாய உறவுதான் மனிதனை விலங்கினின்று பிரித்துக் காட்டுகிறது. உயிரினங்களிலேயே அறிவாற்றலையும் எதையும் செய்யக் கூடிய திறமையும் பெற்றிருக்கின்ற மனிதனால் பிறர் உதவியின்றித் தனித்து வாழ முடியாது

‘‘மனிதர்கள் சேர்ந்து வாழத் தொடங்கிய நாளே சமுதாய அமைப்பிற்கு வித்திட்ட நாளாகும் கூட்டு வாழ்க்கையே சமுதாய வாழ்க்கை என்றாலும் பிழையாகாது’’[10] என்கிறார் அ.மு. பரமசிவானந்தம்.

‘‘சமுதாயம் என்பது தன்னுள்ளே ஒரு பேரவை போன்ற முறையான உறவு கொண்ட ஒரு சமூக அமைப்பாகும்.அதில் சமுக உறவால் மனிதர்கள் ஒருவருக்கொருவர் இணைந்து வாழமுடியும்’’[11] என்று சமுதாய அமைப்பினை மெக்கன்சி எடுத்துக் காட்டுகிறார்.

“தனியாகவும் ஒரு சிலராகவும் இருந்த மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து அதன் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடைய சேர்ந்து வாழ முயல்கின்ற போது உண்டாவது தான் சமுதாயம்”[12] என்ற கூற்றும் இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கது ஆகும்.

சமுதாயம் என்பதை பல்வேறு மொழி, சமயம், பண்பாடு கொள்கையை ஏற்றுக்கொண்ட சமூகத்தினர் ஏதேனும் ஒரு சட்டத்திற்குக் கட்டுப்பட்டு இணைந்து வாழும் தொகுதி என்று குறிக்கப்படுகிறது. சமுதாயம் என்பதற்கு ஏங்கல்ஸ்,

“சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழ்வதை மட்டும் குறிப்பதன்று. தனி மனிதர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்த அமைப்புமுறையை குறிக்கின்றது”[13] எனக் குறிப்பிடுகின்றார்.

“மக்கள், தொழில், கலைகள் அனைத்தும் சமுதாயம் என்னும் அமைப்பைச் சார்ந்தவையாகும். இருப்பினும் மக்கள் கூட்டம் மட்டுமே சமுதாயம் என்று கருதப்படுகிறது. ஏனையவை அனைத்தும் இந்த மக்கள் கூட்டத்தோடு தொடர்புடையவை அல்லது இந்த மக்கள் கூட்டத்தால் உருவாக்கப்பட்டுப் பிரிக்க இயலாத அமைப்பாக விளங்குபவை ஆகும். எனவே சமுதாயம் என்ற சொல்லினுள் நாம் வாழ்க்கையில் காணும் அனைத்தும் அடங்கும்”[14] என்ற முகிலை இராசபாண்டியன் கருத்து நோக்கத்தக்கது.

“தோழமை என்னும் பொருள் கொண்ட இலத்தீன் சொல்லான ‘ஜோவியல்’ என்பதிலிருந்தே சமுதாயம் என்ற சொல் பிறந்தது”[15] என்று கலைக்களஞ்சியம் பொருள் கூறுகின்றது.

இவ்வாறு அறிஞர்கள் சமுதாயம் குறித்த கருத்துகளை முன்வைக்கின்றனர்.

**சமுதாயச் சிந்தனை:**

சமுதாயம் குறித்துச் சிந்தித்து அதன் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்டிச் சீர்த்திருத்தும் எண்ணத்தோடு படைப்புகளைப் படைப்பதையே சமுதாயச் சிந்தனை எனக் குறிக்கின்றனர்.

“படைப்புகளில் காணப்படும் சமூகம் குறித்த சிந்தனைகளை வழிகாட்டுவதே சமுதாயப் பார்வை”[16] எனும் கருத்தே சமுதாயச் சிந்தனைக்கான விளக்கமாக அமைகின்றது.

“சமுதாயப் பார்வை என்பது உண்மையை ஒதுக்குவதோ மறைப்பதோ அல்ல.உண்மையை ஆராய்வது - ஆத்மாவால் அனுபவிப்பது”[17]

என்று ஜெயகாந்தன் ஆனந்தவிகடனில் கூறியுள்ள கருத்து குறிப்பிடத்தக்கது ஆகும். சமுதாயத்தின் சிக்கல்களை மறைக்காமல் உண்மையை வெளிப்படுத்துவதே சமுதாயப் பார்வை என்பதை அறியமுடிகிறது. ஒரு சிறந்த படைப்பாளிகளுக்கு இத்தகைய பார்வை முக்கியமானதாக கருதப்படுகிறது. தனிமனிதனின் அகச் சிக்கல்கள் முதலில் புறக்கணிக்கப்பட வேண்டியது இல்லை. காரணம் சமூகத்தின் பிரச்சினைகள் என்பது தனிமனிதனின் பிரச்சினைகளில் இருந்து முற்றாக வேறுபடுவதில்லை.

மாற்றம் என்பது மானுடத் தத்துவம். மாற்றம் என்பது மட்டுமே என்றைக்கும் மாறாமல் இருக்கும் தன்மையுடையது. ஆதலால் மனித வாழ்வில் பல்வேறு மாற்றங்கள் தோன்றுவது தவிர்க்க முடியாததாய் அமைந்து விட்டது. வாழ்க்கை வளர்ந்திருக்கிறது. அதனால்தான் ஒரு காலத்தில் இயல்பாய் இருக்கும் நடைமுறை இன்னொரு கால வளர்ச்சியின் காரணமாக விமர்சனத்துக்கு ஆளாகின்றது, அந்த விமர்சனத்தால் மனிதர்கள் செம்மையடைகின்றனர்.

சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது.இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம். சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது,ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது.

தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளை அறிந்து கொள்ளாமல் எழுத முடியாது, தன் வீட்டைத்தாண்டி, தன் ஊர்,மாநிலம், நாடு. உலகம், பிரபஞ்சம், என்ற விசாலப் பார்வையில் உலகத்தை விழுங்கத் தெரிந்தவனே படைப்பாளிகளில் சிறந்தவன் ஆகிறான்.

**இறைஉணர்வு**:

மனிதன் தன்னைப் படைத்த கடவுளிடம் காட்டும் அன்புடன் கூடிய நன்றியுணர்வே பக்தி எனப்படுகிறது. மனிதன் இவ்வுலகில் தன்னை மயக்கம் செய்யும் ஆணவம், பொறாமை, மாயை எனப்பெறும் நிலைகளில் இருந்து விடுபட்டு இறைவனை அறிதற்கு முயற்சிக்கும் நிலையைப் பக்தி எனச் சுட்டலாம். இறைவனைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்னும் முயற்சியே பக்தி என்பதனை,

‘‘இறைப்பொருளைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்று மனித மனம் முயல்கின்ற முயற்சியே பக்தியாகும்’’ [18] எனக் குறிப்பார் அ.ச. ஞானசம்பந்தம்.

எழுத்துகள் எல்லாம் அகரத்தினை முதலாக உடையது போல இந்த உலகம் ஆதிபகவன் ஆகிற இறைவனை முதலாக உடையது என்பதும் அத்தகைய இறைப்பரம்

பொருளின் திருவடியைச் சரண் அடைந்தவர்களே இப்புவிமிசை நீடுவாழும் பெருமையை உடையோர் ஆவர் என்றும் திருக்குறள் குறிப்பிடும். இதனை,

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி

பகவன் முதற்றே உலகு" (குறள்: 1)

'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடுவாழ் வார்" (குறள்: 3)

என வரும் திருக்குறள்களால் அறியமுடிகின்றது. ஆசாரக்கோவையும் காலையில், ஒரு கொம்பாலே பல் துடைத்து, கண் கழுவி, தான் வணங்குங் கடவுளை, அறியும் நெறியால், தொழுத பின் ஒரு செயலைத் தொடங்குக என்று குறிப்பிடுகிறது. மேலும் மாலைப்பொழுதில் கடவுளை நின்று வணங்குதல் குற்றமாகும். எனவே மாலைக் காலத்தில் வீற்றிருந்தே கடவுளை வழிபடுக என இறைவனை வழிபடும் முறையினைக் குறிப்பிடுகின்றது. இதனை,

"நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத்

தானறியு மாற்றாற் றொழுதெழுக அல்கந்தி

நின்று தொழுதல் பழி" (ஆசார: 9)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். திருக்குறளும் ஆசாரக்கோவையும் உரைத்தற்போன்று திருவிவிவிலியமும் இறைவனே இவ்வுலகத்திற்கு வாக்காகவும் வாக்கினுள் நிறைந்தவராகவும் இருந்தார் எனக் குறிப்பிடுகின்றது. மேலும் உலக நிகழ்வுகள் அவரின்றி நடைபெறுவதில்லை என்றும் குறிப்பிடுகின்றது. இதனை,

"தொடக்கத்தில் வாக்கு இருந்தது. அவ்வாக்கு கடவுளோடு இருந்தது. அவ்வாக்கு கடவுளாயும் இருந்தது. வாக்கு என்னும் அவரே தொடக்கத்தில் கடவுளோடு இருந்தார். அனைத்தும் அவரால் உண்டாயின. உண்டானது எதுவும் அவரால் அன்றி உண்டாகவில்லை." (யோவா: 1: 1 -3 )

என்ற திருவிவிலிய வசனம் எடுத்துரைக்கின்றன.

"தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்

மனக்கவலை மாற்றல் அரிது" (குறள்: 7)

என்பது வள்ளுவம். இதன்வழி, தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனாகிய இறைவனின் திருத்தாளினை அடைந்தவரே தமது மனக்கவலையை மாற்றும் தன்மையை உடையவராய் அமைவார் என்பது வெளிப்போந்து நிற்கும்.

''ஆகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். உயிர் வாழ எதை உண்பது, எதைக் குடிப்பது என்றோ உடலுக்கு எதை உடுத்துவது என்றோ கவலை கொள்ளாதீர்கள். உணவை விட உயிரும் உடையை உடலும் உயர்ந்தவை அல்லவா! --- உங்களுக்கு இவை யாவும் தேவை என உங்கள் விண்ணகத் தந்தைக்குத் தெரியும்'' (மத்: 6: 25 – 33)

''ஆண்டவரை எனது உள்ளம் போற்றிப் பெருமைப்படுத்துகின்றது. என் மீட்பராம் கடவுளை நினைத்து எனது மனம் பேருவகை கொள்கின்றது. ஏனெனில் அவர் தம் அடிமையின் தாழ்நிலையைக் கண் நோக்கினார். இது முதல் எல்லாத் தலைமுறையினரும் என்னைப் பேறுபெற்றவர் என்பர். ஏனெனில் வல்லவராம் கடவுள் எனக்கு அரும்பெரும் செயல்கள் செய்துள்ளார். தூயவர் என்பதே அவரது பெயர்'' (லூக்: 1: 47 - 49) என வரும் திருவிவிலியக் கருத்துகள் திருக்குறளின் கருத்தினை ஒத்தமைவது வெளிப்படுகிறது.

ஒருவன் கற்றதனால் ஆகிய விளைபயனானது இறைவனை உணர்ந்து தொழுதல் மூலமாகவே நிறைவு பெறுகின்றது. எவனொருவன் இறைவனைத் தொழாது மறுதலிக்கின்றானோ அவன் பெற்ற கல்வியால் ஒருபயனும் இல்லை என்பதனைத் திருக்குறள்,

''கற்றதனால் ஆய பயனென் கொல் வாலறிவன்

நற்றாள் தொழாஅர் எனின்'' (குறள்: 2)

என எடுத்துரைக்கும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை அடியொற்றி அமைவதுபோல் திருவிவிலியத்தில் இடம்பெறும் தானியேல் இறைவனைத் தன் அறிவினால் வாழ்த்திப் போற்றுகின்றார்.

''கடவுளின் திருப்பெயர் என்றென்றும் வாழ்த்தப்படுவதாக!

ஏனெனில், ஞானமும் வல்லமையும் அவருக்கே உரியன!

காலங்களையும் பருவங்களையும் மாற்றுபவர் அவரே!

அரசர்களை விலக்கி மாற்று அரசர்களை நிலைநிறுத்துபவர் அவரே! ---

அரசனது காரியத்தை எங்களுக்கு அறிவித்தவரும் நீரே!'' (தானி: 2:19-23)

ஐம்பொறிகளின் வழியாக வரும் ஆசைகளை அவித்தவனாகிய இறைவனின் பொய்யற்ற ஒழுக்க நெறியின்கண் நின்று வழிபடுவோரே நிலைபெற்ற நல்வாழ்க்கை வாழ்பவர் ஆவார் எனக் குறிப்பிடுகிறது திருக்குறள்.

''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க

நெறிநின்றார் நீடுவாழ்வார்'' (குறள்: 6)

மேற்கண்ட திருக்குறளின் மூலம் மனிதரின் நல்வாழ்விற்கான நெறிகளைத் தந்தருளும் ஆற்றல் அத்தகைய நெறியின்கண் நின்றொழுகும் இறைவனாலே இயலும் என்பது பெறப்படும். இதன்வழி இறைவனை வணங்குதலே மனிதன் நல்வழியில் நடத்தற்கு அடிப்படையாய் அமையும் என்பது பெறப்படும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையே திருவிவிலியத்திலும் காணப்படுகின்றது. இதில் காணப்படும் தோபித்தின் கட்டளையானது இத்தகைய செய்தியைக் குறிப்பிடுகின்றது. இதனை,

''மகனே, உன் வாழ்நாள் முழுவதும் ஆண்டவரை நினை;

பாவம் செய்யவும், அவருடைய கட்டளைகளை மீறவும் ஒருகாலும் விரும்பாதே.

உன் வாழ்நாள் முழுவதும் நீதியைக் கடைப்பிடி;

அநீதியின் வழிகளில் செல்லாதே'' (தோபி: 4:5-7)

என வரும் திருவிவிலியத்தின் வசனத்தால் அறிய முடிகின்றது.

இறைவனின் உண்மையான புகழினை விரும்பி, அவனைச் சரணடைந்தவர்களைத் துன்பத்தைத் தரும் நல்வினை, தீவினை என்பன வந்து சேராது என்பது திருவள்ளுவரின் வாய்மொழியாகும். இதன்மூலம் அத்தகையவர்கள் இறைவனின் அருளால் இன்பம், துன்பம் என்னும் இரண்டினையும் ஒன்றெனக் கருதும் தன்மையை அடைந்து விடுவார்கள் என்பதால் இருவினைகளால் ஏதும் செய்ய இயலாது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கும்.

''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்

பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'' (குறள்: 5)

இத்தகைய செய்தியானது திருவிவிலியத்திலும் காணப்படுகின்றது. திருவிவிலியத்தில் காணப்படும் அபக்கூக்கு வாழ்வில் எதுவரினும் நான் இறைவனை வணங்கி நிற்பேன் என்று குறிப்பிடுகிறார்.இதனை,

''அத்திமரம் துளிர்த்து அரும்பாமல் போயினும்,

திராட்சைக் கொடிகள் கனிதராவிடினும்,

ஒலிவ மரங்கள் பயன் அற்றுப் போயினும்,

நான் ஆண்டவரில் களிகூர்வேன்;

என் மீட்பரான கடவுளில் மகிழ்ச்சியுறுவேன்.

ஆண்டவராகிய என் தலைவரே என் வலிமை'' (அப: 3:17-19)

என வரும் வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. விருப்பு, வெறுப்பு என்பனவற்றை விட்டு நீங்கிய இறைவனின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்களுக்கு எவ்விடத்திலும் துன்பம் வந்து சேர்தல் என்பது இல்லை என்பதனை,

''வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு

யாண்டும் இடும்பை இல'' (குறள்: 4)

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தும். மேற்கண்ட திருக்குறள் விருப்பு, வெறுப்பு அற்ற ஒருவனாலே ஞானத்தினைப் பெறுதல் இயலும் என்பதனை உணர்த்துகின்றது. இத்தகைய சிந்தனையானது திருவிவிலியத்திலும் இடம்பெற்றுள்ளது. இத்தகைய கருத்தினை வெளிப்படுத்தும் திருப்பாடல்,

''உன்னதரின் பாதுகாப்பில் வாழ்பவர் எல்லாம் வல்லவரின் நிழலில் தங்கியிருப்பவர். ஆண்டவரை நோக்கி நீரே என் புகலிடம், என் அரண், நான் நம்பிருக்கும் இறைவன் என்று உரைப்பார். ஏனெனில் ஆண்டவர் உம்மை வேடரின் கண்ணியினின்றும் கொன்றழிக்கும் கொள்ளை நோயினின்றும் தப்புவிப்பார். தீங்கு உமக்கு நேரிடாது, வாதை உன் கூடாரத்தை நெருங்காது''

(திரு: 91: 1- 3)

என்பதாய் அமைகின்றது.

**வான்சிறப்பு:**

உலகின் நிலைப்பேற்றிற்கு அடிப்படையாய் அமைவது மழை ஆகும். இத்தகைய மழையானது வானின்று வராது அமையுமெனில் நிலவுலகில் உயிர்கள் அனைத்தும் பசியால் வாடி மடியும். எனவேதான் திருவள்ளுவர் திருக்குறளில் 'வான்சிறப்பு' என்றொரு அதிகாரமே படைத்தளித்துள்ளார். அமிழ்தம் உண்டவர்களுக்கு மரணமில்லாத வாழ்வினைத் தந்தருளும். அதுபோல மழையும் உலக உயிர்களின் பசிப்பிணியை நீக்கி வாழச் செய்கின்ற தன்மையால் அமிழ்தம் என்று போற்றப்படும் என்று குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர். இதனை.

''வான்நின்று உலகம் வழங்கி வருதலால்

தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று'' (குறள்: 11)

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தி நிற்கின்றது. திருக்குறளின் இத்தகைய செய்தியினை ஒத்ததாய் அமையும் திருவிலிலியம் அத்தகைய சிறப்புடைய மழையானது இறைவனால் வருவிக்கப்படுவதாய் உரைக்கின்றது.

''ஏற்ற காலத்தில் மழையைப் பெய்யச் செய்வேன் வயல் தன் பலன்களைத் தரும், நிலத்தின் மரங்கள் தங்கள் கனிகளைத் தரும்'' (லேவி: 26: 4)

''தக்க காலத்தில் அவர் உங்கள் நிலத்திற்கு மழை தருவார்,

முன்மாரியும் பின் மாரியும் தருவார், அதனால்

உங்கள் தானியத்தையும் திராட்சை ரசத்தையும்

எண்ணெயையும் சேகரிப்பீர்கள்'' (இணை: 11: 14)

மழை வேண்டிய காலத்து மழை பெய்யாது நின்றுவிடுமாயின், பரந்த கடலாற் சூழப்பட்ட அகன்ற நிலவுலகத்தில் பசி நிலைத்து நின்று உயிர்களை வருத்தும். உலகத்தில் முக்கால் பங்கு கடலாயினும் அதனால் மழை பெய்யாத வறட்சிக் காலத்தில் பயனில்லையென்பதை 'விரிநீர்' என்னும் அடைமொழியாற் குறிப்பாக உணர்த்தினார் வள்ளுவர். இதனுள் குறிக்கப்படும் வருத்துதல் எனப்படுவது உணவு விளையாமையால் மீண்டும் மழை பெய்யும்வரை கொல்லுதலும் துன்புறுத்துதலும் அமையும் என்பதாகும். இதனை

''விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து

உள்நின்று உடற்றும் பசி'' (குறள்:13)

என்ற திருக்குறள் விளக்கி நிற்கும். இன்னா நாற்பதும்,

“மாரி வளம் பொய்ப்பின் ஊர்க்கு இன்னா” (இன்னா: 20)

எனக் குறிப்பிடும். திருவிவிலியம் மழையானது பெய்யாது போகுமானால் உலக உயிர்கள் துன்புறும் எனக் குறிப்பதுடன் அவ்வாறு பெய்யாமல் போவதற்குத் தீயோரைத் தண்டிக்க விரும்பும் இறைவனின் செயலே காரணம் ஆகும் என்பதனையும் வெளிப்படுத்தி உரைக்கின்றது. இதனை,

“மழையே இல்லாபடி வானங்களை அவர் மூடிவிடுவார்.

உங்கள் நிலம்தன் பலனைத் தராது,

அவர் உங்களுக்குக் கொடுக்கும் அந்த வளமிகு

நாட்டினின்று விரைவில் அழிந்து போவீர்கள்” (இணை:11: 17)

என வரும் திருவிவிலிய வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

**நீத்தார் பெருமை:**

துறவியரைத் திருக்குறள் உள்ளிட்ட அற இலக்கியங்கள் பெரிதும் போற்றியுரைக்கின்றன. அந்தணர் என்னுஞ்சொல் அழகிய குளிர்ந்த அருளையுடைவர் என்னும் பொருளது ஆகும். அருளாவது ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரைப்பட்ட எல்லாவுயிர்களிடத்தும் இரக்கங் கொண்டு அன்பு செய்தல் என்பதாகும். அருளுடைமையைத் துறவுநிலைக்குரிய முதலறமாகக் குறித்தார் திருவள்ளுவர்.

“அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்

செந்தண்மை பூண்டொழுக லான்.” (குறள்: 30)

இவ்வுலகத்தில் இல்லறத்து வாழும் முறைப்படி வாழ்கின்றவன், இவ்வுலகத்தானேயாயினும் வானுலகிலுள்ள தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான் எனவும் குறிக்கும்.

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்

தெய்வத்துள் வைக்கப் படும்” (குறள்: 50)

வள்ளுவர் இல்லறவாழ்க்கையில் தூய்மையாக வாழ்பவன் மக்களுட் சிறந்தவனாக இருப்பனாதலாலும், இம்மையிற் செய்த நல்வினைப் பயனை மறுமையில் தேவனாகித் தேவருலகத்தில் நுகர்வான் என்னும் நம்பிக்கையினாலும், “வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்’’ என்றார். வள்ளுவரின் இத்தகைய சிந்தனையை ஒட்டித் திருவிவிலியமும்,

‘‘எலயாசர் உயிர் துறந்தார், அவருடைய இறப்பு இளைஞர்களுக்கு மட்டுமல்ல.

அவருடைய நாட்டு மக்கள் அனைவருக்குமே சான்றாண்மைக்கு எடுத்துக்காட்டாகவும்

நற்பண்புக்கு அடையாளமாகவும் விளங்கியது’’ (2 மக்க: 6: 31) என விளக்குகிறது.

**நடுவுநிலைமை:**

நடுவுநிலைமை என்பதற்கு இன்ப துன்பங்களுக்கு ஆட்படாமல் விருப்பு, வெறுப்புகள் இல்லாமல் இன்னார், இனியார் எனக் கருதாமல் அறத்தின்வழி நிற்றல் என்பதே பொருள் ஆகும். இதனையே திருவள்ளுவர்,

‘‘சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்

கோடாமை சான்றோர்க் கணி’’ (குறள்: 118)

என்பதாகக் குறிப்பிடுகிறார். திருவிவிலியம் நடுவுநிலைமையை,

‘‘தீர்ப்பிடுகையில் அநீதி இழைக்காதே, சிறியோர் பெரியோர் என்று முகம் பாராது உனக்கு அடுத்து வாழ்வோர்க்கு நீதி வழங்கு’’ (லேவி: 19: 15)

‘‘என் உதடுகள் வஞ்சகம் உரையா, என வாயும் பொய்யைப் புகலாது’’ (யோபு: 27: 4)

எனக் குறிப்பிடுகிறது.

‘‘நடுவு நின்றார்க்கு அன்றி ஞானமும் இல்லை

நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை

நடுவு நின்றார் நல்ல தேவரும் ஆவர்

நடுவு நின்றார் வழி யானும் நின்றேனே.’’ [19]

என்பதாகக் திருமூலர் குறிப்பிடுகிறார். தீங்கு இன்றி நன்மையே தருவது ஆயினும் நடுவு நிலையினின்று நீங்குவதால் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே ஒழிய விடுக என அறிவுறுத்துகின்றார் திருவள்ளுவர். இதனை,

''நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை

அன்றே ஒழிய விடல்''. (குறள்: 113)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். திரிகடுகம் உப்பினது, பெரிய குவியல், தன்னில் நீர் படிந்தால் இல்லாமற் போகும்; நட்பினது செழித்த முளையானது, பொய்யாகிய நெருப்பைப் பெய்தால், அழிந்துபோகும்; நடுவுநிலைமையுடையார், மழை போல எல்லார்க்கும் ஒப்ப உபகரிப்பார்; நீர் படியாமையும் பொய் வழங்காமையும் மழையை ஒத்தலும் ஆகிய மூன்றும், நல்வழியை, தூராமைக்குக் காரணமாகிய சாதனங்களாம் என்று குறிப்பிடும். இதன்வழி நடுவுநிலை உடையோர் அனவரையும் ஒப்பநோக்கி நடத்தலே உயர்வுடையதாம் என்பதனை அறிய முடிகின்றது. இதனை

''உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்

நட்பின் கொழுமுளை பொய்வழங்கின் இல்லாகும்

செப்பம் உடையார் மழையனையர் இம்மூன்றும்

செப்ப நெறிதூரா வாறு'' (திரி: 83)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் நடுவுநிலைமையே சிறந்த அறம் எனக் குறிப்பதுடன் நடுவுநிலையினின்று தவறி நடத்தல் சிறப்புடையது அன்று எனக் குறிக்கின்றது. இதனை,

''மாறாக நீங்கள் ஆள்பார்த்துச் செயல்பட்டால் நீங்கள் செய்வது பாவம்''

(யாக்: 2: 9)

என்ற வசனமானது விளக்கியுரைக்கும். தீவினையால் கேடும், நல்வினையால் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடக்கின்றன. எனவே அவற்றை அறிந்து அவை காரணமாக மனத்தின்கண் கோடாமல் நடுவுநிலையுடன் இருத்தலே அறிவால் அமைந்த சான்றோருக்கு அழகானதாய் அமையும் என ஆற்றுப்படுத்துகின்றார் திருவள்ளுவர். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை,

''கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்

கோடாமை சான்றோர்க்கு அணி'' (குறள்:115)

என்ற குறளானது வெளிப்படுத்துகின்றது. திருவிவிலியம் நேர்மையோடு இருங்கள் என்றும் நடுவுநிலை தவறாதீர்கள் என்றும் அறிவுரை பகர்ந்து நிற்பதற்கு,

''நான் சொன்னவற்றைக் கடைபிடித்து வா, முன்கூட்டியே முடிவெடுக்காதே, நடுநிலை தவறாதே''

(1 திமோ: 5: 21 )

''நேர்மையுடன் நீதி வழங்குங்கள்'' ( செக்: 7:9-10 )

''ஓரவஞ்சனை காட்டுவது நன்றல்ல'' ( நீதி: 28: 21 )

''உன் வாழ்நாள் முழுவதும் நீதியைக் கடைப்பிடி; (தோபி: 4:5)

என்ற வசனங்கள் சிறந்த சான்றுகளாகும். ஒருவர் நடுவு நிலைமை உடையவர் என்பது அவரவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும் எனக் குறிப்பார் திருவள்ளுவர். திருவள்ளுவரால் குறிக்கப்படும் அவரவர் செயலின் விளைவு எனப் பொருள் கொள்ளுதலும் சிறப்புடைத்தாகும். இத்தகைய திருக்குறளானது,

''தக்கார் தகவிலர் என்பது அவரவர்

எச்சத்தால் காணப் படும்'' (குறள்: 114)

என்பதாய் அமைகின்றது. மேலும் நடுவுநிலைமையின் இன்றியமையாமையை,

''முறைதெரிந்து செல்வர்க்கும் நல்கூர்ந் தவர்க்கும்

இறைதெரியான் நேரொக்க வேண்டும் - முறைதெரிந்து

நேரெமுகா னாயின் அதுவாம் ஒருபக்கம்

நீரொழிகிப் பால்ஒழுகு மாறு'' (பழமொழி: 244)

என்ற பாடலும் எடுத்துக்காட்டுகின்றது. திருவிவிலியமும் பிறரிடம் உண்மை பேசுங்கள், உங்கள் செயல் உயர்வானதாய் அமையட்டும் என வலியுறுத்தி நிற்பதனை,

''நீங்கள் கடைபிடித்து ஒழுக வேண்டியவை இவையே, ஒருவரோடு ஒருவர் உண்மை பேசுங்கள். உங்கள் நகர வாயில்களில் நீங்கள் அளிக்கும் தீர்ப்பு நீதியாகவும் நல்லுறவுக்கு வழிகோலுவதாகவும் இருக்கட்டும்'' (செக்: 8: 16)

என்ற வசனம் வெளிப்படுத்தி நிற்கின்றது.

**அவா அறுத்தல்:**

மனிதர்கள் உலகப் பொருள்களின்மேல் கொள்ளும் பற்றே அவா என்பதற்கு அடிப்படை ஆகும். இத்தகைய அவா என்னும் செயலானது மனிதர்களுக்கு இன்னலையே உருவாக்குகின்றது. ஆசையே துன்பத்திற்கு அடிப்படைக் காரணம் என்பதை மனித சமூகம் உணர்கின்ற பொழுதுதான் இறைவனை அறியமுடியும். எனவேதான் இறைவனுடைய திருவருள்தான் இன்பத்தைத் தருவது என்பதை நினைந்து இவ்வுலக வாழ்வில் இருக்கக்கூடிய அவாவினை அறுத்தல் வேண்டும் எனச் சான்றோர்கள் வலியுறுத்துகிறார்கள். இதனை,

"அவாஅறுக்கல் உற்றான் தளரான்அவ் ஐந்தின்

அவாஅறுப்பின் ஆற்ற அமையும் - அவாஅறான்

ஆகும் அவனாயின் ஐங்களிற்றின் ஆட்டுண்டு

போகும் புழையுள் புலந்து" (ஏலாதி: 11)

எனக் குறிப்பிடும் ஏலாதி.

"ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி

ஆளினுங் கடல்மீதிலே --------

ஆனைசெலவே நினைவர் அளகேசன் நிகராக." [20]

என்கிறார் தாயுமானவர். திருமூலரும்,

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்

ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்

ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்

ஆசை விடவிட ஆனந்தம் ஆமே" [21]

என்று குறிப்பிடுவார். மணிவாசகரும்,

"பேராசையாம் இந்தப் பிண்டம்"[22]

என்று பாடுகிறார். சீடருக்குப் பல தகுதிகளை உரைக்குமிடத்து இயேசுகிறித்து வெறுத்து விட்ட விடுதலாகிய வேண்டாமையாகிய அவாஅறுத்தலை முதற்தகுதியாகக் குறிப்பிட்டார். திருவள்ளுவர் வலியுறுத்தும் அவாஅறுத்தலும் விவிலியம் குறிப்பிடும் வெறுத்து விடுதலும் ஒன்றே எனலாம்.

பிறனொருவனிடத்தில் உள்ள பொருளின்மேல் விருப்பத்தைச் செய்தலும், தன் சுற்றத்தார் பசித்திருக்க, சோம்பலைக் கொள்ளுதலும்; வெறுத்து, ஒருவனால் கற்றிலன் என்று இகழப்படுதலும் ஆகிய இம் மூன்றும் யாவர்க்கும் இன்பந் தராத நெறிகளாகும் எனக் குறிப்பிடும் திரிகடுகம். இதனுள் திரிகடுகம் உணர்த்திநிற்கும் மூவகைப்பொருள்களுள் அடுத்தவர் பொருளின்மேல் ஆசைகொள்ளுதலை முதற்கண் வைத்து நீக்கவேண்டும் என உரைத்து இருப்பதில் இருந்து அவாஅறுத்தலின் இன்றியமையாமை வெளிப்பட்டு நிற்கும். இதனை.

''ஆசை பிறன்கட் படுதலும் பாசம்

பசிப்ப மடியைக் கொளலுங் - கதித்தொருவன்

கல்லானென் றெள்ளப் படுதலும்இம்மூன்றும்

எல்லார்க்கு மின்னா தன'' (திரி: 20)

என்பதனால் அறிய முடிகின்றது. திருக்குறளும் ஆசை என்பதே பிறப்பிற்கான வித்து என்பதனை,

''அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்

தவாஅப் பிறப்பீனும் வித்து.'' (குறள்: 361)

என்ற குறளின்வழி எடுத்துரைக்கின்றது.

''தேவையை எவ்வளவு நிரப்பினாலும் ஆராத வேட்கையாய் இருப்பதுதான் அவா என்பது''[23] இதை மணிமேகலை ''வேட்கை விரும்பி நுகர்ச்சி ஆராமை'' [24] எனக் குறிக்கும். திருவிவிலியம் மனிதன் பொருட்கள்மேல் கொள்ளும் ஆசையே எல்லாத் தீவினைகளுக்கும் ஆணிவேராய் அமைகின்றது எனக் குறிப்பிடுகின்றது. இதனை,

''பொருள் ஆசையே எல்லாத் தீவினைகளுக்கும் ஆணிவேர்.அந்த ஆசையால் சிலர் விசுவாசத்தின்று பிறழ்ந்து திரிந்து பல வேதனைகளைத் தாங்களாகவே தங்கள் மேல் வருவித்துக் கொள்கின்றார்கள்'' (1 திமோ: 6: 10)

என உரைப்பதன்வழி அறியமுடிகின்றது.மேலும் ஆசையை நீக்குதலாகிய விழுமிய செல்வம் இவ்வுலகில் வேறெதுவும் இல்லை. துறக்கத்தின்கண்ணும் அதனை ஒப்பது இல்லை. எனவே மக்கள் செல்வமும், தேவர் செல்வமும் மேன்மேல் நோக்கக் கீழாதல் உடைமையால் தனக்கு மேலில்லாத வேண்டாமையை ‘விழுச்செல்வம்’ என்றும், அதற்கு இரண்டு உலகினும் ஒப்பதில்லை என்றும் கூறினார் வள்ளுவர். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை,

“வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை

யாண்டும் அ.:.தொப்பது இல்” (குறள்: 363)

என்னும் குறளால் அறியமுடிகின்றது. திருவிவிலியமும் செல்வத்தின்மேல் இருக்கும் ஆசையை விட்டொழியுங்கள் என்று அறிவுறுத்துகின்றது. அத்தகைய சிந்தனையை,

“பொருள் ஆசையை விலக்கி வாழுங்கள், உள்ளதே போதும் என்றிருங்கள்” (எபி: 135)

என வரும் திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கின்றன. ஒருவர்க்கு வீடு என்று சொல்லப்படுவது ஆசையைத் துறத்தல் என்பதாகும். அவ்வாறு அவா நீத்தலே மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாக்கும் தன்மையுடையதாய் அமையும் என்பதனை,

“தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது

வாஅய்மை வேண்ட வரும்.” (குறள்:364)

என்ற திருக்குறள் வெளிப்படுத்தி உரைக்கும்.இதன்வழி, தனக்கென வாழும் தன்மையைத் தரும் ஆசையினை நீக்கித் தன்னலம் துறத்தலே உயர்வடையும் நெறியாகும் என்பது வெளிப்போந்து நிற்கின்றது. திருவிவிலியமும் தமக்கென வாழ்வோர் பெறும் இழிவினையும் ஆசையைத் துறந்து பிறர்க்கென வாழ்வோர் பெறும் சிறப்பினையும்,

“தமக்கென்று வாழ்வோர் தம் வாழ்வை இழந்து விடுவர், இவ்வுலகில் தம் வாழ்வைப் பொருட்டெனக் கருதாதோர் நிலை வாழ்வுக்குத் தம்மை உரியவராக்குவர்” (யோவா: 12: 25)

ஒருவர் உலகம் முழுவதையும் தனதாக்கிக் கொண்டாலும் வாழ்வையே இழப்பார் எனில் அவருக்குக் கிடைக்கும் பயன் என்ன? (லூகா: 9: 25)

என்ற வசனங்களின் வழி எடுத்துரைக்கின்றது. மேலும் பிறருடைய மனைவி, பொருள்கள் உள்ளிடற்றவற்றின் மீது ஆசை கொள்ளாதே என்பதனைத் திருவிவிலியம்,

‘‘பிறர் மனைவியைக் காமுறாதே! பிறர் வீடு, நிலம், அடிமை, அடிமைப்பெண், மாடு:, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே’’ (இணை: 5 : 21)

என எடுத்துரைக்கின்றது. திருக்குறள் ஆசை என்பது மனிதருக்கு எப்பொழுதும் நிறைவைக் கொடுப்பதில்லை. மேலும் ஆசை அலைக்கழிக்கவே செய்யும். எனவே நிறைவினைத் தராத ஆசையினைக் கெடுப்பவனே நிறைவுடைய மாந்தனாவான், அத்தகைய செயலே ஒருவனுக்கு சிறப்புடைய நீங்காத இன்பத்தைத் தரும் என்பதனைத் திருவள்ளுவர்,

‘‘ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே

பேரா இயற்கை தரும்.’’ (குறள்:370)

என எடுத்துரைப்பார். இதனை,

‘‘ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து,

சென்றாங்கு இன்பத்துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றால்,

அன்றே அப்போதே வீடும் அதுவே வீடு வீடாமே’’[25]

எனத் திருவாய்மொழியும் எடுத்துரைக்கும். திருவிவிலியம் பொருள்கள்மேல் ஆசை மிகுதியாகக் கொண்டவர்கள் தன்னைத்தானே சிதைத்துக் கொண்டு அழிகிறார்கள் என்பதனை,

‘‘செல்வத்தைச் சேர்க்க விரும்புகிறவர்கள் சோதனையாகிய கண்ணியில் சிக்கிக் கொள்கின்றார்கள். அறிவீனமாக தீமை விளைவிக்கக் கூடிய பல்வேறு தீய நாட்டங்களில் வீழ்ந்து விடுகிறார்கள்’’ (1திமோ.6: 9 – 10)

என்ற வசனத்தின்வழி எடுத்துரைத்து ஆசையினை நீக்கி வாழ்தல் வேண்டும் என அறிவுறுத்துகின்றது. திருக்குறள் அவா இல்லாதார்க்கு வரக்கூடிய துன்பம் என்று ஒன்றும் இல்லை. ஒருவர் பிற துன்பம் வருவதற்கான காரணங்களெல்லாம் ஏதும் இல்லாவிட்டாலும் ஆசை என்பது உண்டாயின், அதனால் எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும் எனக் குறிப்பிடுகின்றது. இதன்வழி ஆசை கொண்டவர் எவ்விடத்தும் நிறைவுறார் ஆகலின் அதனால் ஆகிய துன்பமானது ஏனைய பிற துன்பங்களையும் உடன் கொண்டுவரும் என்பது வெளிப்போந்து நிற்கின்றது. இதனை உணர்த்தும் திருக்குறளாக,

‘‘அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃதுண்டேல்

தவாஅது மேன்மேல் வரும்’’ (குறள்: 368)

என்பது அமைகின்றது. திருவிவிலியமும் ஆசை மிகக்கொண்டவர் நிறைவடையாது துன்புறுவர் என்பதனை,

‘‘பேராசை கொண்டோர் உள்ளது கொண்டு நிறைவடைவதில்லை.பேராசையுடன் கூடிய அநீதி உள்ளம் தளர்வடையச் செய்கிறது.’’ (சீராக்: 14: 9) என்பதாய்ச் சுட்டுகின்றது.

**அருளுடைமை:**

மனிதரிடம் அமைய வேண்டிய உயிர் இரக்கப் பண்புகளுள் அன்பிற்கு அடுத்த நிலையில் போற்றப்படுவது அருள் என்பது ஆகும். இப்பண்பே பிற உயரிய பண்புகளுள் குறிப்பிடத்தக்கது ஆகும்.இப்பண்பு எல்லார் மாட்டும் இரக்கம் கொள்ளும் ஆற்றொழுக்கினைத் தந்து நிற்கும் பெற்றியுடையது ஆகும். அன்பு என்னும் அறநிலைப் பண்பிற்குச் சேயாய் அமைவது அருள் என்பதே ஆகும்.எனவேதான் பரிமேலழகர்,

‘‘அருளுடைமை என்பது தொடர்பு பற்றாது எல்லா உயிர்கள் மாட்டும் செல்லும் கருணை ஆகும்.இல்லறத்தார்க்கு அன்புடைமை போன்று துறவறத்தார்க்கு அருளுடைமை ஆகும். அதற்காக இல்லறத்தார்க்கு இது வேண்டாவா என்றால் இல்லறத்தார்க்கும் இ∴து தேவைதான் எனினும் துறவறத்தார்க்கு மிகுதியும் தேவை என்பதனால் இது துறவறத்தாரை முன்னிறுத்திச் சொல்லப்பட்டது’’[26] என உரை வகுப்பார்.

‘‘துறவிக்கு அருளுடைமை வேண்டும். அன்பு முதல்நிலை, அருள் முதிர்வு நிலை. அன்பு இல்லறத்தார்க்கு உரியது. அருள் துறவிக்கு உரிமை உடையது. தன்னை ஒத்த மானுடர்மேல் கொள்வது அன்பு. அனைத்த உயிர்களின் மீதும் கொள்வது அருள் என்கிறார்’’ [27] கு. மோகனராசு

மனிதர்கள் நல்ல வழியால் ஆராய்ந்து அருளுடையவர்களாக விளங்க வேண்டும். பல வழிகளால் ஆராய்ந்து கண்டாலும் அருளே வாழ்க்கைக்குத் துணையாக உள்ளது என்று குறிப்பிடும் திருக்குறள். இதனை,

‘‘நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்

தேரினும் அ∴தே துணை’’ (குறள்: 242)

என்ற குறளால் அறியலாம். காட்சி, கருத்து, ஒப்பு, உரை, இன்மை, எதிர்நிலை எனப்படும் அருந்தாபத்தி, சார்பு எனப்படும் இயல்பு, உலகுரை, ஒழிபு, உண்மை என அளவைகள் மொத்தம் பத்து எனப்படும். அவை யாவும் முதல் நான்கனுள் அடங்கும். அன்பின் முதிர்ச்சியாகிய அருள் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த அறப்பண்பாதலானும், இம்மை மறுமை வீடாகிய மும்மைக்கும் உதவுதலானும், அ∴தே துணை என்றார் திருவள்ளுவர். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை

திருவிவிலியமும் உணர்த்துகிறது. வாழ்க்கையில் நல்லவற்றையே சிந்தித்து நல்லவற்றையே செய்த ஆபிரகாமின் மகன் நலன்களைப் பெற்றதையும் தீயதையே சிந்தித்து தீயதையே செய்த இலாசர் துன்புற்றதையும் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. இதனை,

''அதற்கு ஆபிரகாம் மகனே, நீ உன் வாழ்நாளில் நலன்களையே பெற்றாய்! அதேவேளையில் இலாசர் இன்னல்களையே அடைந்தார்'' ( லூக்: 16: 29)

''அப்போது இயேசு தந்தையே! இவர்களை மன்னியும். ஏனெனில் தாங்கள் செய்வது என்னவென்ற இவர்களுக்குத் தெரியவில்லை என்று சொன்னார். அவர்கள் அவர்களுடைய ஆடைகளை குலுக்கல் முறையில் பங்கிட்டுக் கொண்டார்கள்'' (லூக்: 23: 24)

என்ற லூக்காவின் வாசகங்கள் எடுத்துரைத்து நிற்கின்றன.

இந்த உலகத்தில் உள்ள மற்ற உயிர்களையெல்லாம் பேணி அவற்றினிடத்து அருள் பூண்டு ஒழுகுபவருக்கு அவரின் உயிர் அஞ்சுவதற்கு ஏதுவான தீவினைகள் இராது என்பது திருக்குறள் ஆகும். இதன்வழி அருளுடையோர் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யார் ஆதலின் அவருக்குத் துன்பம் வாராது என்பதும் விதிப்பயனால் வந்துழி அதனால் அருளுடையோர் கலங்கார் என்பதும் தெளியப்படும். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை'' (குறள்: 244)

என்பதாகும். திருவிவிலியமும் அருளுடையார்க்குத் துன்பம் வராது என்ற செய்தியையும் அருளுடையார் பிறர்மாட்டு இரக்கம் கொண்டு தன் உடைமைகளைப் பகிர்ந்தளித்த செய்தியையும் யார் மீதாவது அறியாது பொய்க்குற்றம் சுமத்தி இருந்தால் அவர்களுக்கு நான்கு மடங்காகத் திருப்பிச் செலுத்த விழைந்த விழைவையும் எடுத்துரைக்கின்றது. மேலும் இறைமகன் தன்னையே மனிதர்களுக்கு ஒப்பாகக் அமைத்துக் கொண்டு சிலுவைச்சாவினை ஏற்றதையும் எடுத்துரைக்கின்றது. இதனை,

''ஆனால் தம்மையே வெறுமை ஆக்கி அடிமையின் வடிவை ஏற்று மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றி சாவை ஏற்கும் அளவிற்கு அதுவும் சிலுவைச் சாவை ஏற்கும் அளவிற்கு கீழ்ப்படிந்து தம்மையே தாழ்த்திக் கொண்டார்'' (பிலிப்: 2: 7 - 8 )

என வரும் திருவிவிலிய வசனங்களால் அறியமுடிகிறது. மேலும் தம் வாழ்வில் ஏதேனும் ஒரு வகையிற் செல்வத்தையிழந்தவர், முயற்சியால் மீண்டும் ஒருகால் அதைப் பெற்றுப் பொலிவடைவர்; ஆனால் அருட் பண்பை இழந்தவரோ ஒரேயடியாய் அழிந்தவராவர்; பின்பு ஒருகாலும் ஆக்கம் பெறார் என்றும் ஒருவன் அருளில்லாமையால் தன்னினும் எளியவரை வருத்துமாறு அவர்மேற் செல்லும் பொழுது; தன்னினும் வலியவர் தன்னை வருத்த வரும்போது தான் அவர் முன் அஞ்சி நிற்கும் நிலையை நினைத்து அத்தகைய எளியர் மாட்டு அருளல் வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது திருக்குறள். இதனை,

‘‘வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்

மெலியார்மேல் செல்லும் இடத்து’’ ( குறள்: 250)

எனவரும் குறள்கள் விளக்கியுரைக்கும். திருவிவிலியம் நசீ என்பவன் தன்னினும் மெலியரை வருத்திய செய்தியை எடுத்துரைக்கும் இடத்து அருளின் இன்றியமையாமையை எடுத்துரைக்கின்றது.

‘‘பொல்லாதவனே! நசீ என்னை வேண்டிக் கொண்டதால் அந்தக் கடன் முழுவதையும் உனக்குக் தள்ளுபடி செய்தேன்.நான் உனக்கு இரக்கம் காட்டியதுபோல் நீயும் உன் பணியாளருக்கு இரக்கம் காட்டியிருக்க வேண்டும்’’ (மத்: 18: 32 – 33)

திருவள்ளுவர் பொருட் செல்வம் இல்லாதவர்க்கு இவ்வுலக இன்பம் இல்லாததுபோல அருட் செல்வம் இல்லாதவர்க்கு வீட்டுலக இன்ப மில்லை என்று மொழிகிறார்.

‘‘அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு

இவ்வுலகம் இல்லாகி யாங்கு’’ (குறள்: 247)

சிறுபஞ்சமூலமும் பொருள் உடையான்கண் போகம் அமைதல் போன்று அருளுடையான் கண் உயர் ஒழுக்கமும் அதனாலாய உயர்வும் அமையும் என்றும் அத்தகையவர்கள் தீய செயல்களைச் செய்யார்கள், தீவினையைச் செய்ய மனத்திலும் நினையார்கள், புறங்கூற்றுச் சொற்களையும், மற்றையவர் காதுகளில், செலுத்தி, பிழைக்க மாட்டார்கள் (சிறு:2) என்றும் குறிப்பிடுகிறது. திருக்குறளும் சிறுபஞ்சமூலமும் உரைக்கும் இத்தகைய அருள் செய்தியை,

‘‘இரக்கம் உடையோர் பேறு பெற்றோர், ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர் (மத்: 5: 7)

எனத் திருவிவிலியமும் வெளிப்படுத்தி நிற்கின்றது.

**ஈதலறம்:**

மனித வாழ்வியல் அறங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது பிற உயிர்களின் தேவை அறிந்து அதனை அதற்கு ஈந்து தானும் இன்புற்று அதனையும் இன்புறச் செய்யும் ஈதற் பண்பேயாம். இத்தகைய பண்புடையோரே உலகில் வாழ்கின்றவர் என்று கொள்ளப்படுவார், ஈகைப்பண்பே வாழ்தற்கான பொருளைத் தந்து நிற்கிறது. தமிழர், தன்னிடம் வந்து இரந்தவர்க்கு ஒன்றினை ஈய இயலாத நிலையில் வாழ்தலினும் சாதல் சிறப்புடைத்தாம் எனக் கருதினர். இதனை,

''செறாஅது ஈதல் இரந்தார்க்கு உன்று ஆற்றாது வாழ்தலின்

சாதலும் கூடுமாம் மற்று'' [28]

என வரும் கலித்தொகையின் அடிகள் உணர்த்தும். புறநானூறும்

''ஈயென இரத்தல் இழிந்தன்று அதன் எதிர்

ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று'' [29]

என எடுத்துரைக்கும். பழமொழி நானூற்றின் பாடல் சிலர் உணவின்மையால் வருந்தி தன்னை விரும்பி வந்து அடைந்தவர்களுக்கும், சுற்றத்தவர்க்கும் அவர்களை வருத்துகின்ற பசியினை நீக்கமாட்டார்கள். அத்தகையவர்கள் புதியதாக வந்த அயலார்க்கு உதவி செய்யும் செயலானது தன்னைப் பாதுகாத்து ஓம்பினார்க்குப் பயன்படாது நெடுங்காலம் சென்று பிறர்க்குப் பயன்படும் கரிய பனைபோலும் தன்மையை உடையவர்கள் ஆவர் என உரைக்கும். அத்தகைய பாடல்,

''விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத் தவர்க்கும்

வருந்தும் பசிகளையார் வம்பர்க் குதவல்

இரும்பணைவில் வென்ற புருவத்தாய் ஆற்றக்

கரும்பனை யன்ன துடைத்து'' (பழமொழி: 220)

என்பதாகும். இதன் மூலம் அயலவர்களின் பசியைத் தீர்ப்பதினும் தன் உறவினர்களின் பசியைத் தீர்க்கும் வள்ளண்மை மிகவும் இன்றியமையாதது என்பது வெளிப்படும். பிறர்க்கீதலும், தான் அடைதலும் ஆகியவற்றை அறியாதாவனது செல்வமானது நாய்பெற்ற தேங்காயை ஒப்பதாய் அமையும். நாய் பெற்ற தேங்காயானது அதற்கும் பயன்படாது பிறர்க்கும் பயன்படாது அழிதல்போல் பிறருக்கு உதவாதவன் செல்வமும் அழியும் என்பதனை,

''வழங்கலும் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற

முழங்கு முரசுடைச் செல்வம், - தழங்கருவி

வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றோ

நாய்பெற்ற தெங்கம் பழம்'' (பழமொழி:217)

என்ற பாடல்வழி அறிய முடிகின்றது. இதனையே திருவள்ளுவரும்,

''ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை

வைத்திழக்கும் வன்க ணவர்'' (குறள்:228 )

எனக் குறிப்பார். சிறுபஞ்சமூலம், ஒருவன், தன்னைவிட்டு நீங்கிய பொருள்களை நினைத்து வருந்தாதவனாகவும் தனக்குக் கிடைக்காதவற்றை விரும்பாதவனாகவும் இருத்தல் வேண்டும் என்றும் தாழ்ந்த பொருள்களின் மேல் அன்பு கொள்ளாதவனாகவும் வறியவர்கள் விரும்பி வேண்டியவற்றை இன்சொல்லோடு மனம் இரங்கி கொடுப்பவனாகவும் இருப்பான் ஆகில் அத்தகைய பண்புகளை உடையவன் தேவர்களால் துதிக்கப்படுவான் என்றும் உரைக்கும். அத்தகைய பாடல்,

''கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சா

னிழிந்தவை யின்புறா னில்லார்-மொழிந்தவை

மென்மொழியா லுண்ணெகிழ் தீவானேல் விண்ணோரா

லின்மொழியா லேத்தப் படும்'' (சிறு: 81)

என்பதாய் அமைகின்றது. இவ்வாறு பிறரின் பசி அறிந்து உதவுபவர்கள், தங்கள் பசியை வென்று தவம் செய்யும் தவத்தில் சிறந்த முனிவர்களினும் உயர்ந்தவர்கள் என்பதனை,

''ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை

மாற்றுவார் ஆற்றலின் பின்'' (குறள்: 225)

என எடுத்துரைக்கும் திருக்குறள். ஏலாதியும் தவம் செய்வதினும் தானம் செய்வது பெரிது என்பதனை.

''தவமெளிது தானம் அரிது'' ( ஏலாதி: 3)

எனக் குறிப்பிடும். இதனையே திருவிவிலியமும் முன்மொழிகின்றது. பிறருக்கு ஈயும் குணம் கொண்டவர்களின் உயர்வினை.

"ஈகை குணமுள்ளோர் வளம்பட வாழ்வார்" (நீதி: 11: 25)

என உரைக்கின்றது. ஏலாதி, யாருக்கு தானம் செய்தல் மிகச்சிறந்தது என்பதனை வெளிப்படுத்தி உரைக்கின்றது. தன் தாயை இழந்த மகவுக்கும் தன் தலைவனை இழந்த மனைவிக்கும் பேச்சிழந்த வாழ்க்கையை உடையவர்களான ஊமைகளுக்கும், வாணிகம் புரிந்து முதற்பொருளை இழந்தவர்களுக்கும் உணவுக்கு ஆதரவான செல்வத்தினை இழந்தவர்களுக்கும், கண்ணில்லாத குருடர்களுக்கும் அவர்கள் வேண்டுவனவற்றைக் கொடுத்தவர்கள், பொருள்களை மிச்சமாய் வைத்துப் பிறர்க்குக் கொடுத்துத் தாமுந் துய்த்து இனிது வாழ்வார் என்பது ஏலாதி உரைக்கும் அறம் ஆகும்.இதற்கு,

"தாயிழந்த பிள்ளை தலையிழந்த பெண்டாட்டி

வாயிழந்த வாழ்வினார் வாணிகம் - போயிழந்தார்

கைத்தூண் பொருளிழந்தார் கண்ணிலவர்க் கீய்ந்தார்

வைத்து வழங்கி வாழ்வார்." (ஏலாதி: 78)

என்ற பாடல் அரணாய் அமைகின்றது. திருவிவிலியமும் வறுமையில் உள்ளவர்களின் வயிற்றில் அடிக்காதே என்றும் கையேந்தி நிற்பவர்களைக் காத்திருக்க வைக்காதே என்றும் அறிவுரை பகர்கின்றது. இதனை.

"குழந்தாய்,

ஏழைகளின் வயிற்றில் அடிக்காதே;

கையேந்தி நிற்போரைக் காத்திருக்க வைக்காதே.

பசித்திருப்போரை வாட்டி வதைக்காதே;

வறுமையில் உழல்வோரை எரிச்சலூட்டாதே" ( சீராக்: 4:1-5 )

"உன் உணவில் ஒரு பகுதியைப் பசித்திருப்போருக்குக் கொடு;

உன் உடையில் ஒரு பங்கை ஆடையற்றிருப்போருக்கு வழங்கு"

(தோபி:4:16 –17 )

என வரும் வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. முதுமொழிக்காஞ்சி ஒருவன் நெஞ்சத்தால் இரக்கம் கொண்டவன் என்பது அவனது ஈகையாலே வெளிப்பட்டு நிற்கும் என்பதனை,

"ஈர முடைமை ஈகையி னறிப" ( முதுமொழி: 2)

எனக் காட்டும். இதனைத் திருவிவிலியம்,

"ஒருவனிடத்துக் கருணை உண்டு என்பதற்கு அவனுடைய ஈகையே அறிகுறி.

எரியும் நெருப்பைத் தண்ணீர் அணைக்கும், தருமம் செய்தல் பாவங்களைக் கழுவிப் போக்கும் (சீராக்: 3: 30 )

என்றும் எடுத்துரைத்து நிற்பதனை அறிய முடிகின்றது.திரிகடுகம் ஒருவன் நரகத்தில் சேர விரும்பாதவன் ஆகில் பொருளைப் பிறருக்குக் கொடுக்கும் பொருட்டுச் செய்தல் வேண்டும் என விளக்கி உரைக்கும். இதனை,

"ஈதற்குச் செய்க பொருளை" ( திரி: 90 )

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் பிறருக்குக் கொடுத்து உதவுதல் என்பதனை.

"ஏழை எவரிடமிருந்தும் உன் முகத்தைத் திருப்பிக்கொள்ளாதே.

அதனால் கடவுளும் தம் முகத்தை உன்னிடமிருந்து திருப்பிக்கொள்ள மாட்டார்"

( தோபி: 4:5-7)

என அறிவுறுத்துகின்றது. திருக்குறள் வறுமையின் காரணமாக வந்து இரந்து நிற்போரின் முகமலர்ச்சியைக் காணும்வரை அவரைக் கேட்க வைக்கும் செயலானது இனிமையுடையது அன்று என அறிவுறுத்துகின்றது.இதனை எடுத்துரைக்கும் திருக்குறள்,

"இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்

இன்முகங் காணும் அளவு." (குறள்: 224)

என்பதாகும். இதன்வழி, பிறரின் வறுமையைப் போக்க நினைப்பவர் வறியவர் வந்து இரந்து நின்றவுடன் வழங்கலே சிறப்புடைத்து என்னும் கருத்து வெளிப்பட்டு நிற்கும். இத்தகைய கருத்தினைத் திருவிவிலியமும்

"நீங்கள் தர்மம் செய்யும் போது உங்கள் வலக்கை செய்வது இடக்கைக்குத் தெரியாதிருக்கட்டும்" (மத்: 6:3)

என்றும் வலியுறுத்துகின்றது. சிறுபஞ்சமூலம், மறுமை இம்மை நிலைகளைக் கருதிப் பொருள்களைத் தகுந்த முறையில் ஒருவனுக்குக் கொடுக்க வேண்டும்; அப்படிக் கொடுப்பது வறுமையினால் இயலாதெனினும் பிறரை இரவாமலிருப்பது, அவ்வறுமைக் காலத்தில் கொடுத்தலினும் இரு மடங்கு தக்கதாகும் என அறிவுறுத்தும். இதனை,

"மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு

உறுமா றியைவ கொடுத்தல் - வறுமையால்

ஈதல் இசையா தெனினும் இரவாமை

ஈதல் இரட்டி யுறும்" (சிறு: 95)

என்ற பாடலானது சுட்டுகின்றது. திருவிவிலியமும்,

"கொள்வதினும் கொடுப்பதே சிறந்த பாக்கியம்" (1 கொரி: 10)

"அப்பொழுது ஒருவன் இயேசுவிடம் வந்து பேதாகரே! நிலை வாழ்வைப் பெற்றுக் கொள்வதற்கு நான் என்ன நன்மை செய்ய வேண்டும்? என்று கேட்டார். அதற்கு இயேசு உம் உடைமைகளை விற்று ஏழைகளுக்குக் கொடும். அப்பொழுது விண்ணகத்தில் நீர் செல்வராக இருப்பீர்" (மற்: 10: 17) எனக் குறித்தார் எனக் குறிப்பிடுகின்றது.

**கூடா ஒழுக்கம்:**

மனிதன் செம்மையுற்று வாழ்தற்கு கொள்வன கொண்டு தள்ளுவன தள்ளி வாழ்தல் என்பது மிகவும் இன்றியமையாதது ஆகும். அவற்றுள் மனிதன் பின்பற்ற வேண்டிய அறம் சார்ந்த விழுமியங்களில் மிகவும் இன்றியமையாதது கூடா ஒழுக்கம் என்பதனை நீக்கி வாழ்தல் ஆகும். கூடா ஒழுக்கமானது மனிதனிடம் தோன்றுவதற்குக் காரணமாய் அமைவது மனதினை நல்லதன்பால் செலுத்தும் ஆற்றல் இல்லாமையே ஆகும். இத்தகைய தன்மை இல்லாத ஒருவன் வலியுடையார் வேடத்தைக் கொண்டு நடித்தல் என்பது பசுவானது புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போன்ற தன்மையுடைய செயலாகும். இவ்வாறு மேயும் பசுவைக் காவலர் கடியாமல் இருப்பதற்கு 'புலி புல் தின்னாது' என்ற நம்பிக்கையும் புலியின்பால் கொண்ட அச்சமுமே காரணம் ஆகும். இதனை,

"வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்

புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.'' (குறள்: 273)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். புலித்தோல் போர்த்திய பசுபோல் வேடாதாரிகளாய் வாழ்பவர்கள் சமூகத்தின் ஒழுக்க மரபினைச் சிதைத்து விடுகிறார்கள். எனவே அவர்களிடம் மிகவும் கவனமுடன் இருத்தல் இன்றியமையாதது என்பதனைத் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. மேலும் இத்தகைய வாழ்க்கை முறையினைப் போலியான வாழ்க்கை என்றும் சுட்டுகின்றது. இதனை,

''போலி இறைவாக்கினர் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் ஆட்டுத்தோலைப் போர்த்திக்கொண்டு உங்களிடம் வருகின்றனர். ஆனால் உள்ளேயோ அவர்கள் கொள்ளையிட்டுத் தின்னும் ஓநாய்கள்'' (மத்:7:15)

என்ற வசனத்தின்வழி அறிய முடிகின்றது. இதில் இயேசு கிறித்து வேதபாரகர், பரிசேயர் போன்றோரின் பொய்யொழுக்கத்தினை எடுத்துரைத்து விழிப்பூட்டுகின்றார். திருவள்ளுவர் உண்மையான பக்தியும் தவமும் உடையவர்கள் உலகத்தில் சான்றோர்களால் தீயது என்று ஒதுக்கப்பட்டவற்றை நீக்குதல் வேண்டும். அதனை விடுத்து புற வேடங்களால் ஒரு பயனும் விளையப்போவதில்லை என்பதனை.

''மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்

பழித்தது ஒழித்து விடின்.'' (குறள்: 280)

எனக் குறிப்பிட்டுரைப்பார். திருவிவிலியமும் இத்தகைய கபட வேடதாரிகள், மனிதர்கள் தம்மைப் பெரிதென எண்ணவேண்டும் என்பதற்காக இத்தகைய வேடங்களைப் புனைகிறார்கள் எனக் கடுமையாகச் சாடுகின்றது. இதனை,

''தாங்கள் செய்வது எல்லாம் மக்கள் பார்க்கவேண்டுமென்றே அவர்கள் செய்கிறார்கள். தங்கள் மறைநூல் வாசகப்பட்டைகளை அகலமாக்குகிறார்கள். அங்கியின் குஞ்சங்களைப் பெரிதாக்குகிறார்கள். விருந்துகளில் முதன்மையான இடங்களையும் தொழுகைக் கூடங்களில் முதன்மையான இருக்கைகளையும் விரும்புகிறார்கள். சந்தை வெளிகளில் மக்கள் தங்களுக்கு வணக்கம் செலுத்துவதையும் ரபி என அழைப்பதையும் விரும்புகிறார்கள்'' ( மத்: 23: 5 -7 )

என்ற திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கின்றன. மேலும் ஆண்டவர் உண்மையான ஒழுக்கம் இன்றி வெற்றுக் கூச்சல் இடுவதனையும் காணிக்கை செலுத்துவதனையும் விரும்புவதில்லை என்பதனை,

''உங்கள் திருவிழாக்களை நான் வெறுத்து அருவருக்கின்றேன்;

உங்கள் வழிபாட்டுக் கூட்டங்களில் எனக்கு விருப்பமே இல்லை.---

உங்கள் வீணைகளின் ஓசையை நான் கேட்க மாட்டேன்.

மாறாக, நீதி வெள்ளமெனப் பொங்கி வருக!

நேர்மை வற்றாத ஆறாகப் பாய்ந்து வருக!'' (ஆமோ: 5:21-24 )

என்ற திருவிவிலிய வசனங்களின் வழியும் எடுத்துரைக்கின்றது. பிறர் தம்மை நன்கு மதிக்கவேண்டும் என்பதற்காகப் பற்றுக்களை விட்டு விட்டோம் என்று சொல்லி மறைவாகத் தவறான ஒழுக்கத்தினைப் பின்பற்றுபவர்களுக்கு அத்தீய ஒழுக்கமானது அப்பொழுது இனியது போலத் தோன்றும். ஆனால் பின்னால் இதனை ஏன் செய்தோம? என்று அவர்கள் தமக்குத் தாமே வருந்தும் வகையில் பல துன்பங்களைக் கொண்டு வந்து சேர்க்கும் என்பதனை,

''பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று

ஏதம் பலவும் தரும்.''. (குறள்: 275)

என எடுத்துரைப்பார் திருவள்ளுவர். இவ்வாறு நொடிப்பொழுதில் அழியும் இன்பத்தின் காரணமாகப் நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச் செய்தவர்கள், அதனால் ஏற்பட்ட விளைவின் தன்மையால்,

''அந்தோ வினையே என்றழுவர்'' [30]

என்று குறிக்கப்படுவதும் ஈண்டு சுட்டுதற்குரியதாகும். திருவிவிலியம், இத்தகைய பொய்வேடதாரிகள் தண்டனை பெறுவது உறுதி என்பதனை,

''விண்ணரசு கடலில் வீசப்பட்டு எல்லா வகையான மீன்களையும் வாரிக் கொண்டுவரும் வலைக்கு ஒப்பாகும். வலை நிறைந்ததும் அதை இழுத்துக்கொண்டு போய்க்கரையில் உட்கார்ந்து நல்லவற்றைக் கூடைகளில் சேர்த்து வைப்பர்; கெட்டவற்றை வெளியே எறிவர். இவ்வாறே உலக முடிவிலும் நிகழும். வானதூதர் சென்று நேர்மையாளரிடையேயிருந்து தீயோரைப் பிரிப்பர்; பின் அவர்களைத் தீச்சூளையில் தள்ளுவர். அங்கே அழுகையும் அங்கலாய்ப்பும் இருக்கும்.''

(மத்: 13 : 47 – 50

என்ற வசனங்கள் மூலம் அறிவுறுத்துகின்றது. காமம், வெகுளி, மயக்கம் என்பனவற்றைத் தம் மனத்தில் கொண்டு பிறர்க்குத் தவத்தில் மாட்சிமையுடையவர்போல் நீரின் மூழ்கிக் காட்டி,

பொய்யான வாழ்க்கை வாழும் மாந்தர் பலர் உலகத்தில் காணப்படுகின்றனர். அவர்களின் இறைபக்தியும் தவமும் உண்மையானவை அல்ல என்பதனைத் திருவள்ளுவர்,

''மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி

மறைந்தொழுகு மாந்தர் பலர்'' (குறள்: 278)

எனக் குறிப்பார். திருவிவிலியத்தில் சுட்டப்பெறும்,

''அதற்கு அவர் வெளிவேடக்காரர்களாகிய உங்களைப் பற்றி எசாயா பொருத்தமாக இறை வாக்கு உரைத்திருக்கிறார். இம்மக்கள் உதட்டினால் என்னைப் போற்றுகின்றனர். இவர்கள் உள்ளமோ என்னை விட்டு வெகுதொலைவில் இருக்கிறது'' ( மாற் 7: 6 )

என்ற வசனமானது மேற்கண்ட திருக்குறள் கருத்தினோடு ஒத்தமைவதைக் காணமுடிகின்றது. மேலும் இத்தகைய வேடதாரிகள் குன்றுமணியின் தன்மைபோல புறத்தே வேடத்தால் செம்மையுடையராகக் காணப்பெற்றாலும் அதன் மூக்குப் போல மனம் இருண்டு இருப்பர் என்பதனை,

''புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி

மூக்கிற் கரியார் உடைத்து.'' (குறள்: 277)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கின்றது. இத்தகைய செய்தியனை,

''ஊழின் மலிமனம் போன்று இருளாநின்ற கோகிலமே.''[31] எனத் திருக்கோவையாரும் விளக்கியுரைக்கும். மேலும் இத்தகைய வேடதாரிகள் தவவேடத்தில் மறைந்து நின்று தவமல்லவற்றைச் செய்தல், வேட்டுவன் புதரில் மறைந்து நின்று புட்களைப் பிடித்தாற் போலும் தன்மையையுடைய செயலாகும் என்பதனைத் திருக்குறள்,

''தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து

வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.'' (குறள்: 274)

என விளக்கியுரைக்கின்றது.திருவிவிலியமும் இத்தகைய வேடதாரிகளைக் கடுமையாகச் சாடுகின்றது.

''வெளிவேடக்கார மறைநூல் அறிஞரே! பரிசேயரே! ஐயோ, உங்களுக்கு கேடு, ஏனெனில் நீங்கள் வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்பானவர்கள். அவை புறம்பே அழகாகத் தோற்றமளிக்கின்றன. அவற்றின் உள்ளேயோ இறந்தவர்களின் எலும்புகளும் எல்லா வகையான

அழுக்குகளாலும் நிறைந்திருக்கின்றன. அவ்வாறே நீங்களும் வெளியே மக்களுக்கு நேர்மையாளராய்த் தோற்றம் அளிக்கிறீர்கள். ஆனால் உள்ளேயோ போலித்தனமும் நெறிகேடும் நிறைந்தவர்களாய் இருக்கிறீர்கள்'' (மத்:23:27-28) என்ற திருவிவிலிய வசனம் மேற்கண்ட கருத்திற்கு அரணாகின்றது.

திருக்குறளானது நெஞ்சத்தில் இருக்கும் பற்றினை நீக்காது வைத்துக் கொண்டு அதனைத் துறந்தார் போல வஞ்சித்து வாழ்வாரைப் போலக் கொடுமையுடைய பிறர் இவ் உலகத்து இல்லை எனக் குறிக்கும். இதனை வெளிப்படுத்தும் திருக்குறள்,

''நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து

வாழ்வாரின் வன்கணார் இல்.'' (குறள்: 276)

என்பதாகும். இத்தகைய கருத்தினையே,

''அடங்கலர்க்கு ஈந்த தானப் பயத்தினால் அலறும் முந்நீர்த் -

தடங்கடல் நடுவுள் தீவு பல உள அவற்றுள் தோன்றி

உடம்போடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர் –

மடங்கலஞ் சீற்றத்துப் பின் மானவேல் மன்னர் ஏறே''[32]

என்ற சீவகசிந்தாமணிப் பாடலும் எடுத்துரைக்கின்றது. இத்தகைய வேடதாரிகளைக் கடியும் திருவிவிலியம்,

''உண்மையாகவே நான் விரும்புவது பலியை அல்ல,

இரக்கத்தையே விரும்புகின்றேன்;

எரிபலிகளைவிட,கடவுளை அறியும் அறிவையே நான் விரும்புகின்றேன்''.(ஒசே:6:6 )

என இறைவன் குறிப்பதாய் அறவுரை பகர்கின்றது.

**செய்ந்நன்றி அறிதல்:**

மனிதன் பின்பற்ற வேண்டிய அறவிழுமியங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது செய்நன்றி அறிதல் என்பதாகும். மனிதர்கள் பிறரைச் சாராது தாமே தனித்து வாழ்தல் என்பது இயலாது. அதிலும் மனிதன் சமுதாய வாழ்வியலில் தானும் பிறருக்கு உதவியும் பிறரிடம் உதவி பெற்றும் வாழ்வியல் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றான். சமூக, பொருளாதார, அறிவு

சார்ந்த துறைகளில் இத்தகைய உதவுதல் பண்பு இன்றியமையாததாகிறது. எனவே உதவி பெற்றவர் உதவி செய்தாரை நினைந்து போற்றுதல் என்பது இன்றியமையாத கடமை ஆகிறது. இதனை செய்நன்றி அறிதல் எனத் திருக்குறள் குறிப்பிடும்.

''சிசரோ என்ற பேரறிஞன் நற்குணங்களுக்கெல்லாம் தலையாக விளங்கும் நற்குணம் நன்றி காட்டுதல் என்றும் எல்லாக் கடமைகளுக்கும் மூலமுதல் நன்றி காட்டும் குணம் என்றும் கூறிச் சிறப்பிக்கின்றார்''[33]

பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தில் இருந்து நீங்குவதற்குரிய வாயில் உண்டு. ஆனால் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அ∴து இல்லை என்பதனைத் திருக்குறள்,

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' (குறள்:110 )

என எடுத்துரைக்கும். இதனை,

''தந்தையரைக் கைவிடுவோர் கடவுளைப் பழிப்பவர் போல் ஆவார். அன்னையர்க்குச் சினம் ஊட்டுபவர் ஆண்டவரால் சபிக்கப்படுவார்'' (சீராக்: 3:16) எனத் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. திரிகடுகம், ஒருவன் தனக்குச் செய்த நன்றியின் பயனை, அளந்தறியாத, நாணமில்லாதவனும், சான்றோர் முன் அறநிலையத்தில் பொய்ச்சொல்லை உரைப்பானும் நற்செய்கை இல்லாதவனாய் ஒருவன் அடைக்கலப் பொருளைக் கைப்பற்றிக் கொள்பவனும்; ஆகிய இந்த மூவரும், தம் மக்களை இழந்து வருந்தி உயிர் வாழ்வார் எனக் குறித்து நிற்பதனை,

''நன்றிப் பயன் தூக்கா நாணிலியும் சான்றோர்முன்

மன்றில் கொடும்பா டுரைப்பானும் - நன்றின்றி

வைத்த அடைக்கலங் கொள்வானும் இம்மூவர் -

எச்சம் இழந்துவாழ் வார்'' (திரி: 62)

என்ற பாடலின்வழி அறிய முடிகின்றது.ஆசாரக்கோவை மனிதர்கள் பின்பற்ற வேண்டிய ஆசாரவித்துகளுள் தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமையே முதன்மையானது எனக் குறிப்பிடுகின்றது.

''நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ ------

சொல்லிய ஆசார வித்து'' (ஆசார: 1)

எனக் குறிப்பிடும். மேலும் திருக்குறள் நன்றி மறப்பது நன்றன்று என வலியுறுத்துவதனை,

''நன்றி மறப்பது நன்றன்று'' (குறள்: 108)

என்ற குறள்வழி அறியமுடிகின்றது. திருவிவிலியம் திருவள்ளுவரின் கருத்தினை ஒட்டியதாய் அமைந்திருப்பதனை.

''செய்நன்றி மறத்தல் வரம்பு மீறிய ஒழுக்கக்கேடு''

(சால: 14 :16 )

என்ற வசனத்தின் மூலம் அறிய முடிகின்றது.

**மெய்யுணர்தல்:**

உலக இன்பங்களின் மாயையை நீக்கி உண்மைத்தன்மையை உணர்தல் மெய்யறிவு எனப்படும். இத்தகைய தன்மையை அடைதற்கு நல்லறிவும் ஞானமும் வேண்டும். இத்தகைய தன்மையே மெய்யுணர்தல் எனப்படும்.

''பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களின்றி உண்மையான் உணர்தல்.பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி நிகழக்கூடியது'' [34] என்பார் பரிமேலழகர்.

''மெய்யுணர்தலாவது கடவுளை உணர்தல். சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு எனவும் உள்ளது உணரின் எனவும், சார்புணர்ந்து எனவும் இந்த அதிகாரத்திலே வருகின்ற தொடர்கள் மெய் என்பது கடவுட் பொருளைக் காட்டுகின்றது எனலாம்''[35] - என்பார் அழகரடிகள்.

மயக்கத்தை நீங்கித் தூய அறிவை அடைந்தவர்களுக்கு அத்தூய அறிவானது நரகத்திற்குக் காரணமாகிய பிறப்பை நீக்கி வீட்டின்பத்தை நல்கும் எனக் குறிக்கும் திருக்குறள். மாசறுகாட்சி, தூய அறிவு, வாலறிவு, மெய்யறிவு என்பன ஒரு பொருட் பல சொற்கள் ஆகும். ஐயந்திரிபற்றது தூய அறிவு. கீழே நீண்டு கிடப்பதொன்றைக் கயிறோ பாம்போ என்று ஐயுறுவது ஐயம். கயிற்றைப் பாம்பென்றும் பாம்பைக் கயிறென்றும் பிறழவுணர்வது திரிபு. கயிற்றைக் கயிறென்றும் பாம்பைப் பாம்பென்றும் உள்ளவாறுணர்வது தூய அறிவு. மருள், மயக்கம், திரிபு, பொய்யறிவு என்பன ஒரு பொருட் சொற்கள் ஆகும். நரகத்தைக் குறிக்கும் இருள் என்னுஞ் சொல் இங்கு அதற்கு ஏதுவாகிய பிறப்பைக் குறித்து நிற்கின்றது. இதனை உணர்த்தும் திருக்குறள்,

“இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி

மாசறு காட்சி யவர்க்கு.” (குறள்: 352)

என்பதாகும். தொடக்கத்தில் அறிவுக் கண்ணில்லாமல் இருந்த ஆன்மாவானது இறைவன் திருவருளால் கண் திறக்கப்பெற்றுப் பேரின்ப வீட்டின் மாண்பையும் பிறவித் துன்பத்தின் கொடுமையையும் உணரும். பின் இருவகைப் பற்றினையும் துறந்து பிறப்பினை நீக்கி இறைவன் திருவடியை அடையும் என்பதனைத் திருமந்திரம்,

“இருட்டறை மூலையி லிருந்த குமரி

குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்

குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி

மருட்டி யவனை மணம்புரிந் தாளே.” [36]

என்ற பாட்டால் வெளிப்படுத்தி நிற்கின்றது. திருக்குறளும் மெய்யறிவு உடையவர்கள் பிறப்பினை நீக்கி இன்பம் பெறுவர் என்று குறிப்பிடுகின்றது. திருவிவிலியம் அத்தகையவர்கள் கடவுளைப்போல நன்மை, தீமை போன்றவற்றை அறியும் தெய்வ நிலையினைப் பெறுவர் என்பதனை,

“கட்டடத்தில் இணைக்கப்பட்ட மர உத்திரங்களை நிலநடுக்கத்தால் கூட அசைக்க முடியாது. ஆழ்ந்த சிந்தனையில் முதிர்ச்சி பெற்ற உள்ளம் கொண்டவர்கள் எந்தக் குழப்பத்திலும் தளர்ச்சியுற மாட்டார்கள்.” (சீராக்: 22: 16)

எனக் குறிப்பிடுகின்றது. மேலும் மக்கள் பிறப்பில், மெய்ப்பொருளை பெற்று நம்பிக்கையுடன் தெளிவு பெறுவார்கள் ஆயின் பிறப்பினை நீக்கி இறைத்திருவருளைப் பெறுவார்கள் என்பதனை,

“கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்

மற்றீண்டு வாரா நெறி.” (குறள்: 356)

எனக் குறிக்கும் திருக்குறள். மேலும் ஐயம் நீங்கி மெய்யறிவு பெற்றார்க்குத் தாம் இருக்கும் நிலவுலகத்தினும் வீட்டுலகம் நெருங்கியதாம் என்பதனை,

“ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்

வானம் நணிய துடைத்து” (குறள்: 353)

எனும் குறளாலும் எடுத்துரைக்கும். இத்தகைய சிந்தனையானது,

“ஏனெனில் இயேசு ஆண்டவர் என வாயார அறிக்கையிட்டு இறந்த அவரைக் கடவுள் உயிர்த்தெழச் செய்தார் என நீங்கள் உள்ளூற நம்பினால் மீட்புப் பெறுவீர்கள்”

(உரோ: 10: 9).

“இன்றே என்னோடு பேரின்ப வீட்டில் இருப்பீர் என்று உறுதியாக உமக்குச் சொல்கிறேன்”

(லூக்: 23: 43)

என வரும் திருவிவிலியக் கருத்தோடு ஒத்தமைவதனை உணரமுடிகின்றது.

**வெ.ஃ.காமை:**

வெ..ஃ.காமை என்பது பிறன் பொருளைக் கொள்ளக் கருதாமை என்பது ஆகும். ஒரு பொருள் எவ்வளவு சிறந்ததாயினும் எவ்வளவு உயர்ந்ததாயினும் கிடைத்தற்கு அரியதாயினும் அது பிறரிடம் இருப்பதாயின் அதன் மேல் ஆசை கொள்ளாமல் இருப்பதே வெ.காமை என்பதன் அடித்தளம் ஆகும். ஆழ நோக்கின் இவ் உலகின் பூசல்களுக்கும் பிணக்குகளுக்கும் பெரும் காரணமாய் அமைவது பிறன் பொருளைக் கைக்கொள்ள வேண்டும் என்னும் தீய நோக்கமே ஆகும். எனவே அதனை அற ஒழித்தார் மாட்டே அல்லவை தேய்ந்து அறம் பெருகும். இத்தகைய அறம் பெருகும் தன்மையானது எவ்வகைப் பொருளிடத்தும் அணுகாது, அகலாது நடுவுநிலைத் தன்மை கொண்டோருக்கே வந்து அமைவதாகும். சங்க இலக்கியத்துள்,

“நெடுநுகத்துப் பகல்போல

நடுவு நின்ற நன்னெஞ்சினர்” [37]

எனக் குறிக்கப்படும் தன்மை கொண்டோர் மாட்டே இத்தன்மை உளதாகும். இது மனித சமூகம் பெறும் அறமாண்புகளுள் இன்றியமையாததாகும். எனவேதான் இது அற இலக்கியங்களில் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது.

பிறர் பொருளையும் தம்பொருள் போல் கருதும் நடுவுநிலைமையில்லாது அவரது நற்செல்வத்தின்மேல் ஒருவன் ஆசைவைப்பானாயின் அவன் குடிகெடுவதுடன் அத்தீய ஆசைவைப்பு அவனுக்கு மறுமைத் துன்பத்திற்கு ஏதுவாகிய தீவினைக் குற்றத்தையும் உண்டாக்கும் என வலியுறுத்துவார் வள்ளுவர்.

“நடுவின்றி நன்பொருள் வெ.ஃ.கின் குடிபொன்றிக்

குற்றமும் ஆங்கே தரும்'' (குறள்: 171)

திருக்குறளின் இவ் அறம் சார்ந்த கருத்தினையே திருவிவிலியமும்

''பொல்லாரின் குடி வேரோடு அழியும். நேர்மையாளரின் குடும்பம் தழைக்கும்'' (நீதி:14: 1)

என்பதாய் எடுத்துரைக்கின்றது. முதுமொழிக்காஞ்சி கடல் சூழ்ந்த உலகத்தில், மக்களுக்கு எல்லாம் பழிக்கப்படுபவரது, செல்வமானது, வறுமைத்தன்மையினின்று நீங்கி ஒழியாது எனக் குறித்து நிற்பதனை,

''ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்

பழியோர் செல்வம் வறுமையிற் றுவ்வாது.'' (முதுமொழி: 1)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். திருவிவிலியமும் முதுமொழிக்காஞ்சி ஆகியவற்றின் கருத்தினை அடியொற்றி,

''தீய வழியில் ஈட்டிய செல்வம் பயன் தராது, நேர்மையான நடத்தையோ சாவுக்குத் தப்புவிக்கும்''

( நீதி: 10: 2 )

''முறைகேடாய் நடக்கும் செல்வரைவிட

மாசற்றவராய் இருக்கும் ஏழையே மேல்'' (நீதி: 28: 6)

என அறிவுறுத்துகிறது. சிறுபஞ்சமூலம் மனிதர்க்கு எமன் வருவது உறுதி என்பதனை அறிந்து பிறன் பொருளைத் திருடாதீர்கள் எனக் குறிப்பதனை,

பிறன் பொருள் வெளமின் (சிறு: 26 )

என்ற பாடல் அடியால் அறிய முடிகின்றது. ஒருவனது செல்வம் சுருங்காமலிருத்தற்கு வழி அது பிறரின் தேவையான அவரது கைப்பொருளைத் தான் விரும்பாமையாகும் என்னும் கருத்தினை,

''அ∴காமை செலவத்திற்கு யாதெனின் வெ∴காமை

வேண்டும் பிறன்கைப் பொருள்.'' (குறள்: 178)

என்ற திருக்குறள் வலியுறுத்தும். இதன் வழி, பிறன் பொருளை ஒருவன் கொள்ளக் கருதுவான் எனில் அவனது செல்வமும் அழிந்துபோகும் என்பது வரும். இதனை,

“பிறர்க்குரியது எதையும் கவர்ந்திட விரும்பாதே என்று சட்டம் சொல்லாமல் போயிருந்தால் அவ்விருப்பம் என்ன என்றே அறிந்திருக்க மாட்டேன்” (உரோ: 7: 7)

“எவருடைய பொன்னுக்கோ, வெள்ளிக்கோ, ஆடைக்கோ நான் ஆசைப்பட்டதில்லை”

(திருத்: 20: 33 – 34)

என வரும் வசனங்கள் எடுத்துரைக்கின்றன.

**தவத்தின் மேன்மைகள்:**

மனிதன் தன் வாழ்வு செம்மையுறுவதற்கும் பிறவிப்பெருங்கடலில் இருந்து நீங்குவதற்கும் செய்ய வேண்டியது தவம் செய்தல் என்பதாகும். தவம் என்பதற்கு பரிமேலழகர் “மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களை ஓம்புதல், புலான் மறுத்து உயிர்கண்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது”[38] என விளக்கம் தருவார். ஐம்புலனை அடக்கி ஆளும் நெறியே தவம் ஆகும்.

“பல் சான்றீரே! பல் சான்றீரே!

செல்க எனச் சொல்லாது, ஒழிக என விலக்கும்,

பொல்லாச் சூழ்ச்சிப் பல் சான்றீரே!

அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட்ட

காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,

அடை இடைக் கிடந்த கை பிழி பிண்டம்,

வெள் எள் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட

வேளை வெந்தை, வல்சி ஆக,

பரல் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்

உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ;

பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்

நுமக்கு அரிதாகுக தில்ல; எமக்கு எம்

பெருந் தோள் கணவன் மாய்ந்தென, அரும்பு அற

வள் இதழ் அவிழ்ந்த தாமரை

நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே!'' [39]

என்ற புறநானூற்றின் பாடல் தவம் செய்வோர் பின்பற்ற வேண்டிய வழிமுறைகளையும் உணவு முறைகளையும் விளக்கியுரைக்கும்.

தவத்தின் வடிவெனப்படுவது உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும், தாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமையும் ஆகிய தன்மையும் ஆகும் என்பது திருக்குறள் வரையறுக்கும் உண்மையாகும். இதனை,

''உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை

அற்றே தவத்திற்கு உரு'' (குறள்: 261)

என்ற திருக்குறள் விளக்கி நிற்கும். இதனையே பிற அற இலக்கியங்களும் வரையறுப்பதனைக் காணமுடிகின்றது. பிறிதோர் உயிர்க்குத் துன்பம் செய்யாமையும், தனக்குப் பிறரால் வருந் துன்பத்தை மறத்தலும், கோபத்தால் உண்டாகும் துன்பத்தைப் பிறிடத்துச் செய்யாமையும் குற்றத்தைச் செய்யும் துன்பத்தைத் தருகின்ற விழைவு, வெகுளி போன்றவற்றை நீக்குதல் ஆகிய தகுதிகளை உடையவனது தவமானது, தாழ்ந்ததன்று, மிகவும் இனிமையுடையதாகும் என்பது சிறுபஞ்சமூலம் காட்டும் நெறியாகும்.இதனை வலியுறுத்தும் பாடல்,

''உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்

செயிர்நோய் பிறர்கட்செய் யாமை-செயிர்நோய்

விழைவு வெகுளி யினைவ்விடுவான் ஆயின்

இழவு அன்று இனிது தவம்'' (சிறு: 31)

என்பதாகும். ஏலாதி இல்லற வாழ்க்கையும், சிறந்த தவவொழுக்கமும் என்று கூறப்படும் துறவற வாழ்க்கையும், சிறந்த நல்வினைக்குரிய வாழ்க்கைகளாகவே அறிஞர்களால் போற்றப்படும். இவற்றுள் இல்லற வாழ்க்கை என்பது இவ்வுலகப் பொருள்களிற் பற்றுடையவனாய் வாழ்தலாகும்,

தவவொழுக்கமாவது, அப்பற்று உள்ளத்தில் இல்லாதபடி நீக்கலும் முதலில் வைத்துக் கூறப்படும் வீடுபேறு என்பதில் பற்று வைத்து ஒழுகலும் ஆகும் என வரையறுக்கும். இதனை,

''மனைவாழ்க்கை மாதவ மென்றிரண்டு மாண்ட

வினைவாழ்க்கை யாக விழைப - மனைவாழ்க்கை

பற்றுத லின்றி விடுதல்முற் சொல்லுமேல்

பற்றுதல் பாத்தி றவம்'' (ஏலாதி: 73)

என்பதனால் அறிய முடிகின்றது. திரிகடுகம் தவ வாழ்க்கையினை மேற்கொள்வோருக்கு மன உறுதிப்பாடு இன்றியமையாதது என்று வலியுறுத்துகின்றது. முறையறிந்து செய்யமாட்டாதவன், அடைந்த தலைமைத் தன்மையும், மனத்தில், உறுதிப்பாடு இல்லாதவன், மேற்கொண்ட தவமும் குறைவற்ற ஒழுக்கத்தை, தெளிந்து நடவாதவன், பெற்ற அழகும்; ஆகிய இம் மூன்றும், தூற்றின்கண் தூவிய விதையையொக்கும் என்பது திரிகடுகம் உணர்த்தும் செய்தியாகும்.

''முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சில்

நிறையிலான் கொண்ட தவமும் - நிறையொழுக்கம்

தேற்றாதான் பெற்ற வனப்பும் இவை மூன்றும்

தூற்றின்கண் தூவிய வித்து''. (திரி: 80)

இவ்வாறு திருக்குறள் உள்ளிட்ட தமிழ் அற இலக்கியங்கள் வரையறுத்து உரைக்கும் தவ ஒழுக்கங்களைத் திருவிவிலியமும் வலியுறுத்துகின்றது. உண்மையான தவ வாழ்வு என்பது துன்புறுவோருக்கு உதவுதலும் தன்னைக் குற்றம் வராமல் பார்த்துக் கொள்ளுதலுமாம் என வரையறுக்கின்றது. மேலும் இத்தகைய தவமுடைமையையே இறைவன் விரும்புகிறான் என்பதனை,

''தந்தையாம் கடவுளின் பார்வையில் தூய்மையானதும் மாசற்றதுவுமான சமய வாழ்வு எதுவெனில் துன்புறும் அனாதைகளையும் கைம்பெண்களையும் கவனித்தலும் உலகத்தால் கறைபடாதபடி தம்மைக் காத்துக் கொள்வதும் ஆகும்'' (யாக்: 1: 27)

''பசித்தோருக்கு உங்கள் உணவைப் பகிர்ந்து கொடுப்பதும் தங்க இடமில்லா வறியோரை உங்கள் இல்லத்திற்கு அழைத்து வருவதும் உடையற்றோரைக் காணும் போது அவர்களுக்கு

உடுத்தக் கொடுப்பதும் உங்கள் இனத்தாருக்கு உங்களை மறைத்துக் கொள்ளாதிருப்பதும் அன்றோ நான் விரும்பும் நோன்பு'' (எசா: 58: 7) என்ற திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கும்.

இவ் உலகத்துச் செல்வர்கள் சிலராகவும் நல்கூர்வார் பலராகவும் இருத்தற்குக் காரணம் யாது எனில் தவம் செய்வார் சிலராகவும் அது செய்யார் பலராகவும் இருத்தலேயாம் என வரையறுக்கும் வள்ளுவம்.

> ''இலர்பல ராகிய காரணம் நோற்பார்
>
> சிலர்பலர் நோலா தவர்'' (குறள்: 270)

இவ்விடத்தில் செல்வம், நல்குரவு என்பன அறிவினது உண்மை இன்மைகளையும் குறித்து நின்றன.

> ''நுண்ணுணர்வு இன்மை வறுமை, அஃதுடைமை
>
> பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்'' (நாலடி.251)

என்ற நாலடியாரின் அடிகளும் மேற்கண்ட திருக்குறளின் கருத்திற்குச் சான்று பகரும். திரிகடுகம் இத்தகைய தவமுடையவர்கள் வீடுபேற்றினை அடையும் நெறிமுறைகளைக் தெளிவிக்கும். இதன் அடிப்படையில், பற்றாகிய பாசத்தளையும் பல பொருள்கள் மேல் கொண்ட பற்றின் காரணமாக நீங்காமல் ஓடுகின்ற விருப்பமாகிய தேரும் பொய்ம்மை என்னும் அறிவுக்குப் பகையாகிய இருளும் ஆகிய இம் மூன்றும் தனக்குக் காரணமாகிய அவிச்சை கெட, பிறப்பு அழியும் எனக் எடுத்துரைக்கின்றது. இதன் மூலம், பற்றையும், அவாவையும், பொய்யையும் நீக்கி வாழ்பவர்களாலே வீடு என்பதனை அடைய முடியும் என்பது பெறப்படும்.

> ''பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்
>
> பற்றறா தோடும் அவாத்தேருந் - தெற்றெனப்
>
> பொய்த்துரை யென்னும் பகையிருளும் இம்மூன்றும்
>
> வித்தற வீடும் பிறப்பு'' (திரி: 22)

ஒன்றின்மேல் பற்றிருந்தால் அவற்றை நீக்கி அங்கங்குச் செல்வது கூடாமையால் பாசத்தினைத் 'தளை' என்றும், ஒன்றின்மேல் ஆசை மேலே மேலே ஓடிக்கொண்டிருத்தலால் 'அவாத்தேர்' என்றும் கூறினார் திரிகடுக ஆசிரியர். 'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு' என்ற குறளுக்கு இணங்கப் பொய்யாமை விளக்கம் என்று

கூறப்படுதலால் பொய்யுரை இருள் எனப்பட்டது. பற்று என்பது அகப்பற்று, புறப்பற்று என இருவகைப்படும். நான் என்னும் உணர்ச்சியுடனிருப்பது அகப்பற்று. எனது என்னும் உணர்ச்சியுடனிருப்பது புறப்பற்று ஆகும். திருவள்ளுவரும்,

''அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்,

தவாஅப் பிறப்பீனும் வித்து'' (குறள்: 361)

எனக் குறிப்பார். இதற்கு ''உடம்பு நீங்கிப்போகும் காலத்து அடுத்த வினையும், அது காட்டும் கதி நிமித்தங்களும், அக் கதிக்கண் அமையும் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப அவ் வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லுமாதலால், அதனைப் பிறப்பீனும் வித்து''[40] என்று பரிமேலழகர் உரை விரித்திருப்பது கருதத்தக்கது ஆகும். ஏலாதி தவவாழ்க்கையினை மேற்கொள்ளல் எளிய செயலாம். ஆனால் தவத்திற்கான மேன்மைகளைப் பெற்று நிலைத்தல் என்பது அரிய செயலாம் என்று வகுத்துரைக்கும். தனக்குத் துணையாவதாகிய பெருந்தவத்திற்குச் செல்வது எளியது, நிட்டை கைகூடும் வரை நிலைத்தல் அரியது, தெளிந்த ஞானியரான விடத்தும் ஐம்புலன்களையும் வென்று அவித்தலை எளிய காரியமாகச் செய்தல் அரியதாகும் என விரித்துரைக்கின்றது.

''சாவ தெளிதரிது சான்றாண்மை நல்லது

மேவ லெளிதரிது மெய்போற்றல் - ஆவதன்கண்

சேற லெளிது நிலையரிது தெள்ளியராய்

வேற லெளிதரிது சொல்'' (ஏலாதி: 39)

திருவிவிலியமும் மேற்கண்ட அறநூற்கருத்துகளை ஒத்து அமைவதனை,

''மேலும் நீங்கள் நோன்பு இருக்கும்போது வெளி வேடக்காரரைப்போல முக வாட்டமாய் இருக்கவேண்டாம். தாங்கள் நோன்பு இருப்பதை மக்கள் பார்க்கவேண்டும் என்றே அவர்கள் தங்கள் முகங்களை விகாரப்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் தங்களுக்குரிய கைம்மாறு பெற்றுவிட்டார்கள் என உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்.'' (மத்: 6: 16)

என வரும் வசனங்களால் வலியுறுத்துகின்றது. மேலும் உண்மையான தவ வாழ்வினை உடையவர்கள் கூற்றினையும் வெல்லும் ஆற்றல் பெறுவர் என்பதனைத் திருக்குறள்,

''கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்

ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.'' (குறள்: 269)

எனக் குறிப்பிடும். திருவிவிலியம் இயேசு கிறித்து சிலுவையில் அறையப்பட்ட பின்னர் மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்த நிகழ்வின் மூலம் கூற்றினையும் வென்று நின்ற நிகழ்வினை எடுத்துரைக்கும்.

''உனக்கு நலமான வாழ்வு துளிர்க்கும்; உன் நேர்மை எனக்கு முன்பாகச் செல்லும். ஆண்டவரின் மாட்சி உனக்குப் பின் சென்று காக்கும்'' (எசா: 58:8) என வரும் எசாயாவின் வசனங்களும் மேற்கண்ட கூற்றிற்குச் சான்றாகும்.

தவத்தைச் செய்பவர் என்பவர் தம் செயல்களைச் செய்பவராவர். அதனை விடுத்து பிற பொருள் இன்பங்களைச் செய்யமாட்டார்கள். ஏனெனில் அத்தகைய செயல்கள் அவர்களை ஆசையாகிய வலையுள் தள்ளிக் கேடு விளைவிக்கும் என்பதனை அறிந்தவர்கள் அவர்கள் எனத் தவம் செய்வாரின் செயல்களை விரித்துரைப்பார் திருவள்ளுவர். இக்குறளுக்கு உரை வகுக்கும் பரிமேலழகர், ''அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேறாய உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்ய, பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடு பெறும் ஆகலின், தவம் செய்வாரைத் 'தம் கருமம் செய்வார்' என்றும், கணத்துள் அழிவதான சிற்றின்பத்தின் பொருட்டுப் பலபிறவியும் துன்புறத்தக்க பாவஞ்செய்து கோடலின், அல்லாதாரை 'அவம் செய்வார்' என்றும் கூறினார்''[41] என விளக்கமுரைப்பார். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்

அவஞ்செய்வார் ஆசையுள் பட்டு'' (குறள்: 266)

என்பதாய் அமையும். திருவிவிலியமும் இயேசு கிறித்து இவ் உலக இன்பங்களின்பால் பற்றுக் கொள்ளாமல் ஆண்டவரால் தமக்கு விதிக்கப்பெற்ற வழியில் சென்றார் என்பதனை எடுத்துரைக்கின்றது.

''மானிட மகன் தமக்கென்று குறிக்கப்பட்டபடியே போகிறார். ஆனால் ஐயோ! அவரைக் காட்டிக் கொடுக்கின்றவனுக்குக் கேடு என்றார்'' (லூக்: 22: 22)

தீயின்கண் வைக்கப்படும் பொன்னானது சுடச்சுடத் தன்னோடு கலந்த குற்றம் நீங்கி ஒளி மிகும். அதுபோல தவம் செய்ய வல்லார்க்கு அதனான் வரும் துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் மிகப் பெறுவர் என்பதனை,

''சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்

சுடச்சுட நோற்கிற் பவர்க்கு'' (குறள்: 267)

என்ற திருக்குறளானது எடுத்தரைத்து நிற்கின்றது.

''வெள்ளியை உலைக்களமும் பொன்னை புடக் குகையும் சோதித்துப் பார்க்கும்.உள்ளத்தை சோதித்துப் பார்ப்பார் ஆண்டவர்'' (நீதி: 17: 3)

என்ற திருவிவிலிய வசனம் மேற்கண்ட திருக்குறள் கருத்தினை ஒத்தமைவதனை ஆயும் வழி அறிய முடிகின்றது.

**ஊழ்வினை:**

மக்களின் எண்ணம் முதலியவற்றுள் அடங்காமல் அப்பாற்பட்டு இயற்கையாக நிகழும் நிகழ்ச்சி ஊழ் எனப்படும். ஊழ் - முறைமை உலகியல் நிகழும் முறைமை, உலகியலின் இயற்கை நிகழ்ச்சி. அதாவது பொருளும் காலமும் செயற்படும் தகுதியும் நமது எண்ணத்தின் முயற்சியின் செயலின் தகுதிக்கு ஒத்து வருதலும் ஒவ்வாது வருதலும் ஊழ் எனப்படும். ஒத்து வருதல் ஆகூழ் எனவும் ஒவ்வாது வருதல் போகூழ் எனவும் குறிக்கப்படும். செயற்படுதல் என்பதற்கு நிகழுதல் என்பது பொருளாகும். அந்நிகழ்ச்சியின் போக்கில் நாம் செய்யும் செயல்கள் வெற்றி ஆகும். அதற்கு எதிரிடையாகச் செய்யும் செயல்கள் வெற்றி ஆகாது. இதனை,

''நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆர்உயிர்

முறைவழிப் படூஉம் என்பது''[42]

எனக் குறிக்கும் புறநானூறு.

''ஊழில் பெருவலி யாவுள? மற்றொன்று

சூழினும் தான்முந் துறும்'' (குறள்: 380)

என்னும் திருக்குறள் ஊழின் வலிமையை எடுத்துரைக்கின்றது. இதன்வழி ஊழ் என்பது மனித முயற்சியினும் தெய்வ முயற்சியான் அமைவது என்பது பெறப்படும். திருவிவிலியமும் இத்தகைய கருத்தினை.

''அடுத்து என்ன நடக்கும் என்பதை நீ தெரிந்துகொள்ளா வண்ணம் கடவுள், இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி வரவிடுகிறார்'' (சபை: 8:17) என உரைத்து நிற்கின்றது.

திருக்குறள் ஒருவன் கையிற் பொருள் சேர்தற்கு நல்லூழால் முயற்சியுண்டாகும்; அவன் கையிலுள்ள பொருள் தீர்தற்குத் தீயூழாற் சோம்பலுண்டாகும் என்பதனை,

"ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்

போகூழால் தோன்றும் மடி" (குறள்: 371)

என எடுத்துரைக்கின்றது. ஒருவனுக்குச் செல்வம் தன்முயற்சியாலும் வரும், முன்னோர் முயற்சியாலும் பிறர் முயற்சியாலும் வரும். அங்ஙனமே ஒருவன் செல்வத்திற்கு அழிவும் அவன் செயலாலும் வரும், கள்வர், பகைவர் முதலிய பிறர் செயலாலும் வரும். ஒருவனுக்குச் செல்வத்தின் ஆக்கம் போன்றே அழிவும் பிறரால் மட்டுமன்றித் தன்னாலும் நேரும். இவ்வாறு அமையுமாறு ஊழே முயற்சியையும் சோம்பலையும் தோற்றுவிக்கும் என்பது மேற்கண்ட திருக்குறளால் கூறப்பட்டது. திருவிவிலியம் இவ்வாறு ஊழால் அமையும் தன்மைகளை,

"ஏனெனில் வாழ்க்கையில் என்ன நடக்கும் என்று அவனுக்குத் தெரியாது. அது எப்படி நடக்கும் என்றும் அவனுக்குச் சொல்வருமில்லை. (சபை: 8:7)

"தீமை நன்மையாக மாறுவதும் உண்டு: நல்வாய்ப்பு இழப்பிற்கு இட்டுச் செல்வதும் உண்டு" (சீராக்: -20 : 9) எனக் குறிப்பிடும்.

**நிலையாமை:**

நிலையாமை என்பது தமிழ் இலக்கியப்பரப்பில் பெருமளவும் வலியுறுத்தப்படுகின்றது. மனிதர்களை அறம் செய்ய ஆற்றுப்படுத்துவதற்கும் இறைவன் திருவருளைச் சிந்தித்து அதன் வழியில் நடக்கச் செய்வதற்கும் நிலையாமைத் தத்துவம் முன்மொழியப்படுகிறது. தொல்காப்பியர் காஞ்சி என்பதற்கு 'நிலையாமை' என்று பொருள் கூறுவதை,

"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற்றானும்

நில்லா உலகம் புல்லிய நெறித்தே" [43]

என்ற நூற்பாவின் மூலம் உணர முடிகின்றது.

"அறம், பொருள், இன்பம் ஆகிய பொருட்பகுதியானும் அவற்றுள் பகுதியாகிய உயிரும், யாக்கையும், செல்வமும், இளமையும் முதலியவற்றானும் நிலைப்பேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியை உடையது காஞ்சி"[44]

என்று காஞ்சி என்பதற்கு விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர். மதுரைக்காஞ்சி என்பது நிலையாமையை உணர்த்தும் திணைப்பெயராக வந்துள்ளது என்றும் அறிவுறுத்துகிறார்.

திருவள்ளுவர் 'நிலையாமை' என்னும் ஓர் அதிகாரமே படைத்திருக்கின்றார். அவ்வதிகாரத்தில்,

"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்

புல்லறி வாண்மை கடை" (குறள்: 331)

என்று வாழ்வின் இழிந்தநிலைச் சுட்டுகின்றார். மணிமேகலை நிலையாமைக் கருத்துகளைப் பல இடங்களில் முன்மொழிகின்றது. உதயகுமாரன், மணிமேகலையின் திறம் குறித்து சுதமதியிடம் வினவுகின்றான். அப்பொழுது சுதமதி யாக்கையின் நிலையாமையை,

"வினையின் வந்தது வினைக்குவிளை வாயது

புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது

மூத்துவிளி வுடையது தீப்பிணி இருக்கை

பற்றின் பற்றிடங் குற்றங் கொள்கலம்

புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை

அவலக் கவலை கையா றழுங்கல்

தவலா உள்ளந் தன்பா லுடையது

மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து" [45]

என்று உணர்த்துகின்றாள். நாகர்களின் தலைவனுக்கு சாதுவன் கூறும் அறவுரைகளிலும் நிலையாமைக் கருத்துக்கள் இடம்பெறுகின்றன. மணிமேகலை மேல் கொண்ட காமம் அடங்காதவன் என்பதால், அவளிடம் தவம் மேற்கொண்டதற்கான காரணம் வினவுகின்றான். அதற்கு மணிமேகலை,இளமை, யாக்கை நிலையாமை பற்றிய செய்திகளைத் தருகின்றாள். இவ்வாறு எமனால் உயிர் குடிக்கப்பட்ட உடம்புகளின் நிலையை,

"அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்

கழிபெரும் செல்வக் கள் ஆட்டு அயர்ந்து

மிக்க நல்லறம் விரும்பாது வாழும்

மக்களின் சிறந்த மடவார் உண்டோ"[46]

என மணிமேகலை உணர்த்துகின்றது. திருக்குறள்,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்

பெருமை உடைத்திவ் உலகு'' (குறள்: 336)

என எடுத்துரைக்கும். நாலடியார்,

''மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்

தலைமிசைக் கொண்ட குடையர் – நிலமிசைத்

துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட்டு ராரல்லால்

எஞ்சினார் இவ்வுலகத் தில்'' (நாலடி: 21 )

எனக் குறிக்கும். திருவிவிலியம் இதனை.

''மனிதனுடைய வாழ்நாள் குறுகியது, பயனற்றது, நிழலைப்போல் மறைவது, அதில் நமக்கு நலமானது எது என்பதை யாரால் அறியக் கூடும். தம் மறைவிற்குப் பிறகு உலகில் என்ன நடக்கும் என்பதை யாரால் தெரிந்து கொள்ள இயலும்'' (சபை: 6: 12 )

''நொடிப்பொழுதில் தோன்றி மறையும் புகை போன்றவர் நீங்கள்'' (யாக்: 4: 14)

மானிடர் அனைவரும் புல்லைப் போன்றவர், அவர்களது மேன்மை வயல்வெளிப் பூவைப் போன்றது. புல் உலர்ந்து போம். பூ வதங்கி விழும். (1பேது: 1: 24 )

எனக் குறிப்பிடுகின்றது.

**அரசியல்:**

அரசியல் என்பது மனித வாழ்க்கையில் இருந்து பிரிக்கமுடியாத ஒரு தத்துவம் அல்லது கொள்கை ஆகும். அரசியல் என்பது வாழும் முறை (Way of life ) அல்லது வாழ்க்கை முறை (Way of living) என்பது ஆகும். இது சமுதாய வாழ்க்கைக்கு அமைதியைத் தருவது.சமுதாயத்தில் பலர் கூடி வாழ்வதற்கும் பொருளியல் ஒழுங்கு முறைகளுக்கும் அரசியலே வழிவகுக்கின்றது. அறநெறிகளில் மனித குலம் ஒன்றி நின்று வாழ்வதனை உறுதிப்படுத்தத்தான் அரசியலே தோன்றுகிறது. தொண்டு செய்கிறது.அரசியல் தத்துவங்கள் மனித உலக வரலாற்றின் நிகழ்வுகளில் இருந்து தோற்றம் பெறுகின்றன. சிறந்த அரசியல் நிலவும் நாட்டில் ஒழுங்கு நிலவும். வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான அனைத்தும் கிடைக்கும்.அறிவுத்துறை மேம்படும். பகை ஒடுங்கிப் பண்பாடு விளங்கும். இத்தகைய அரசியல் கெடுமானால் அனைத்தும் கெடும். இதனை.

“காற்று – கெட்டிருக்கும் போது நம் நுரையீரலில் மட்டும் தூய்மை நிலவ வேண்டும் என்று எதிர் பாக்கலாமா? பொது வாழ்க்கையாகிய அரசியலில் அறத்தைப் புறக்கணித்த பிறகு தனி வாழ்க்கையில் மட்டும் அறத்தைப் போற்ற முடியுமா? வெளிக்காற்றின் தூய்மையைக் கெடுக்காமல் காப்பது முதல் கடமை”[47] என்ற மு.வ. வின் கருத்தானது அரசியலில் அறத்தின் ஆளுகை இன்றியமையாதது என்று உணர்த்தும்.

“அஞ்சாமை, அல்லல் நீக்கல், அளிஉடைமை, அறன் இழுக்காமை, அறிவுடைமை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, இன்சொலுடைமை, ஈகையுடைமை, ஊக்கமுடைமை, கடுஞ்சொல் உரையாடாமை, காட்சிக்கு எளிமையுடைமை, தூங்காமை, பெண்வழிச் சேராமை, பொச்சாமை, மடியின்மை, மறன் இழுக்கா மானம் உடைமை”[48] போன்றவை அரசனின் பண்புகளாக இருக்கவேண்டும் என்கிறார் வள்ளுவர்.

“மானம் வேண்டும் என்று கூறும் போது தலைவனுடைய தனி வாழ்க்கை பற்றிய மானவுணர்ச்சியைக் குறிப்பிடவில்லை. அதனால்தான் மறனீக்கா மானம் என்று வீரத்திற்கு ஏற்புடைய மானத்தைக் குறித்தார். நாட்டின் மானமே தன்மானமாகக் கொண்டு அவன் வாழ்க்கை நடத்த வேண்டும். நாட்டிற்கு உண்டாகும் சிறுமை தன் சிறுமை என்றும், அதன் பெருமை தன் பெருமை என்றும் வாழ வேண்டும். தன் மானத்தை, நாட்டு வாழ்க்கையில் புகுத்தி, நாட்டு மக்களுக்குப் போர் முதலிய தொல்லைகளை விளைவிக்கக் கூடாது. தன்னைக் குறை கூறினால் பொறுத்து, நாட்டைக் குறை கூறினால் புறக்கணியாத வீரம் வேண்டும். தனி வாழ்க்கையில் தன் பகைவனாக உள்ளவனைப் பொருட்படுத்தாமல் நாட்டின் பகைவனாக உள்ளவனை அடக்கவும் திருத்தவும் வேண்டும்”[49] எனத் திருக்குறள் அரசியல் குறித்து விளக்கும் செய்திகளைத் திருவிவிலியமும் தந்து நிற்றற்கு,

“இதயம் ஆண்டவனை விட்டு விலகாது இருக்க வேண்டுமானால் பல மனைவியரைக் கொள்ளலாகாது. வெள்ளியும் பொன்னும் அளவு மீறிச் சேர்க்கலாகாது. அவன் அரசுக் கட்டிலில் அமர்ந்த பின் அவன் இதயம் இறுமாப்புக் கொண்டு தன் சகோதரனுக்கு மேல் தன்னை உயர்த்திக் கொள்ளாமலும் கட்டளைகளில் இருந்து வலமோ இடமோ பிறழாமலும் இருப்பான். லேவியர், குருக்கள் பொறுப்பில் உள்ள இச்சட்டநூலின் நகல் ஒன்றை தனக்கென ஒரு ஏட்டில் எழுதிக் கொள்ளட்டும். அதைத் தன்னோடு வைத்துக் கொள்ளட்டும். அதை நாள்தோறும் அவன் வாழ்நாள் முழுவதும் வாசிக்கட்டும். அதனால் அந்தச் சட்டத்தின் எல்லா வார்த்தைகளையும் அதன் நீதி முறைகளையும் நிறைவேற்றுவதன் மூலம் அவன் கடவுளாகிய ஆண்டவருக்கு அஞ்சி நடக்கக் கற்றுக் கொள்வான் (இணை:17: 17, 20, 18 - 19) என்ற வசனம் சான்றாகும்.

ஒரு குற்றமும் செய்யாது தன் குடியை உயரச் செய்தொழுகும் அரசனை அவன் குடியைச் சேர்ந்தார் அனைவரும், விரும்பிச் சுற்றமாய்த் தாமே சென்று அவனைச் சூழ்ந்து கொள்வர் என்பதனை,

"குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்

சுற்றமாச் சுற்றும் உலகு." (குறள்: 1025)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் ஒரு அரசன் முறை செய்யுமிடத்து நீதிமானாய் நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பதனை,

"தீர்ப்பிடுகையில் அநீதி இழைக்காதே, சிறியோர், பெரியோர் என முகம் பாராது உனக்கு அடுத்து வாழ்வோருக்கு நேர்மையுடன் நீதி வழங்கு." (லேவி:19:15)

எனக் குறித்துரைக்கின்றது. திருக்குறள்,

"கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்

உடையானாம் வேந்தர்க் கொளி" (குறள்: 390)

எனக் குறிக்கும். இதன்வழி, தகுதியுடையவர்க்கு வேண்டுவன கொடுத்தலும்; அனைவரிடத்தும் அன்பாயிருத்தலும், நேர்மையான ஆட்சியும்; தளர்ந்த குடிகளைப் பேணுதலும்; ஆகிய இந் நான்கு செயலையும் உடையவன்; அரசரெல்லார்க்கும் விளக்காவான் என்னும் கருத்து வெளிப்போந்து நிற்கும். திருவிவிலியம்,

"நியாயம் வழங்குவதில் அரசர் அக்கறை காட்டினால் நாடு செழிக்கும். அவர் வரி சுமத்துவதில் அக்கறை காட்டினால் நாடு பாழாய்ப்போகும்" (நீதி:29:4)

என வலியுறுத்துகின்றது. மேலும் நடுநிலையாகத் தீர்ப்புச்செய்து மக்களுக்கு எவ்வகையிலும் துன்பம் நேராது குடிகளைக் காக்கும் அரசன், பிறப்பால் மனிதனாயினும் அவனால் ஆளப்பெறும் மக்களால் அவன் கடவுள் எனக் கருதப்படுவான் என்பதனை.

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு

இறையென்று வைக்கப் படும்" (குறள்: 388)

எனக் குறிப்பார் வள்ளுவர். திரிகடுகம் முறையறிந்து செய்யமாட்டாதவன், அடைந்த, தலைமைத் தன்மையும், மனத்தில், உறுதிப்பாடு இல்லாதவன், மேற்கொண்ட தவமும் குறைவற்ற

ஒழுக்கத்தை, தெளிந்து நடவாதவன், பெற்ற அழகும் ஆகிய இம் மூன்றும், தூற்றின்கண் தூவிய விதையை ஒக்கும் எனக் குறிப்பிடும்.

"முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சில்

நிறையிலான் கொண்ட தவமும் - நிறையொழுக்கம்

தேற்றாதான் பெற்ற வனப்பும் இவை மூன்றும்

தூற்றின்கண் தூவிய வித்து" (திரி: 80)

திரிகடுகம் குறிப்பிடும் மேற்கண்ட மூன்று கருத்துகளுள் முறைசெய்யான் பெற்ற தலைமை என்பது முதல்நிலையில் சுட்டப்பட்டிருப்பதில் அதன் இன்றியமையாமை வெளிப்பட்டு நிற்கின்றது. மேலும் இந்நூலானது மழையருக்கும் கோள் மூன்றனுள் முதன்மையாய் கொள்பொருள் வெட்கிக் குடியலைக்கும் வேந்தனைக் குறிப்பிடுகின்றது. இதனை.

"கொள்பொருள் வெ.:.கிக் குடியலைக்கும் வேந்தனும்

உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்

இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்

வல்லே மழையருக்குங் கோள்" (திரி: 50)

என்பதனால் அறிய முடிகின்றது. முதுமொழிக்காஞ்சி என்னும் இலக்கியம், கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம் நீதி முறை இல்லாத, அரசனது நாடானது, வறுமையுடையதாய் அமையும் என்பதனை.

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்

முறையி லரசனாடு நல்கூர்ந் தன்று" (முதுமொழி: 9: 1)

என எடுத்துரைக்கின்றது. திருக்குறள் தன் நாட்டில் நிகழும் நன்மை தீமைகளை நாள்தோறும் ஆராய்ந்து அதற்கேற்ப முறை செய்யாத அரசன் நாள்தோறும் நாடிழப்பான் எனக் குறித்து நிற்கும். இதனை.

"நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்

நாடொறும் நாடு கெடும்'' (குறள்: 553)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். இவற்றுள் குறிக்கப்படும் நாள்தோறும் நாடிழத்தல் என்பது,

''கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி

வேத்திய லிழந்த வியனிலம்

........................................

நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்து வதால்"[50]

எனச் சிலப்பதிகாரம் குறிப்பதுபோல் வரவர வளங்குன்றுதலும், குடிகளின் அரசப்பற்றுக் குறைதலும், பகைவரால் அல்லது அருள்பூண்ட செங்கோலரசராற் சிறிது சிறிதாக நிலம் கைப்பற்றப் பெறுதலுமாம் என்பது போன்று அமைவதாகும்.இவ்வாறு திருக்குறள் உணர்த்தி நிற்கும் அற விழுமியத்தினை,

''நீங்கள் ஏழைகளை நசுக்கி அவர்களிடம் தானிய வரியாக வாங்கியதைக் கொண்டு -----

உங்கள் குற்றங்கள் எவ்வளவு மிகுதியானவை என்றும்

உங்கள் பாவங்கள் எத்தனைக் கொடியதென்றும் அறிவேன். - நல்லாரைத்

துன்புறுத்துகிறீர்கள் நகர வாயிலில்

வறியோருக்கு நீதி வழங்க மறுக்கிறீர்கள்'' (ஆமோ: 5: 11-12)

எனச் சுட்டுகின்றது திருவிவிலியம்.

''கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்

கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்

மாரிவறங் கூரின் மன்னு யிரில்லை" [51]

என வரும் மணிமேகலையின் அடிகளும் மேற்கண்ட கருத்திற்கு அரண்செய்கின்றன. மழையருக்கும் கோள் பற்றி அற இலக்கியங்கள் குறித்து நிற்க, திரிகடுகத்தின் ஒருபாடல் தீங்கினை நீக்கி, குடிகளுக்கு நன்மையானவற்றைச் செய்பவன் அரசனாவான். இத்தகைய அரசன் மழையைப் பெய் என்றுசொல்ல மழை பொழியும் எனவும் குறிப்பிடுகின்றது.

"-----------------------------------------கொடிதொரீஇ

நல்லவை செய்வான் அரசன் இவர்மூவர்

பெய்யெனப் பெய்யும் மழை" (திரி: 96)

என்பது அப்பாடல் ஆகும். புறநானூறும்,

"------------------------------ நீயோ, பெரும!

நீர் ஆகலின் நின் ஒன்று மொழிவல்:

அருளும் அன்பும் நீக்கி நீங்கா

நிறையம் கொள்பவரோடு உன்றாது காவல்

குழவி கொள்பவரின் ஓம்புமதி!

அளிதோ தானே: அது பெறல் அருங்குரைத்தே" [52]

என அரசன் ஆளும் முறைமையினை எடுத்துரைக்கின்றது. இதனைத் திருவிவிலியம்,

"அரசரின் முகமலர்ச்சி வாழ்வளிக்கும். அவரது கருணை பருவமழை பொழியும் மேகம் போன்றது." ( நீதி:16:15) எனக் குறிப்பிடுகின்றது.

**குற்றம் கடிதல்:**

ஒரு மனிதன் பின்பற்ற வேண்டிய அரிய செயல்களுள் மிகவும் இன்றியமையாதது தன் குற்றத்தை நீக்குதல் என்பதாகும். இதனையே திருக்குறள் தனக்கு அழிவை உண்டாக்கும் பகை தன்குற்றமே ஆகும். ஆதலால் தன்னிடத்துக் குற்றம் வராமையையே பொருட்டாகக் கொண்டு காத்துக் கொள்க! என்று அறிவுரை பகர்கின்றது. இதனை,

"குற்றமே காக்க பொருளாகக் குற்றமே

அற்றம் தரூஉம் பகை" (குறள்: 434)

என்பதனால் அறியலாம். இத்தகைய குற்றங்கள் காமம், வெகுளி, மயக்கம் எனக் குறிக்கப்பெறும்.

"காம வெகுளி கடும்பற்றுள்ள மான வுவகை செருக்குகளை அறுபகை"[53]

எனக் காஞ்சி புராணமும்

“மொழிந்தன ராசிகள் முப்பகை வென்றார்” [54]

எனக் கம்பராமயணமும் விளக்கியுரைக்கின்றன. குற்றங்கள் பகைவர்போற் கொல்லும் என்பதை,

“அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்

வழுக்கியுங் கேடீன் பது” (குறள். 165)

“தன்னையே கொல்லுஞ் சினம்” (குறள். 305)

என வரும் குறட்கள் எடுத்து மொழியும். திருவிவிலியம் ஒருவன் விரோதங்களை வளர்க்கும் பகையை நீக்குதல் வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது.இதனை.

“பூசலைத் தவிர்த்திடு, உன் பாவங்கள் குறையும். சீற்றம் கொள்வோர் சண்டையை மூட்டி விடுகின்றனர். அமைதியாய் இருப்போரிடை சினத்தை விதைக்கிறார்கள்.” (சீராக்:28: 8-9 )

என்பதால் அறிய இயலும். ஒருவன் அறிவாற்றல்களிலும் இடம் பொருள், ஏவல்களிலும் தான் மிகவுயர்ந்திருந்த போதும் தன்னை மெச்சிச் செருக்குறாது இருத்தல் வேண்டும். தனக்கும் தன்நாட்டிற்கும் நன்மை தராத செயல்களை மனத்தினாலோ செருக்கினாலோ இன்பங்கருதியோ விரும்பாமல் இருத்தல் வேண்டும் என்பதனை.

“வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க

நன்றி பயவா வினை” (குறள்:439)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கும். மேலும் திருவள்ளுவர் ஒருவன் தன்னை ஞானி என்று உயர்த்தாமல் தீமையை விட்டு விலக வேண்டும் எனக் குறிப்பிடுகின்றார். மேலும் ஒருவன் தனது குற்றத்தைக் கண்டு அதனை நீக்கும் தன்மையைப் பெறுதல் வேண்டும். பிறகே பிறர் குற்றத்தைக் காணல் வேண்டும். அவ்வாறு செய்வானாயின் அவனுக்குத் தீமை வரப்போவதில்லை. அதனை விடுத்துத் தன்னைக் காணாமல் பிறர் குற்றம் காணல் என்பது சரியன்று என உரைக்கும் திருக்குறள். இதனை.

“தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்

என்குற்ற மாகும் இறைக்கு” (குறள்: 436 )

என்ற குறளானது எடுத்துரைக்கின்றது. திருக்குறளின் இத்தகைய கருத்தோடு,

“பிறர் குற்றங்களைக் கிண்டிக் கிளறித் தூற்றுபவர் கயவர், எரிக்கும் நெருப்புப் போன்றது அவரது நாக்கு’’ (நீதி: 16:27) என்ற திருவிவிலியக் கருத்தானது ஒத்தமைவதனை நோக்கி உணர முடிகின்றது.

**காலமறிதல்:**

செய்வதற்குரிய காலம் அறிந்து செய்து முடித்தற்கான கருவிகளுடன் செய்பவர்க்குச் செய்தற்கரிய செயல்களில்லை என்பதனை உணர்த்துவதே காலம் அறிதல் என்பதாகும். காலம் அறிதல் என்பதனுள் காலப்பொழுதினால் பெறும் வெற்றி, காலமறிதலால் வரும் பயன், காலம் வாய்க்காவிட்டால் பொறுத்திருத்தல், பொறுத்திருப்பதால் வரும் சிறப்பு, பொறுத்திருக்கும் பருவத்தில் தன் நோக்கம், உணர்ச்சிகள் ஆகியவற்றை வெளிக்காட்டாமை, காலம் கூடியபொழுது வினரந்து செயல்படுதல், அச்செயல்முறை விளக்கம் என்பன போன்ற கூறுகள் அடங்கும். காலத்திற்காகச் சிலவேளைகளில் காத்திருக்க வேண்டி இருக்கும். அச்சமயங்களில் பதற்றமின்றிச் செயல்படவேண்டும். தம்முடைய குறிக்கோள்களை வெளிக்காட்டிக் கொள்ளாமல் ஒடுங்கி இருக்க வேண்டும்.சீண்டும் மாற்றாரின் நடவடிக்கைகளுக்கு உடனுக்குடன் எதிர்வினை காட்டாமல் அசைவற்றுத் தோற்றமளிக்க வேண்டும். அவ்விதம் ஒடுங்கி இருத்தல் இகழ்வாகக் கருதப்படமாட்டாது. இவ்விதம் பொறுமை காப்பது பெரும் பயனளிக்கும். தம் காலம் வரும்போது எல்லாம் தலைகீழாகிவிடும். பணியச் செய்தவர் பணிவர். காலம் இயைந்தபொழுது அரிய செயல்களைச் செய்து முடித்துவிடவேண்டும். பதுங்கி இருந்தவர், காலம் கூடியபொழுது பாய்ந்து விரைந்து திருத்தமாகச் செயலாற்றி வெற்றி காண்பர். இவை காலமறிதல் என்பதனுள் அடங்கியுள்ள நுட்பங்கள் ஆகும். இது மனிதர்களுக்கு வேண்டிய இன்றியமையாத விழுமியம் ஆகும். அதிலும் சமுதாயத்திற்காகத் தன்னை ஒப்பளிப்புச் செய்து கொண்டிருப்பவர் காலம் அறிந்து செயலாற்றும் பண்பினைப் பெற்று இருப்பார் ஆயின் அவரால் சமூகம் பெரும் பயன்பெறும். திருவள்ளுவர் ஒருவன் ஒரு வினையைத் தகுந்த காலம் அறிந்து இடத்தொடு பொருந்தச் செய்வானாயின் உலகம் முழுவதையுங் கைப்பற்றக் கருதினாலும் கைகூடும் எனக் குறிப்பார். இதனை விளக்கி நிற்கும் திருக்குறள்,

‘‘ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்

கருதி இடத்தாற் செயின்’’ (குறள்: 484)

என்பதாகும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை,

‘‘ஒவ்வொன்றிற்கும் ஒரு காலமுண்டு, பிறப்புக்கு ஒருகாலம், இறப்புக்கு ஒருகாலம்

நடவுக்கு ஒரு காலம் அறுவடைக்கு ஒரு காலம் -----

பேசுவதற்கு ஒரு காலம், பேசாது இருப்பதற்கு ஒருகாலம் ” ( சபை:3:1- 8)

எனக் குறிப்பிடுகின்றது திருவிவிலியம். மேலும் திருக்குறளானது ஒருவன் வினைமேல் செல்லாதிருக்கும் காலத்தில் மீன்தேடுங் கொக்குப்போல் ஒடுங்கியிருத்தல் வேண்டும். வினைமேற் செல்லுங்காலம் வாய்த்த விடத்து அக்கொக்கு விரைந்து மீனைக்கொத்துவதுபோல் விரைந்து பகைவனைத் தாக்குதல் வேண்டும் எனக் குறித்து நிற்கும். இதனை விளக்கும் திருக்குறள்,

“கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்

குத்தொக்க சீர்த்த இடத்து” ( குறள்: 490 )

என்பதாய் அமையும். மூதுரையும்

“ஓடுமீ னோட யுறுமீன் வருமளவும் -

வாடி யிருக்குமாங் கொக்கு” [55]

எனக் காலம் அறிந்து செயலாற்றலின் சிறப்பினைக் குறிப்பிடும். திருவிவிலியமும் காலம் அறிந்து செயலாற்றலின் மேன்மையை,

“அன்புக்கு ஒருகாலம், வெறுப்புக்கு ஒரு காலம், போருக்கு ஒரு காலம் அமைதிக்கு ஒரு காலம்”

( சபை:3: 8)

“குறித்த காலத்திற்கு முன்பே உங்கள் பணிகளைச் செய்து முடியுங்கள், அவ்வாறாயின் குறித்த காலத்தில் கடவுள் உங்களுக்குப் பரிசு வழங்குவார்” (சீராக்: 51: 30)

என எடுத்துரைக்கின்றது.

## தொகுப்புரை:

- சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது.இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம். சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது. ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கின்றது.

- சமுதாயம் என்பதன் விளக்கம், சமுதாய குறித்த வரையறை, சமுதாயச் சிந்தனை கட்டமைப்பு, சமூகநேயத்தை வளர்த்தெடுக்கும் இறையுணர்வைக் கைக்கொள்ளல், வான்சிறப்பாய் அமையும் மழையினைப் போற்றல், நீத்தார் மேன்மையை அறிந்து ஒழுகல், சமூக அறம் பேணலில் நடுவுநிலைமை பெறும் இடம், அவா அறுத்து சமூக அறம் பேணல், உலக உயிர்களின் நன்மை பேணும் அருளுடைமையைப் பின்பற்றலின் சிறப்பு போன்ற சமூக அறங்களைப் பின்பற்றுதலின் இன்றியமையாமையை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் முன்மொழிந்து நிற்பதனை ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

➢ உலக உயிர்களின் பசியினையும் வறுமையினையும் களையும் ஈதலறத்தை மேற்கொள்ளல், சமூக அறத்தினைச் சிதைக்கும் கூடா ஒழுக்கத்தினை நீக்கி வாழ்தல், சமூக மேம்பாட்டிற்கு உறுதுணையாய் அமையும் செய்நன்றி அறிதலை பின்பற்றல், மெய்யுணர்தலின் மேன்மை, வெ.ஃகாமை என்னும் சமூக அறம், தவத்தால் விளையும் சமூக விழுமியங்கள், ஊழ்வினை, நிலையாமையை மனிதன் உணர்வதன் வழித் தன்னலம் துறந்து சமூகநலம் பேண விழைதல் போன்றவற்றை வலியுறுத்துவதில் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்தமைவதனை ஆய்வானது வெளிப்படுத்துகின்றது.

➢ அஞ்சாமை, அல்லல் நீக்கல், அளிஉடைமை, அறன் இழுக்காமை, அறிவுடைமை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, இன்சொலுடைமை, ஈகையுடைமை, ஊக்கமுடைமை, கடுஞ்சொல் உரையாடாமை, காட்சிக்கு எளிமையுடைமை, தூங்காமை, பெண்வழிச் சேராமை, பொச்சாமை, மடியின்மை, மறன் இழுக்கா மானம் உடைமை, குற்றம் கடிதல், காலம் அறிதல் ஆகிய அரசனின் கடமைகள் போன்ற அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஆய்வின் மூலம் வெளிப்பட்டு நிற்கிறது.

## சான்றெண் விளக்கம்


1. தி.சு. நடராசன், திறனாய்வுக் கொள்கைகள் ப. 75
2. மா.இராமலிங்கம், புனைகதை வளம், ப. 9
3. கா. ஜோசப் கலியபெருமாள், பல்துறைக் கட்டுரைகள் ப. 60
4. மு. வரதராசனார், இலக்கிய மரபு, ப. 105
5. Cambridge International Dictionary of English – p. 1370
6. மேற்கோள் ஏ.ஆ.வாடியா, குடியாட்சியும் சமுதாயமும் ப. 164
7. எஸ்.கே. பாஸ்கல் கில்பர்ட் - ஜெ. நாராயணன், (மொழிபெயர்ப்பு ஆசிரியர் – சமுகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப. 159 )
8. கழகப் புலவர் குழு, கழகத்தமிழ் அகராதி – ப. 420
9. தமிழ்மொழி அகராதி, ப - 761 )
10. சு. இன்னாசி ( ப. ஆ ) சமயமும் சமுதாயமும், ப. 12
11. J.S. Meckenzi – Out lies of social Philosophy p- 6
12. க.ப. அறவாணன், படைப்பாளி + சமுதாயம் = இலக்கியம், ப. 138
13. ஏங்கல்ஸ், குடும்பம், தனிச்சொத்து,அரசு ஆகியவற்றின் தோற்றம் ப. 90

14. முகிலை இராசபாண்டியன், பாரதி உரைநடையில் சமுதாயம், ப.15 – 16
15. Encycloppedia Volume III P- 120
16. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப. 148
17. ப. கிருஷ்ணசாமி ( தொ. ஆ ) ஜெயகாந்தன் இலக்கியத் தடம் : ப. 249
18. அ.ச. ஞானசம்பந்தம், பெரியபுராணம்- ஓர் ஆய்வு, ப.245
19. திருமந்: 539
20. தாயுமானவர், பரிபூரணானந்தம் பா. 2
21. திருமந்: பா. 2615
22. திருவாசகம், திருப்பூவல்லி பா. 10
23. அழகரடிகள்,திருக்குறள் அறம், ப.220
24. மணி: பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை: அடி: 91
25. திருவாய்: 78-6
26. பரிமேலழகர் குறள், அருளுடைமை அதிகார விளக்கம்
27. கு. மோகனராசு, வாழ்வியல் சிக்கல்களும் தீர்வுகளும் ப. 120
28. கலி, குறிஞ்சிக்கலி, பா -61
29. புறம்: பா. 204
30. சிந்தா: முக்தி இலம்பகம், பா. 27
31. திருக்கோவையார்:பா. 322
32. சிந்தா: முக்தி இலம்பகம், பா. 244
33. குன்றக்குடி அடிகளார் – திருவள்ளுவர் காட்டும் அரசியல் ப. 103
34. பரிமேலழகர், குறள், மெய்யுணர்தல் அதிகார விளக்கம்
35. அழகரடிகள்:திருக்குறள் அறம் ப.32
36. திருமந்: 1514
37. பட்டினத்தார்: அடிகள் 206 – 207
38. பரிமேலழகர், குறள், தவம் அதிகார விளக்கம்
39. புறம், பா. பா.246
40. பரிமேலழகர், குறள் 361 இன் உரை
41. பரிமேலழகர், குறள் தவம் அதிகார விளக்கம்
42. புறம்: பா. 192
43. தொல். பொருள்: நூ. 78
44. நச்சர், மதுரை, உரை ப. 4
45. மணி: உதயகுமாரன் அம்பலம் புக்க காதை: அடிகள்: 113-130
46. மேலது, சக்கரவாளக்கோட்டம் உரைத்த காதை: 101 -104

47. மு. வரதராசனார், முன்னுரை அறமும் அரசியலும் ப. 1
48. மு. முருகரத்தினம், குறள் கூறும் இறைமாட்சி ப. 52
49. மு. வரதரசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் பக். 95 – 96
50. சிலம்பு, மதுரைக் காண்டம், அடிகள்: 11:60 – 45
51. மணி: துயில் எழுப்பிய காதை: அடிகள்: 8 - 10
52. புறம்: பா. 5: 3- 8
53. காஞ்சிப்பு. திருமேற். பா.6
54. கம்பர், கார்முகப் படலம், பா, 26
55. மூதுரை பா. 16.

## முடிவுரை

**“அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு )”** என்னும் தலைப்பிலான இவ் ஆய்வின் வழி, பெறப்பட்ட முடிவுகள் கீழ்க்கண்டவாறு தொகுத்துத் தரப்படுகின்றன.

❖ தமிழ் அற நூல்களுள் தலைமைத்தன்மை உடையதாய்ப் போற்றப்படுவது திருக்குறள் ஆகும். இதன் ஆசிரியர் திருவள்ளுவர் என்பவர் ஆவார். வள்ளுவன் என்பான், அரசனின் கட்டளையைப் முரசறைந்து அறிவிப்பவன் என்பதைப் பெருங்கதையும் வள்ளுவன் என்பவன் அரசர்க்கு உள்படு கருமத்தலைவனாய் விளங்குபவன் என்பதனைப் பிங்கல நிகண்டும் வள்ளுவன் என்பவன் புள்ளுவன் (நிமித்திகன்) என்று சீவகசிந்தாமணியும் உரைப்பதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

❖ ‘வள்’ என்னும் அடிச்சொல்லிற்கு அமைந்த பலபொருள்களுள் கூர்மை, வலிமை, வண்மை என்பதும் அமைகின்றது. எனவே ‘வள்ளுவன்’ என்னும் சொல்லிற்குக் கூர்மதியன், வல்லவன், வள்ளியோன் என்று முப்பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்தாய் அமையும் என்பதனை அறிய முடிகின்றது.

❖ திருவள்ளுவர் காலத்தினைத் திட்டமிட்டு உரைக்க இயலாதெனினும் தொல்காப்பியர் காலத்திற்கும் கடைச்சங்க காலத்திற்கும் இடைப்பட்டதென்பதற்குப் புறநானூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவற்றில் காணப்படும் திருக்குறள் கருத்துகளின் பயன்பாடு சான்றாதாரங்களாக அமைகின்றன என்பது வெளிப்போந்து நிற்கின்றது.

❖ பயனில் சொல் பகர்வானைப் பதடி எனப் பழித்துரைக்கும் திருவள்ளுவர், சொற்சுருக்கம் பற்றியும் பாக்களுள் சிறந்த வகை என்பது பற்றியும் குறள் வெண்பாவையே தம் நூற்கான பாவகையாக எடுத்துக் கொண்டார் என்பது ஆய்வின்வழி வெளிப்படுகிறது.

❖ திருக்குறளுக்கு அடுத்த இடத்தில் வைத்து எண்ணப்படுவது நாலடியார். நாலடி வெண்பாக்கள் கொண்ட நீதி நூல்கள் வேறு பல உண்டு. எனினும், இதன் சிறப்புக் கருதி இதனை மட்டும் 'நாலடி' என்று வழங்கினர். மேலும் 'ஆர்' விகுதி சேர்த்து நாலடியார் எனப்பட்டது. நானூறு வெண்பாக்கள் உடைமையால் 'நாலடி நானூறு' என்றும் வழங்கப்படுகிறது. இதற்கு 'வேளாண் வேதம்' என்ற பெயரும் உண்டு என்பது ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

❖ பழமொழி நானூற்றின் ஆசிரியர் முன்றுறை அரையனார் சமண சமயத்தினர் என்பது நூலின் தற்சிறப்புப் பாயிரத்தில் வழி வெளிப்பட்டு நிற்கின்றது. இந்நூலில் 34 தலைப்புகளின் கீழ் பாடல்கள் அமைந்துள்ளன என்பதும் தெரிய வருகின்றது. மேலும் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், மனு நீதி கண்ட சோழன், பொற்கைப் பாண்டியன், வள்ளல் பாரி, பேகன், பாரி மகளிர், கரிகால் சோழன், சேரன் செங்குட்டுவன் போன்ற மன்னர்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுவதனை ஆய்வானது வெளிப்படுத்தி நிற்கின்றது.

❖ திரிகடுகம் என்ற மருந்தில் அடங்கியுள்ள சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று காரப் பொருள்கள் போன்ற மூன்று அறக்கருத்துகளை ஒவ்வொரு பாடலும் கூறுவதால் இப்பெயர் பெற்றது என்பதும் இதனுள் கடவுள் வாழ்த்தோடு சேர்ந்து 101 வெண்பாக்கள் அமைந்துள்ளன என்பதும் வெளிப்படுகின்றது. நான்கு உயர்ந்த மணிகளால் ஆன அணிகலன் போல ஒவ்வொரு பாட்டிலும் நான்கு அரிய உண்மைகளைத் தொகுத்துக் கூறும் வெண்பாக்களைக் கொண்ட நூல் நான்மணிக்கடிகை. கடவுள் வாழ்த்து இரண்டு உட்பட, இதில் 104 செய்யுட்கள் உள்ளன என்பதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

❖ சிறுபஞ்சமூலம், சிறுவழுதுணை, நெருஞ்சி, சிறுமல்லி, பெருமல்லி, கண்டங்கத்திரி என்னும் வேர்கள் உடற்பிணியைப் போக்கி நலம் செய்வது போல, மக்களின் உயிர்ப்பிணியாகிய

அறியாமையைப் போக்கி அதன் ஈடேற்றத்திற்கு உதவும் அரிய பெரிய உண்மைகளை ஐந்து ஐந்தாகச் செய்யுள்தோறும் உரைக்கும் நூல் என்பதும் இதனுள் சிறப்புப்பாயிரங்கள் இரண்டும் 104 வெண்பாக்களும் அமைந்துள்ளன என்பதும் வெளிப்பட்டு நிற்கின்றது.

- ❖ ஏலம், இலவங்கம், நாக கேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு பொருள்களையும் கொண்ட ' மருந்து போல, ஒவ்வொரு செய்யுளாலும் ஆறு அரிய அறக்கருத்துகளைக் கொண்ட 80 வெண்பாக்களால் ஆன நூல் ஏலாதி என்பதும் இதன் ஆசிரியர் கணிமேதாவியார் என்பதும் ஆய்வின்வழி வெளிப்படுகின்றது. இன்னா நாற்பது கடவுள் வாழ்த்து உள்பட 41 வெண்பாக்களைக் கொண்ட அறநூல் ஆகும். இதிலுள்ள ஒவ்வொரு பாட்டும் இன்னது இன்னது துன்பம் தருவது என்று கூறுவதால் இன்னா நாற்பது என்று பெயர் பெற்றது. இந்நூல் தொல்காப்பியர் கூறும் அம்மை என்னும் வனப்பைச் சார்ந்ததாகும் என்னும் கருத்து வெளிப்போந்து நிற்கின்றது.

- ❖ வாழ்விற்கு நன்மை தரும் இனிய அறக்கருத்துகளைக் கூறும் நாற்பது வெண்பாக்களைக் கொண்ட நூல் இனியவை நாற்பதாயிற்று. இதன் கடவுள் வாழ்த்தில் சிவபெருமானும், திருமாலும், நான்முகனான பிரம்ம தேவனும் வாழ்த்தப்படுகின்றனர். இந்நூலின் 1, 3, 4, 5 என்னும் நான்கு பாடல்கள் மட்டும் நான்கு இனிய பொருள்களைக் கூறுகின்றன. ஏனையவற்றில் மும்மூன்று கருத்துகளே கூறப்பட்டுள்ளன.இந்நூலின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் என்பதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

- ❖ காஞ்சி என்பது தொல்காப்பியத்தில் காட்டப்படும் புறத்துறை ஆகும். இதற்கு ‘கழிந்தோர் ஒழிந்தோர்க்குப் காட்டிய முறைமை’ என்பதாகப் பொருள் விளக்கப்படுகின்றது. பலர் புகழ் புலவர் பன்னினர் தெரியும் உலகியல் பொருள் முடிவு உணரக் கூறின்று என்பது புறப்பொருள் வெண்பாமாலையில் இடம்பெறும் முதுமொழிக்காஞ்சித் துறைக்கு உரிய விளக்கமாய் அமைகின்றது.இத்துறையின் பெயரில் அமைந்துள்ள முதுமொழிக்காஞ்சி என்னும் நூலின் ஆசிரியர் மதுரைக் கூடலூர்கிழார் ஆவார். இதன் ஒவ்வொரு பதிகமும் ‘ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்’ என்னும் தரவு அடியோடு தொடங்குகின்றது. அடுத்து ஓரடிப் பாடல்கள் பத்து ஒவ்வொன்றிலும் தாழிசை போல அடுக்கி வருகின்றன. 18 நூல்களின் தொகுப்பான பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என அழைக்கப்படும் தமிழ் நூல் தொகுதியில் மிகச் சிறியது இந்நூலாகும் என்னும் கருத்து வெளிப்படுகின்றது.

- ❖ ‘ஆசாரம்’ என்னும் வடசொல் ஒழுக்கம் என்று பொருள்படுவதாகும். நல்லொழுக்கக் கோட்பாடுகளைத் தொகுத்துக் கோவையாகத் தருவதனால் இந்நூல் ஆசாரக்கோவை எனப் பெயர் பெற்றது. சிறப்புப் பாயிரம் நீங்கலாக இதில் நூறு வெண்பாக்கள் உள்ளன. வெண்பா வகையில் குறள், சிந்தியல், நேரிசை, இன்னிசை, ப∴றொடை ஆகிய பல

வகையும் இதில் உள்ளன. இதன் ஆசிரியர் கயத்தூர்ப் பெருவாயில் முள்ளியார் என்பவராவார் என்னும் கருத்தானது அறிய வருகின்றது.

- ❖ இயேசு பிறந்த நிகழ்ச்சியை விவரிக்கும் நற்செய்தி நூல்கள் யோசேப்பும் மரியாவும் அப்போது யூதேயாவை ஆண்ட அகஸ்து சீசர் என்னும் அரசன் இட்ட கட்டளைக்கு ஏற்ப, யோசேப்பு தமக்கு மண ஒப்பந்தமான மரியாவைக் கூட்டிக்கொண்டு நாசரேத்திலிருந்து தம் சொந்த ஊரான பெத்லகேமுக்குப் பெயர் பதிவுசெய்யச் சென்றபொழுது மரியா இயேசுவை ஒரு மாட்டுத் தொழுவத்தில் பெற்றெடுத்தார் என இயேசுவின் பிறப்பினைக் குறித்துத் தெரிவிப்பதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

- ❖ இயேசு தனது முப்பதாம் வயதில் யோர்தான் ஆற்றின் அருகே வந்து, அங்கே திருமுழுக்குக் கொடுத்துக் கொண்டிருந்த யோவானிடம் தாமும் திருமுழுக்குப் பெற்றார். ஆற்றிலிருந்து இயேசு கரையேறியபோது தூய ஆவி அவர்மீது புறா வடிவில் வந்திறங்கியது. திருமுழுக்குப் பெற்ற பின்னர் இயேசு பாலைநிலத்துக்குச் சென்று 40 நாள்கள் நோன்பிருந்தார். அப்போது அலகை அவரை மூன்று முறை சோதித்தது. மூன்று முறையும் இயேசு வென்றார். இறைத்தன்மையுடன் விளங்கிய அவர் தான் கடவுளின் மகன் என்பதை தன்னுடைய போதனைகளில் வெளிப்படையாகவே அறிவித்தார். இறைத்தன்மையை வெளிக்காட்டும் விதமாக நோய்களைக் குணமாக்குதல், பேய்களை ஓட்டுதல், இறந்தோரை உயிர்த்தெழச் செய்தல் என ஏராளமான புதுமைகளை மக்களிடையே நிறைவேற்றினார் என்பன போன்ற செய்திகள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் போன்ற நூல்களின் மூலம் வெளிப்பட்டு நிற்பதனை அறிய முடிகின்றது.

- ❖ தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பட்டு புனித நூல்கள் என அங்கீகரிக்கப்பட்டுள்ள எழுபத்து மூன்று நூல்களின் தொகுப்பே ‘திருவிவிலியம்’ என்று அழைக்கப்படுகின்றது. திருவிவிலியத்தில் உள்ள நூல்களை மனிதர்கள் எழுதினர் என்றாலும் அவை தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பெற்றவை என்றே குறிப்பிடப்படுவதனை ஆய்வானது வெளிப்படுத்துகின்றது. எகிப்தில் உள்ள நைல் நதிக்கரையில் வளர்ந்த ‘பப்ரைஸ்’ என்னும் ஒருவகை நாணற் புற்களிலிருந்து தயாரிக்கப்பட்ட காகிதத்தில் எழுதப்பட்ட நூல்கள் யாவும் கிரேக்கத்தில் ‘பிபிலியா’ என அழைக்கப்பட்டன. இந்த கிரேக்க மூலச்சொல்லே பைபிள் என ஆங்கிலத்திலும் விவிலியம் எனத் தமிழிலும் வழங்கப்படலாயிற்று என்பது ஆய்வின்வழி வெளிப்படுகிறது.

- ❖ திருவிவிலியத்தில் உள்ள படைப்புகள் முதலில் சிறுசிறு பாடல்கள் கதை வடிவில் உருவாகி வாய்மொழியாகவே பின் வந்த தலைமுறையினருக்கு கற்பிக்கப்பெற்று வந்தன. மேலும் சமூக மற்றும் நாட்டு உணர்வுகளுடன் உருவான கதைகள் பாடல்கள்

படிப்படியாகச் சமயச் சார்பற்ற பொருள் பெற்றன. பின்னாளில் சிறுசிறு எழுத்தோவியங்கள் உருவாயின. முக்கியமாக சாலமோன் காலத்திலிருந்து எழுத்துப் படையல்கள் உருவாயின.பின் சிறுசிறு ஏடுகள் தொகுக்கப்பெற்று பாரம்பரியங்கள் ஆயின. திருவிவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் இடம்பெறும் இறைவாக்குகளுள் ஆமோஸ் உரைத்த தூதுரையே முதலில் எழுத்து வடிவம் பெற்றதாகும். புதிய ஏற்பாட்டில் பவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய முதல் திருமுகம் கி.பி 51 இல் முதலில் எழுதப்பெற்றது என்பதும் ஆய்வின்வழி வெளிப்பட்டு நிற்கின்றது.

- புதிய ஏற்பாட்டைப் பொறுத்தவரையில் கான்டர்பரி பேராயர் ஸ்டீபன் லாங்டன் என்பவர் புதிய ஏற்பாட்டின் அதிகாரங்களைப் பிரித்தார். கி. பி. 1550 இல் பிரான்சு அச்சுவல்லுநர் இராபர்ட் ஸ்டீபன் புதிய ஏற்பாடு நூலின் வசனங்களை உருவாக்கினார், பழைய ஏற்பாட்டைப் பொறுத்த வரையில் கி.பி 1440 இல் இராபி நாத்தான் என்பவர்தான் அதிகாரங்கள் மற்றும் வசனங்களை உருவாக்கினார். இவர்கள் உருவாக்கிய அதிகாரப் பிரிவுகள் நூற்றுக்குநூறு சரியானவை என்று சொல்லமுடியாது. சில நீளமாகவும் சில சிறியதாகவும் உள்ளன. சில அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் மையக்கருத்து அடுத்த அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் முடிகிறது என்பன போன்ற செய்திகளை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

- திருவிவிலியத்தின் முதல் ஐந்து நூல்கள் ஒரே தொகுதியாக உள்ளன. எனினும் இவை யாவே மரபு, எலோகிம் மரபு, இணைச்சட்ட மரபு, குருக்கள் மரபு என்னும் நான்கு மரபுகளின் வழியாக வந்தவை என்பதனை அறிய முடிகின்றது.

- திருவிவிலியமானது பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்னும் இருபெரும் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டமைந்ததாகும். பழைய ஏற்பாட்டில் நாற்பத்தாறு நூல்களும் புதிய ஏற்பாட்டில் இருபத்தேழு நூல்களும் உள்ளன. பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை சீர்திருத்த சபையாருக்கும் கத்தோலிக்கக் கிறித்தவர்களுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன. சீர்திருத்தச் சபையார்கள் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நாற்பத்தாறு நூல்களுள் தோபித்து, யூதித்து,பாருக்கு, சீராக்கின் ஞானம், சாலமோனின் ஞானம், 1மக்கபேயர், 2. மக்கபேயர் என்னும் ஏழுநூல்களை நீக்கி ஏனைய முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே ஏற்றுக் கொள்கின்றனர். இதற்குக் காரணம் பாலஸ்தீனத்தில் உள்ள யூதர்கள் எபிரேய மொழியில் அமைந்த முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே பழைய ஏற்பாடாக ஏற்றனர். பாலஸ்தீனத்திற்கு வெளியே உள்ள யூதர்கள் கிரேக்க மொழிபெயர்ப்பான செப்துவசிந்து நூலில் காணப்படும் நாற்பத்தாறு நூல்களைப் பழைய ஏற்பாடாக ஏற்றனர் என்பதாகும். காலப்போக்கில் கத்தோலிக்கக் கிறித்தவர்களும் பழைய ஏற்பாட்டில் கிரேக்க யூதர்களைப் பின்பற்றினர்.ஆனால் தூய

ஆவியின் ஏற்பாட்டால் எழுதப்பெற்ற இந்நூல்களை காலம், இடம், மொழி என்னும் எல்லைக்கு உட்படுத்தக் கூடாது எனக் கூறிய ஆதித்திருச்சபை அவ் ஏழு புத்தகங்களையும் ஏற்றுக் கொண்டது என்பதனை ஆய்வானது வெளிப்படுத்தி நிற்கின்றது.

❖ பழைய ஏற்பாடு கிறித்துவின் வருகைக்கு முன் முழுமையாகத் தொகுக்கப்பெற்றவை ஆகும். இவை பொருளடக்கம்,அவற்றின் இலக்கியச் சொற்றொடர் அமைப்பு, போன்றவற்றை அடிப்படையாக வைத்து நான்கு வகையானதாகப் பிரிக்கப்படுகின்றன. திருச்சட்ட நூல்கள் எனப்படுவன தொடக்க நூல், விடுதலைப் பயணம், லேவியர், எண்ணிக்கை; இணைச் சட்டம் என்பன ஆகும். வரலாற்று நூல்கள் எனப்படுபவை யோசுவா; நீதித் தலைவர்கள்; ரூத்து; 1 சாமுவேல்; 2 சாமுவேல்; 1 அரசர்கள்; 2 அரசர்கள்; 1 குறிப்பேடு; 2 குறிப்பேடு, எஸ்ரா, நெகேமியா, தோபித்து, யூதித்து, எஸ்தர்; 1 மக்கபேயர்; 2 மக்கபேயர் என்பனவாகும். யோபு; திருப்பாடல்கள்; நீதிமொழிகள்; சபை உரையாளர்; இனிமைமிகு பாடல்; சாலமோனின் ஞானம்; சீராக்கின் ஞானம் என்பன ஞானநூல்கள் எனப்பட்டன. இறைவாக்கு நூல்கள் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. எசாயா; எரேமியா; பாரூக்கு; புலம்பல்; எசேக்கியேல்; தானியேல் போன்றன பெரிய இறைவாக்கினர் என்றும் ஓசேயா; யோவேல்; ஆமோஸ்; ஒபதியா; யோனா; மீக்கா; நாகூம்; அபக்கூக்கு; செப்பனியா; ஆகாய்; செக்கரியா; மலாக்கி என்பன சிறிய இறைவாக்கினர் என்றும் அழைக்கப்பட்டன என்பது தெரியவருகின்றது.

❖ புதிய ஏற்பாடு (New Testament) என்பது கிறித்தவர்களின் புனித நூலான விவிலியத்தின் இரண்டாவது பகுதியாகும். முதல் பகுதி பழைய ஏற்பாடு (OLD Testament) என்று அழைக்கப்படுகிறது. ஏற்பாடு என்னும் சொல் 'உடன்படிக்கை', 'ஒப்பந்தம்' என்று பொருள்படும். கடவுள் தொடக்கத்தில் தமக்கென ஒரு மக்களினத்தைத் தெரிந்துகொண்டு, அவர்களுக்குத் தாம் கடவுளாக இருப்பதாகவும், அவர்கள் தமக்கு நெருக்கமான மக்களாக வாழ்ந்து, தம் கட்டளைகளைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்றும் அவர்களோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார் என்று யூத மக்களும் கிறித்தவ மக்களும் நம்புகின்றனர். இந்த ஒப்பந்தத்தைக் கிறித்தவர்கள் 'பழைய உடன்படிக்கை' என்று அழைக்கின்றனர். யூதர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும், கிறித்துவின் காலத்திற்கு முற்பட்டதுமான புனித நூல் தொகுப்பைக் கிறித்தவர் பழைய ஏற்பாடு என்பர். கிறித்துவின் காலத்திலும் அவர் இறந்த ஒரு நூற்றாண்டுக்குள்ளும் எழுதப்பட்ட புனித நூல்தொகுப்பு 'புதிய ஏற்பாடு' என்று வழங்கப்படுகிறது.

❖ பழைய ஏற்பாட்டைப் போலவே புதிய ஏற்பாடும் பல நூல்கள் அடங்கிய தொகுப்பு ஆகும். இது பல எழுத்தாளர்களாலும் குழுக்களாலும் கி.பி. 45க்குப் பின்னும் கி.பி. 140க்கு

முன்னும் எழுதப்பட்டு சிறுகச் சிறுக சில நூற்றாண்டுகளாக ஒன்று சேர்க்கப்பட்டு, கிறித்தவ திருச்சபையால் அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டது. கி.பி. 397 இல் கார்த்தேசு நகரில் நடந்த சங்கத்திலும், பின்னர் திரெந்து சங்கத்திலும் (கி.பி. 1546) இவை விவிலியத் திருமுறை நூல்களாக அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டன என்பது தெரிய வருகின்றது.

❖ புதிய ஏற்பாட்டின் மூல பாடம் ‘செப்துவசிந்து’ என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. தொடக்க காலத்தில் விவிலியம் இலத்தீன் மொழியில் பெயர்க்கப்பட்டது என்பது ஆய்வின் வழி அறிய வருகின்றது.

❖ ஒரு தனிமனிதன் சீர்குலைகின்ற போது அதன் தொடர்வினையாகப் பல்வேறுபட்ட தனிமனிதர்கள் சீர்குலைந்து போகின்றனர்.சமூக உறவுகள் பாதிப்புறுகின்றன.தனிமனிதக் கூறுகளின் அசைவுகளுக்கு ஏற்பச் சமூகமும் இயங்கிக்கொண்டிருக்கின்றது. அது ஒரு உயிர்வாசி இல்லை என்றாலும் அதற்கும் இயக்கம் உண்டு.அதன் இயக்கத்தில் கண்ணுக்குத் தெரியாத அசைவுகள் இருக்கும்.இந்த அசைவுகளை, இயக்கங்களைத் தீர்மானிப்பது தனிமனிதன். எனவே தனிமனித அறம் என்பது இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது.

❖ மனித வாழ்க்கையானது அதனால் ஆகிய ஆக்கத்தினைப் பெற்றுச் சிறப்பதற்கே அமைந்ததாகும்.எனவே மனிதர்கள் தம் வாழ்நாளில் தன் பிறப்பிற்கான ஆக்கத்தினைத் தேடிச் செயல்களை இயற்றல் வேண்டும். அத்தகைய ஆக்கம் அமையும் திறமானது அறத்தால் அன்றிப் பிறதொன்றினால் இல்லை. அதனின் மறுதலையாய் ஒருவர் அறத்தினைப் பேணாது வாழ்வராயின் அதனினும் கேடு பயப்பதும் பிறிதொன்றும் இல்லை. எனவே மறந்தும் அறம் செய்தலை நீங்காமை வேண்டும் என்பது தமிழ் அற இலக்கியங்கள் முன்மொழியும் செய்தியாகும். இத்தகைய கருத்தினையே திருவிவிலியமும் நன்மை செய்வதில் நீங்கள் ஆர்வமுடையவராய் இருந்தால் உங்களுக்குத் தீமை செய்யப் போகிறவர் யாரும் இல்லை, கைகளில் தூய்மை உள்ளவனும் இதயத்தில் மாசு இல்லாதவனுமாய் இருந்து மனிதன் பயனுற வேண்டும் என வலியுறுத்தி நிற்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ அடக்கமுடைமை என்னும் நல்லறமானது மெய், மொழி, மனம் போன்றன தீநெறிக்கண் செல்லாது அடங்குதல் ஆகிய தன்மை ஆகும் என அற இலக்கியங்கள் குறிக்கின்றன. இத்தகைய பண்பானது நடுவுநிலைமை உடையாருக்கே அமையும் எனவும் சுட்டப்படுகின்றது. மேலும் மனிதனை ஆசை என்னும் வலையினுள் வீழ்த்தி அழிக்கும் ஆற்றல் பெற்றவையாய்ப் புலனின்பங்கள் அமைதலின் மனிதன் பெற்று உயர வேண்டிய

உடைமைகளுள் ஒன்றாய்ப் புலனடக்கம் என்பதனைத் தமிழ் அற இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்துகின்றன. தமிழ் அற இலக்கியங்களால் வலியுறுத்தப்படும் இத்தகைய புலனடக்கத்தினை திருவிவிலியம் கண், மனம், நா ஆகியவற்றின் ஆசைகளை அவித்தல் வேண்டும் என உணர்த்தும் அறவுரைகளோடு ஒப்புநோக்கி உணரமுடிகின்றது.

- ❖ ஓர் அறிவுடையன உயிர்கள் முதலாக ஐயறிவு உடைய உயிர்கள் ஈறாக கொல்லுதலைச் செய்யாமையே ‘கொல்லாமை’ என்று குறிக்கப்படுவதாகும். இத்தகைய கொல்லாமை என்னும் உயர்நெறியைத் தமிழ் அற இலக்கியங்கள் பெரிதும் போற்றுகின்றன. கொல்லாமை என்பது கொல்வதன் எதிர்ப்பதம் அன்று, கொல்லாமை என்பது அறங்களின் தொகுப்பு ஆகும். உடலாலும், மனத்தாலும். மொழியாலும் பிற உயிர்களுக்கு யாதொரு துன்பமும் செய்யாமையே கொல்லாமை என்னும் விழுமியத்தின் அடிப்படை ஆகும் என அற இலக்கியங்கள் வலியுறுத்துவதனை அறிய முடிகின்றது. திருவிவிலியமும் கொலைச்செயலைக் கடிவதுடன் கொலை செய்தவர் எவரும் தண்டனைத் தீர்ப்பிற்கு ஆளாவார் எனவும் அறவுரை பகர்கின்றது.

- ❖ தமிழ் அற இலக்கியங்களால் வலியுறுத்தப்படும் தனிமனித அறங்களுள் இன்றியமையாத ஒன்றாய்ப் பொறையுடைமை அமைகின்றது. பொறையுடைமை என்பது ஒருவன் தன்னால் வெல்ல இயலாத வலிமை உடையவன் மாட்டுப் பொறுமையுடையவனாய் இருத்தல் என்பதன்று. தன்னினும் எளியோர் மாட்டும் பொறுமை உடையவனாய் இருத்தலே ஆகும் எனத் தமிழ் அற இலக்கியங்கள் வரையறை தருவதுடன் மனிதன் அவற்றைத் தன் வாழ்வில் கொண்டொழுகல் வேண்டும் என்றும் வலியுறுத்துகின்றன. இத்தகைய பொறையுடைமை திருவிவிலிய வசனங்களின் வழியும் இன்னல் செய்தாரையும் மன்னியும் என்று இறைவனிடம் மன்றாடிய இயேசுவின் வாழ்க்கை வழியும் வலியுறுத்தப்படுவதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

- ❖ பயனில சொல்லாமை என்பது தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை என்பதாகும். ஆக்கமும் கேடும் சொல்லினால் வருதலால் காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு எனக் குறிக்கும் அற இலக்கியங்கள் சொல்லின்கண் வரும் சோர்வாகிய பயனில சொல்லுதலை நீக்கல் வேண்டும் என வலியுறுத்திப் பேசுகின்றன.திருவிவிலியமும் மனிதர்கள் பேசும் ஒவ்வொரு வீண் வார்த்தைக்கும் தீர்ப்புநாளில் கணக்குக் கொடுக்க வேண்டும், பொன்னையும் முத்துக்களையும் விட அறிவுயர்ந்த பேச்சே விலையுயர்ந்த அணிகலன், என்றெல்லாம் அறிவுறுத்தி பயனிலசொல்லாமையை நீக்குதல் வேண்டும் எனக் குறித்து நிற்கிறது என்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ மனிதன் பொய் சொல்லல், ஊனுண்ணல், கள்ளுண்ணல், போன்றவற்றை ஒழித்து, தீய செயல்களைச் செய்யாமலும் சிறியாரது கூட்டத்தைச் சேராமலும் பிறரை பழிக்காமலும் இருப்பானாகில் அவனுக்கு,அறிவைத் தரும் நூல்கள், தேவையில்லை எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. மேலும் ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாது இருத்தல் வேண்டும். அதனை விடுத்து எண்ணுவானாயின், அவனுக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும் என எடுத்துரைத்துத் தீயனவற்றைச் செய்வதற்கு அஞ்சுதல் வேண்டும் எனவும் அறிவுறுத்துகின்றன. திருவிவிலியமும் மனிதர் தீமைகளைச் செய்து விட்டுத் தப்பித்தல் இயலாது என்றும் நல்லது செய்பவரே நாட்டில் நிலைத்திருப்பர் என்றும் அறிவுரை பகர்கின்றது. திருவிவிலியத்தின் இத்தகைய அறிவுரைகள் தமிழ் அறஇலக்கியங்கள் உணர்த்தும் அறிவுரைகளோடு ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

❖ அன்பே மனித அறங்களுக்கு எல்லாம் அடிப்படை என்றும் அன்பில்லாத உடல் என்புதோல் போர்த்ததற்குச் சமம் என்றும் உள்ளத்தில் அன்பில்லாத உயிர்வாழ்க்கை வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று என்பதற்குச் சமம் என்றும் தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. திருவிவிலியமும் மனிதன் என்பவன் மனிதர்களின் மொழிகளையும் இறைவனின் மொழிகளையும் பேசினாலும் அன்பு இல்லாவிட்டால் ஒலிக்கும் வெண்கலமும் ஓசையிடும் தாளமும் போலவும் இருப்பர் என்று வலியுறுத்தி நிற்பதனைக் காணமுடிகிறது.

❖ தமிழ் அற இலக்கியங்கள் பிறன் பொருளைக் கவர்தலாகிய குற்றத்தினைத் தம் நெஞ்சால் கருதுதலும் கூட பாவம் நிறைந்த செயலாகும் என வலியுறுத்துகின்றன. மேலும் பிறர் மனையாளை நயத்தல், கள்ளுண்ணல், சூதாடுதல், கொலை செய்தல் போன்றன எத்தகைய தீநெறியைத் தருமோ அதனைப் போன்று பிறன் பொருளைக் கவர்தலாகிய செயலும் தீய நெறிச் சேர்த்து விடும் என்றும் குறிப்பிடுகின்றன. மேலும் அறனறிந்தவர்கள் மனத்தாலும் இத்தகைய செயல்களைச் செய்யக் கருதமாட்டார்கள் என்றும் அறிவுறுத்துகின்றன. திருவிவிலியம் களவு செய்யாமலும் பொய் சொல்லாமலும் ஒருவரை ஒருவர் வஞ்சியாமலும் இறைவன் பெயரால் பொய் ஆணையிட்டுக் கடவுளின் பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தாமலும் இருங்கள் என்றும் வஞ்சனையால் தேடிய பொருள் குறைந்து போகும் என்றும் குறிப்பிடுகின்றது. இத்தகைய சிந்தனைகள் தமிழ் அற இலக்கியங்களின் சிந்தனையோடு ஒத்தமைவதனைக் காண முடிகின்றது.

❖ திருட்டு எண்ணம் தோன்றுவதற்கு வறுமை, பசி என்பதனைக் காரணமாகச் சுட்டும் திருவிவிலியம் அதற்காகத் திருடுவதனை நியாயப்படுத்தவில்லை. திருடுபவர் இம்மையில் தண்டனையையும் மறுமையில் நாள்தோறும் வேதனையுள்ள நரகத்தினைச் சேர நேரிடும்

என்று குறிப்பிடுகிறது. இத்தகைய திருவிவிலியக் கோட்பாடு தமிழ் அறநூல்கள் குறித்து நிற்கும் கள்ளாமை என்னும் அறத்தினோடு ஒத்து அமைவதனைக் காணமுடிகின்றது.

❖ வெகுளியால் ஏற்படும் தீமையையும் வெகுளாமையின் சிறப்புகளையும் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்தியம்புகின்றன. தமிழ் அற இலக்கியங்கள் சினம் என்பது ஒருவனின் உடலுக்குப் பகையாய் அமைவதுடன் அவன் சுற்றத்தையும் சேர்த்தழிக்கும் என்று குறிப்பிடுகின்றன. திருவிவிலியமும் வெகுளியானது ஒருவனின் ஆன்மா, உடல் போன்றவற்றை அழித்துவிடும் என்று குறிப்பிடுகின்றது. மேலும் திருவிவிலியம் அரசனின் கோபத்தினை மரணதூதனுக்கும் சிங்கத்தின் கர்ச்சிப்புக்கும் ஒத்ததாய்க் காட்டுகின்றது. திருவிவிலியத்தின் இத்தகைய அறவுரைகள் தமிழ் அறஇலக்கியங்கள் உணர்த்தும் வெகுளாமை ஆகிய அறக்கருத்துகளோடு ஒத்தமைவதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

❖ வாய்மை என்னும் சொல்லிற்குப் பிறிதோர் உயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதலாக அமைதல் வேண்டும் என்றும் இவ் வாய்மையானது உடல், மொழி, மனம் போன்றவற்றின் செயல்களில் அமைந்து காணப்படுகின்றது என்றும் அத்தகைய வாய்மையுடையோரையே சான்றோர் போற்றுவர் என்றும் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றன.

❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒழுக்கத்தால் ஏற்படும் சிறப்புகளையும் ஒழுக்கமின்மையால் எற்படும் இழிவினையும் எடுத்துக்காட்டுகின்றன. ஒழுக்கத்தின் உயர்ந்தது பிறிதொன்று இல்லை எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கும் கருத்தோடு தீமையை விட்டு விலகுவது செம்மையானவர்கள் செல்லும் நல்லாறு, நல்லாறு நடப்போன் தன் ஆன்மாவைக் காக்கின்றான் எனவரும் திருவிவிலிய அறவுரை ஒத்தமைவதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

❖ பணிவுடைமை என்பது ஒவ்வொரு தனிமனிதருக்கும் இன்றியமையாதாகும் என்பதனைத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றன. தமிழ் அற இலக்கியங்கள் பெருமையுடையோர் பணிவினை அணிகலன்களாய்ப் பெற்று அதனால் சிறப்புறுவர் எனக் குறிப்பதனை ஆவியில் எளிமை உடையவர்கள் பேறுபெற்றோர், விண்ணரசு அவர்களுடையது என்ற திருவிவிலியக் கருத்தோடு ஒப்புநோக்க முடிகின்றது.

❖ தனிமனிதன் பின்பற்றவேண்டிய அறவிழுமியங்களுள் மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் குறிக்கப்படுவது புறங்கூறாமை என்பதாகும். ஒருவன் பிறன்மேல் குற்றம் கூறுவதன்முன் தன் குற்றம் காணல் வேண்டும் எனத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும்

குறிப்பிடுகின்றன. பிறிதொருவரின் பழியை அவருக்குப் பின்னால் கூறுபவன் தன் சொந்தப் பழிகளுள்ளும் கடுமையானவை தெரிந்தெடுக்கப்பட்டு அப்பிறிதொருவனால் தன் எதிரிலேயே பழி கூறப்படுவான் எனத் தமிழ் அற இலக்கியங்களில் உணர்த்தப்படும் கருத்தானது நீங்கள் குற்றவாளிகள் என்று தீர்க்கப்படாதபடிக்கு மற்றவர்களை குற்றவாளிகள் என்று தீர்ப்பிடாதீர்கள்.ஏனெனில் நீங்கள் மற்றவர்களைத் தீர்க்கின்ற தீர்ப்பின்படியே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள். நீங்கள் எந்த அளவையால் அளக்கிறீர்களோ அதே அளவையால் உங்களுக்கும் அளக்கப்படும் எனும் திருவிவிலியக் கருத்தோடு ஒத்தமைவதனைக் காணமுடிகின்றது.

- இல்லறம் என்பது கணவன்,மனைவி, குழந்தைகள் என்று உறவுகளின் அடிப்படையில் கூடி வாழ்வது ஆகும். ஓர் ஆணும் ஒரு பெண்ணும் திருமணம் என்ற சடங்குமூலம் உருவாகும் அமைப்பே குடும்பம் எனப்பெறும். குடும்பத்தில்தான் அவனுடைய வாழ்க்கையின் பெரும்பகுதி அமைகின்றது. பிறப்பிலிருந்து இறப்புவரை மனிதன் இக்குழுவோடு இணைப்பு வைத்துள்ளான். மனிதனுடைய உடல், உள்ளத் தேவைகளைப் பெரிதும் நிறைவேற்றி அவனுடைய வாழ்க்கையை அமைத்துக்கொடுப்பது குடும்பமே என்னும் கருத்து ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

- குடும்பம், திருமணம் என்ற ஆதாரத்தின் மீது அமைந்துள்ளது. எனினும் அது திருமணத்துடன் குறிக்கப்பட்டு விடுவதில்லை. அது பல தலைமுறைகளைச் சேர்ந்த மரபுவழிக் கிளைகளின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொண்டிருக்கும்.பிறப்பு முதல் இறப்பு வரை அதனோடுதான் அவர்கள் தொடர்ச்சியாகத் தொடர்பு கொள்கின்றனர். ஏனெனில் இது மக்களின் உயிரியல், உளவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது. அதனாலே குடும்பம் எனும் அமைப்பு, இடம், காலம், அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகலாவிய பண்பாகத் திகழ்கிறது என்பது ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

- திருமணம் என்பது அவ்வப்போது ஏற்படும் உடல் தேவையைத் தீத்துக் கொள்வதோ, சில காலத்திற்குத் தேவைப்படுகின்ற நல்லதொரு கூட்டாளியைத் தேடிக் கொள்வதோ அல்ல.இது நிரந்தரமான நிலைகுலையாத ஒரு சங்கமம். மனைவியின் நற்குண நற்செய்கைச் சிறப்பே இல்லறத்திற்கு மங்கலமாவதாகும் எனத் தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. மேலும் ஓர் இல்லறத்தின்கண் வாழும் கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் தம் செயல் நலத்தால் உயர்த்துபவராய் அமைதல் வேண்டும். அவ்வாறு அமையார் எனில் அத்தகைய இல்லறம் பயனற்றதாம் எனக் குறிக்கப்படும் அற இலக்கியங்களின் கருத்தினோடு திருமணத்தை அனைவரும் உயர்வாக மதியுங்கள்.

மணவறைப் படுக்கை மாசுறாமல் இருக்கட்டும் என வரும் திருவிவிலியக் கருத்துகள் ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

- ‘அறம்’ என்ற சொல்லுக்கு நல்வினை, ஐயம் (பிச்சை), வறியோர்க்கு இனாம் கொடுப்பது, நோயாளிக்கு மருந்து ஈதல்,நலம், இன்பம், தகுதி, கற்பு, நோன்பு, புண்ணியம், ஞானம், அறச்சாலை, அறத்தெய்வம், கூற்றுவன் எனப் பதினைந்து பொருள்கள் குறிக்கப்படுகின்றன. இத்தகைய அறம் என்பது இல்வாழ்க்கை மேற்கொள்வார்க்கு இன்றியமையாத பண்பு ஆகும். எனவேதான் ‘இல்’ என்பதனுடன் ‘அறம்’ என்பது சேர்க்கப்பெற்று ‘இல்லறம்’ எனக் குறிக்கப்பட்டது. எனவேதான் அறன் இல்லாத இல்வாழ்க்கை சிறப்புடையது அன்று எனத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் குறிப்பிடுவதனை அறிய முடிகின்றது.

- இல்லறவாழ்க்கை என்பது இருபகடுகளால் இழுக்கப்பெறும் சகடத்தின் ஒழுக்கம் போன்றதாகும். எனவே கணவன் மனைவியரிடைப்பட்ட இருதலையன்பு அதன் பண்பாகும். அதனாற் செய்யப்படும் அறம் அதன் பயனாகும் என எடுத்துரைக்கின்றன அற இலக்கியங்கள். அற இலக்கியங்கள் வலியுறுத்தி உரைக்கும் கணவன் மனைவியடையேயான ஒத்த அன்பினைத் திருவிவிலியமும் கணவன் தன் மனைவிக்கு மனைவாழ்கைக்கு உரிய உரிமைகளைக் கொடுக்கவேண்டும். அதுபோல மனைவியும் தம் கணவனுக்குக் கொடுக்கவேண்டும் என உரைப்பதனோடு ஒப்புநோக்கி நிறுவப்பெற்றுள்ளது.

- ஒரு மனைவி, கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவற்றால் பேணி இருவர் மாட்டும் நன்மை அமைந்த புகழ் நீங்காமல் காத்து நிற்கும் நற்குண நற்செய்கைகளினும் கடைப்பிடிப்பவளாய் அமைதல் வேண்டும் என அற இலக்கியங்கள் உணர்த்துவதனைத் திருவிவிலியம் ஞானமுள்ள பெண்கள் தம் இல்லத்தைத் கட்டி எழுப்புகின்றனர்.அறிவற்றவரோ தம் கைகளைக் கொண்டே அதை அழித்து விடுகின்றனர் எனவும் நல்ல மனைவி தன் வாழ்நாள் முழுவதும் அவனுக்கு நன்மையே செய்வாள். சுறுசுறுப்புடன் வேலை செய்வாள். உணவைக் கொண்டு வருபவளாகவும் ஏழைகளுக்கும் சிறுமையாளர்களுக்கும் உதவி செய்பவளாகவும் தன் வீட்டாரைக் கவனித்துக் கொள்பவளாகவும் தன் இல்லத்தின் அலுவல்களில் மேலும் கண்ணோக்கம் உள்ளவளாகவும் காணப்படுகிறாள் என எடுத்தியம்புகிறது என்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

- கற்பு என்பது தன்னைத்தான் கொண்டொழுகும் தன்மை உடையதோர் பண்பு ஆகும். தன்னைக் காத்துக் கொள்ளாத பெண்ணை சிறையில் வைத்தும் காத்தல் என்பது

இயலாது என்றும் கற்பு நெறி இன்றி இல்லத்தின் எல்கை கடந்து வெளியேறும் பெண்ணானவள் மழையினைக் கெடுக்கும் கோள் ஆவாள் என்றும் அற இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன. இதன்வழி, கற்புநெறியில் இருந்து தவறிய பெண்ணானவள் தன் இல்லத்தில் வாழ்பவர்களுக்கு மட்டுமன்று. சமூகத்திற்கும் தீங்கு பயப்பவளாய் அமைகின்றாள் என்னும் உண்மையானது வெளிப்பட்டு நிற்கின்றது. தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்தும் இவ்வுயரிய விழுமியத்தைத் திருவிவிலியமும் நல்லொழுக்குமுள்ள பெண் தன் மானத்தைக் காக்கின்றாள் என்றும் வலியுறுத்தி நிற்பதனை அறிய முடிகின்றது.

❖ புகழை விரும்பிய இல்லாளை மனைவியாகப் பெறாதவர்க்கு தம்மை இகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்க ஏறு போல நடக்கும் பெருமித நடை இல்லை என்பது அற இலக்கியங்கள் உணர்த்தும் நெறியாகும். இத்தகைய நெறியினைத் திருவிவிலியம் நல்லொழுக்கமுள்ள மனைவியை மணந்த கணவன் ஊர்ப்பெரியோருள் ஒருவனாய் இருப்பான். மக்கள் மன்றத்தில் புகழ் பெற்றவனாயும் இருப்பான் என்றும் குணசாலியான மனைவி தன் கணவனுக்கு மணிமுடியாக இருப்பாள் என்றும் உரைத்து நிற்பதனை அறிய முடிகின்றது.

❖ இல்லறத்தில் வாழ்கின்ற கணவன் தன் மனைவியின் மீது அன்பு பாராட்டுபவனாய் அமைதல் வேண்டும் என்பது அற இலக்கியங்கள் வலியுறுத்தும் நெறியாகும். திருவிவிலியமும் தன் மனைவியில் அன்பு கூருகிறவன் தன்னில் அன்பு கூர்கிறான் என்றும் கணவர்கள் தங்கள் மனைவியரைத் தங்கள் சொந்த உடலாகக் கருதி அவர்களில் அன்பு கூரவேண்டும் என்றும் வலியுறுத்துகின்றது.

❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒருதார மணத்தினையே வலியுறுத்துகின்றன. இதனைப் பல்வேறு அற இலக்கியப் பாடல்களின் வழியும் திருவிவிலிய வசனங்கள், நிகழ்வுகளின் வழியும் அறிய முடிகின்றது. பிறன் மனைவியை விரும்புதல் என்பது எப்பொழுதும் அச்சம் தரும் செயலாதலால் அதனைக் கருத்தில் கொள்ளாமல் ஒருவன் பிறன் மனைவியை விரும்பியொழுகுதல் சிறப்புடையது அன்று என அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. தமிழ் அற இலக்கியங்களின் இத்தகைய கருத்தினை அறத்தின் தன்மையோடு பொருந்தி இல்வாழ்க்கை வாழ்பவன் பிறனுக்கு உரிமையானவளின் பெண்தன்மையை விரும்பாதவனாய் பிறர் மனைவியைக் காமுறாதவனாய் இருத்தல் வேண்டும் என வரும் திருவிவிலியக் கருத்தினோடு ஒப்புநோக்கி அறிய முடிகின்றது.

❖ இல்லறத்தாரின் கடமைகளாக விருந்தோம்பல், சுற்றம் ஓம்பல், வறியவர்க்கு உதவுதல், ஒப்புரவறிதல் போன்றவை அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுகின்றன.

❖ தந்தை, தன் மகனை அறப்பண்புகளும், சிறந்த கல்வியறிவும் சான்றோரால் மதிக்கப்படும் தகவுகளும் உடையவனாய் வளர்த்தெடுத்தல் வேண்டும் என்னும் கருத்தும் மகன் என்பவன் தன் பெற்றோருக்குச் சிறப்பு சேர்ப்பவனாய் அமைதல் வேண்டும் என்னும் கருத்தும் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுகின்றன.

❖ அற இலக்கியங்கள் மனிதன் தன் கடமையைச் செய்வதில் உறுதிப்பாடு உடையவனாய் இருத்தல் வேண்டும் என வலியுறுத்துகின்றன. அற இலக்கியங்களில் பார்ப்பன் பிறப்பொழுக்கம் குன்றக்கெடும், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும், துறந்தாரின் நோற்கிற்பலர், பயனில சொல்லாமை நன்று, கைம்மாறு வேண்டா கடப்பாடு, கடன் அறிந்து காட்சியவர், உயிரஞ்சா மறவர், மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை, கடன் என்ப நல்லவை எல்லாம், உண்டலினும் உண்டல் அற இனிது என்பன போன்ற பல்வேறு கடமைகள் வலியுறுத்தப்படுகின்றன. திருவிவிலியமும் கடமையைச் செய்தலின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றது, பழைய ஏற்பாட்டில் உள்ள பத்துக் கட்டளைகளும் கடமைகளாகவே அமைகின்றன. கடவுளை வணங்குதல் முதற்கடன், ஓய்வு நாட்களை தூய்மையாகக் கடைபிடித்தல், கொலை, விபச்சாரம், களவு, பொய்சாட்சி, போன்றவற்றை மேற்கொள்ளாதிருத்தல், தாயையும் தந்தையையும் மதித்தல் என்பவை கட்டளைகளாகக் குறிக்கப்பட்டாலும் கடமைகளாகவே குறிக்கப்பட்டன. பழைய ஏற்பாட்டில் கூறப்பட்ட பத்துக் கட்டளைகள் புதிய ஏற்பாட்டில், மனிதன் முழு உள்ளத்தோடு இறைவன் மேல் அன்பு செலுத்துதல் வேண்டும், மனிதன் தன் மீது அன்பு கூர்வதுபோல அயலான் மீதும் அன்பு கூர்தல் வேண்டும் எனும் இரண்டு கட்டளைகளாக அடக்கிக் காட்டப்படுகின்றன.பவுலடியார் உரோமைருக்கு எழுதிய திருமுகத்தில் இதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். பழைய ஏற்பாட்டில் கட்டளைகளாகக் குறிக்கப்பட்டவை புதிய ஏற்பாட்டில் இறைவனால் அன்பின் கடமைகளாகக் குறிக்கப்பட்டன. திருவிவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் அமைந்த கடமையாற்றுதல் என்பது அச்சத்தின் அடிப்படையிலானவையாக அமைகின்றன. ஆனால் புதிய ஏற்பாட்டில் கடமை என்பது அன்பு, நல்மனம் இவற்றின் அடிப்படையிலானதாகக் கட்டமைக்கப்படுகிறது. தாய், தந்தை, கணவன், மனைவி, குழந்தைகள், நண்பர்கள் போன்றோருக்கான கடமைகள் அன்பின் அடிப்படையிலும் அலுவலர்கள் முதலாளிகளுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் நல்மனட்சாட்சியின் அடிப்படையிலும் அமைந்தனவாக இருத்தல் வேண்டும் என்று திருவிவிலியம் குறிப்பிடுகின்றது.

❖ இல்லறத்தின் பற்பல நோக்கங்களில் ஒன்றாய் இருப்பது துறவறம் ஆகும். செல்வமும் உடம்பும் நிலையாமை எனக் கண்டபின் திருவருள் ஒன்றே நிலையெனத் துணிந்து அதனில் நெருக்கம் கொள்ளுதல் துறவு எனப்படும்.அருளில் நெருங்குங்கால் நிலையாமைப் பொருள்களில் உள்ளம் பற்றுவிட்டு விடுவதால் துறவு என்பது விடுதல் என்னும் பொருளிலும் வந்தது. இத்தகைய துறவறநிலையும் துறவறத்திற்கான அறப்பண்புகளும் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் ஒத்தமைந்து இருப்பதனைக் காண முடிகின்றது.

❖ ஓர் ஒழுங்கின் அடிப்படையில் ஒரே சிந்தனை, ஒரே எண்ணம், என ஒன்றுபட்டு ஒரே இடத்தில் தங்களின் வாழ்க்கை முறை கொண்டவர்களாகத் தங்களுக்குத் தேவையானவற்றைத் தாங்களே பங்கிட்டு நிறைவேற்றிக் கொள்பவர்களாக வாழக்கூடிய ஒரு குழுவான மக்களைச் சமுதாயம் என அழைக்கலாம். ஒரு நாட்டில் அல்லது பல்வேறு நாடுகளில் வாழக் கூடிய ஒரே மாதிரியான வாழ்க்கை முறைகள் கொண்டவர்களையும் சமுதாயம் என்றழைக்கலாம் என்னும் கருத்தானது வெளிப்படுகின்றது.

❖ சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது. இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம்.சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது. ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கின்றது.

❖ தனிமனிதனை பிற உயிர்களிடத்து இரக்கம் கொண்டவனாய் மாற்றும் காரணிகளுள் இன்றியமையாத ஒன்றாய் இறை உணர்வு என்பது அமைகின்றது. இத்தகைய இறை உணர்வு மனித மனத்தினை நெறிப்படுத்தி சமூக நாட்டமுடையவனாய் மாற்றும் காரணிகளுள் ஒன்றாய் முன்நிற்கின்றது. அந்நிலையில் இறைஉணர்வினை மனிதனிடத்துத் தோற்றுவித்து நெறிப்படுத்துவதில் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்த தன்மை உடையனவாய் அமைகின்றன. அற இலக்கியம் தனக்குவமை இல்லாதான் தாளினைச் சேராதவன் மனக்கவலையினை நீக்குதல் இயலாது என்று குறிப்பிடுகின்றது. திருவிவிலியமும் தூய ஆவியின் துணையால் நாம் வாழ்கிறோம். எனவே, அந்த ஆவி காட்டும் நெறியிலேயே நடக்க முயலுவோம் என்று அறிவுறுத்துகின்றது.

❖ உலகின் நிலைப்பேற்றிற்கு அடிப்படையாய் அமைவது மழையே ஆகும். இத்தகைய மழையானது வானின்று வாராது அமையுமெனில் நிலவுலகில் உயிர்கள் அனைத்தும் பசியால் வாடி மடியும். எனவேதான் திருவள்ளுவர் திருக்குறளில் ‘வான்சிறப்பு’ என்றொரு அதிகாரமே படைத்தளித்துள்ளார். தமிழின் பிற அற இலக்கியங்களும் மழையின்

சிறப்பினை எடுத்துரைத்துச் சமூக உயிர்களின் வாழ்விற்கு மழை இன்றியமையாததாக அமைகின்றது என முன்மொழிகின்றன. திருவிவிலியமும் மழையின் சிறப்பினை எடுத்துரைப்பதுடன் அம்மழையானது இறைவனால் வருவிக்கப்படுவதாய் உரைக்கின்றது.

❖ சமுதாயத்தில் அறம் உரைக்கும் நிலையில் இருப்போர் நடுவுநிலைமை உடையவராய் இருத்தல் என்பது இன்றியமையாதது ஆகும். நடுவுநிலைமை என்பதற்கு இன்ப துன்பங்களுக்கு ஆட்படாமல் விருப்பு, வெறுப்புகள் இல்லாமல் இன்னார், இனியார் எனக் கருதாமல் அறத்தின்வழி நிற்றல் என்பதே ஆகும். தமிழ் அற இலக்கியங்கள் இத்தகைய தன்மையுடையோரைச் 'சான்றோர்' எனப் போற்றுகின்றது. திருவிவிலியமும் நீதி வழங்குபவரை நோக்கி நீங்கள் ஆள்பார்த்துச் செயல்பட்டால் நீங்கள் செய்வது பாவம், நேர்மையுடன் நீதி வழங்குங்கள், ஓரவஞ்சனை காட்டுவது நன்றல்ல என்றும் அறிவுறுத்துகின்றது.

❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் மனிதன் அவாவினை நீக்குதல் வேண்டும் என்றும் பிறர் மனைவியைக் காமுறுதல் கூடாது என்றும் அறவுரை பகர்கின்றன. திருவிவிலியமும் பிறர் மனைவி, பிறர் வீடு, நிலம் அடிமை, அடிமைப்பெண், மாடு, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே என்றும் அறவுரை பகர்வது தமிழ் அற இலக்கியங்களின் கருத்தினை அடியொற்றி அமைந்திருப்பதை ஆயும்வழி அறியமுடிகின்றது.

❖ அன்பின் முதிர்ச்சியாகிய அருள் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த அறப்பண்பாதலானும், இம்மை மறுமை வீடாகிய மும்மைக்கும் உதவுதலானும், உயிர்க்கு அதுவே துணையாகும் எனத் தமிழ்அற இலக்கியங்கள் உரைப்பது போன்றே அருளின் இன்றியமையாமையை திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்பதனை ஆய்வானது உறுதிப்படுத்தியுள்ளது. இவ் அருளுடைமையின் வெளிப்பாடய் ஈதல் அறம் அமைதல் வேண்டும் என்னும் தன்மை அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுவதனை அறிய முடிகின்றது. விண்ணரசு வேண்டி ஈதல் வேண்டும் எனக் குறிக்கும் திருவிவிலியத்தின் கருத்தினும் எத்துணை ஆயினும் ஈதல் நன்றென உரைக்கும் தமிழ் அற இலக்கியங்களின் கருத்து உயர்ந்து நிற்பதனை அறிய முடிகின்றது.

❖ கூடா ஒழுக்கம் என்பது தனிமனித அறம் எனினும் அதனைப் பின்பற்றாதவனால் சமூக ஒழுங்கானது சீர்குலைவதனால் அது சமூக ஒழுக்கமாகவே பார்க்கப்படுகின்றது. உலகில் நல்லவர்போல் நடித்து கூடா ஒழுக்கம் மேற்கொள்வோரை புலித்தோல் போர்த்திய பசு எனத் தமிழ் அற இலக்கியங்கள் சாடுகின்றன. திருவிவிலியமும் இத்தகைய போலி வேடதாரிகள், கைம்பெண்களின் வீடுகளைப் பிடிங்கிக் கொள்வதோடு நீண்டநேரம்

இறைவனிடம் வேண்டுவதாக நடிக்கிறார்கள், கடும்தண்டனை தீர்ப்பிற்கு இவர்களே ஆளாவார்கள் எனச் சாடுகின்றது. இந்நிலையில் அற இலக்கியங்களின் கருத்தும் திருவிவிலியத்தின் கருத்தும் ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

❖ ஒவ்வொரு மனிதனும் சமுதாய வாழ்வியலில் தான் பிறருக்கு உதவியும் பிறரிடம் உதவி பெற்றும் வாழ்வியல் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றான். எனவே தமிழ் அற இலக்கியங்கள் மனிதன் சமூக உணர்வுடன் வாழ்வதற்குப் பெறவேண்டிய தலையாய பண்புகளுள் ஒன்றாய் செய்ந்நன்றியறிதல் என்பதனைச் சுட்டுகின்றது. இத்தகைய கருத்துடன் ஒத்தமையும் திருவிவிலியம் செய்ந்நன்றிமறத்தல் என்பது வரம்புமீறிய ஒழுக்கக்கேடு என வலியுறுத்துகின்றது.

❖ மெய்யுணர்தல், பிறன் பொருளை விரும்பாத தன்மையைத் தரும் வெ∴காமை, குற்றம் கடிந்து சமூக அறம் பேணல் போன்ற வாழ்வியல் ஒழுக்கங்களை வலியுறுத்துவதில் தமிழ்அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்தமைவது ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளது.

❖ தன்னில் இருந்து சமூகத்தின் நன்மைக்காய்த் தன்னை ஒப்பளித்துக் கொள்ளும் தவமுடையாருக்கான அறவிழுமியங்களை அற இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்துகின்றன. மனஉறுதியும், பிறருக்கு உதவும் பண்பும், பொருள்கள் மேல் பற்றற்ற தன்மையும் போலித்தன்மை இல்லாத ஒழுக்கமும் தவத்தின் மேன்மைகளாம் எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. திருவிவிலியத்திலும் தவத்தினை வெளிவேடக்காரர்களாய் மேற்கொள்பவர்களைச் சாடுகின்ற வசனங்கள் காணப்படுவதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ ஊழ்வினை குறித்த சிந்தனைகள் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படுகின்றன. ஊழிற்பெருவலி யாவுள எனத் தமிழ் அற இலக்கியங்கள் உரைப்பதனை ஒட்டியதாய் அடுத்து என்ன நடக்கும் என்பதை மனிதன் தெரிந்துகொள்ளா வண்ணம் கடவுள், இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி வரவிடுகிறார் என்னும் சிந்தனையானது திருவிவிலியத்தில் காணப்படுகின்றது.

❖ அரசியல் அறத்தினை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் பெரிதும் வலியுறுத்துகின்றன. அரசன் என்பவன் தன்னலம் கருதாத தன்மை உடையவனாய் குடிமக்கள் நலம் பேணும் கொள்கை உடையவனாய், பகையிடம் இருந்து தன் மக்களைக் காக்கும் ஆற்றல் உடையவனாய், அறம்தலை நிறுத்தி ஆட்சிபுரிபவனாய் அமைதல் வேண்டும் என்பது அற இலக்கியங்கள் வலியுறுத்தும் விழுமியங்கள் ஆகும். திருவிவிலியக் கருத்துகளும் அற இலக்கியக் கருத்துகளோடு ஒத்ததன்மை

உடையனவாய் அமைகின்றன. முடியாட்சிக் காலத்தில் உரைக்கப்பெற்ற அவ்விழுமியங்கள் இன்றைய அரசிற்கும் பொருந்தி நிற்றலை ஆயும்வழி அறியமுடிகின்றது.

**மேலாய்வுக் களங்கள்**

- ❖ திருவிவிலியத்தைத் தமிழில் பிற்காலத்தில் தோற்றம் பெற்ற அற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தின் இல்லற ஒழுக்கங்களைத் தமிழ் அக இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தில் காணப்படும் அரசியல் தொடர்பான அறங்களைத் தமிழ்ப் புற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல் போன்றவை மேலாய்வுக்களங்களாக அமைகின்றன.

## துணைநூற்பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்:

- ❖ **(பதினெண் கீழ்கணக்கு நூல்களை நிரல்பட உரைக்கும் பழைய வெண்பா அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளது)**


1. நாலடியார் — புலவர் சுந்தர சண்முகனார் (உ.ஆ)
புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம்
புதுச்சேரி -1
1970

2. நான்மணிக்கடிகை — முனைவர் வே. இரா. மாதவன் (ப.ஆ)
தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
தஞ்சாவூர்
முதற் பதிப்பு - 2001

3. இன்னா நாற்பது — வேங்கடசாமி நாட்டார் நா.மு. (ப.ஆ)
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழக வெளியீடு – திருநெல்வேலி
இரண்டாம் பதிப்பு - 1935

உடையனவாய் அமைகின்றன. முடியாட்சிக் காலத்தில் உரைக்கப்பெற்ற அவ்விழுமியங்கள் இன்றைய அரசிற்கும் பொருந்தி நிற்றலை ஆயும்வழி அறியமுடிகின்றது.

**மேலாய்வுக் களங்கள்**

❖ திருவிவிலியத்தைத் தமிழில் பிற்காலத்தில் தோற்றம் பெற்ற அற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தின் இல்லற ஒழுக்கங்களைத் தமிழ் அக இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தில் காணப்படும் அரசியல் தொடர்பான அறங்களைத் தமிழ்ப் புற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல் போன்றவை மேலாய்வுக்களங்களாக அமைகின்றன.


## துணைநூற்பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்:

❖ **(பதினெண் கீழ்கணக்கு நூல்களை நிரல்பட உரைக்கும் பழைய வெண்பா அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளது)**

1. நாலடியார் — புலவர் சுந்தர சண்முகனார் (உ.ஆ)
   புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம்
   புதுச்சேரி -1
   1970

2. நான்மணிக்கடிகை — முனைவர் வே. இரா. மாதவன் (ப.ஆ)
   தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
   தஞ்சாவூர்
   முதற் பதிப்பு - 2001

3. இன்னா நாற்பது — வேங்கடசாமி நாட்டார் நா.மு. (ப.ஆ)
   திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்
   கழக வெளியீடு – திருநெல்வேலி
   இரண்டாம் பதிப்பு - 1935

4. இனியவை நாற்பது — முனைவர் சுந்தர சண்முகனார் (உ.ஆ)
புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம்
புதுச்சேரி -1 1987
முதல் பதிப்பு ஏப்பிரல் 2003

5. திருக்குறள் — பரிமேலழகர் (உ.ஆ)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
சென்னை 1941

6. திரிகடுகம் — சொக்கலிங்க முதலியார் (உ.ஆ)
ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக் கூடம்
தஞ்சை – பதிப்பு ஆண்டு இல்லை

7. ஆசாரக்கோவை — நச்சினார்க்கினியர் (பொழிப்புரை)
ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக் கூடம்
தஞ்சை – பதிப்பு ஆண்டு இல்லை

8. பழமொழி நானூறு — செல்வக்கேசவராய முதலியார் (ப. ஆ)
எஸ்.பி. சி. கே. பிரஸ்,
சென்னை
1917

9. சிறுபஞ்ச மூலம் — பு.சி. புன்னைவன நாத முதலியார் (உ.ஆ)
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் - திருநெல்வேலி
முதல் பதிப்பு - 1936

10. முதுமொழிக்காஞ்சி — செல்வகேசவ முதலியார் (ப.ஆ)
எஸ் பி. சி. கே. பதிப்பகம்
சென்னை – முதல் பதிப்பு 1919

11. ஏலாதி — தி. சு. பாலசுந்தரம் பிள்ளை (விருத்தியுரை)
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் - திருநெல்வேலி

முதற் பதிப்பு - 1939

12. திருவிவிலியம் — தமிழ்நாடு விவிலிய மறைக்கல்வி திருவழிபாட்டு நடுநிலைய வெளியீடு
திண்டிவனம்
முதற் பதிப்பு – 1995

❖ **நாலடி நான்மணி நானாற்பது ஐந்திணைமுப்**
**பால்கடுகம் கோவை பழமொழி – மாமூலம்**
**இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவே**
**கைந்நிலைய வாம்கீழ்க் கணக்கு (வெண்பா)**

**துணைமை ஆதாரங்கள்:**

**(அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளது )**

13. அண்ணாமலை, சு. ப ( உ. ஆ ) — கலித்தொகை
கோவிலூர் மடாலயம்
கோவிலூர்
முதல் பதிப்பு ஏப்ரல் 2003

14. அருட்பிரகாச வள்ளலார் — மனுமுறை கண்ட வாசகம்
ஊரன் அடிகள் பதிப்பு
வடலூர் சமரசசன் மார்க்க ஆராய்ச்சி நிலையம்
1978

15. அருண்ஞானப் பிரகாசம் — சொல்லொன்று போதும் திருவிவிலிய வழிகாட்டி
திருஇருதய குருகுலம்
பூவிருந்தவல்லி சென்னை – 600056
முதற் பதிப்பு - 2006

16. அருணந்தி சிவாச்சாரியார் — சிவஞானசித்தியார் சிவஞானமுனிவர் உரை
சமாஜம் வெளியீடு
1940

17. அழகரடிகள் — திருக்குறள் அறம்
கழக வெளியீடு
சென்னை - 1970

18. இராமலிங்கம். மா — புனைகதை வளம்,
பூரம் பப்ளிகேசன்ஸ்,
சென்னை

19. இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம் (மூலமும் உரையும்)
உ.வே. சாமிநாதையர் (ப.ஆ)
கமர்சியல் அச்சுக் கூடம்
சென்னை, இரண்டாம் பதிப்பு - 1920

20. இன்னாசி — சமயமும் சமுதாயமும்
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை முதற்பதிப்பு - 1993

21. ஐயனாரிதனார் — புறப்பொருள் வெண்பாமாலை
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், சென்னை

22. ஔவையார் — கொன்றை வேந்தன்
ஔவையார் தனிப்பாடல் திரட்டு
இரத்தின நாயகர் சன்ஸ்,
சென்னை 1963

23. மேலது — மூதுரை
ஔவையார் தனிப்பாடல் திரட்டு
இரத்தின நாயகர் சன்ஸ்
சென்னை - 1963

24. கடியலூர் உருத்திரங் கண்ணனார் — பட்டினப்பாலை
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் - சென்னை

25. கதிர். மகாதேவன் — நற்றிணை (மூலமும் உரையும்)
கோவிலூர் மடாலாயம்
கோவிலூர் – 630307
முதற் பதிப்பு - 2003

26. கம்பர் — கம்பன் கழகம், சென்னை
முதற் பதிப்பு -
1976

27. காமாட்சி சீனிவாசன — குறள் கூறும் சமுதாயம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம் - மதுரை
1975

28. கிருஷ்ணசாமி .ப (தொ.ஆ) — ஜெயகாந்தன் இலக்கியத் தடம்,
காவ்யா வெளியீடு,
பெங்களுர்,
முதற்பதிப்பு 1997

29. குன்றக்குடி அடிகளார் — சொல்லமுதம்
பதிப்பு விபரம் இல்லை

30. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் — தமிழ்ப்பண்பாடு
அருள்நெறி பதிப்பகம்
சிவகங்கை மாவட்டம்

31. கொங்குவேளிர் — பெருங்கதை
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை. 1973.

32. சற்குணவதி.மு — தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள்
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

சென்னை
முதற்பதிப்பு 2010

33. சாந்தி சச்சிதானந்தம் — பெண்களின் சுவடுகள்
தமிழியல் வெளியீடு
சென்னை முதற்பதிப்பு 1999

34. சாமிநாதையர் உ.வே. ( ப.ஆ) — புறநானூறு (மூலமும் உரையும்)
லா ஜர்னல் அச்சுக் கூடம்,
சென்னை
மூன்றாம் பதிப்பு - 1953

35. சாவித்திரி — இலக்கியங்களில் சமூகவியல்
சக்தி பதிப்பகம்,
தஞ்சாவூர் 613007

36. சிதம்பரம் பிள்ளை வ. உ ( உ.ஆ ) — திருக்குறள் உரை
பாரி நிலையம்
பிராட்வே – சென்னை
முதற் பதிப்பு - 2008

37. சிவப்பிரகாசர் — நீதிநெறி விளக்கம்
உமா பதிப்பகம் எட்டு பார் 171
பவளக்கால் தெரு
மன்னடி சென்னை

38. சீத்தலைச் சாத்தனார் — மணிமேகலை (மூலமும் உரையும்)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி

39. சுப்பிரமணியன்˙ ச. வே — தமிழ் இலக்கிய வரலாறு
மணிவாசகர் பதிப்பகம்
பாரிமுனை, சென்னை

40. சோலையப்பன் .எம் | தமிழ் இலக்கியத்தில் மனிதநேயம்
வசந்தா பிரசுரம்
மேற்கு மாம்பலம்
சென்னை-2009

41. ஞானசம்பந்தன் - அ. ச | பெரியபுராணம் ஓர் ஆய்வு
பெரிய புராணம் ஓர் ஆய்வு
ஆராய்ச்சி மையம்
சென்னை 1994

42. தண்டபாணி தேசிகர் | திருக்குறள் உரைக்களஞ்சியம்
அறத்துப்பால் - இல்லறவியல்
திருக்குறள் ஆய்வு வெளியீடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 1981

43. மேலது | திருக்குறள் உரைக்களஞ்சியம்
அறத்துப்பால் - பாயிரவியல்
திருக்குறள் ஆய்வு வெளியீடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 1981

44. மேலது | திருக்குறள் உரைக்களஞ்சியம்
துறவறவியல் - ஊழியல்
திருக்குறள் ஆய்வு வெளியீடு
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.
1981

45. தமிழண்ணல் | புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு
மீனாட்சி புத்தக நிலையம்
தானப்ப முதலி தெரு - மதுரை

முப்பத்தாறாவது பதிப்பு – 2017

46. மேலது (உ. ஆ) — குறுந்தொகை (மூலமும் உரையும்)
கோவிலூர் மடாலயம்
கோவிலூர்
முதற் பதிப்பு - 2002

47. தாயுமானவர்
மெய்யப்பன்.சி (ப.ஆ) — தாயுமானவர் பாடல்கள்
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை 1992

48. திருத்தக்கத்தேவர் — சீவக சிந்தாமணி (மூலமும் உரையும்)
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி

49. திருநாவுக்கரசு க. த — உளவியல் நோக்கில் இலக்கியத் திறனாய்வு
உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
சென்னை

50. மேலது — தமிழ்ப்பண்பாடு
உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்
சென்னை,
முதற் பதிப்பு 2001

51. மேலது — திருக்குறள் - நீதி இலக்கியம்
சென்னைப் பல்கலைக்கழகம் 2011

52. திருமூலர் — திருமந்திரம்
காசிமடம்
திருப்பனந்தாள் 1961

53. திரு. வி.கல்யாண சுந்தரனார் — உள்ளொலி
பாரி நிலையம் - சென்னை

54. மேலது
பெண்ணின் பெருமை
பூம்புகார் பதிப்பகம்
சென்னை
மூன்றாம் பதிப்பு 1994

55. துரை அரங்கனார் (மொ. ஆ)
அன்பு நெறியே தமிழர் நெறி
மீனாட்சி புத்தகாலயம்
மதுரை 1967

56. தேவநேயப் பாவாணர்
திருக்குறள் உரை
நேசமணி பதிப்பகம்
காட்டுப்பாடி விரிவு

57. தொல்காப்பியர்
தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்
கழக வெளியீடு –
சென்னை
முதற்பதிப்பு 1947

58. மேலது
தொல்காப்பியம் - பொருளதிகாரம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு 1947

59. பக்தவச்சல பாரதி
பண்பாட்டு மானிடவியல்
மெய்யப்பன் பதிப்பகம் - சென்னை

60. பட்டினத்தார்
திரு. வி. க (விருத்தியுரை)
பாரி நிலையம் சென்னை,
1987

61. பவணந்தி முனிவர்
நன்னூல் எழுத்து - விருத்தியுரை
கழக வெளியீடு

சென்னை 1971

62. பாக்யமேரி — வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
அம்பத்தூர் சென்னை 600098

63. பாரதியார் — பாரதியார் கவிதைகள்
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்
சென்னை - முதற்பதிப்பு 1960

64. மாங்குடி மருதனார் — மதுரைக்காஞ்சி (நச்சினார்க்கினியர் உரை)
சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு
திருநெல்வேலி 1961

65. மாணிக்கவாசகர் — திருவாசகம்
தருமபுர ஆதீன வெளியீடு
ஞானசம்பந்தம் பதிப்பகம்
1997.

66. மாதவச் சிவஞான யோகிகள் — காஞ்சிப் புராணம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி - 1965

67. முத்து லெட்சுமி — பண்பாட்டுச் சமுதாயச் சிந்தனைகள்
வனிதா பதிப்பகம்
திருச்சிராப்பள்ளி 2000

68. முருகரத்தினம். தி — குறள் கூறும் இறைமாட்சி
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 1974

69. முனைப்பாடியார் — அறநெறிச்சாரம்,
திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்

கழகம்
திருநெல்வேலி

70. மோகனராசு. கு — திருவள்ளுவரின் குறிக்கோளியலும் உலகப் பொதுமையியலும்
சென்னைப் பல்கலைக்கழகம்
முதற் பதிப்பு 1983

71. வரதராசன் . மு — இலக்கிய மரபு
பாரி நிலையம் - சென்னை

72. மேலது — திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்
பாரி நிலையம்
சென்னை
ஏழாம் பதிப்பு 1967

73. மேலது — நெஞ்சில் ஒரு முள்
பாரி நிலையம்
சென்னை 1987

74. வாடியா (மொ. ஆ) — குடியாட்சியும் சமூகமும்
கலைவாணி புத்தகாலயம்
சென்னை
முதற் பதிப்பு 1966

75. வேதாத்திரி மகரிஷி — இறை உணர்வும் அற நெறியும் வேதாத்திரி
பதிப்பகம் ஈரோடு 2

76. வைத்தியநாத தேசிகர் — இலக்கண விளக்கம்
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி

**அகராதிகள்:**

77. கதிரைவேற்பிள்ளை — தமிழ்மொழி அகராதி
சாரதா பதிப்பகம்
சென்னை மறுபதிப்பு

78. தியாகு — தமிழ்ப் பேராகராதி, தொகுதி 3 பகுதி 1,
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 1928

79. தேவநேயப் பவாணார். நா. — செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகர முதலி
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை 1985

80. ராமகிருஷ்ணா. எஸ் — க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி
சபித்தவன் நியூ - திருவான்மியூர்
சென்னை
ஜனவரி 1992

81. ------------------- — கழகத் தமிழ் அகராதி
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
திருநெல்வேலி

**நிகண்டுகள்:**

82. திவாகர நிகண்டு — சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 1987

83. பிங்கல நிகண்டு — சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 1990

**வாழ்வியற் களஞ்சியம்**

84. அகத்தியலிங்கம் (ப.ஆ) — வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 3
தமிழக வளர்ச்சிக் கழக வெளியீடு

சென்னை 1963

85. ------------------------ வாழ்வியல் களஞ்சியம் தொகுதி 8
தமிழக வளர்ச்சிக் கழக வெளியீடு
சென்னை 1995

மலர்

86. அருணாசல தேசிகர்
திருவள்ளுவர் வாக்கு
திருவள்ளுவர் கழகம்
தென்காசி, (வெள்ளி விழா மலர்)

**Dictionary**

87. --------------------- Cambridge International Dictionary of English,
Cambridge University Press
U. K , 1863

88. ----------------------- New Oxford University Dictionary
Clarendon press
Oxford - 1998

89. ----------------------------- Encycloppedia Religion and Ethics Volume - XII
T.T. Clark, London, 1975

**BOOKS**

90. Macver, R. M Society a Text Book of Sociology
Oxford Universty Press
Second Edition 1937

91. Meckenzie J.S Out lies of social Philosophy

Temple Lodge Press
Britain
1918

92. Robert L.Sutharland — Sociology
United states by alferd inc Newyork
3rd edition 1967

**Journal**

93. Sylvia Feldman – The Rights Women Pope John Paul II, Mary sheds light on role of women, L'Osservatore Romano, weekly Edition in English, 13December 1995.

# அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு)

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**அ.பௌலியன்ஸ்**

(பதிவு எண்: 1600/2016-17)

**நெறியாளர்**

முனைவர் **மா.சிதம்பரம்**
தமிழ் உயராய்வு மையம்,
அழகப்பா அரசு கலைக் கல்லூரி,
காரைக்குடி – 3.






## அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி மற்றும்
தன்னாட்சித் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா

**ஆகஸ்ட் - 2021**

69. கம்பர், பா. 6246

70. அழகரடிகள்: திருக்குறள் அறம் ப. 80

71. புறம் பா. 312

72. அகநா. பா. 35

73. அழகரடிகள், திருக்குறள் அறம்: ப.80

74. திரு.வி.க. பெண்ணின் பெருமை (அல்லது) வாழ்க்கைத் துணைநலம் ப. 181

75. அருணாசல தேசிகர், திருவள்ளுவர் வாக்கு ப. 291

76. பரிமேலழகர், திருக்குறள் - துறவு அதிகார விளக்கம்

77. அழகரடிகள், திருக்குறள் அறம் ப.20

## இயல் - 4

## சமூக அற விழுமியங்கள்

ஒவ்வொரு தனிமனிதனும் தான் பின்பற்றுகின்ற அறம்சார்ந்த விழுமியங்களால் பெருமை அடைகின்றான். அத்தகைய தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற இடமே குடும்பம் என்று அழைக்கப்படுகின்றது. இக்குடும்ப அமைப்பு முறையில் தனிமனிதர்கள் சேர்ந்து வாழ்கின்ற பொழுது குடும்பத்திற்கான அறவிழுமியங்களைப் பின்பற்றுவது இன்றியமையாததாகின்றது. குடும்பத்திற்கான அறவிழுமியங்களைக் காத்துக் கட்டமைப்பதில் தனிமனித விழுமியங்களும் பெரும் பங்காற்றுகின்றன என்பது மறுக்கவியலாத உண்மை ஆகும். இந்நிலையில் தனிமனித அற விழுமியங்களில் இருந்து தோற்றம் பெறும் குடும்ப விழுமியங்கள் சமூக விழுமியங்களைக் கட்டமைப்பதில் பெரிதும் முன்நிற்கின்றன. எனினும் தனிமனிதனும் குடும்பமும், சமூகம் என்கிற பொதுத்தளத்தில் ஒன்றிணைகிறபோது சமூகத்திற்கான பல அறவிழுமியங்களைப் பின்பற்ற வேண்டியது கடப்பாடு ஆகின்றது. எனவே இலக்கியங்கள் அத்தகைய விழுமியங்களை வரையறுத்து உரைப்பதுடன் பின்பற்ற வேண்டும் என்றும் அறிவுறுத்துகின்றன. இத்தகைய கருத்தியலின் அடிப்படையில் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படும் சமூகவிழுமியங்களை ஆய்ந்து வெளிப்படுத்துவதாய் இவ்வியலானது அமைகின்றது.

### மனிதனும் படைப்பும்:

‘‘மனித குலச் சமுதாயத்தின் ஒரு குறிப்பிட்ட சூழலில் வாழ்கின்றவன் மனிதன். அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நேரடியாகவோ மறைமுகமாகவோ அவனுடைய படைப்புகள்

அவனுடைய காலத்தைப் பிரதிபலிக்கின்றன. மேலும் சமுதாய வரலாற்று மரபின் ஒரு காலகட்டத்தில் தோன்றுகின்ற குறிப்பிட்ட இலக்கியப் படைப்பாளியின் அனுபவ உணர்வுகளைப் பெற்று வருகின்றது''[1]

என்ற கூற்று இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கதாகும். இலக்கியம் என்பதே படைப்பாளி வாழ்கின்ற காலத்தினுடைய பிரதிபலிக்கின்ற கண்ணாடியாக அமைகின்றது. படைப்பாளி காலச்சமூகத்தின் நிகழ்வுகளை இலக்கியம் அப்படியே படம்பிடித்துக் காட்டுகிறது என்பதனை,

''நிகழ்காலச் சிக்கல்களை, சமகாலத்து வாழ்க்கைப் பிரச்சினைகளை ஆடிபோல் விளக்கிக் காட்டவல்லன இலக்கியங்கள்''[2] என்ற கூற்று உறுதிப்படுத்தும்.

மனிதனுடைய ஆளுகை சமுதாயத்தின் மேலும் சமுதாயத்தின் ஆளுகை தனி மனிதன் மீதும் இருகப்படிந்து ஒன்றையொன்று மாற்றிக் கொண்டே இருக்கின்றன என்பதால் மனிதனும் சமுதாயமும் பிரிக்க முடியாத ஒன்றாக அமைகின்றன. படைப்பாளி தனது காலச் சமுதாயத்தில் விளங்குகின்ற பழக்கவழக்கங்கள், நடைமுறைகள், சீர்கேடுகள் போன்றவற்றைத் தன் படைப்புகளில் வெளிப்படுத்துவதால் இலக்கியம் சமுதாய அளவுகோலாக மாறுகின்றது.

**சமுதாயம்**

''ஒரு சிறிய நிலப்பரப்பில் ஒரு பொது வாழ்க்கையைப் பின்பற்றிக் கூட்டமாக வாழும் தொகுதியே சமுதாயம் எனப்படும். சமுதாயம் சமூகத்திற்குள் அடங்குவதாகும். தம்மைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதற்கும் அழியாமல் நிலைநிறுத்திக் கொள்வதற்கும் ஒன்றாக இணைந்துள்ள ஒரு மானிடக்குழு சமூகம் எனப்படும். உலகிலுள்ள மானுடர் அனைவரும் ஏதாவது ஒரு சமூக அமைப்பிற்குள் இடம்பெறுவர்''[3]

மு.வ சமுதாயம் ''நாகரிகம் வளர, வளர, மனிதர் சிறு கூட்டமாக இருந்து பெரிய சமூகமாக வாழும் நிலைக்கு உயர்ந்துள்ளனர், வரவர சிறு நாடுகள் பலவும் குடும்பத்தனி உறுப்புகள் போல் ஆகி உலகமே ஒரு பெருஞ்சமுதாய அமைப்பாக உருவாகிறது''[4]

''ஓர் ஒழுங்கின் அடிப்படையில் ஒரே சிந்தனை, ஒரே எண்ணம், என ஒன்றுபட்டு ஒரே இடத்தில் தங்களின் வாழ்க்கை முறை கொண்டவர்களாகத் தங்களுக்குத் தேவையான விஷயங்களைத் தாங்களே பங்கிட்டு நிறைவேற்றிக் கொள்பவர்களாக வாழக்கூடிய ஒரு குழுவான மக்களைச் சமுதாயம் என அழைக்கலாம். ஒரு நாட்டில் அல்லது பல்வேறு நாடுகளில் வாழக் கூடிய ஒரே மாதிரியான வாழ்க்கை முறைகள் கொண்டவர்களையும் சமுதாயம் என்றழைக்கலாம்''[5]

‘‘ஆதியில் சமுதாயம் என்பது கிடையாது, மனிதர் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தினர். அங்குச் சட்டமும் ஒழுங்கும் கிடையாது. ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையும் மற்றொருவனுக்கு விரோதமாய் இருந்தது.இதன் விளைவாக மனிதனுடைய வாழ்வு அருவருப்பானதாகவும் மிருகத்தனமானதாகவும் குறுகியதாகவும் இருந்தது, தங்களுடைய தன்மையைக் கருதி ஒரு சமுதாய உடன்படிக்கைக்கு வருவது நல்லது என்று எண்ணினார்கள். ஒவ்வொருவரும் தங்களது உரிமையை விட்டுக் கொடுத்தார்கள்.தங்கள் பாதுகாப்பை நிச்சயப்படுத்த ஓர் அரசனுக்குக் கீழ்ப்படிய ஒப்புக் கொண்டார்கள். இப்படியாக சமுதாயம் பிறந்தது என்பர்’’[6]

சமுதாயம் என்னும் சொல்லுக்குப் பலர் தங்கள் கருத்துகளை முன்வைக்கின்றனர்.

‘‘சமுதாயம் என்ற சொல் வடமொழி கலந்த தமிழ்ச் சொல்லாகும். இது சமு + தாயம் எனப் பிரியும். சமு என்றால் கூட்டம் தாயம் என்பது தாய் என்ற சொல்லோடு ஆம் விகுதி சேர்வதால் வருவது. எனவே சமுதாயம் என்பதற்கு தாய்வழி பெரிய கூட்டம் என்று பொருள் கொள்ளலாம் என சமுதாயம் விவரிக்கப்படுகிறது சமுதாயம் என்பது உறவினர்களின் அமைப்பு முறையாகும் மனித இனத்தில் காணப்படும் உறவினர்களின் அமைப்பு முறையே சமுதாயம் எனப்படும்.’’[7]

சமுதாயம் என்ற சொல்லுக்கு ‘‘கூட்டம், சங்கம், பொதுவானது, மக்களின் திரள்,பொருளின் திரள்,உடன்படிக்கை’’[8] எனப் பல பொருள்களையும் கழகத்தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

‘‘மக்கள் பலர் கூடி வாழும் இனக்குழுவே சமுதாயம் எனப்படும். சமுதாயம் என்ற சொல்லில் உள்ள ‘தாயம்’ என்ற சொல் உரிமை எனப் பொருள்படுவதாகத் தமிழ் அகராதி கூறுகின்றது.’’[9]

சமுதாய உறவுதான் மனிதனை விலங்கினின்று பிரித்துக் காட்டுகிறது. உயிரினங்களிலேயே அறிவாற்றலையும் எதையும் செய்யக் கூடிய திறமையும் பெற்றிருக்கின்ற மனிதனால் பிறர் உதவியின்றித் தனித்து வாழ முடியாது

‘‘மனிதர்கள் சேர்ந்து வாழத் தொடங்கிய நாளே சமுதாய அமைப்பிற்கு வித்திட்ட நாளாகும் கூட்டு வாழ்க்கையே சமுதாய வாழ்க்கை என்றாலும் பிழையாகாது’’[10] என்கிறார் அ.மு. பரமசிவானந்தம்.

‘‘சமுதாயம் என்பது தன்னுள்ளே ஒரு பேரவை போன்ற முறையான உறவு கொண்ட ஒரு சமூக அமைப்பாகும்.அதில் சமுக உறவால் மனிதர்கள் ஒருவருக்கொருவர் இணைந்து வாழமுடியும்’’[11] என்று சமுதாய அமைப்பினை மெக்கன்சி எடுத்துக் காட்டுகிறார்.

“தனியாகவும் ஒரு சிலராகவும் இருந்த மனிதர்கள் தங்களுடைய ஒத்த தன்மையை உணர்ந்து அதன் காரணமாகப் பொதுவான நோக்கங்களை அடைய சேர்ந்து வாழ முயல்கின்ற போது உண்டாவது தான் சமுதாயம்”[12] என்ற கூற்றும் இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கது ஆகும்.

சமுதாயம் என்பதை பல்வேறு மொழி, சமயம், பண்பாடு கொள்கையை ஏற்றுக்கொண்ட சமூகத்தினர் ஏதேனும் ஒரு சட்டத்திற்குக் கட்டுப்பட்டு இணைந்து வாழும் தொகுதி என்று குறிக்கப்படுகிறது. சமுதாயம் என்பதற்கு ஏங்கல்ஸ்,

“சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழ்வதை மட்டும் குறிப்பதன்று. தனி மனிதர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்த அமைப்புமுறையை குறிக்கின்றது”[13] எனக் குறிப்பிடுகின்றார்.

“மக்கள், தொழில், கலைகள் அனைத்தும் சமுதாயம் என்னும் அமைப்பைச் சார்ந்தவையாகும். இருப்பினும் மக்கள் கூட்டம் மட்டுமே சமுதாயம் என்று கருதப்படுகிறது. ஏனையவை அனைத்தும் இந்த மக்கள் கூட்டத்தோடு தொடர்புடையவை அல்லது இந்த மக்கள் கூட்டத்தால் உருவாக்கப்பட்டுப் பிரிக்க இயலாத அமைப்பாக விளங்குபவை ஆகும். எனவே சமுதாயம் என்ற சொல்லினுள் நாம் வாழ்க்கையில் காணும் அனைத்தும் அடங்கும்”[14] என்ற முகிலை இராசபாண்டியன் கருத்து நோக்கத்தக்கது.

“தோழமை என்னும் பொருள் கொண்ட இலத்தீன் சொல்லான ‘ஜோவியல்’ என்பதிலிருந்தே சமுதாயம் என்ற சொல் பிறந்தது”[15] என்று கலைக்களஞ்சியம் பொருள் கூறுகின்றது.

இவ்வாறு அறிஞர்கள் சமுதாயம் குறித்த கருத்துகளை முன்வைக்கின்றனர்.

**சமுதாயச் சிந்தனை:**

சமுதாயம் குறித்துச் சிந்தித்து அதன் சீர்கேடுகளைச் சுட்டிக்காட்டிச் சீர்த்திருத்தும் எண்ணத்தோடு படைப்புகளைப் படைப்பதையே சமுதாயச் சிந்தனை எனக் குறிக்கின்றனர்.

“படைப்புகளில் காணப்படும் சமூகம் குறித்த சிந்தனைகளை வழிகாட்டுவதே சமுதாயப் பார்வை”[16] எனும் கருத்தே சமுதாயச் சிந்தனைக்கான விளக்கமாக அமைகின்றது.

“சமுதாயப் பார்வை என்பது உண்மையை ஒதுக்குவதோ மறைப்பதோ அல்ல.உண்மையை ஆராய்வது - ஆத்மாவால் அனுபவிப்பது”[17]

என்று ஜெயகாந்தன் ஆனந்தவிகடனில் கூறியுள்ள கருத்து குறிப்பிடத்தக்கது ஆகும். சமுதாயத்தின் சிக்கல்களை மறைக்காமல் உண்மையை வெளிப்படுத்துவதே சமுதாயப் பார்வை என்பதை அறியமுடிகிறது. ஒரு சிறந்த படைப்பாளிகளுக்கு இத்தகைய பார்வை முக்கியமானதாக கருதப்படுகிறது. தனிமனிதனின் அகச் சிக்கல்கள் முதலில் புறக்கணிக்கப்பட வேண்டியது இல்லை. காரணம் சமூகத்தின் பிரச்சினைகள் என்பது தனிமனிதனின் பிரச்சினைகளில் இருந்து முற்றாக வேறுபடுவதில்லை.

மாற்றம் என்பது மானுடத் தத்துவம். மாற்றம் என்பது மட்டுமே என்றைக்கும் மாறாமல் இருக்கும் தன்மையுடையது. ஆதலால் மனித வாழ்வில் பல்வேறு மாற்றங்கள் தோன்றுவது தவிர்க்க முடியாததாய் அமைந்து விட்டது. வாழ்க்கை வளர்ந்திருக்கிறது. அதனால்தான் ஒரு காலத்தில் இயல்பாய் இருக்கும் நடைமுறை இன்னொரு கால வளர்ச்சியின் காரணமாக விமர்சனத்துக்கு ஆளாகின்றது, அந்த விமர்சனத்தால் மனிதர்கள் செம்மையடைகின்றனர்.

சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது.இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம். சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது,ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது.

தன்னைச் சுற்றி நடக்கும் நிகழ்வுகளை அறிந்து கொள்ளாமல் எழுத முடியாது, தன் வீட்டைத்தாண்டி, தன் ஊர்,மாநிலம், நாடு. உலகம், பிரபஞ்சம், என்ற விசாலப் பார்வையில் உலகத்தை விழுங்கத் தெரிந்தவனே படைப்பாளிகளில் சிறந்தவன் ஆகிறான்.

**இறைஉணர்வு**:

மனிதன் தன்னைப் படைத்த கடவுளிடம் காட்டும் அன்புடன் கூடிய நன்றியுணர்வே பக்தி எனப்படுகிறது. மனிதன் இவ்வுலகில் தன்னை மயக்கம் செய்யும் ஆணவம், பொறாமை, மாயை எனப்பெறும் நிலைகளில் இருந்து விடுபட்டு இறைவனை அறிதற்கு முயற்சிக்கும் நிலையைப் பக்தி எனச் சுட்டலாம். இறைவனைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்னும் முயற்சியே பக்தி என்பதனை,

‘‘இறைப்பொருளைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்று மனித மனம் முயல்கின்ற முயற்சியே பக்தியாகும்’’ [18] எனக் குறிப்பார் அ.ச. ஞானசம்பந்தம்.

எழுத்துகள் எல்லாம் அகரத்தினை முதலாக உடையது போல இந்த உலகம் ஆதிபகவன் ஆகிற இறைவனை முதலாக உடையது என்பதும் அத்தகைய இறைப்பரம்

பொருளின் திருவடியைச் சரண் அடைந்தவர்களே இப்புவிமிசை நீடுவாழும் பெருமையை உடையோர் ஆவர் என்றும் திருக்குறள் குறிப்பிடும். இதனை,

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி

பகவன் முதற்றே உலகு'' (குறள்: 1)

'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்

நிலமிசை நீடுவாழ் வார்'' (குறள்: 3)

என வரும் திருக்குறள்களால் அறியமுடிகின்றது. ஆசாரக்கோவையும் காலையில், ஒரு கொம்பாலே பல் துடைத்து, கண் கழுவி, தான் வணங்குங் கடவுளை, அறியும் நெறியால், தொழுத பின் ஒரு செயலைத் தொடங்குக என்று குறிப்பிடுகிறது. மேலும் மாலைப்பொழுதில் கடவுளை நின்று வணங்குதல் குற்றமாகும். எனவே மாலைக் காலத்தில் வீற்றிருந்தே கடவுளை வழிபடுக என இறைவனை வழிபடும் முறையினைக் குறிப்பிடுகின்றது. இதனை,

''நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத்

தானறியு மாற்றாற் றொழுதெழுக அல்கந்தி

நின்று தொழுதல் பழி'' (ஆசார: 9)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். திருக்குறளும் ஆசாரக்கோவையும் உரைத்தற்போன்று திருவிவிவிலியமும் இறைவனே இவ்வுலகத்திற்கு வாக்காகவும் வாக்கினுள் நிறைந்தவராகவும் இருந்தார் எனக் குறிப்பிடுகின்றது. மேலும் உலக நிகழ்வுகள் அவரின்றி நடைபெறுவதில்லை என்றும் குறிப்பிடுகின்றது. இதனை,

''தொடக்கத்தில் வாக்கு இருந்தது. அவ்வாக்கு கடவுளோடு இருந்தது. அவ்வாக்கு கடவுளாயும் இருந்தது. வாக்கு என்னும் அவரே தொடக்கத்தில் கடவுளோடு இருந்தார். அனைத்தும் அவரால் உண்டாயின. உண்டானது எதுவும் அவரால் அன்றி உண்டாகவில்லை.'' (யோவா: 1: 1 -3 )

என்ற திருவிவிலிய வசனம் எடுத்துரைக்கின்றன.

''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கு அல்லால்

மனக்கவலை மாற்றல் அரிது'' (குறள்: 7)

என்பது வள்ளுவம். இதன்வழி, தனக்கு ஒப்புமை இல்லாத தலைவனாகிய இறைவனின் திருத்தாளினை அடைந்தவரே தமது மனக்கவலையை மாற்றும் தன்மையை உடையவராய் அமைவார் என்பது வெளிப்போந்து நிற்கும்.

''ஆகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். உயிர் வாழ எதை உண்பது, எதைக் குடிப்பது என்றோ உடலுக்கு எதை உடுத்துவது என்றோ கவலை கொள்ளாதீர்கள். உணவை விட உயிரும் உடையை உடலும் உயர்ந்தவை அல்லவா! --- உங்களுக்கு இவை யாவும் தேவை என உங்கள் விண்ணகத் தந்தைக்குத் தெரியும்'' (மத்: 6: 25 – 33)

''ஆண்டவரை எனது உள்ளம் போற்றிப் பெருமைப்படுத்துகின்றது. என் மீட்பராம் கடவுளை நினைத்து எனது மனம் பேருவகை கொள்கின்றது. ஏனெனில் அவர் தம் அடிமையின் தாழ்நிலையைக் கண் நோக்கினார். இது முதல் எல்லாத் தலைமுறையினரும் என்னைப் பேறுபெற்றவர் என்பர். ஏனெனில் வல்லவராம் கடவுள் எனக்கு அரும்பெரும் செயல்கள் செய்துள்ளார். தூயவர் என்பதே அவரது பெயர்'' (லூக்: 1: 47 - 49) என வரும் திருவிவிலியக் கருத்துகள் திருக்குறளின் கருத்தினை ஒத்தமைவது வெளிப்படுகிறது.

ஒருவன் கற்றதனால் ஆகிய விளைபயனானது இறைவனை உணர்ந்து தொழுதல் மூலமாகவே நிறைவு பெறுகின்றது. எவனொருவன் இறைவனைத் தொழாது மறுதலிக்கின்றானோ அவன் பெற்ற கல்வியால் ஒருபயனும் இல்லை என்பதனைத் திருக்குறள்,

''கற்றதனால் ஆய பயனென் கொல் வாலறிவன்

நற்றாள் தொழாஅர் எனின்'' (குறள்: 2)

என எடுத்துரைக்கும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை அடியொற்றி அமைவதுபோல் திருவிவிலியத்தில் இடம்பெறும் தானியேல் இறைவனைத் தன் அறிவினால் வாழ்த்திப் போற்றுகின்றார்.

''கடவுளின் திருப்பெயர் என்றென்றும் வாழ்த்தப்படுவதாக!

ஏனெனில், ஞானமும் வல்லமையும் அவருக்கே உரியன!

காலங்களையும் பருவங்களையும் மாற்றுபவர் அவரே!

அரசர்களை விலக்கி மாற்று அரசர்களை நிலைநிறுத்துபவர் அவரே! ---

அரசனது காரியத்தை எங்களுக்கு அறிவித்தவரும் நீரே!'' (தானி: 2:19-23)

ஐம்பொறிகளின் வழியாக வரும் ஆசைகளை அவித்தவனாகிய இறைவனின் பொய்யற்ற ஒழுக்க நெறியின்கண் நின்று வழிபடுவோரே நிலைபெற்ற நல்வாழ்க்கை வாழ்பவர் ஆவார் எனக் குறிப்பிடுகிறது திருக்குறள்.

''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க

நெறிநின்றார் நீடுவாழ்வார்'' (குறள்: 6)

மேற்கண்ட திருக்குறளின் மூலம் மனிதரின் நல்வாழ்விற்கான நெறிகளைத் தந்தருளும் ஆற்றல் அத்தகைய நெறியின்கண் நின்றொழுகும் இறைவனாலே இயலும் என்பது பெறப்படும். இதன்வழி இறைவனை வணங்குதலே மனிதன் நல்வழியில் நடத்தற்கு அடிப்படையாய் அமையும் என்பது பெறப்படும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையே திருவிவிலியத்திலும் காணப்படுகின்றது. இதில் காணப்படும் தோபித்தின் கட்டளையானது இத்தகைய செய்தியைக் குறிப்பிடுகின்றது. இதனை,

''மகனே, உன் வாழ்நாள் முழுவதும் ஆண்டவரை நினை;

பாவம் செய்யவும், அவருடைய கட்டளைகளை மீறவும் ஒருகாலும் விரும்பாதே.

உன் வாழ்நாள் முழுவதும் நீதியைக் கடைப்பிடி;

அநீதியின் வழிகளில் செல்லாதே'' (தோபி: 4:5-7)

என வரும் திருவிவிலியத்தின் வசனத்தால் அறிய முடிகின்றது.

இறைவனின் உண்மையான புகழினை விரும்பி, அவனைச் சரணடைந்தவர்களைத் துன்பத்தைத் தரும் நல்வினை, தீவினை என்பன வந்து சேராது என்பது திருவள்ளுவரின் வாய்மொழியாகும். இதன்மூலம் அத்தகையவர்கள் இறைவனின் அருளால் இன்பம், துன்பம் என்னும் இரண்டினையும் ஒன்றெனக் கருதும் தன்மையை அடைந்து விடுவார்கள் என்பதால் இருவினைகளால் ஏதும் செய்ய இயலாது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கும்.

''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்

பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'' (குறள்: 5)

இத்தகைய செய்தியானது திருவிவிலியத்திலும் காணப்படுகின்றது. திருவிவிலியத்தில் காணப்படும் அபக்கூக்கு வாழ்வில் எதுவரினும் நான் இறைவனை வணங்கி நிற்பேன் என்று குறிப்பிடுகிறார்.இதனை,

''அத்திமரம் துளிர்த்து அரும்பாமல் போயினும்,

திராட்சைக் கொடிகள் கனிதராவிடினும்,

ஒலிவ மரங்கள் பயன் அற்றுப் போயினும்,

நான் ஆண்டவரில் களிகூர்வேன்;

என் மீட்பரான கடவுளில் மகிழ்ச்சியுறுவேன்.

ஆண்டவராகிய என் தலைவரே என் வலிமை'' (அப: 3:17-19)

என வரும் வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. விருப்பு, வெறுப்பு என்பனவற்றை விட்டு நீங்கிய இறைவனின் திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்களுக்கு எவ்விடத்திலும் துன்பம் வந்து சேர்தல் என்பது இல்லை என்பதனை,

''வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு

யாண்டும் இடும்பை இல'' (குறள்: 4)

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தும். மேற்கண்ட திருக்குறள் விருப்பு, வெறுப்பு அற்ற ஒருவனாலே ஞானத்தினைப் பெறுதல் இயலும் என்பதனை உணர்த்துகின்றது. இத்தகைய சிந்தனையானது திருவிவிலியத்திலும் இடம்பெற்றுள்ளது. இத்தகைய கருத்தினை வெளிப்படுத்தும் திருப்பாடல்,

''உன்னதரின் பாதுகாப்பில் வாழ்பவர் எல்லாம் வல்லவரின் நிழலில் தங்கியிருப்பவர். ஆண்டவரை நோக்கி நீரே என் புகலிடம், என் அரண், நான் நம்பிருக்கும் இறைவன் என்று உரைப்பார். ஏனெனில் ஆண்டவர் உம்மை வேடரின் கண்ணியினின்றும் கொன்றழிக்கும் கொள்ளை நோயினின்றும் தப்புவிப்பார். தீங்கு உமக்கு நேரிடாது, வாதை உன் கூடாரத்தை நெருங்காது''

(திரு: 91: 1- 3)

என்பதாய் அமைகின்றது.

**வான்சிறப்பு:**

உலகின் நிலைப்பேற்றிற்கு அடிப்படையாய் அமைவது மழை ஆகும். இத்தகைய மழையானது வானின்று வராது அமையுமெனில் நிலவுலகில் உயிர்கள் அனைத்தும் பசியால் வாடி மடியும். எனவேதான் திருவள்ளுவர் திருக்குறளில் ‘வான்சிறப்பு’ என்றொரு அதிகாரமே படைத்தளித்துள்ளார். அமிழ்தம் உண்டவர்களுக்கு மரணமில்லாத வாழ்வினைத் தந்தருளும். அதுபோல மழையும் உலக உயிர்களின் பசிப்பிணியை நீக்கி வாழச் செய்கின்ற தன்மையால் அமிழ்தம் என்று போற்றப்படும் என்று குறிப்பிடுகின்றார் திருவள்ளுவர். இதனை.

“வான்நின்று உலகம் வழங்கி வருதலால்

தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று” (குறள்: 11)

என்ற திருக்குறளானது வெளிப்படுத்தி நிற்கின்றது. திருக்குறளின் இத்தகைய செய்தியினை ஒத்ததாய் அமையும் திருவிலிலியம் அத்தகைய சிறப்புடைய மழையானது இறைவனால் வருவிக்கப்படுவதாய் உரைக்கின்றது.

“ஏற்ற காலத்தில் மழையைப் பெய்யச் செய்வேன் வயல் தன் பலன்களைத் தரும், நிலத்தின் மரங்கள் தங்கள் கனிகளைத் தரும்” (லேவி: 26: 4)

“தக்க காலத்தில் அவர் உங்கள் நிலத்திற்கு மழை தருவார்,

முன்மாரியும் பின் மாரியும் தருவார், அதனால்

உங்கள் தானியத்தையும் திராட்சை ரசத்தையும்

எண்ணெயையும் சேகரிப்பீர்கள்” (இணை: 11: 14)

மழை வேண்டிய காலத்து மழை பெய்யாது நின்றுவிடுமாயின், பரந்த கடலாற் சூழப்பட்ட அகன்ற நிலவுலகத்தில் பசி நிலைத்து நின்று உயிர்களை வருத்தும். உலகத்தில் முக்கால் பங்கு கடலாயினும் அதனால் மழை பெய்யாத வறட்சிக் காலத்தில் பயனில்லையென்பதை ‘விரிநீர்’ என்னும் அடைமொழியாற் குறிப்பாக உணர்த்தினார் வள்ளுவர். இதனுள் குறிக்கப்படும் வருத்துதல் எனப்படுவது உணவு விளையாமையால் மீண்டும் மழை பெய்யும்வரை கொல்லுதலும் துன்புறுத்துதலும் அமையும் என்பதாகும். இதனை

“விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து

உள்நின்று உடற்றும் பசி” (குறள்:13)

என்ற திருக்குறள் விளக்கி நிற்கும். இன்னா நாற்பதும்,

“மாரி வளம் பொய்ப்பின் ஊர்க்கு இன்னா” (இன்னா: 20)

எனக் குறிப்பிடும். திருவிவிலியம் மழையானது பெய்யாது போகுமானால் உலக உயிர்கள் துன்புறும் எனக் குறிப்பதுடன் அவ்வாறு பெய்யாமல் போவதற்குத் தீயோரைத் தண்டிக்க விரும்பும் இறைவனின் செயலே காரணம் ஆகும் என்பதனையும் வெளிப்படுத்தி உரைக்கின்றது. இதனை,

“மழையே இல்லாபடி வானங்களை அவர் மூடிவிடுவார்.

உங்கள் நிலம்தன் பலனைத் தராது,

அவர் உங்களுக்குக் கொடுக்கும் அந்த வளமிகு

நாட்டினின்று விரைவில் அழிந்து போவீர்கள்” (இணை:11: 17)

என வரும் திருவிவிலிய வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

**நீத்தார் பெருமை:**

துறவியரைத் திருக்குறள் உள்ளிட்ட அற இலக்கியங்கள் பெரிதும் போற்றியுரைக்கின்றன. அந்தணர் என்னுஞ்சொல் அழகிய குளிர்ந்த அருளையுடைவர் என்னும் பொருளது ஆகும். அருளாவது ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரைப்பட்ட எல்லாவுயிர்களிடத்தும் இரக்கங் கொண்டு அன்பு செய்தல் என்பதாகும். அருளுடைமையைத் துறவுநிலைக்குரிய முதலறமாகக் குறித்தார் திருவள்ளுவர்.

“அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்

செந்தண்மை பூண்டொழுக லான்.” (குறள்: 30)

இவ்வுலகத்தில் இல்லறத்து வாழும் முறைப்படி வாழ்கின்றவன், இவ்வுலகத்தானேயாயினும் வானுலகிலுள்ள தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான் எனவும் குறிக்கும்.

“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்

தெய்வத்துள் வைக்கப் படும்” (குறள்: 50)

வள்ளுவர் இல்லறவாழ்க்கையில் தூய்மையாக வாழ்பவன் மக்களுட் சிறந்தவனாக இருப்பனாதலாலும், இம்மையிற் செய்த நல்வினைப் பயனை மறுமையில் தேவனாகித் தேவருலகத்தில் நுகர்வான் என்னும் நம்பிக்கையினாலும், "வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்றார். வள்ளுவரின் இத்தகைய சிந்தனையை ஒட்டித் திருவிவிலியமும்,

''எலயாசர் உயிர் துறந்தார், அவருடைய இறப்பு இளைஞர்களுக்கு மட்டுமல்ல.

அவருடைய நாட்டு மக்கள் அனைவருக்குமே சான்றாண்மைக்கு எடுத்துக்காட்டாகவும்

நற்பண்புக்கு அடையாளமாகவும் விளங்கியது'' (2 மக்க: 6: 31) என விளக்குகிறது.

**நடுவுநிலைமை:**

நடுவுநிலைமை என்பதற்கு இன்ப துன்பங்களுக்கு ஆட்படாமல் விருப்பு, வெறுப்புகள் இல்லாமல் இன்னார், இனியார் எனக் கருதாமல் அறத்தின்வழி நிற்றல் என்பதே பொருள் ஆகும். இதனையே திருவள்ளுவர்,

''சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்

கோடாமை சான்றோர்க் கணி'' (குறள்: 118)

என்பதாகக் குறிப்பிடுகிறார். திருவிவிலியம் நடுவுநிலைமையை,

''தீர்ப்பிடுகையில் அநீதி இழைக்காதே, சிறியோர் பெரியோர் என்று முகம் பாராது உனக்கு அடுத்து வாழ்வோர்க்கு நீதி வழங்கு'' (லேவி: 19: 15)

''என் உதடுகள் வஞ்சகம் உரையா, என வாயும் பொய்யைப் புகலாது'' (யோபு: 27: 4)

எனக் குறிப்பிடுகிறது.

''நடுவு நின்றார்க்கு அன்றி ஞானமும் இல்லை

நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை

நடுவு நின்றார் நல்ல தேவரும் ஆவர்

நடுவு நின்றார் வழி யானும் நின்றேனே.'' [19]

என்பதாகக் திருமூலர் குறிப்பிடுகிறார். தீங்கு இன்றி நன்மையே தருவது ஆயினும் நடுவு நிலையினின்று நீங்குவதால் உண்டாகின்ற ஆக்கத்தை அப்பொழுதே ஒழிய விடுக என அறிவுறுத்துகின்றார் திருவள்ளுவர். இதனை,

''நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை

அன்றே ஒழிய விடல்''. (குறள்: 113)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். திரிகடுகம் உப்பினது, பெரிய குவியல், தன்னில் நீர் படிந்தால் இல்லாமற் போகும்; நட்பினது செழித்த முளையானது, பொய்யாகிய நெருப்பைப் பெய்தால், அழிந்துபோகும்; நடுவுநிலைமையுடையார், மழை போல எல்லார்க்கும் ஒப்ப உபகரிப்பார்; நீர் படியாமையும் பொய் வழங்காமையும் மழையை ஒத்தலும் ஆகிய மூன்றும், நல்வழியை, தூராமைக்குக் காரணமாகிய சாதனங்களாம் என்று குறிப்பிடும். இதன்வழி நடுவுநிலை உடையோர் அனவரையும் ஒப்பநோக்கி நடத்தலே உயர்வுடையதாம் என்பதனை அறிய முடிகின்றது. இதனை

''உப்பின் பெருங்குப்பை நீர்படியின் இல்லாகும்

நட்பின் கொழுமுளை பொய்வழங்கின் இல்லாகும்

செப்பம் உடையார் மழையனையர் இம்மூன்றும்

செப்ப நெறிதூரா வாறு'' (திரி: 83)

என்ற பாடலானது எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் நடுவுநிலைமையே சிறந்த அறம் எனக் குறிப்பதுடன் நடுவுநிலையினின்று தவறி நடத்தல் சிறப்புடையது அன்று எனக் குறிக்கின்றது. இதனை,

''மாறாக நீங்கள் ஆள்பார்த்துச் செயல்பட்டால் நீங்கள் செய்வது பாவம்''

(யாக்: 2: 9)

என்ற வசனமானது விளக்கியுரைக்கும். தீவினையால் கேடும், நல்வினையால் பெருக்கமும் யாவர்க்கும் முன்னே அமைந்து கிடக்கின்றன. எனவே அவற்றை அறிந்து அவை காரணமாக மனத்தின்கண் கோடாமல் நடுவுநிலையுடன் இருத்தலே அறிவால் அமைந்த சான்றோருக்கு அழகானதாய் அமையும் என ஆற்றுப்படுத்துகின்றார் திருவள்ளுவர். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை,

''கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்

கோடாமை சான்றோர்க்கு அணி'' (குறள்:115)

என்ற குறளானது வெளிப்படுத்துகின்றது. திருவிவிலியம் நேர்மையோடு இருங்கள் என்றும் நடுவுநிலை தவறாதீர்கள் என்றும் அறிவுரை பகர்ந்து நிற்பதற்கு,

''நான் சொன்னவற்றைக் கடைபிடித்து வா, முன்கூட்டியே முடிவெடுக்காதே, நடுநிலை தவறாதே''

(1 திமோ: 5: 21 )

''நேர்மையுடன் நீதி வழங்குங்கள்'' ( செக்: 7:9-10 )

''ஓரவஞ்சனை காட்டுவது நன்றல்ல'' ( நீதி: 28: 21 )

''உன் வாழ்நாள் முழுவதும் நீதியைக் கடைப்பிடி; (தோபி: 4:5)

என்ற வசனங்கள் சிறந்த சான்றுகளாகும். ஒருவர் நடுவு நிலைமை உடையவர் என்பது அவரவருடைய நன்மக்களது உண்மையானும் இன்மையானும் அறியப்படும் எனக் குறிப்பார் திருவள்ளுவர். திருவள்ளுவரால் குறிக்கப்படும் அவரவர் செயலின் விளைவு எனப் பொருள் கொள்ளுதலும் சிறப்புடைத்தாகும். இத்தகைய திருக்குறளானது,

''தக்கார் தகவிலர் என்பது அவரவர்

எச்சத்தால் காணப் படும்'' (குறள்: 114)

என்பதாய் அமைகின்றது. மேலும் நடுவுநிலைமையின் இன்றியமையாமையை,

''முறைதெரிந்து செல்வர்க்கும் நல்கூர்ந் தவர்க்கும்

இறைதெரியான் நேரொக்க வேண்டும் - முறைதெரிந்து

நேரெழுகா னாயின் அதுவாம் ஒருபக்கம்

நீரொழிகிப் பால்ஒழுகு மாறு'' (பழமொழி: 244)

என்ற பாடலும் எடுத்துக்காட்டுகின்றது. திருவிவிலியமும் பிறரிடம் உண்மை பேசுங்கள், உங்கள் செயல் உயர்வானதாய் அமையட்டும் என வலியுறுத்தி நிற்பதனை,

''நீங்கள் கடைபிடித்து ஒழுக வேண்டியவை இவையே, ஒருவரோடு ஒருவர் உண்மை பேசுங்கள். உங்கள் நகர வாயில்களில் நீங்கள் அளிக்கும் தீர்ப்பு நீதியாகவும் நல்லுறவுக்கு வழிகோலுவதாகவும் இருக்கட்டும்'' (செக்: 8: 16)

என்ற வசனம் வெளிப்படுத்தி நிற்கின்றது.

**அவா அறுத்தல்:**

மனிதர்கள் உலகப் பொருள்கள்மேல் கொள்ளும் பற்றே அவா என்பதற்கு அடிப்படை ஆகும். இத்தகைய அவா என்னும் செயலானது மனிதர்களுக்கு இன்னலையே உருவாக்குகின்றது. ஆசையே துன்பத்திற்கு அடிப்படைக் காரணம் என்பதை மனித சமூகம் உணர்கின்ற பொழுதுதான் இறைவனை அறியமுடியும். எனவேதான் இறைவனுடைய திருவருள்தான் இன்பத்தைத் தருவது என்பதை நினைந்து இவ்வுலக வாழ்வில் இருக்கக்கூடிய அவாவினை அறுத்தல் வேண்டும் எனச் சான்றோர்கள் வலியுறுத்துகிறார்கள். இதனை,

‘‘அவாஅறுக்கல் உற்றான் தளரான்அவ் ஐந்தின்

அவாஅறுப்பின் ஆற்ற அமையும் - அவாஅறான்

ஆகும் அவனாயின் ஐங்களிற்றின் ஆட்டுண்டு

போகும் புழையுள் புலந்து’’ (ஏலாதி: 11)

எனக் குறிப்பிடும் ஏலாதி.

‘‘ஆசைக்கோ ரளவில்லை அகிலமெல் லாங்கட்டி

ஆளினுங் கடல்மீதிலே --------

ஆனைசெலவே நினைவர் அளகேசன் நிகராக.’’ [20]

என்கிறார் தாயுமானவர். திருமூலரும்,

‘‘ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்

ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள்

ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்

ஆசை விடவிட ஆனந்தம் ஆமே’’ [21]

என்று குறிப்பிடுவார். மணிவாசகரும்,

‘‘பேராசையாம் இந்தப் பிண்டம்’’[22]

என்று பாடுகிறார். சீடருக்குப் பல தகுதிகளை உரைக்குமிடத்து இயேசுகிறித்து வெறுத்து விட்ட விடுதலாகிய வேண்டாமையாகிய அவாஅறுத்தலை முதற்தகுதியாகக் குறிப்பிட்டார். திருவள்ளுவர் வலியுறுத்தும் அவாஅறுத்தலும் விவிலியம் குறிப்பிடும் வெறுத்து விடுதலும் ஒன்றே எனலாம்.

பிறனொருவனிடத்தில் உள்ள பொருளின்மேல் விருப்பத்தைச் செய்தலும், தன் சுற்றத்தார் பசித்திருக்க, சோம்பலைக் கொள்ளுதலும்; வெறுத்து, ஒருவனால் கற்றிலன் என்று இகழப்படுதலும் ஆகிய இம் மூன்றும் யாவர்க்கும் இன்பந் தராத நெறிகளாகும் எனக் குறிப்பிடும் திரிகடுகம். இதனுள் திரிகடுகம் உணர்த்திநிற்கும் மூவகைப்பொருள்களுள் அடுத்தவர் பொருளின்மேல் ஆசைகொள்ளுதலை முதற்கண் வைத்து நீக்கவேண்டும் என உரைத்து இருப்பதில் இருந்து அவாஅறுத்தலின் இன்றியமையாமை வெளிப்பட்டு நிற்கும். இதனை.

''ஆசை பிறன்கட் படுதலும் பாசம்

பசிப்ப மடியைக் கொளலுங் - கதித்தொருவன்

கல்லானென் றெள்ளப் படுதலும்இம்மூன்றும்

எல்லார்க்கு மின்னா தன'' (திரி: 20)

என்பதனால் அறிய முடிகின்றது. திருக்குறளும் ஆசை என்பதே பிறப்பிற்கான வித்து என்பதனை,

''அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்

தவாஅப் பிறப்பீனும் வித்து.'' (குறள்: 361)

என்ற குறளின்வழி எடுத்துரைக்கின்றது.

''தேவையை எவ்வளவு நிரப்பினாலும் ஆராத வேட்கையாய் இருப்பதுதான் அவா என்பது''[23] இதை மணிமேகலை ''வேட்கை விரும்பி நுகர்ச்சி ஆராமை'' [24] எனக் குறிக்கும். திருவிவிலியம் மனிதன் பொருட்கள்மேல் கொள்ளும் ஆசையே எல்லாத் தீவினைகளுக்கும் ஆணிவேராய் அமைகின்றது எனக் குறிப்பிடுகின்றது. இதனை,

''பொருள் ஆசையே எல்லாத் தீவினைகளுக்கும் ஆணிவேர்.அந்த ஆசையால் சிலர் விசுவாசத்தின்று பிறழ்ந்து திரிந்து பல வேதனைகளைத் தாங்களாகவே தங்கள் மேல் வருவித்துக் கொள்கின்றார்கள்'' (1 திமோ: 6: 10)

என உரைப்பதன்வழி அறியமுடிகின்றது.மேலும் ஆசையை நீக்குதலாகிய விழுமிய செல்வம் இவ்வுலகில் வேறெதுவும் இல்லை. துறக்கத்தின்கண்ணும் அதனை ஒப்பது இல்லை. எனவே மக்கள் செல்வமும், தேவர் செல்வமும் மேன்மேல் நோக்கக் கீழாதல் உடைமையால் தனக்கு மேலில்லாத வேண்டாமையை 'விழுச்செல்வம்' என்றும், அதற்கு இரண்டு உலகினும் ஒப்பதில்லை என்றும் கூறினார் வள்ளுவர். திருவள்ளுவரின் இத்தகைய சிந்தனையை,

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை

யாண்டும் அஃதொப்பது இல்" (குறள்: 363)

என்னும் குறளால் அறியமுடிகின்றது. திருவிவிலியமும் செல்வத்தின்மேல் இருக்கும் ஆசையை விட்டொழியுங்கள் என்று அறிவுறுத்துகின்றது. அத்தகைய சிந்தனையை,

"பொருள் ஆசையை விலக்கி வாழுங்கள், உள்ளதே போதும் என்றிருங்கள்" (எபி: 135)

என வரும் திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கின்றன. ஒருவர்க்கு வீடு என்று சொல்லப்படுவது ஆசையைத் துறத்தல் என்பதாகும். அவ்வாறு அவா நீத்தலே மெய்ம்மையை வேண்டத் தானே உண்டாக்கும் தன்மையுடையதாய் அமையும் என்பதனை,

"தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது

வாஅய்மை வேண்ட வரும்." (குறள்:364)

என்ற திருக்குறள் வெளிப்படுத்தி உரைக்கும்.இதன்வழி, தனக்கென வாழும் தன்மையைத் தரும் ஆசையினை நீக்கித் தன்னலம் துறத்தலே உயர்வடையும் நெறியாகும் என்பது வெளிப்போந்து நிற்கின்றது. திருவிவிலியமும் தமக்கென வாழ்வோர் பெறும் இழிவினையும் ஆசையைத் துறந்து பிறர்க்கென வாழ்வோர் பெறும் சிறப்பினையும்,

"தமக்கென்று வாழ்வோர் தம் வாழ்வை இழந்து விடுவர், இவ்வுலகில் தம் வாழ்வைப் பொருட்டெனக் கருதாதோர் நிலை வாழ்வுக்குத் தம்மை உரியவராக்குவர்" (யோவா: 12: 25)

ஒருவர் உலகம் முழுவதையும் தனதாக்கிக் கொண்டாலும் வாழ்வையே இழப்பார் எனில் அவருக்குக் கிடைக்கும் பயன் என்ன? (லூகா: 9: 25)

என்ற வசனங்களின் வழி எடுத்துரைக்கின்றது. மேலும் பிறருடைய மனைவி, பொருள்கள் உள்ளிடற்றவற்றின் மீது ஆசை கொள்ளாதே என்பதனைத் திருவிவிலியம்,

‘‘பிறர் மனைவியைக் காமுறாதே! பிறர் வீடு, நிலம், அடிமை, அடிமைப்பெண், மாடு:, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே’’ (இணை: 5 : 21)

என எடுத்துரைக்கின்றது. திருக்குறள் ஆசை என்பது மனிதருக்கு எப்பொழுதும் நிறைவைக் கொடுப்பதில்லை. மேலும் ஆசை அலைக்கழிக்கவே செய்யும். எனவே நிறைவினைத் தராத ஆசையினைக் கெடுப்பவனே நிறைவுடைய மாந்தனாவான், அத்தகைய செயலே ஒருவனுக்கு சிறப்புடைய நீங்காத இன்பத்தைத் தரும் என்பதனைத் திருவள்ளுவர்,

‘‘ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே

பேரா இயற்கை தரும்.’’ (குறள்:370)

என எடுத்துரைப்பார். இதனை,

‘‘ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உலப்பிலதனை உணர்ந்துணர்ந்து,

சென்றாங்கு இன்பத்துன்பங்கள் செற்றுக்களைந்து பசையற்றால்,

அன்றே அப்போதே வீடும் அதுவே வீடு வீடாமே’’[25]

எனத் திருவாய்மொழியும் எடுத்துரைக்கும். திருவிவிலியம் பொருள்கள்மேல் ஆசை மிகுதியாகக் கொண்டவர்கள் தன்னைத்தானே சிதைத்துக் கொண்டு அழிகிறார்கள் என்பதனை,

‘‘செல்வத்தைச் சேர்க்க விரும்புகிறவர்கள் சோதனையாகிய கண்ணியில் சிக்கிக் கொள்கின்றார்கள். அறிவீனமாக தீமை விளைவிக்கக் கூடிய பல்வேறு தீய நாட்டங்களில் வீழ்ந்து விடுகிறார்கள்’’ (1திமோ.6: 9 – 10)

என்ற வசனத்தின்வழி எடுத்துரைத்து ஆசையினை நீக்கி வாழ்தல் வேண்டும் என அறிவுறுத்துகின்றது. திருக்குறள் அவா இல்லாதார்க்கு வரக்கூடிய துன்பம் என்று ஒன்றும் இல்லை. ஒருவர் பிற துன்பம் வருவதற்கான காரணங்களெல்லாம் ஏதும் இல்லாவிட்டாலும் ஆசை என்பது உண்டாயின், அதனால் எல்லாத் துன்பங்களும் முடிவின்றி இடைவிடாமல் வரும் எனக் குறிப்பிடுகின்றது. இதன்வழி ஆசை கொண்டவர் எவ்விடத்தும் நிறைவுறார் ஆகலின் அதனால் ஆகிய துன்பமானது ஏனைய பிற துன்பங்களையும் உடன் கொண்டுவரும் என்பது வெளிப்போந்து நிற்கின்றது. இதனை உணர்த்தும் திருக்குறளாக,

‘‘அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம் அ∴துண்டேல்

தவாஅது மேன்மேல் வரும்’’ (குறள்: 368)

என்பது அமைகின்றது. திருவிவிலியமும் ஆசை மிகக்கொண்டவர் நிறைவடையாது துன்புறுவர் என்பதனை,

“பேராசை கொண்டோர் உள்ளது கொண்டு நிறைவடைவதில்லை.பேராசையுடன் கூடிய அநீதி உள்ளம் தளர்வடையச் செய்கிறது.” (சீராக்: 14: 9) என்பதாய்ச் சுட்டுகின்றது.

**அருளுடைமை:**

மனிதரிடம் அமைய வேண்டிய உயிர் இரக்கப் பண்புகளுள் அன்பிற்கு அடுத்த நிலையில் போற்றப்படுவது அருள் என்பது ஆகும். இப்பண்பே பிற உயரிய பண்புகளுள் குறிப்பிடத்தக்கது ஆகும்.இப்பண்பு எல்லார் மாட்டும் இரக்கம் கொள்ளும் ஆற்றொழுக்கினைத் தந்து நிற்கும் பெற்றியுடையது ஆகும். அன்பு என்னும் அறநிலைப் பண்பிற்குச் சேயாய் அமைவது அருள் என்பதே ஆகும்.எனவேதான் பரிமேலழகர்,

“அருளுடைமை என்பது தொடர்பு பற்றாது எல்லா உயிர்கள் மாட்டும் செல்லும் கருணை ஆகும்.இல்லறத்தார்க்கு அன்புடைமை போன்று துறவறத்தார்க்கு அருளுடைமை ஆகும். அதற்காக இல்லறத்தார்க்கு இது வேண்டாவா என்றால் இல்லறத்தார்க்கும் இஃது தேவைதான் எனினும் துறவறத்தார்க்கு மிகுதியும் தேவை என்பதனால் இது துறவறத்தாரை முன்னிறுத்திச் சொல்லப்பட்டது”[26] என உரை வகுப்பார்.

“துறவிக்கு அருளுடைமை வேண்டும். அன்பு முதல்நிலை, அருள் முதிர்வு நிலை. அன்பு இல்லறத்தார்க்கு உரியது. அருள் துறவிக்கு உரிமை உடையது. தன்னை ஒத்த மானுடர்மேல் கொள்வது அன்பு. அனைத்த உயிர்களின் மீதும் கொள்வது அருள் என்கிறார்” [27] கு. மோகனராசு

மனிதர்கள் நல்ல வழியால் ஆராய்ந்து அருளுடையவர்களாக விளங்க வேண்டும். பல வழிகளால் ஆராய்ந்து கண்டாலும் அருளே வாழ்க்கைக்குத் துணையாக உள்ளது என்று குறிப்பிடும் திருக்குறள். இதனை,

“நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்

தேரினும் அஃதே துணை” (குறள்: 242)

என்ற குறளால் அறியலாம். காட்சி, கருத்து, ஒப்பு, உரை, இன்மை, எதிர்நிலை எனப்படும் அருந்தாபத்தி, சார்பு எனப்படும் இயல்பு, உலகுரை, ஒழிபு, உண்மை என அளவைகள் மொத்தம் பத்து எனப்படும். அவை யாவும் முதல் நான்கனுள் அடங்கும். அன்பின் முதிர்ச்சியாகிய அருள் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த அறப்பண்பாதலானும், இம்மை மறுமை வீடாகிய மும்மைக்கும் உதவுதலானும், அஃதே துணை என்றார் திருவள்ளுவர். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை

திருவிவிலியமும் உணர்த்துகிறது. வாழ்க்கையில் நல்லவற்றையே சிந்தித்து நல்லவற்றையே செய்த ஆபிரகாமின் மகன் நலன்களைப் பெற்றதையும் தீயதையே சிந்தித்து தீயதையே செய்த இலாசர் துன்புற்றதையும் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. இதனை,

''அதற்கு ஆபிரகாம் மகனே, நீ உன் வாழ்நாளில் நலன்களையே பெற்றாய்! அதேவேளையில் இலாசர் இன்னல்களையே அடைந்தார்'' ( லூக்: 16: 29)

''அப்போது இயேசு தந்தையே! இவர்களை மன்னியும். ஏனெனில் தாங்கள் செய்வது என்னவென்ற இவர்களுக்குத் தெரியவில்லை என்று சொன்னார். அவர்கள் அவர்களுடைய ஆடைகளை குலுக்கல் முறையில் பங்கிட்டுக் கொண்டார்கள்'' (லூக்: 23: 24)

என்ற லூக்காவின் வாசகங்கள் எடுத்துரைத்து நிற்கின்றன.

இந்த உலகத்தில் உள்ள மற்ற உயிர்களையெல்லாம் பேணி அவற்றினிடத்து அருள் பூண்டு ஒழுகுபவருக்கு அவரின் உயிர் அஞ்சுவதற்கு ஏதுவான தீவினைகள் இராது என்பது திருக்குறள் ஆகும். இதன்வழி அருளுடையோர் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யார் ஆதலின் அவருக்குத் துன்பம் வாராது என்பதும் விதிப்பயனால் வந்துழி அதனால் அருளுடையோர் கலங்கார் என்பதும் தெளியப்படும். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை'' (குறள்: 244)

என்பதாகும். திருவிவிலியமும் அருளுடையார்க்குத் துன்பம் வராது என்ற செய்தியையும் அருளுடையார் பிறர்மாட்டு இரக்கம் கொண்டு தன் உடைமைகளைப் பகிர்ந்தளித்த செய்தியையும் யார் மீதாவது அறியாது பொய்க்குற்றம் சுமத்தி இருந்தால் அவர்களுக்கு நான்கு மடங்காகத் திருப்பிச் செலுத்த விழைந்த விழைவையும் எடுத்துரைக்கின்றது. மேலும் இறைமகன் தன்னையே மனிதர்களுக்கு ஒப்பாகக் அமைத்துக் கொண்டு சிலுவைச்சாவினை ஏற்றதையும் எடுத்துரைக்கின்றது. இதனை,

''ஆனால் தம்மையே வெறுமை ஆக்கி அடிமையின் வடிவை ஏற்று மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றி சாவை ஏற்கும் அளவிற்கு அதுவும் சிலுவைச் சாவை ஏற்கும் அளவிற்கு கீழ்ப்படிந்து தம்மையே தாழ்த்திக் கொண்டார்'' (பிலிப்: 2: 7 - 8 )

என வரும் திருவிவிலிய வசனங்களால் அறியமுடிகிறது. மேலும் தம் வாழ்வில் ஏதேனும் ஒரு வகையிற் செல்வத்தையிழந்தவர், முயற்சியால் மீண்டும் ஒருகால் அதைப் பெற்றுப் பொலிவடைவர்; ஆனால் அருட் பண்பை இழந்தவரோ ஒரேயடியாய் அழிந்தவராவர்; பின்பு ஒருகாலும் ஆக்கம் பெறார் என்றும் ஒருவன் அருளில்லாமையால் தன்னினும் எளியவரை வருத்துமாறு அவர்மேற் செல்லும் பொழுது; தன்னினும் வலியவர் தன்னை வருத்த வரும்போது தான் அவர் முன் அஞ்சி நிற்கும் நிலையை நினைத்து அத்தகைய எளியர் மாட்டு அருளல் வேண்டும் என்றும் குறிப்பிடுகிறது திருக்குறள். இதனை,

''வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்

மெலியார்மேல் செல்லும் இடத்து'' ( குறள்: 250)

எனவரும் குறள்கள் விளக்கியுரைக்கும். திருவிவிலியம் நசீ என்பவன் தன்னினும் மெலியரை வருத்திய செய்தியை எடுத்துரைக்கும் இடத்து அருளின் இன்றியமையாமையை எடுத்துரைக்கின்றது.

''பொல்லாதவனே! நசீ என்னை வேண்டிக் கொண்டதால் அந்தக் கடன் முழுவதையும் உனக்குக் தள்ளுபடி செய்தேன்.நான் உனக்கு இரக்கம் காட்டியதுபோல் நீயும் உன் பணியாளருக்கு இரக்கம் காட்டியிருக்க வேண்டும்'' (மத்: 18: 32 – 33)

திருவள்ளுவர் பொருட் செல்வம் இல்லாதவர்க்கு இவ்வுலக இன்பம் இல்லாததுபோல அருட் செல்வம் இல்லாதவர்க்கு வீட்டுலக இன்ப மில்லை என்று மொழிகிறார்.

''அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு

இவ்வுலகம் இல்லாகி யாங்கு'' (குறள்: 247)

சிறுபஞ்சமூலமும் பொருள் உடையான்கண் போகம் அமைதல் போன்று அருளுடையான் கண் உயர் ஒழுக்கமும் அதனாலாய உயர்வும் அமையும் என்றும் அத்தகையவர்கள் தீய செயல்களைச் செய்யார்கள், தீவினையைச் செய்ய மனத்திலும் நினையார்கள், புறங்கூற்றுச் சொற்களையும், மற்றையவர் காதுகளில், செலுத்தி, பிழைக்க மாட்டார்கள் (சிறு:2) என்றும் குறிப்பிடுகிறது. திருக்குறளும் சிறுபஞ்சமூலமும் உரைக்கும் இத்தகைய அருள் செய்தியை,

''இரக்கம் உடையோர் பேறு பெற்றோர், ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர் (மத்: 5: 7)

எனத் திருவிவிலியமும் வெளிப்படுத்தி நிற்கின்றது.

**ஈதலறம்:**

மனித வாழ்வியல் அறங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது பிற உயிர்களின் தேவை அறிந்து அதனை அதற்கு ஈந்து தானும் இன்புற்று அதனையும் இன்புறச் செய்யும் ஈதற் பண்பேயாம். இத்தகைய பண்புடையோரே உலகில் வாழ்கின்றவர் என்று கொள்ளப்படுவார், ஈகைப்பண்பே வாழ்தற்கான பொருளைத் தந்து நிற்கிறது. தமிழர், தன்னிடம் வந்து இரந்தவர்க்கு ஒன்றினை ஈய இயலாத நிலையில் வாழ்தலினும் சாதல் சிறப்புடைத்தாம் எனக் கருதினர். இதனை,

‘‘செறாஅது ஈதல் இரந்தார்க்கு உன்று ஆற்றாது வாழ்தலின்

சாதலும் கூடுமாம் மற்று’’ [28]

என வரும் கலித்தொகையின் அடிகள் உணர்த்தும். புறநானூறும்

‘‘ஈயென இரத்தல் இழிந்தன்று அதன் எதிர்

ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று’’ [29]

என எடுத்துரைக்கும். பழமொழி நானூற்றின் பாடல் சிலர் உணவின்மையால் வருந்தி தன்னை விரும்பி வந்து அடைந்தவர்களுக்கும், சுற்றத்தவர்க்கும் அவர்களை வருத்துகின்ற பசியினை நீக்கமாட்டார்கள். அத்தகையவர்கள் புதியதாக வந்த அயலார்க்கு உதவி செய்யும் செயலானது தன்னைப் பாதுகாத்து ஓம்பினார்க்குப் பயன்படாது நெடுங்காலம் சென்று பிறர்க்குப் பயன்படும் கரிய பனைபோலும் தன்மையை உடையவர்கள் ஆவர் என உரைக்கும். அத்தகைய பாடல்,

‘‘விரும்பி அடைந்தார்க்கும் சுற்றத் தவர்க்கும்

வருந்தும் பசிகளையார் வம்பர்க் குதவல்

இரும்பணைவில் வென்ற புருவத்தாய் ஆற்றக்

கரும்பனை யன்ன துடைத்து’’ (பழமொழி: 220)

என்பதாகும். இதன் மூலம் அயலவர்களின் பசியைத் தீர்ப்பதினும் தன் உறவினர்களின் பசியைத் தீர்க்கும் வள்ளண்மை மிகவும் இன்றியமையாதது என்பது வெளிப்படும். பிறர்க்கீதலும், தான் அடைதலும் ஆகியவற்றை அறியாதாவனது செல்வமானது நாய்பெற்ற தேங்காயை ஒப்பதாய் அமையும். நாய் பெற்ற தேங்காயானது அதற்கும் பயன்படாது பிறர்க்கும் பயன்படாது அழிதல்போல் பிறருக்கு உதவாதவன் செல்வமும் அழியும் என்பதனை,

‘‘வழங்கலும் துய்த்தலும் தேற்றாதான் பெற்ற

முழங்கு முரசுடைச் செல்வம், - தழங்கருவி

வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றோ

நாய்பெற்ற தெங்கம் பழம்'' (பழமொழி:217)

என்ற பாடல்வழி அறிய முடிகின்றது. இதனையே திருவள்ளுவரும்,

''ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை

வைத்திழக்கும் வன்க ணவர்'' (குறள்:228 )

எனக் குறிப்பார். சிறுபஞ்சமூலம், ஒருவன், தன்னைவிட்டு நீங்கிய பொருள்களை நினைத்து வருந்தாதவனாகவும் தனக்குக் கிடைக்காதவற்றை விரும்பாதவனாகவும் இருத்தல் வேண்டும் என்றும் தாழ்ந்த பொருள்களின் மேல் அன்பு கொள்ளாதவனாகவும் வறியவர்கள் விரும்பி வேண்டியவற்றை இன்சொல்லோடு மனம் இரங்கி கொடுப்பவனாகவும் இருப்பான் ஆகில் அத்தகைய பண்புகளை உடையவன் தேவர்களால் துதிக்கப்படுவான் என்றும் உரைக்கும். அத்தகைய பாடல்,

''கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சா

னிழிந்தவை யின்புறா னில்லார்-மொழிந்தவை

மென்மொழியா லுண்ணெகிழ் தீவானேல் விண்ணோரா

லின்மொழியா லேத்தப் படும்'' (சிறு: 81)

என்பதாய் அமைகின்றது. இவ்வாறு பிறரின் பசி அறிந்து உதவுபவர்கள், தங்கள் பசியை வென்று தவம் செய்யும் தவத்தில் சிறந்த முனிவர்களினும் உயர்ந்தவர்கள் என்பதனை,

''ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை

மாற்றுவார் ஆற்றலின் பின்'' (குறள்: 225)

என எடுத்துரைக்கும் திருக்குறள். ஏலாதியும் தவம் செய்வதினும் தானம் செய்வது பெரிது என்பதனை.

''தவமெளிது தானம் அரிது'' ( ஏலாதி: 3)

எனக் குறிப்பிடும். இதனையே திருவிவிலியமும் முன்மொழிகின்றது. பிறருக்கு ஈயும் குணம் கொண்டவர்களின் உயர்வினை.

"ஈகை குணமுள்ளோர் வளம்பட வாழ்வார்" (நீதி: 11: 25)

என உரைக்கின்றது. ஏலாதி, யாருக்கு தானம் செய்தல் மிகச்சிறந்தது என்பதனை வெளிப்படுத்தி உரைக்கின்றது. தன் தாயை இழந்த மகவுக்கும் தன் தலைவனை இழந்த மனைவிக்கும் பேச்சிழந்த வாழ்க்கையை உடையவர்களான ஊமைகளுக்கும், வாணிகம் புரிந்து முதற்பொருளை இழந்தவர்களுக்கும் உணவுக்கு ஆதரவான செல்வத்தினை இழந்தவர்களுக்கும், கண்ணில்லாத குருடர்களுக்கும் அவர்கள் வேண்டுவனவற்றைக் கொடுத்தவர்கள், பொருள்களை மிச்சமாய் வைத்துப் பிறர்க்குக் கொடுத்துத் தாமுந் துய்த்து இனிது வாழ்வார் என்பது ஏலாதி உரைக்கும் அறம் ஆகும்.இதற்கு,

"தாயிழந்த பிள்ளை தலையிழந்த பெண்டாட்டி

வாயிழந்த வாழ்வினார் வாணிகம் - போயிழந்தார்

கைத்தூண் பொருளிழந்தார் கண்ணிலவர்க் கீய்ந்தார்

வைத்து வழங்கி வாழ்வார்." (ஏலாதி: 78)

என்ற பாடல் அரணாய் அமைகின்றது. திருவிவிலியமும் வறுமையில் உள்ளவர்களின் வயிற்றில் அடிக்காதே என்றும் கையேந்தி நிற்பவர்களைக் காத்திருக்க வைக்காதே என்றும் அறிவுரை பகர்கின்றது. இதனை.

"குழந்தாய்,

ஏழைகளின் வயிற்றில் அடிக்காதே;

கையேந்தி நிற்போரைக் காத்திருக்க வைக்காதே.

பசித்திருப்போரை வாட்டி வதைக்காதே;

வறுமையில் உழல்வோரை எரிச்சலூட்டாதே" ( சீராக்: 4:1-5 )

"உன் உணவில் ஒரு பகுதியைப் பசித்திருப்போருக்குக் கொடு;

உன் உடையில் ஒரு பங்கை ஆடையற்றிருப்போருக்கு வழங்கு"

(தோபி:4:16 –17 )

என வரும் வசனங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன. முதுமொழிக்காஞ்சி ஒருவன் நெஞ்சத்தால் இரக்கம் கொண்டவன் என்பது அவனது ஈகையாலே வெளிப்பட்டு நிற்கும் என்பதனை,

"ஈர முடைமை ஈகையி னறிப" ( முதுமொழி: 2)

எனக் காட்டும். இதனைத் திருவிவிலியம்,

"ஒருவனிடத்துக் கருணை உண்டு என்பதற்கு அவனுடைய ஈகையே அறிகுறி.

எரியும் நெருப்பைத் தண்ணீர் அணைக்கும், தருமம் செய்தல் பாவங்களைக் கழுவிப் போக்கும் (சீராக்: 3: 30 )

என்றும் எடுத்துரைத்து நிற்பதனை அறிய முடிகின்றது.திரிகடுகம் ஒருவன் நரகத்தில் சேர விரும்பாதவன் ஆகில் பொருளைப் பிறருக்குக் கொடுக்கும் பொருட்டுச் செய்தல் வேண்டும் என விளக்கி உரைக்கும். இதனை,

"ஈதற்குச் செய்க பொருளை" ( திரி: 90 )

என்ற பாடல் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் பிறருக்குக் கொடுத்து உதவுதல் என்பதனை.

"ஏழை எவரிடமிருந்தும் உன் முகத்தைத் திருப்பிக்கொள்ளாதே.

அதனால் கடவுளும் தம் முகத்தை உன்னிடமிருந்து திருப்பிக்கொள்ள மாட்டார்"

( தோபி: 4:5-7)

என அறிவுறுத்துகின்றது. திருக்குறள் வறுமையின் காரணமாக வந்து இரந்து நிற்போரின் முகமலர்ச்சியைக் காணும்வரை அவரைக் கேட்க வைக்கும் செயலானது இனிமையுடையது அன்று என அறிவுறுத்துகின்றது.இதனை எடுத்துரைக்கும் திருக்குறள்,

"இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்

இன்முகங் காணும் அளவு." (குறள்: 224)

என்பதாகும். இதன்வழி, பிறரின் வறுமையைப் போக்க நினைப்பவர் வறியவர் வந்து இரந்து நின்றவுடன் வழங்கலே சிறப்புடைத்து என்னும் கருத்து வெளிப்பட்டு நிற்கும். இத்தகைய கருத்தினைத் திருவிவிலியமும்

"நீங்கள் தர்மம் செய்யும் போது உங்கள் வலக்கை செய்வது இடக்கைக்குத் தெரியாதிருக்கட்டும்" (மத்: 6:3)

என்றும் வலியுறுத்துகின்றது. சிறுபஞ்சமூலம், மறுமை இம்மை நிலைகளைக் கருதிப் பொருள்களைத் தகுந்த முறையில் ஒருவனுக்குக் கொடுக்க வேண்டும்; அப்படிக் கொடுப்பது வறுமையினால் இயலாதெனினும் பிறரை இரவாமலிருப்பது, அவ்வறுமைக் காலத்தில் கொடுத்தலினும் இரு மடங்கு தக்கதாகும் என அறிவுறுத்தும். இதனை,

''மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு

உறுமா றியைவ கொடுத்தல் - வறுமையால்

ஈதல் இசையா தெனினும் இரவாமை

ஈதல் இரட்டி யுறும்'' (சிறு: 95)

என்ற பாடலானது சுட்டுகின்றது. திருவிவிலியமும்,

''கொள்வதினும் கொடுப்பதே சிறந்த பாக்கியம்'' (1 கொரி: 10)

''அப்பொழுது ஒருவன் இயேசுவிடம் வந்து பேதாகரே! நிலை வாழ்வைப் பெற்றுக் கொள்வதற்கு நான் என்ன நன்மை செய்ய வேண்டும்? என்று கேட்டார். அதற்கு இயேசு உம் உடைமைகளை விற்று ஏழைகளுக்குக் கொடும். அப்பொழுது விண்ணகத்தில் நீர் செல்வராக இருப்பீர்'' (மற்: 10: 17) எனக் குறித்தார் எனக் குறிப்பிடுகின்றது.

**கூடா ஒழுக்கம்:**

மனிதன் செம்மையுற்று வாழ்தற்கு கொள்வன கொண்டு தள்ளுவன தள்ளி வாழ்தல் என்பது மிகவும் இன்றியமையாதது ஆகும். அவற்றுள் மனிதன் பின்பற்ற வேண்டிய அறம் சார்ந்த விழுமியங்களில் மிகவும் இன்றியமையாதது கூடா ஒழுக்கம் என்பதனை நீக்கி வாழ்தல் ஆகும். கூடா ஒழுக்கமானது மனிதனிடம் தோன்றுவதற்குக் காரணமாய் அமைவது மனதினை நல்லதன்பால் செலுத்தும் ஆற்றல் இல்லாமையே ஆகும். இத்தகைய தன்மை இல்லாத ஒருவன் வலியுடையார் வேடத்தைக் கொண்டு நடித்தல் என்பது பசுவானது புலியின் தோலைப் போர்த்திக் கொண்டு பயிரை மேய்ந்தாற் போன்ற தன்மையுடைய செயலாகும். இவ்வாறு மேயும் பசுவைக் காவலர் கடியாமல் இருப்பதற்கு 'புலி புல் தின்னாது' என்ற நம்பிக்கையும் புலியின்பால் கொண்ட அச்சமுமே காரணம் ஆகும். இதனை,

''வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்

புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.'' (குறள்: 273)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். புலித்தோல் போர்த்திய பசுபோல் வேடாதாரிகளாய் வாழ்பவர்கள் சமூகத்தின் ஒழுக்க மரபினைச் சிதைத்து விடுகிறார்கள். எனவே அவர்களிடம் மிகவும் கவனமுடன் இருத்தல் இன்றியமையாதது என்பதனைத் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. மேலும் இத்தகைய வாழ்க்கை முறையினைப் போலியான வாழ்க்கை என்றும் சுட்டுகின்றது. இதனை,

''போலி இறைவாக்கினர் குறித்து எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் ஆட்டுத்தோலைப் போர்த்திக்கொண்டு உங்களிடம் வருகின்றனர். ஆனால் உள்ளேயோ அவர்கள் கொள்ளையிட்டுத் தின்னும் ஓநாய்கள்'' (மத்:7:15)

என்ற வசனத்தின்வழி அறிய முடிகின்றது. இதில் இயேசு கிறித்து வேதபாரகர், பரிசேயர் போன்றோரின் பொய்யொழுக்கத்தினை எடுத்துரைத்து விழிப்பூட்டுகின்றார். திருவள்ளுவர் உண்மையான பக்தியும் தவமும் உடையவர்கள் உலகத்தில் சான்றோர்களால் தீயது என்று ஒதுக்கப்பட்டவற்றை நீக்குதல் வேண்டும். அதனை விடுத்து புற வேடங்களால் ஒரு பயனும் விளையப்போவதில்லை என்பதனை.

''மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்

பழித்தது ஒழித்து விடின்.'' (குறள்: 280)

எனக் குறிப்பிட்டுரைப்பார். திருவிவிலியமும் இத்தகைய கபட வேடதாரிகள், மனிதர்கள் தம்மைப் பெரிதென எண்ணவேண்டும் என்பதற்காக இத்தகைய வேடங்களைப் புனைகிறார்கள் எனக் கடுமையாகச் சாடுகின்றது. இதனை,

''தாங்கள் செய்வது எல்லாம் மக்கள் பார்க்கவேண்டுமென்றே அவர்கள் செய்கிறார்கள். தங்கள் மறைநூல் வாசகப்பட்டைகளை அகலமாக்குகிறார்கள். அங்கியின் குஞ்சங்களைப் பெரிதாக்குகிறார்கள். விருந்துகளில் முதன்மையான இடங்களையும் தொழுகைக் கூடங்களில் முதன்மையான இருக்கைகளையும் விரும்புகிறார்கள். சந்தை வெளிகளில் மக்கள் தங்களுக்கு வணக்கம் செலுத்துவதையும் ரபி என அழைப்பதையும் விரும்புகிறார்கள்'' ( மத்: 23: 5 -7 )

என்ற திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கின்றன. மேலும் ஆண்டவர் உண்மையான ஒழுக்கம் இன்றி வெற்றுக் கூச்சல் இடுவதனையும் காணிக்கை செலுத்துவதனையும் விரும்புவதில்லை என்பதனை,

''உங்கள் திருவிழாக்களை நான் வெறுத்து அருவருக்கின்றேன்;

உங்கள் வழிபாட்டுக் கூட்டங்களில் எனக்கு விருப்பமே இல்லை.---

உங்கள் வீணைகளின் ஓசையை நான் கேட்க மாட்டேன்.

மாறாக, நீதி வெள்ளமெனப் பொங்கி வருக!

நேர்மை வற்றாத ஆறாகப் பாய்ந்து வருக!'' (ஆமோ: 5:21-24 )

என்ற திருவிவிலிய வசனங்களின் வழியும் எடுத்துரைக்கின்றது. பிறர் தம்மை நன்கு மதிக்கவேண்டும் என்பதற்காகப் பற்றுக்களை விட்டு விட்டோம் என்று சொல்லி மறைவாகத் தவறான ஒழுக்கத்தினைப் பின்பற்றுபவர்களுக்கு அத்தீய ஒழுக்கமானது அப்பொழுது இனியது போலத் தோன்றும். ஆனால் பின்னால் இதனை ஏன் செய்தோம? என்று அவர்கள் தமக்குத் தாமே வருந்தும் வகையில் பல துன்பங்களைக் கொண்டு வந்து சேர்க்கும் என்பதனை,

‘‘பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று

ஏதம் பலவும் தரும்.''. (குறள்: 275)

என எடுத்துரைப்பார் திருவள்ளுவர். இவ்வாறு நொடிப்பொழுதில் அழியும் இன்பத்தின் காரணமாகப் நெடுங்காலம் நிற்பதாகிய பாவத்தைச் செய்தவர்கள், அதனால் ஏற்பட்ட விளைவின் தன்மையால்,

‘‘அந்தோ வினையே என்றழுவர்'' [30]

என்று குறிக்கப்படுவதும் ஈண்டு சுட்டுதற்குரியதாகும். திருவிவிலியம், இத்தகைய பொய்வேடதாரிகள் தண்டனை பெறுவது உறுதி என்பதனை,

‘‘விண்ணரசு கடலில் வீசப்பட்டு எல்லா வகையான மீன்களையும் வாரிக் கொண்டுவரும் வலைக்கு ஒப்பாகும். வலை நிறைந்ததும் அதை இழுத்துக்கொண்டு போய்க்கரையில் உட்கார்ந்து நல்லவற்றைக் கூடைகளில் சேர்த்து வைப்பர்; கெட்டவற்றை வெளியே எறிவர். இவ்வாறே உலக முடிவிலும் நிகழும். வானதூதர் சென்று நேர்மையாளரிடையேயிருந்து தீயோரைப் பிரிப்பர்; பின் அவர்களைத் தீச்சூளையில் தள்ளுவர். அங்கே அழுகையும் அங்கலாய்ப்பும் இருக்கும்.''

(மத்: 13 : 47 – 50

என்ற வசனங்கள் மூலம் அறிவுறுத்துகின்றது. காமம், வெகுளி, மயக்கம் என்பனவற்றைத் தம் மனத்தில் கொண்டு பிறர்க்குத் தவத்தில் மாட்சிமையுடையவர்போல் நீரின் மூழ்கிக் காட்டி,

பொய்யான வாழ்க்கை வாழும் மாந்தர் பலர் உலகத்தில் காணப்படுகின்றனர். அவர்களின் இறைபக்தியும் தவமும் உண்மையானவை அல்ல என்பதனைத் திருவள்ளுவர்,

''மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி

மறைந்தொழுகு மாந்தர் பலர்'' (குறள்: 278)

எனக் குறிப்பார். திருவிவிலியத்தில் சுட்டப்பெறும்,

''அதற்கு அவர் வெளிவேடக்காரர்களாகிய உங்களைப் பற்றி எசாயா பொருத்தமாக இறை வாக்கு உரைத்திருக்கிறார். இம்மக்கள் உதட்டினால் என்னைப் போற்றுகின்றனர். இவர்கள் உள்ளமோ என்னை விட்டு வெகுதொலைவில் இருக்கிறது'' ( மாற் 7: 6 )

என்ற வசனமானது மேற்கண்ட திருக்குறள் கருத்தினோடு ஒத்தமைவதைக் காணமுடிகின்றது. மேலும் இத்தகைய வேடதாரிகள் குன்றுமணியின் தன்மைபோல புறத்தே வேடத்தால் செம்மையுடையராகக் காணப்பெற்றாலும் அதன் மூக்குப் போல மனம் இருண்டு இருப்பர் என்பதனை,

''புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி

மூக்கிற் கரியார் உடைத்து.'' (குறள்: 277)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கின்றது. இத்தகைய செய்தியனை,

''ஊழின் மலிமனம் போன்று இருளாநின்ற கோகிலமே.''[31] எனத் திருக்கோவையாரும் விளக்கியுரைக்கும். மேலும் இத்தகைய வேடதாரிகள் தவவேடத்தில் மறைந்து நின்று தவமல்லவற்றைச் செய்தல், வேட்டுவன் புதரில் மறைந்து நின்று புட்களைப் பிடித்தாற் போலும் தன்மையையுடைய செயலாகும் என்பதனைத் திருக்குறள்,

''தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து

வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.'' (குறள்: 274)

என விளக்கியுரைக்கின்றது.திருவிவிலியமும் இத்தகைய வேடதாரிகளைக் கடுமையாகச் சாடுகின்றது.

''வெளிவேடக்கார மறைநூல் அறிஞரே! பரிசேயரே! ஐயோ, உங்களுக்கு கேடு, ஏனெனில் நீங்கள் வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்பானவர்கள். அவை புறம்பே அழகாகத் தோற்றமளிக்கின்றன. அவற்றின் உள்ளேயோ இறந்தவர்களின் எலும்புகளும் எல்லா வகையான

அழுக்குகளாலும் நிறைந்திருக்கின்றன. அவ்வாறே நீங்களும் வெளியே மக்களுக்கு நேர்மையாளராய்த் தோற்றம் அளிக்கிறீர்கள். ஆனால் உள்ளேயோ போலித்தனமும் நெறிகேடும் நிறைந்தவர்களாய் இருக்கிறீர்கள்'' (மத்:23:27-28) என்ற திருவிவிலிய வசனம் மேற்கண்ட கருத்திற்கு அரணாகின்றது.

திருக்குறளானது நெஞ்சத்தில் இருக்கும் பற்றினை நீக்காது வைத்துக் கொண்டு அதனைத் துறந்தார் போல வஞ்சித்து வாழ்வாரைப் போலக் கொடுமையுடைய பிறர் இவ் உலகத்து இல்லை எனக் குறிக்கும். இதனை வெளிப்படுத்தும் திருக்குறள்,

''நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து

வாழ்வாரின் வன்கணார் இல்.'' (குறள்: 276)

என்பதாகும். இத்தகைய கருத்தினையே,

''அடங்கலர்க்கு ஈந்த தானப் பயத்தினால் அலறும் முந்நீர்த் -

தடங்கடல் நடுவுள் தீவு பல உள அவற்றுள் தோன்றி

உடம்போடு முகங்கள் ஒவ்வார் ஊழ்கனி மாந்தி வாழ்வர் –

மடங்கலஞ் சீற்றத்துப் பின் மானவேல் மன்னர் ஏறே''[32]

என்ற சீவகசிந்தாமணிப் பாடலும் எடுத்துரைக்கின்றது. இத்தகைய வேடதாரிகளைக் கடியும் திருவிவிலியம்,

''உண்மையாகவே நான் விரும்புவது பலியை அல்ல,

இரக்கத்தையே விரும்புகின்றேன்;

எரிபலிகளைவிட,கடவுளை அறியும் அறிவையே நான் விரும்புகின்றேன்''.(ஓசே:6:6 )

என இறைவன் குறிப்பதாய் அறவுரை பகர்கின்றது.

**செய்ந்நன்றி அறிதல்:**

மனிதன் பின்பற்ற வேண்டிய அறவிழுமியங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது செய்நன்றி அறிதல் என்பதாகும். மனிதர்கள் பிறரைச் சாராது தாமே தனித்து வாழ்தல் என்பது இயலாது. அதிலும் மனிதன் சமுதாய வாழ்வியலில் தானும் பிறருக்கு உதவியும் பிறரிடம் உதவி பெற்றும் வாழ்வியல் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றான். சமூக, பொருளாதார, அறிவு

சார்ந்த துறைகளில் இத்தகைய உதவுதல் பண்பு இன்றியமையாததாகிறது. எனவே உதவி பெற்றவர் உதவி செய்தாரை நினைந்து போற்றுதல் என்பது இன்றியமையாத கடமை ஆகிறது. இதனை செய்நன்றி அறிதல் எனத் திருக்குறள் குறிப்பிடும்.

''சிசரோ என்ற பேரறிஞன் நற்குணங்களுக்கெல்லாம் தலையாக விளங்கும் நற்குணம் நன்றி காட்டுதல் என்றும் எல்லாக் கடமைகளுக்கும் மூலமுதல் நன்றி காட்டும் குணம் என்றும் கூறிச் சிறப்பிக்கின்றார்''[33]

பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தில் இருந்து நீங்குவதற்குரிய வாயில் உண்டு. ஆனால் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃது இல்லை என்பதனைத் திருக்குறள்,

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' (குறள்:110 )

என எடுத்துரைக்கும். இதனை,

''தந்தையரைக் கைவிடுவோர் கடவுளைப் பழிப்பவர் போல் ஆவார். அன்னையர்க்குச் சினம் ஊட்டுபவர் ஆண்டவரால் சபிக்கப்படுவார்'' (சீராக்: 3:16) எனத் திருவிவிலியம் எடுத்துரைக்கின்றது. திரிகடுகம், ஒருவன் தனக்குச் செய்த நன்றியின் பயனை, அளந்தறியாத, நாணமில்லாதவனும், சான்றோர் முன் அறநிலையத்தில் பொய்ச்சொல்லை உரைப்பானும் நற்செய்கை இல்லாதவனாய் ஒருவன் அடைக்கலப் பொருளைக் கைப்பற்றிக் கொள்பவனும்; ஆகிய இந்த மூவரும், தம் மக்களை இழந்து வருந்தி உயிர் வாழ்வார் எனக் குறித்து நிற்பதனை,

''நன்றிப் பயன் தூக்கா நாணிலியும் சான்றோர்முன்

மன்றில் கொடும்பா டுரைப்பானும் - நன்றின்றி

வைத்த அடைக்கலங் கொள்வானும் இம்மூவர் -

எச்சம் இழந்துவாழ் வார்'' (திரி: 62)

என்ற பாடலின்வழி அறிய முடிகின்றது.ஆசாரக்கோவை மனிதர்கள் பின்பற்ற வேண்டிய ஆசாரவித்துகளுள் தனக்குப் பிறர் செய்த நன்றியை மறவாமையே முதன்மையானது எனக் குறிப்பிடுகின்றது.

''நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ ------

சொல்லிய ஆசார வித்து'' (ஆசார: 1)

எனக் குறிப்பிடும். மேலும் திருக்குறள் நன்றி மறப்பது நன்றன்று என வலியுறுத்துவதனை,

''நன்றி மறப்பது நன்றன்று'' (குறள்: 108)

என்ற குறள்வழி அறியமுடிகின்றது. திருவிவிலியம் திருவள்ளுவரின் கருத்தினை ஒட்டியதாய் அமைந்திருப்பதனை.

''செய்நன்றி மறத்தல் வரம்பு மீறிய ஒழுக்கக்கேடு''

(சால: 14 :16 )

என்ற வசனத்தின் மூலம் அறிய முடிகின்றது.

**மெய்யுணர்தல்:**

உலக இன்பங்களின் மாயையை நீக்கி உண்மைத்தன்மையை உணர்தல் மெய்யறிவு எனப்படும். இத்தகைய தன்மையை அடைதற்கு நல்லறிவும் ஞானமும் வேண்டும். இத்தகைய தன்மையே மெய்யுணர்தல் எனப்படும்.

''பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களின்றி உண்மையான் உணர்தல்.பற்றற்றான் பற்றினைப் பற்றியவழி நிகழக்கூடியது'' [34] என்பார் பரிமேலழகர்.

''மெய்யுணர்தலாவது கடவுளை உணர்தல். சிறப்பு என்னும் செம்பொருள் காண்பது அறிவு எனவும் உள்ளது உணரின் எனவும், சார்புணர்ந்து எனவும் இந்த அதிகாரத்திலே வருகின்ற தொடர்கள் மெய் என்பது கடவுட் பொருளைக் காட்டுகின்றது எனலாம்''[35] - என்பார் அழகரடிகள்.

மயக்கத்தை நீங்கித் தூய அறிவை அடைந்தவர்களுக்கு அத்தூய அறிவானது நரகத்திற்குக் காரணமாகிய பிறப்பை நீக்கி வீட்டின்பத்தை நல்கும் எனக் குறிக்கும் திருக்குறள். மாசறுகாட்சி, தூய அறிவு, வாலறிவு, மெய்யறிவு என்பன ஒரு பொருட் பல சொற்கள் ஆகும். ஐயந்திரிபற்றது தூய அறிவு. கீழே நீண்டு கிடப்பதொன்றைக் கயிறோ பாம்போ என்று ஐயுறுவது ஐயம். கயிற்றைப் பாம்பென்றும் பாம்பைக் கயிறென்றும் பிறழவுணர்வது திரிபு. கயிற்றைக் கயிறென்றும் பாம்பைப் பாம்பென்றும் உள்ளவாறுணர்வது தூய அறிவு. மருள், மயக்கம், திரிபு, பொய்யறிவு என்பன ஒரு பொருட் சொற்கள் ஆகும். நரகத்தைக் குறிக்கும் இருள் என்னுஞ் சொல் இங்கு அதற்கு ஏதுவாகிய பிறப்பைக் குறித்து நிற்கின்றது. இதனை உணர்த்தும் திருக்குறள்,

“இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி

மாசறு காட்சி யவர்க்கு.” (குறள்: 352)

என்பதாகும். தொடக்கத்தில் அறிவுக் கண்ணில்லாமல் இருந்த ஆன்மாவானது இறைவன் திருவருளால் கண் திறக்கப்பெற்றுப் பேரின்ப வீட்டின் மாண்பையும் பிறவித் துன்பத்தின் கொடுமையையும் உணரும். பின் இருவகைப் பற்றினையும் துறந்து பிறப்பினை நீக்கி இறைவன் திருவடியை அடையும் என்பதனைத் திருமந்திரம்,

“இருட்டறை மூலையி லிருந்த குமரி

குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்

குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி

மருட்டி யவனை மணம்புரிந் தாளே.” [36]

என்ற பாட்டால் வெளிப்படுத்தி நிற்கின்றது. திருக்குறளும் மெய்யறிவு உடையவர்கள் பிறப்பினை நீக்கி இன்பம் பெறுவர் என்று குறிப்பிடுகின்றது. திருவிவிலியம் அத்தகையவர்கள் கடவுளைப்போல நன்மை, தீமை போன்றவற்றை அறியும் தெய்வ நிலையினைப் பெறுவர் என்பதனை,

“கட்டடத்தில் இணைக்கப்பட்ட மர உத்திரங்களை நிலநடுக்கத்தால் கூட அசைக்க முடியாது. ஆழ்ந்த சிந்தனையில் முதிர்ச்சி பெற்ற உள்ளம் கொண்டவர்கள் எந்தக் குழப்பத்திலும் தளர்ச்சியுற மாட்டார்கள்.” (சீராக்: 22: 16)

எனக் குறிப்பிடுகின்றது. மேலும் மக்கள் பிறப்பில், மெய்ப்பொருளை பெற்று நம்பிக்கையுடன் தெளிவு பெறுவார்கள் ஆயின் பிறப்பினை நீக்கி இறைத்திருவருளைப் பெறுவார்கள் என்பதனை,

“கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்

மற்றீண்டு வாரா நெறி.” (குறள்: 356)

எனக் குறிக்கும் திருக்குறள். மேலும் ஐயம் நீங்கி மெய்யறிவு பெற்றார்க்குத் தாம் இருக்கும் நிலவுலகத்தினும் வீட்டுலகம் நெருங்கியதாம் என்பதனை,

“ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்

வானம் நணிய துடைத்து” (குறள்: 353)

எனும் குறளாலும் எடுத்துரைக்கும். இத்தகைய சிந்தனையானது,

''ஏனெனில் இயேசு ஆண்டவர் என வாயார அறிக்கையிட்டு இறந்த அவரைக் கடவுள் உயிர்த்தெழச் செய்தார் என நீங்கள் உள்ளூற நம்பினால் மீட்புப் பெறுவீர்கள்''

(உரோ: 10: 9).

''இன்றே என்னோடு பேரின்ப வீட்டில் இருப்பீர் என்று உறுதியாக உமக்குச் சொல்கிறேன்''

(லூக்: 23: 43)

என வரும் திருவிவிலியக் கருத்தோடு ஒத்தமைவதனை உணரமுடிகின்றது.

**வெ.ஃ.காமை:**

வெ..ஃ.காமை என்பது பிறன் பொருளைக் கொள்ளக் கருதாமை என்பது ஆகும். ஒரு பொருள் எவ்வளவு சிறந்ததாயினும் எவ்வளவு உயர்ந்ததாயினும் கிடைத்தற்கு அரியதாயினும் அது பிறரிடம் இருப்பதாயின் அதன் மேல் ஆசை கொள்ளாமல் இருப்பதே வெ.காமை என்பதன் அடித்தளம் ஆகும். ஆழ நோக்கின் இவ் உலகின் பூசல்களுக்கும் பிணக்குகளுக்கும் பெரும் காரணமாய் அமைவது பிறன் பொருளைக் கைக்கொள்ள வேண்டும் என்னும் தீய நோக்கமே ஆகும். எனவே அதனை அற ஒழித்தார் மாட்டே அல்லவை தேய்ந்து அறம் பெருகும். இத்தகைய அறம் பெருகும் தன்மையானது எவ்வகைப் பொருளிடத்தும் அணுகாது, அகலாது நடுவுநிலைத் தன்மை கொண்டோருக்கே வந்து அமைவதாகும். சங்க இலக்கியத்துள்,

''நெடுநுகத்துப் பகல்போல

நடுவு நின்ற நன்னெஞ்சினர்'' [37]

எனக் குறிக்கப்படும் தன்மை கொண்டோர் மாட்டே இத்தன்மை உளதாகும். இது மனித சமூகம் பெறும் அறமாண்புகளுள் இன்றியமையாததாகும். எனவேதான் இது அற இலக்கியங்களில் பெரிதும் வலியுறுத்தப்படுகிறது.

பிறர் பொருளையும் தம்பொருள் போல் கருதும் நடுவுநிலைமையில்லாது அவரது நற்செல்வத்தின்மேல் ஒருவன் ஆசைவைப்பானாயின் அவன் குடிகெடுவதுடன் அத்தீய ஆசைவைப்பு அவனுக்கு மறுமைத் துன்பத்திற்கு ஏதுவாகிய தீவினைக் குற்றத்தையும் உண்டாக்கும் என வலியுறுத்துவார் வள்ளுவர்.

''நடுவின்றி நன்பொருள் வெ.ஃ.கின் குடிபொன்றிக்

குற்றமும் ஆங்கே தரும்'' (குறள்: 171)

திருக்குறளின் இவ் அறம் சார்ந்த கருத்தினையே திருவிவிலியமும்

''பொல்லாரின் குடி வேரோடு அழியும். நேர்மையாளரின் குடும்பம் தழைக்கும்'' (நீதி:14: 1)

என்பதாய் எடுத்துரைக்கின்றது. முதுமொழிக்காஞ்சி கடல் சூழ்ந்த உலகத்தில், மக்களுக்கு எல்லாம் பழிக்கப்படுபவரது, செல்வமானது, வறுமைத்தன்மையினின்று நீங்கி ஒழியாது எனக் குறித்து நிற்பதனை,

''ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்

பழியோர் செல்வம் வறுமையிற் றுவ்வாது.'' (முதுமொழி: 1)

என்ற பாடலானது எடுத்துரைக்கும். திருவிவிலியமும் முதுமொழிக்காஞ்சி ஆகியவற்றின் கருத்தினை அடியொற்றி,

''தீய வழியில் ஈட்டிய செல்வம் பயன் தராது, நேர்மையான நடத்தையோ சாவுக்குத் தப்புவிக்கும்''

( நீதி: 10: 2 )

''முறைகேடாய் நடக்கும் செல்வரைவிட

மாசற்றவராய் இருக்கும் ஏழையே மேல்'' (நீதி: 28: 6)

என அறிவுறுத்துகிறது. சிறுபஞ்சமூலம் மனிதர்க்கு எமன் வருவது உறுதி என்பதனை அறிந்து பிறன் பொருளைத் திருடாதீர்கள் எனக் குறிப்பதனை,

பிறன் பொருள் வௌமின் (சிறு: 26 )

என்ற பாடல் அடியால் அறிய முடிகின்றது. ஒருவனது செல்வம் சுருங்காமலிருத்தற்கு வழி அது பிறரின் தேவையான அவரது கைப்பொருளைத் தான் விரும்பாமையாகும் என்னும் கருத்தினை,

''அஃகாமை செலவத்திற்கு யாதெனின் வெஃகாமை

வேண்டும் பிறன்கைப் பொருள்.'' (குறள்: 178)

என்ற திருக்குறள் வலியுறுத்தும். இதன் வழி, பிறன் பொருளை ஒருவன் கொள்ளக் கருதுவான் எனில் அவனது செல்வமும் அழிந்துபோகும் என்பது வரும். இதனை,

“பிறர்க்குரியது எதையும் கவர்ந்திட விரும்பாதே என்று சட்டம் சொல்லாமல் போயிருந்தால் அவ்விருப்பம் என்ன என்றே அறிந்திருக்க மாட்டேன்” (உரோ: 7: 7)

“எவருடைய பொன்னுக்கோ, வெள்ளிக்கோ, ஆடைக்கோ நான் ஆசைப்பட்டதில்லை”

(திருத்: 20: 33 – 34)

என வரும் வசனங்கள் எடுத்துரைக்கின்றன.

**தவத்தின் மேன்மைகள்:**

மனிதன் தன் வாழ்வு செம்மையுறுவதற்கும் பிறவிப்பெருங்கடலில் இருந்து நீங்குவதற்கும் செய்ய வேண்டியது தவம் செய்தல் என்பதாகும். தவம் என்பதற்கு பரிமேலழகர் “மனம் பொறி வழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கலும், கோடைக்கண் வெயில்நிலை நிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களை ஓம்புதல், புலான் மறுத்து உயிர்கண்மேல் அருள் முதிர்ந்துழிச் செய்யப்படுவது”[38] என விளக்கம் தருவார். ஐம்புலனை அடக்கி ஆளும் நெறியே தவம் ஆகும்.

“பல் சான்றீரே! பல் சான்றீரே!

செல்க எனச் சொல்லாது, ஒழிக என விலக்கும்,

பொல்லாச் சூழ்ச்சிப் பல் சான்றீரே!

அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட்ட

காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,

அடை இடைக் கிடந்த கை பிழி பிண்டம்,

வெள் எள் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட

வேளை வெந்தை, வல்சி ஆக,

பரல் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்

உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ;

பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்

நுமக்கு அரிதாகுக தில்ல; எமக்கு எம்

பெருந் தோள் கணவன் மாய்ந்தென, அரும்பு அற

வள் இதழ் அவிழ்ந்த தாமரை

நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே!'' [39]

என்ற புறநானூற்றின் பாடல் தவம் செய்வோர் பின்பற்ற வேண்டிய வழிமுறைகளையும் உணவு முறைகளையும் விளக்கியுரைக்கும்.

தவத்தின் வடிவெனப்படுவது உண்டி சுருக்கல் முதலியவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்தலும், தாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமையும் ஆகிய தன்மையும் ஆகும் என்பது திருக்குறள் வரையறுக்கும் உண்மையாகும். இதனை,

''உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை

அற்றே தவத்திற்கு உரு'' (குறள்: 261)

என்ற திருக்குறள் விளக்கி நிற்கும். இதனையே பிற அற இலக்கியங்களும் வரையறுப்பதனைக் காணமுடிகின்றது. பிறிதோர் உயிர்க்குத் துன்பம் செய்யாமையும், தனக்குப் பிறரால் வருந் துன்பத்தை மறத்தலும், கோபத்தால் உண்டாகும் துன்பத்தைப் பிறிடத்துச் செய்யாமையும் குற்றத்தைச் செய்யும் துன்பத்தைத் தருகின்ற விழைவு, வெகுளி போன்றவற்றை நீக்குதல் ஆகிய தகுதிகளை உடையவனது தவமானது, தாழ்ந்ததன்று, மிகவும் இனிமையுடையதாகும் என்பது சிறுபஞ்சமூலம் காட்டும் நெறியாகும்.இதனை வலியுறுத்தும் பாடல்,

''உயிர்நோய்செய் யாமை யுறுநோய் மறத்தல்

செயிர்நோய் பிறர்கட்செய் யாமை-செயிர்நோய்

விழைவு வெகுளி யினைவ்விடுவான் ஆயின்

இழவு அன்று இனிது தவம்'' (சிறு: 31)

என்பதாகும். ஏலாதி இல்லற வாழ்க்கையும், சிறந்த தவவொழுக்கமும் என்று கூறப்படும் துறவற வாழ்க்கையும், சிறந்த நல்வினைக்குரிய வாழ்க்கைகளாகவே அறிஞர்களால் போற்றப்படும். இவற்றுள் இல்லற வாழ்க்கை என்பது இவ்வுலகப் பொருள்களிற் பற்றுடையவனாய் வாழ்தலாகும்,

தவவொழுக்கமாவது, அப்பற்று உள்ளத்தில் இல்லாதபடி நீக்கலும் முதலில் வைத்துக் கூறப்படும் வீடுபேறு என்பதில் பற்று வைத்து ஒழுகலும் ஆகும் என வரையறுக்கும். இதனை,

''மனைவாழ்க்கை மாதவ மென்றிரண்டு மாண்ட
வினைவாழ்க்கை யாக விழைப - மனைவாழ்க்கை
பற்றுத லின்றி விடுதல்முற் சொல்லுமேல்
பற்றுதல் பாத்தி றவம்'' (ஏலாதி: 73)

என்பதனால் அறிய முடிகின்றது. திரிகடுகம் தவ வாழ்க்கையினை மேற்கொள்வோருக்கு மன உறுதிப்பாடு இன்றியமையாதது என்று வலியுறுத்துகின்றது. முறையறிந்து செய்யமாட்டாதவன், அடைந்த தலைமைத் தன்மையும், மனத்தில், உறுதிப்பாடு இல்லாதவன், மேற்கொண்ட தவமும் குறைவற்ற ஒழுக்கத்தை, தெளிந்து நடவாதவன், பெற்ற அழகும்; ஆகிய இம் மூன்றும், தூற்றின்கண் தூவிய விதையையொக்கும் என்பது திரிகடுகம் உணர்த்தும் செய்தியாகும்.

''முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சில்
நிறையிலான் கொண்ட தவமும் - நிறையொழுக்கம்
தேற்றாதான் பெற்ற வனப்பும் இவை மூன்றும்
தூற்றின்கண் தூவிய வித்து''. (திரி: 80)

இவ்வாறு திருக்குறள் உள்ளிட்ட தமிழ் அற இலக்கியங்கள் வரையறுத்து உரைக்கும் தவ ஒழுக்கங்களைத் திருவிவிலியமும் வலியுறுத்துகின்றது. உண்மையான தவ வாழ்வு என்பது துன்புறுவோருக்கு உதவுதலும் தன்னைக் குற்றம் வராமல் பார்த்துக் கொள்ளுதலுமாம் என வரையறுக்கின்றது. மேலும் இத்தகைய தவமுடைமையையே இறைவன் விரும்புகிறான் என்பதனை,

''தந்தையாம் கடவுளின் பார்வையில் தூய்மையானதும் மாசற்றதுவுமான சமய வாழ்வு எதுவெனில் துன்புறும் அனாதைகளையும் கைம்பெண்களையும் கவனித்தலும் உலகத்தால் கறைபடாதபடி தம்மைக் காத்துக் கொள்வதும் ஆகும்'' (யாக்: 1: 27)

''பசித்தோருக்கு உங்கள் உணவைப் பகிர்ந்து கொடுப்பதும் தங்க இடமில்லா வறியோரை உங்கள் இல்லத்திற்கு அழைத்து வருவதும் உடையற்றோரைக் காணும் போது அவர்களுக்கு

உடுத்தக் கொடுப்பதும் உங்கள் இனத்தாருக்கு உங்களை மறைத்துக் கொள்ளாதிருப்பதும் அன்றோ நான் விரும்பும் நோன்பு'' (எசா: 58: 7) என்ற திருவிவிலிய வசனங்கள் எடுத்துரைக்கும்.

இவ் உலகத்துச் செல்வர்கள் சிலராகவும் நல்கூர்வார் பலராகவும் இருத்தற்குக் காரணம் யாது எனில் தவம் செய்வார் சிலராகவும் அது செய்யார் பலராகவும் இருத்தலேயாம் என வரையறுக்கும் வள்ளுவம்.

''இலர்பல ராகிய காரணம் நோற்பார்

சிலர்பலர் நோலா தவர்'' (குறள்: 270)

இவ்விடத்தில் செல்வம், நல்குரவு என்பன அறிவினது உண்மை இன்மைகளையும் குறித்து நின்றன.

''நுண்ணுணர்வு இன்மை வறுமை, அஃதுடைமை

பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்'' (நாலடி.251)

என்ற நாலடியாரின் அடிகளும் மேற்கண்ட திருக்குறளின் கருத்திற்குச் சான்று பகரும். திரிகடுகம் இத்தகைய தவமுடையவர்கள் வீடுபேற்றினை அடையும் நெறிமுறைகளைக் தெளிவிக்கும். இதன் அடிப்படையில், பற்றாகிய பாசத்தளையும் பல பொருள்கள் மேல் கொண்ட பற்றின் காரணமாக நீங்காமல் ஓடுகின்ற விருப்பமாகிய தேரும் பொய்ம்மை என்னும் அறிவுக்குப் பகையாகிய இருளும் ஆகிய இம் மூன்றும் தனக்குக் காரணமாகிய அவிச்சை கெட, பிறப்பு அழியும் எனக் எடுத்துரைக்கின்றது. இதன் மூலம், பற்றையும், அவாவையும், பொய்யையும் நீக்கி வாழ்பவர்களாலே வீடு என்பதனை அடைய முடியும் என்பது பெறப்படும்.

''பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்

பற்றறா தோடும் அவாத்தேருந் - தெற்றெனப்

பொய்த்துரை யென்னும் பகையிருளும் இம்மூன்றும்

வித்தற வீடும் பிறப்பு'' (திரி: 22)

ஒன்றின்மேல் பற்றிருந்தால் அவற்றை நீக்கி அங்கங்குச் செல்வது கூடாமையால் பாசத்தினைத் 'தளை' என்றும், ஒன்றின்மேல் ஆசை மேலே மேலே ஓடிக்கொண்டிருத்தலால் 'அவாத்தேர்' என்றும் கூறினார் திரிகடுக ஆசிரியர். 'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு' என்ற குறளுக்கு இணங்கப் பொய்யாமை விளக்கம் என்று

கூறப்படுதலால் பொய்யுரை இருள் எனப்பட்டது. பற்று என்பது அகப்பற்று, புறப்பற்று என இருவகைப்படும். நான் என்னும் உணர்ச்சியுடனிருப்பது அகப்பற்று. எனது என்னும் உணர்ச்சியுடனிருப்பது புறப்பற்று ஆகும். திருவள்ளுவரும்,

''அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்,

தவாஅப் பிறப்பீனும் வித்து'' (குறள்: 361)

எனக் குறிப்பார். இதற்கு ''உடம்பு நீங்கிப்போகும் காலத்து அடுத்த வினையும், அது காட்டும் கதி நிமித்தங்களும், அக் கதிக்கண் அமையும் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப, அறிவை மோகம் மறைப்ப அவ் வுயிரை அவ்வவா அக்கதிக்கட் கொண்டு செல்லுமாதலால், அதனைப் பிறப்பீனும் வித்து''[40] என்று பரிமேலழகர் உரை விரித்திருப்பது கருதத்தக்கது ஆகும். ஏலாதி தவவாழ்க்கையினை மேற்கொள்ளல் எளிய செயலாம். ஆனால் தவத்திற்கான மேன்மைகளைப் பெற்று நிலைத்தல் என்பது அரிய செயலாம் என்று வகுத்துரைக்கும். தனக்குத் துணையாவதாகிய பெருந்தவத்திற்குச் செல்வது எளியது, நிட்டை கைகூடும் வரை நிலைத்தல் அரியது, தெளிந்த ஞானியரான விடத்தும் ஐம்புலன்களையும் வென்று அவித்தலை எளிய காரியமாகச் செய்தல் அரியதாகும் என விரித்துரைக்கின்றது.

''சாவ தெளிதரிது சான்றாண்மை நல்லது

மேவ லெளிதரிது மெய்போற்றல் - ஆவதன்கண்

சேற லெளிது நிலையரிது தெள்ளியராய்

வேற லெளிதரிது சொல்'' (ஏலாதி: 39)

திருவிவிலியமும் மேற்கண்ட அறநூற்கருத்துகளை ஒத்து அமைவதனை,

''மேலும் நீங்கள் நோன்பு இருக்கும்போது வெளி வேடக்காரரைப்போல முக வாட்டமாய் இருக்கவேண்டாம். தாங்கள் நோன்பு இருப்பதை மக்கள் பார்க்கவேண்டும் என்றே அவர்கள் தங்கள் முகங்களை விகாரப்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் தங்களுக்குரிய கைம்மாறு பெற்றுவிட்டார்கள் என உறுதியாக உங்களுக்குச் சொல்லுகிறேன்.'' (மத்: 6: 16)

என வரும் வசனங்களால் வலியுறுத்துகின்றது. மேலும் உண்மையான தவ வாழ்வினை உடையவர்கள் கூற்றினையும் வெல்லும் ஆற்றல் பெறுவர் என்பதனைத் திருக்குறள்,

''கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்

ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.'' (குறள்: 269)

எனக் குறிப்பிடும். திருவிவிலியம் இயேசு கிறித்து சிலுவையில் அறையப்பட்ட பின்னர் மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்த நிகழ்வின் மூலம் கூற்றினையும் வென்று நின்ற நிகழ்வினை எடுத்துரைக்கும்.

''உனக்கு நலமான வாழ்வு துளிர்க்கும்; உன் நேர்மை எனக்கு முன்பாகச் செல்லும். ஆண்டவரின் மாட்சி உனக்குப் பின் சென்று காக்கும்'' (எசா: 58:8) என வரும் எசாயாவின் வசனங்களும் மேற்கண்ட கூற்றிற்குச் சான்றாகும்.

தவத்தைச் செய்பவர் என்பவர் தம் செயல்களைச் செய்பவராவர். அதனை விடுத்து பிற பொருள் இன்பங்களைச் செய்யமாட்டார்கள். ஏனெனில் அத்தகைய செயல்கள் அவர்களை ஆசையாகிய வலையுள் தள்ளிக் கேடு விளைவிக்கும் என்பதனை அறிந்தவர்கள் அவர்கள் எனத் தவம் செய்வாரின் செயல்களை விரித்துரைப்பார் திருவள்ளுவர். இக்குறளுக்கு உரை வகுக்கும் பரிமேலழகர், ''அநித்தமாய் மூவகைத் துன்பத்ததாய் உயிரின் வேறாய உடற்கு வருத்தம் வரும் என்று ஒழியாது தவத்தினைச் செய்ய, பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்களான் அநாதியாகத் துன்பம் எய்தி வருகின்ற உயிர் ஞானம் பிறந்து வீடு பெறும் ஆகலின், தவம் செய்வாரைத் 'தம் கருமம் செய்வார்' என்றும், கணத்துள் அழிவதான சிற்றின்பத்தின் பொருட்டுப் பலபிறவியும் துன்புறத்தக்க பாவஞ்செய்து கோடலின், அல்லாதாரை 'அவம் செய்வார்' என்றும் கூறினார்''[41] என விளக்கமுரைப்பார். இதனை உணர்த்தும் திருக்குறள்,

''தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்

அவஞ்செய்வார் ஆசையுள் பட்டு'' (குறள்: 266)

என்பதாய் அமையும். திருவிவிலியமும் இயேசு கிறித்து இவ் உலக இன்பங்களின்பால் பற்றுக் கொள்ளாமல் ஆண்டவரால் தமக்கு விதிக்கப்பெற்ற வழியில் சென்றார் என்பதனை எடுத்துரைக்கின்றது.

''மானிட மகன் தமக்கென்று குறிக்கப்பட்டபடியே போகிறார். ஆனால் ஐயோ! அவரைக் காட்டிக் கொடுக்கின்றவனுக்குக் கேடு என்றார்'' (லூக்: 22: 22)

தீயின்கண் வைக்கப்படும் பொன்னானது சுடச்சுடத் தன்னோடு கலந்த குற்றம் நீங்கி ஒளி மிகும். அதுபோல தவம் செய்ய வல்லார்க்கு அதனான் வரும் துன்பம் வருத்த வருத்தத் தம்மொடு கலந்த பாவம் நீங்கி ஞானம் மிகப் பெறுவர் என்பதனை,

''சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்

சுடச்சுட நோற்கிற் பவர்க்கு'' (குறள்: 267)

என்ற திருக்குறளானது எடுத்தரைத்து நிற்கின்றது.

''வெள்ளியை உலைக்களமும் பொன்னை புடக் குகையும் சோதித்துப் பார்க்கும்.உள்ளத்தை சோதித்துப் பார்ப்பார் ஆண்டவர்'' (நீதி: 17: 3)

என்ற திருவிவிலிய வசனம் மேற்கண்ட திருக்குறள் கருத்தினை ஒத்தமைவதனை ஆயும் வழி அறிய முடிகின்றது.

**ஊழ்வினை:**

மக்களின் எண்ணம் முதலியவற்றுள் அடங்காமல் அப்பாற்பட்டு இயற்கையாக நிகழும் நிகழ்ச்சி ஊழ் எனப்படும். ஊழ் - முறைமை உலகியல் நிகழும் முறைமை, உலகியலின் இயற்கை நிகழ்ச்சி. அதாவது பொருளும் காலமும் செயற்படும் தகுதியும் நமது எண்ணத்தின் முயற்சியின் செயலின் தகுதிக்கு ஒத்து வருதலும் ஒவ்வாது வருதலும் ஊழ் எனப்படும். ஒத்து வருதல் ஆகூழ் எனவும் ஒவ்வாது வருதல் போகூழ் எனவும் குறிக்கப்படும். செயற்படுதல் என்பதற்கு நிகழுதல் என்பது பொருளாகும். அந்நிகழ்ச்சியின் போக்கில் நாம் செய்யும் செயல்கள் வெற்றி ஆகும். அதற்கு எதிரிடையாகச் செய்யும் செயல்கள் வெற்றி ஆகாது. இதனை,

''நீர்வழிப்படூஉம் புணைபோல் ஆர்உயிர்

முறைவழிப் படூஉம் என்பது''[42]

எனக் குறிக்கும் புறநானூறு.

''ஊழில் பெருவலி யாவுள? மற்றொன்று

சூழினும் தான்முந் துறும்'' (குறள்: 380)

என்னும் திருக்குறள் ஊழின் வலிமையை எடுத்துரைக்கின்றது. இதன்வழி ஊழ் என்பது மனித முயற்சியினும் தெய்வ முயற்சியான் அமைவது என்பது பெறப்படும். திருவிவிலியமும் இத்தகைய கருத்தினை.

''அடுத்து என்ன நடக்கும் என்பதை நீ தெரிந்துகொள்ளா வண்ணம் கடவுள், இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி வரவிடுகிறார்'' (சபை: 8:17) என உரைத்து நிற்கின்றது.

திருக்குறள் ஒருவன் கையிற் பொருள் சேர்தற்கு நல்லூழால் முயற்சியுண்டாகும்; அவன் கையிலுள்ள பொருள் தீர்தற்குத் தீயூழாற் சோம்பலுண்டாகும் என்பதனை,

"ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்

போகூழால் தோன்றும் மடி" (குறள்: 371)

என எடுத்துரைக்கின்றது. ஒருவனுக்குச் செல்வம் தன்முயற்சியாலும் வரும், முன்னோர் முயற்சியாலும் பிறர் முயற்சியாலும் வரும். அங்ஙனமே ஒருவன் செல்வத்திற்கு அழிவும் அவன் செயலாலும் வரும், கள்வர், பகைவர் முதலிய பிறர் செயலாலும் வரும். ஒருவனுக்குச் செல்வத்தின் ஆக்கம் போன்றே அழிவும் பிறரால் மட்டுமன்றித் தன்னாலும் நேரும். இவ்வாறு அமையுமாறு ஊழே முயற்சியையும் சோம்பலையும் தோற்றுவிக்கும் என்பது மேற்கண்ட திருக்குறளால் கூறப்பட்டது. திருவிவிலியம் இவ்வாறு ஊழால் அமையும் தன்மைகளை,

"ஏனெனில் வாழ்க்கையில் என்ன நடக்கும் என்று அவனுக்குத் தெரியாது. அது எப்படி நடக்கும் என்றும் அவனுக்குச் சொல்வருமில்லை. (சபை: 8:7)

"தீமை நன்மையாக மாறுவதும் உண்டு: நல்வாய்ப்பு இழப்பிற்கு இட்டுச் செல்வதும் உண்டு" (சீராக்: -20 : 9) எனக் குறிப்பிடும்.

**நிலையாமை:**

நிலையாமை என்பது தமிழ் இலக்கியப்பரப்பில் பெருமளவும் வலியுறுத்தப்படுகின்றது. மனிதர்களை அறம் செய்ய ஆற்றுப்படுத்துவதற்கும் இறைவன் திருவருளைச் சிந்தித்து அதன் வழியில் நடக்கச் செய்வதற்கும் நிலையாமைத் தத்துவம் முன்மொழியப்படுகிறது. தொல்காப்பியர் காஞ்சி என்பதற்கு 'நிலையாமை' என்று பொருள் கூறுவதை,

"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற்றானும்

நில்லா உலகம் புல்லிய நெறித்தே" [43]

என்ற நூற்பாவின் மூலம் உணர முடிகின்றது.

"அறம், பொருள், இன்பம் ஆகிய பொருட்பகுதியானும் அவற்றுள் பகுதியாகிய உயிரும், யாக்கையும், செல்வமும், இளமையும் முதலியவற்றானும் நிலைப்பேறில்லாத உலகியற்கையைப் பொருந்திய நன்னெறியை உடையது காஞ்சி"[44]

என்று காஞ்சி என்பதற்கு விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர். மதுரைக்காஞ்சி என்பது நிலையாமையை உணர்த்தும் திணைப்பெயராக வந்துள்ளது என்றும் அறிவுறுத்துகிறார்.

திருவள்ளுவர் 'நிலையாமை' என்னும் ஓர் அதிகாரமே படைத்திருக்கின்றார். அவ்வதிகாரத்தில்,

“நில்லாத வற்றை நிலையின என்றுணரும்

புல்லறி வாண்மை கடை” (குறள்: 331)

என்று வாழ்வின் இழிந்தநிலைச் சுட்டுகின்றார். மணிமேகலை நிலையாமைக் கருத்துகளைப் பல இடங்களில் முன்மொழிகின்றது. உதயகுமாரன், மணிமேகலையின் திறம் குறித்து சுதமதியிடம் வினவுகின்றான். அப்பொழுது சுதமதி யாக்கையின் நிலையாமையை,

“வினையின் வந்தது வினைக்குவிளை வாயது

புனைவன நீங்கிற் புலால்புறத் திடுவது

மூத்துவிளி வுடையது தீப்பிணி இருக்கை

பற்றின் பற்றிடங் குற்றங் கொள்கலம்

புற்றடங் கரவிற் செற்றச் சேக்கை

அவலக் கவலை கையா றழுங்கல்

தவலா உள்ளந் தன்பா லுடையது

மக்கள் யாக்கை இதுவென உணர்ந்து” [45]

என்று உணர்த்துகின்றாள். நாகர்களின் தலைவனுக்கு சாதுவன் கூறும் அறவுரைகளிலும் நிலையாமைக் கருத்துக்கள் இடம்பெறுகின்றன. மணிமேகலை மேல் கொண்ட காமம் அடங்காதவன் என்பதால், அவளிடம் தவம் மேற்கொண்டதற்கான காரணம் வினவுகின்றான். அதற்கு மணிமேகலை,இளமை, யாக்கை நிலையாமை பற்றிய செய்திகளைத் தருகின்றாள். இவ்வாறு எமனால் உயிர் குடிக்கப்பட்ட உடம்புகளின் நிலையை,

“அழல்வாய்ச் சுடலை தின்னக் கண்டும்

கழிபெரும் செல்வக் கள் ஆட்டு அயர்ந்து

மிக்க நல்லறம் விரும்பாது வாழும்

மக்களின் சிறந்த மடவார் உண்டோ”[46]

என மணிமேகலை உணர்த்துகின்றது. திருக்குறள்,

“நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்

பெருமை உடைத்திவ் உலகு'' (குறள்: 336)

என எடுத்துரைக்கும். நாலடியார்,

''மலைமிசைத் தோன்றும் மதியம்போல் யானைத்

தலைமிசைக் கொண்ட குடையர் – நிலமிசைத்

துஞ்சினார் என்றெடுத்துத் தூற்றப்பட்டு ராரல்லால்

எஞ்சினார் இவ்வுலகத் தில்'' (நாலடி: 21 )

எனக் குறிக்கும். திருவிவிலியம் இதனை.

''மனிதனுடைய வாழ்நாள் குறுகியது, பயனற்றது, நிழலைப்போல் மறைவது, அதில் நமக்கு நலமானது எது என்பதை யாரால் அறியக் கூடும். தம் மறைவிற்குப் பிறகு உலகில் என்ன நடக்கும் என்பதை யாரால் தெரிந்து கொள்ள இயலும்'' (சபை: 6: 12 )

''நொடிப்பொழுதில் தோன்றி மறையும் புகை போன்றவர் நீங்கள்'' (யாக்: 4: 14)

மானிடர் அனைவரும் புல்லைப் போன்றவர், அவர்களது மேன்மை வயல்வெளிப் பூவைப் போன்றது. புல் உலர்ந்து போம். பூ வதங்கி விழும். (1பேது: 1: 24 )

எனக் குறிப்பிடுகின்றது.

**அரசியல்:**

அரசியல் என்பது மனித வாழ்க்கையில் இருந்து பிரிக்கமுடியாத ஒரு தத்துவம் அல்லது கொள்கை ஆகும். அரசியல் என்பது வாழும் முறை (Way of life ) அல்லது வாழ்க்கை முறை (Way of living) என்பது ஆகும். இது சமுதாய வாழ்க்கைக்கு அமைதியைத் தருவது.சமுதாயத்தில் பலர் கூடி வாழ்வதற்கும் பொருளியல் ஒழுங்கு முறைகளுக்கும் அரசியலே வழிவகுக்கின்றது. அறநெறிகளில் மனித குலம் ஒன்றி நின்று வாழ்வதனை உறுதிப்படுத்தத்தான் அரசியலே தோன்றுகிறது. தொண்டு செய்கிறது.அரசியல் தத்துவங்கள் மனித உலக வரலாற்றின் நிகழ்வுகளில் இருந்து தோற்றம் பெறுகின்றன. சிறந்த அரசியல் நிலவும் நாட்டில் ஒழுங்கு நிலவும். வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான அனைத்தும் கிடைக்கும்.அறிவுத்துறை மேம்படும். பகை ஒடுங்கிப் பண்பாடு விளங்கும். இத்தகைய அரசியல் கெடுமானால் அனைத்தும் கெடும். இதனை.

“காற்று – கெட்டிருக்கும் போது நம் நுரையீரலில் மட்டும் தூய்மை நிலவ வேண்டும் என்று எதிர் பாக்கலாமா? பொது வாழ்க்கையாகிய அரசியலில் அறத்தைப் புறக்கணித்த பிறகு தனி வாழ்க்கையில் மட்டும் அறத்தைப் போற்ற முடியுமா? வெளிக்காற்றின் தூய்மையைக் கெடுக்காமல் காப்பது முதல் கடமை”[47] என்ற மு.வ. வின் கருத்தானது அரசியலில் அறத்தின் ஆளுகை இன்றியமையாதது என்று உணர்த்தும்.

“அஞ்சாமை, அல்லல் நீக்கல், அளிஉடைமை, அறன் இழுக்காமை, அறிவுடைமை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, இன்சொலுடைமை, ஈகையுடைமை, ஊக்கமுடைமை, கடுஞ்சொல் உரையாடாமை, காட்சிக்கு எளிமையுடைமை, தூங்காமை, பெண்வழிச் சேராமை, பொச்சாமை, மடியின்மை, மறன் இழுக்கா மானம் உடைமை”[48] போன்றவை அரசனின் பண்புகளாக இருக்கவேண்டும் என்கிறார் வள்ளுவர்.

“மானம் வேண்டும் என்று கூறும் போது தலைவனுடைய தனி வாழ்க்கை பற்றிய மானவுணர்ச்சியைக் குறிப்பிடவில்லை. அதனால்தான் மறனீக்கா மானம் என்று வீரத்திற்கு ஏற்புடைய மானத்தைக் குறித்தார். நாட்டின் மானமே தன்மானமாகக் கொண்டு அவன் வாழ்க்கை நடத்த வேண்டும். நாட்டிற்கு உண்டாகும் சிறுமை தன் சிறுமை என்றும், அதன் பெருமை தன் பெருமை என்றும் வாழ வேண்டும். தன் மானத்தை, நாட்டு வாழ்க்கையில் புகுத்தி, நாட்டு மக்களுக்குப் போர் முதலிய தொல்லைகளை விளைவிக்கக் கூடாது. தன்னைக் குறை கூறினால் பொறுத்து, நாட்டைக் குறை கூறினால் புறக்கணியாத வீரம் வேண்டும். தனி வாழ்க்கையில் தன் பகைவனாக உள்ளவனைப் பொருட்படுத்தாமல் நாட்டின் பகைவனாக உள்ளவனை அடக்கவும் திருத்தவும் வேண்டும்”[49] எனத் திருக்குறள் அரசியல் குறித்து விளக்கும் செய்திகளைத் திருவிவிலியமும் தந்து நிற்றற்கு,

“இதயம் ஆண்டவனை விட்டு விலகாது இருக்க வேண்டுமானால் பல மனைவியரைக் கொள்ளலாகாது. வெள்ளியும் பொன்னும் அளவு மீறிச் சேர்க்கலாகாது. அவன் அரசுக் கட்டிலில் அமர்ந்த பின் அவன் இதயம் இறுமாப்புக் கொண்டு தன் சகோதரனுக்கு மேல் தன்னை உயர்த்திக் கொள்ளாமலும் கட்டளைகளில் இருந்து வலமோ இடமோ பிறழாமலும் இருப்பான். லேவியர், குருக்கள் பொறுப்பில் உள்ள இச்சட்டநூலின் நகல் ஒன்றை தனக்கென ஒரு ஏட்டில் எழுதிக் கொள்ளட்டும். அதைத் தன்னோடு வைத்துக் கொள்ளட்டும். அதை நாள்தோறும் அவன் வாழ்நாள் முழுவதும் வாசிக்கட்டும். அதனால் அந்தச் சட்டத்தின் எல்லா வார்த்தைகளையும் அதன் நீதி முறைகளையும் நிறைவேற்றுவதன் மூலம் அவன் கடவுளாகிய ஆண்டவருக்கு அஞ்சி நடக்கக் கற்றுக் கொள்வான் (இணை:17: 17, 20, 18 - 19) என்ற வசனம் சான்றாகும்.

ஒரு குற்றமும் செய்யாது தன் குடியை உயரச் செய்தொழுகும் அரசனை அவன் குடியைச் சேர்ந்தார் அனைவரும், விரும்பிச் சுற்றமாய்த் தாமே சென்று அவனைச் சூழ்ந்து கொள்வர் என்பதனை,

“குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்

சுற்றமாச் சுற்றும் உலகு.” (குறள்: 1025)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கின்றது. திருவிவிலியமும் ஒரு அரசன் முறை செய்யுமிடத்து நீதிமானாய் நடந்து கொள்ளுதல் வேண்டும் என்பதனை,

“தீர்ப்பிடுகையில் அநீதி இழைக்காதே, சிறியோர், பெரியோர் என முகம் பாராது உனக்கு அடுத்து வாழ்வோருக்கு நேர்மையுடன் நீதி வழங்கு.” (லேவி:19:15)

எனக் குறித்துரைக்கின்றது. திருக்குறள்,

“கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்

உடையானாம் வேந்தர்க் கொளி” (குறள்: 390)

எனக் குறிக்கும். இதன்வழி, தகுதியுடையவர்க்கு வேண்டுவன கொடுத்தலும்; அனைவரிடத்தும் அன்பாயிருத்தலும், நேர்மையான ஆட்சியும்; தளர்ந்த குடிகளைப் பேணுதலும்; ஆகிய இந் நான்கு செயலையும் உடையவன்; அரசரெல்லார்க்கும் விளக்காவான் என்னும் கருத்து வெளிப்போந்து நிற்கும். திருவிவிலியம்,

“நியாயம் வழங்குவதில் அரசர் அக்கறை காட்டினால் நாடு செழிக்கும். அவர் வரி சுமத்துவதில் அக்கறை காட்டினால் நாடு பாழாய்ப்போகும்” (நீதி:29:4)

என வலியுறுத்துகின்றது. மேலும் நடுநிலையாகத் தீர்ப்புச்செய்து மக்களுக்கு எவ்வகையிலும் துன்பம் நேராது குடிகளைக் காக்கும் அரசன், பிறப்பால் மனிதனாயினும் அவனால் ஆளப்பெறும் மக்களால் அவன் கடவுள் எனக் கருதப்படுவான் என்பதனை.

“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு

இறையென்று வைக்கப் படும்” (குறள்: 388)

எனக் குறிப்பார் வள்ளுவர். திரிகடுகம் முறையறிந்து செய்யமாட்டாதவன், அடைந்த, தலைமைத் தன்மையும், மனத்தில், உறுதிப்பாடு இல்லாதவன், மேற்கொண்ட தவமும் குறைவற்ற

ஒழுக்கத்தை, தெளிந்து நடவாதவன், பெற்ற அழகும் ஆகிய இம் மூன்றும், தூற்றின்கண் தூவிய விதையை ஒக்கும் எனக் குறிப்பிடும்.

"முறைசெய்யான் பெற்ற தலைமையும் நெஞ்சில்

நிறையிலான் கொண்ட தவமும் - நிறையொழுக்கம்

தேற்றாதான் பெற்ற வனப்பும் இவை மூன்றும்

தூற்றின்கண் தூவிய வித்து" (திரி: 80)

திரிகடுகம் குறிப்பிடும் மேற்கண்ட மூன்று கருத்துகளுள் முறைசெய்யான் பெற்ற தலைமை என்பது முதல்நிலையில் சுட்டப்பட்டிருப்பதில் அதன் இன்றியமையாமை வெளிப்பட்டு நிற்கின்றது. மேலும் இந்நூலானது மழையருக்கும் கோள் மூன்றனுள் முதன்மையாய் கொள்பொருள் வெட்கிக் குடியலைக்கும் வேந்தனைக் குறிப்பிடுகின்றது. இதனை.

"கொள்பொருள் வெ.:.கிக் குடியலைக்கும் வேந்தனும்

உள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்

இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூவர்

வல்லே மழையருக்குங் கோள்" (திரி: 50)

என்பதனால் அறிய முடிகின்றது. முதுமொழிக்காஞ்சி என்னும் இலக்கியம், கடல் சூழ்ந்த உலகத்தில், மக்கட் கெல்லாம் நீதி முறை இல்லாத, அரசனது நாடானது, வறுமையுடையதாய் அமையும் என்பதனை.

"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்

முறையி லரசனாடு நல்கூர்ந் தன்று" (முதுமொழி: 9: 1)

என எடுத்துரைக்கின்றது. திருக்குறள் தன் நாட்டில் நிகழும் நன்மை தீமைகளை நாள்தோறும் ஆராய்ந்து அதற்கேற்ப முறை செய்யாத அரசன் நாள்தோறும் நாடிழப்பான் எனக் குறித்து நிற்கும். இதனை.

"நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்

நாடொறும் நாடு கெடும்'' (குறள்: 553)

என்ற திருக்குறளானது எடுத்துரைக்கும். இவற்றுள் குறிக்கப்படும் நாள்தோறும் நாடிழத்தல் என்பது,

''கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி

வேத்திய லிழந்த வியனிலம்

........................................

நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்து வதால்"[50]

எனச் சிலப்பதிகாரம் குறிப்பதுபோல் வரவர வளங்குன்றுதலும், குடிகளின் அரசப்பற்றுக் குறைதலும், பகைவரால் அல்லது அருள்பூண்ட செங்கோலரசராற் சிறிது சிறிதாக நிலம் கைப்பற்றப் பெறுதலுமாம் என்பது போன்று அமைவதாகும்.இவ்வாறு திருக்குறள் உணர்த்தி நிற்கும் அற விழுமியத்தினை,

''நீங்கள் ஏழைகளை நசுக்கி அவர்களிடம் தானிய வரியாக வாங்கியதைக் கொண்டு -----

உங்கள் குற்றங்கள் எவ்வளவு மிகுதியானவை என்றும்

உங்கள் பாவங்கள் எத்தனைக் கொடியதென்றும் அறிவேன். - நல்லாரைத்

துன்புறுத்துகிறீர்கள் நகர வாயிலில்

வறியோருக்கு நீதி வழங்க மறுக்கிறீர்கள்'' (ஆமோ: 5: 11-12)

எனச் சுட்டுகின்றது திருவிவிலியம்.

''கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்

கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்

மாரிவறங் கூரின் மன்னு யிரில்லை" [51]

என வரும் மணிமேகலையின் அடிகளும் மேற்கண்ட கருத்திற்கு அரண்செய்கின்றன. மழையருக்கும் கோள் பற்றி அற இலக்கியங்கள் குறித்து நிற்க, திரிகடுகத்தின் ஒருபாடல் தீங்கினை நீக்கி, குடிகளுக்கு நன்மையானவற்றைச் செய்பவன் அரசனாவான். இத்தகைய அரசன் மழையைப் பெய் என்றுசொல்ல மழை பொழியும் எனவும் குறிப்பிடுகின்றது.

“-----------------------------------------கொடிதொரீஇ

நல்லவை செய்வான் அரசன் இவர்மூவர்

பெய்யெனப் பெய்யும் மழை” (திரி: 96)

என்பது அப்பாடல் ஆகும். புறநானூறும்,

“------------------------------ நீயோ, பெரும!

நீர் ஆகலின் நின் ஒன்று மொழிவல்:

அருளும் அன்பும் நீக்கி நீங்கா

நிறையம் கொள்பவரோடு உன்றாது காவல்

குழவி கொள்பவரின் ஓம்புமதி!

அளிதோ தானே: அது பெறல் அருங்குரைத்தே” [52]

என அரசன் ஆளும் முறைமையினை எடுத்துரைக்கின்றது. இதனைத் திருவிவிலியம்,

“அரசரின் முகமலர்ச்சி வாழ்வளிக்கும். அவரது கருணை பருவமழை பொழியும் மேகம் போன்றது.” ( நீதி:16:15) எனக் குறிப்பிடுகின்றது.

**குற்றம் கடிதல்:**

ஒரு மனிதன் பின்பற்ற வேண்டிய அரிய செயல்களுள் மிகவும் இன்றியமையாதது தன் குற்றத்தை நீக்குதல் என்பதாகும். இதனையே திருக்குறள் தனக்கு அழிவை உண்டாக்கும் பகை தன்குற்றமே ஆகும். ஆதலால் தன்னிடத்துக் குற்றம் வராமையையே பொருட்டாகக் கொண்டு காத்துக் கொள்க! என்று அறிவுரை பகர்கின்றது. இதனை,

“குற்றமே காக்க பொருளாகக் குற்றமே

அற்றம் தரூஉம் பகை” (குறள்: 434)

என்பதனால் அறியலாம். இத்தகைய குற்றங்கள் காமம், வெகுளி, மயக்கம் எனக் குறிக்கப்பெறும்.

“காம வெகுளி கடும்பற்றுள்ள மான வுவகை செருக்குகளை அறுபகை”[53]

எனக் காஞ்சி புராணமும்

"மொழிந்தன ராசிகள் முப்பகை வென்றார்" [54]

எனக் கம்பராமயணமும் விளக்கியுரைக்கின்றன. குற்றங்கள் பகைவர்போற் கொல்லும் என்பதை,

"அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்

வழுக்கியுங் கேடீன் பது" (குறள். 165)

"தன்னையே கொல்லுஞ் சினம்" (குறள். 305)

என வரும் குறட்கள் எடுத்து மொழியும். திருவிவிலியம் ஒருவன் விரோதங்களை வளர்க்கும் பகையை நீக்குதல் வேண்டும் எனக் குறிப்பிடுகின்றது.இதனை.

"பூசலைத் தவிர்த்திடு, உன் பாவங்கள் குறையும். சீற்றம் கொள்வோர் சண்டையை மூட்டி விடுகின்றனர். அமைதியாய் இருப்போரிடை சினத்தை விதைக்கிறார்கள்." (சீராக்:28: 8-9 )

என்பதால் அறிய இயலும். ஒருவன் அறிவாற்றல்களிலும் இடம் பொருள், ஏவல்களிலும் தான் மிகவுயர்ந்திருந்த போதும் தன்னை மெச்சிச் செருக்குறாது இருத்தல் வேண்டும். தனக்கும் தன்நாட்டிற்கும் நன்மை தராத செயல்களை மனத்தினாலோ செருக்கினாலோ இன்பங்கருதியோ விரும்பாமல் இருத்தல் வேண்டும் என்பதனை.

"வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க

நன்றி பயவா வினை" (குறள்:439)

என்ற திருக்குறள் எடுத்துரைக்கும். மேலும் திருவள்ளுவர் ஒருவன் தன்னை ஞானி என்று உயர்த்தாமல் தீமையை விட்டு விலக வேண்டும் எனக் குறிப்பிடுகின்றார். மேலும் ஒருவன் தனது குற்றத்தைக் கண்டு அதனை நீக்கும் தன்மையைப் பெறுதல் வேண்டும். பிறகே பிறர் குற்றத்தைக் காணல் வேண்டும். அவ்வாறு செய்வானாயின் அவனுக்குத் தீமை வரப்போவதில்லை. அதனை விடுத்துத் தன்னைக் காணாமல் பிறர் குற்றம் காணல் என்பது சரியன்று என உரைக்கும் திருக்குறள். இதனை.

"தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்

என்குற்ற மாகும் இறைக்கு" (குறள்: 436 )

என்ற குறளானது எடுத்துரைக்கின்றது. திருக்குறளின் இத்தகைய கருத்தோடு,

“பிறர் குற்றங்களைக் கிண்டிக் கிளறித் தூற்றுபவர் கயவர், எரிக்கும் நெருப்புப் போன்றது அவரது நாக்கு’’ (நீதி: 16:27) என்ற திருவிவிலியக் கருத்தானது ஒத்தமைவதனை நோக்கி உணர முடிகின்றது.

**காலமறிதல்:**

செய்வதற்குரிய காலம் அறிந்து செய்து முடித்தற்கான கருவிகளுடன் செய்பவர்க்குச் செய்தற்கரிய செயல்களில்லை என்பதனை உணர்த்துவதே காலம் அறிதல் என்பதாகும். காலம் அறிதல் என்பதனுள் காலப்பொழுதினால் பெறும் வெற்றி, காலமறிதலால் வரும் பயன், காலம் வாய்க்காவிட்டால் பொறுத்திருத்தல், பொறுத்திருப்பதால் வரும் சிறப்பு, பொறுத்திருக்கும் பருவத்தில் தன் நோக்கம், உணர்ச்சிகள் ஆகியவற்றை வெளிக்காட்டாமை, காலம் கூடியபொழுது வினரந்து செயல்படுதல், அச்செயல்முறை விளக்கம் என்பன போன்ற கூறுகள் அடங்கும். காலத்திற்காகச் சிலவேளைகளில் காத்திருக்க வேண்டி இருக்கும். அச்சமயங்களில் பதற்றமின்றிச் செயல்படவேண்டும். தம்முடைய குறிக்கோள்களை வெளிக்காட்டிக் கொள்ளாமல் ஒடுங்கி இருக்க வேண்டும்.சீண்டும் மாற்றாரின் நடவடிக்கைகளுக்கு உடனுக்குடன் எதிர்வினை காட்டாமல் அசைவற்றுத் தோற்றமளிக்க வேண்டும். அவ்விதம் ஒடுங்கி இருத்தல் இகழ்வாகக் கருதப்படமாட்டாது. இவ்விதம் பொறுமை காப்பது பெரும் பயனளிக்கும். தம் காலம் வரும்போது எல்லாம் தலைகீழாகிவிடும். பணியச் செய்தவர் பணிவர். காலம் இயைந்தபொழுது அரிய செயல்களைச் செய்து முடித்துவிடவேண்டும். பதுங்கி இருந்தவர், காலம் கூடியபொழுது பாய்ந்து விரைந்து திருத்தமாகச் செயலாற்றி வெற்றி காண்பர். இவை காலமறிதல் என்பதனுள் அடங்கியுள்ள நுட்பங்கள் ஆகும். இது மனிதர்களுக்கு வேண்டிய இன்றியமையாத விழுமியம் ஆகும். அதிலும் சமுதாயத்திற்காகத் தன்னை ஒப்பளிப்புச் செய்து கொண்டிருப்பவர் காலம் அறிந்து செயலாற்றும் பண்பினைப் பெற்று இருப்பார் ஆயின் அவரால் சமூகம் பெரும் பயன்பெறும். திருவள்ளுவர் ஒருவன் ஒரு வினையைத் தகுந்த காலம் அறிந்து இடத்தொடு பொருந்தச் செய்வானாயின் உலகம் முழுவதையுங் கைப்பற்றக் கருதினாலும் கைகூடும் எனக் குறிப்பார். இதனை விளக்கி நிற்கும் திருக்குறள்,

‘‘ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்

கருதி இடத்தாற் செயின்’’ (குறள்: 484)

என்பதாகும். திருக்குறளின் இத்தகைய சிந்தனையை,

‘‘ஒவ்வொன்றிற்கும் ஒரு காலமுண்டு, பிறப்புக்கு ஒருகாலம், இறப்புக்கு ஒருகாலம்

நடவுக்கு ஒரு காலம் அறுவடைக்கு ஒரு காலம் -----

பேசுவதற்கு ஒரு காலம், பேசாது இருப்பதற்கு ஒருகாலம் " ( சபை:3:1- 8)

எனக் குறிப்பிடுகின்றது திருவிவிலியம். மேலும் திருக்குறளானது ஒருவன் வினைமேல் செல்லாதிருக்கும் காலத்தில் மீன்தேடுங் கொக்குப்போல் ஒடுங்கியிருத்தல் வேண்டும். வினைமேற் செல்லுங்காலம் வாய்த்த விடத்து அக்கொக்கு விரைந்து மீனைக்கொத்துவதுபோல் விரைந்து பகைவனைத் தாக்குதல் வேண்டும் எனக் குறித்து நிற்கும். இதனை விளக்கும் திருக்குறள்,

''கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்

குத்தொக்க சீர்த்த இடத்து'' ( குறள்: 490 )

என்பதாய் அமையும். மூதுரையும்

''ஓடுமீ னோட யுறுமீன் வருமளவும் -

வாடி யிருக்குமாங் கொக்கு'' [55]

எனக் காலம் அறிந்து செயலாற்றலின் சிறப்பினைக் குறிப்பிடும். திருவிவிலியமும் காலம் அறிந்து செயலாற்றலின் மேன்மையை,

''அன்புக்கு ஒருகாலம், வெறுப்புக்கு ஒரு காலம், போருக்கு ஒரு காலம் அமைதிக்கு ஒரு காலம்''

( சபை:3: 8)

''குறித்த காலத்திற்கு முன்பே உங்கள் பணிகளைச் செய்து முடியுங்கள், அவ்வாறாயின் குறித்த காலத்தில் கடவுள் உங்களுக்குப் பரிசு வழங்குவார்'' (சீராக்: 51: 30)

என எடுத்துரைக்கின்றது.

**தொகுப்புரை:**

- சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது.இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம். சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது. ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கின்றது.

- சமுதாயம் என்பதன் விளக்கம், சமுதாய குறித்த வரையறை, சமுதாயச் சிந்தனை கட்டமைப்பு, சமூகநேயத்தை வளர்த்தெடுக்கும் இறையுணர்வைக் கைக்கொள்ளல், வான்சிறப்பாய் அமையும் மழையினைப் போற்றல், நீத்தார் மேன்மையை அறிந்து ஒழுகல், சமூக அறம் பேணலில் நடுவுநிலைமை பெறும் இடம், அவா அறுத்து சமூக அறம் பேணல், உலக உயிர்களின் நன்மை பேணும் அருளுடைமையைப் பின்பற்றலின் சிறப்பு போன்ற சமூக அறங்களைப் பின்பற்றுதலின் இன்றியமையாமையை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் முன்மொழிந்து நிற்பதனை ஆய்வின் வழி அறிய முடிகின்றது.

➢ உலக உயிர்களின் பசியினையும் வறுமையினையும் களையும் ஈதலறத்தை மேற்கொள்ளல், சமூக அறத்தினைச் சிதைக்கும் கூடா ஒழுக்கத்தினை நீக்கி வாழ்தல், சமூக மேம்பாட்டிற்கு உறுதுணையாய் அமையும் செய்நன்றி அறிதலை பின்பற்றல், மெய்யுணர்தலின் மேன்மை, வெ∴காமை என்னும் சமூக அறம், தவத்தால் விளையும் சமூக விழுமியங்கள், ஊழ்வினை, நிலையாமையை மனிதன் உணர்வதன் வழித் தன்னலம் துறந்து சமூகநலம் பேண விழைதல் போன்றவற்றை வலியுறுத்துவதில் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்தமைவதனை ஆய்வானது வெளிப்படுத்துகின்றது.

➢ அஞ்சாமை, அல்லல் நீக்கல், அளிஉடைமை, அறன் இழுக்காமை, அறிவுடைமை, ஆள்வினையுடைமை, இடுக்கண் அழியாமை, இன்சொலுடைமை, ஈகையுடைமை, ஊக்கமுடைமை, கடுஞ்சொல் உரையாடாமை, காட்சிக்கு எளிமையுடைமை, தூங்காமை, பெண்வழிச் சேராமை, பொச்சாமை, மடியின்மை, மறன் இழுக்கா மானம் உடைமை, குற்றம் கடிதல், காலம் அறிதல் ஆகிய அரசனின் கடமைகள் போன்ற அறவிழுமியங்களை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்கும் தன்மையானது ஆய்வின் மூலம் வெளிப்பட்டு நிற்கிறது.

## சான்றெண் விளக்கம்


1. தி.சு. நடராசன், திறனாய்வுக் கொள்கைகள் ப. 75
2. மா.இராமலிங்கம், புனைகதை வளம், ப. 9
3. கா. ஜோசப் கலியபெருமாள், பல்துறைக் கட்டுரைகள் ப. 60
4. மு. வரதராசனார், இலக்கிய மரபு, ப. 105
5. Cambridge International Dictionary of English – p. 1370
6. மேற்கோள் ஏ.ஆ.வாடியா, குடியாட்சியும் சமுதாயமும் ப. 164
7. எஸ்.கே. பாஸ்கல் கில்பர்ட் - ஜெ. நாராயணன், (மொழிபெயர்ப்பு ஆசிரியர் – சமுகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப. 159 )
8. கழகப் புலவர் குழு, கழகத்தமிழ் அகராதி – ப. 420
9. தமிழ்மொழி அகராதி, ப - 761 )
10. சு. இன்னாசி ( ப. ஆ ) சமயமும் சமுதாயமும், ப. 12
11. J.S. Meckenzi – Out lies of social Philosophy p- 6
12. க.ப. அறவாணன், படைப்பாளி + சமுதாயம் = இலக்கியம், ப. 138
13. ஏங்கல்ஸ், குடும்பம், தனிச்சொத்து,அரசு ஆகியவற்றின் தோற்றம் ப. 90

14. முகிலை இராசபாண்டியன், பாரதி உரைநடையில் சமுதாயம், ப.15 – 16
15. Encycloppedia Volume III P- 120
16. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப. 148
17. ப. கிருஷ்ணசாமி ( தொ. ஆ ) ஜெயகாந்தன் இலக்கியத் தடம் : ப. 249
18. அ.ச. ஞானசம்பந்தம், பெரியபுராணம்- ஓர் ஆய்வு, ப.245
19. திருமந்: 539
20. தாயுமானவர், பரிபூரணானந்தம் பா. 2
21. திருமந்: பா. 2615
22. திருவாசகம், திருப்பூவல்லி பா. 10
23. அழகரடிகள்,திருக்குறள் அறம், ப.220
24. மணி: பவத்திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை: அடி: 91
25. திருவாய்: 78-6
26. பரிமேலழகர் குறள், அருளுடைமை அதிகார விளக்கம்
27. கு. மோகனராசு, வாழ்வியல் சிக்கல்களும் தீர்வுகளும் ப. 120
28. கலி, குறிஞ்சிக்கலி, பா -61
29. புறம்: பா. 204
30. சிந்தா: முக்தி இலம்பகம், பா. 27
31. திருக்கோவையார்:பா. 322
32. சிந்தா: முக்தி இலம்பகம், பா. 244
33. குன்றக்குடி அடிகளார் – திருவள்ளுவர் காட்டும் அரசியல் ப. 103
34. பரிமேலழகர், குறள், மெய்யுணர்தல் அதிகார விளக்கம்
35. அழகரடிகள்:திருக்குறள் அறம் ப.32
36. திருமந்: 1514
37. பட்டினத்தார்: அடிகள் 206 – 207
38. பரிமேலழகர், குறள், தவம் அதிகார விளக்கம்
39. புறம், பா. பா.246
40. பரிமேலழகர், குறள் 361 இன் உரை
41. பரிமேலழகர், குறள் தவம் அதிகார விளக்கம்
42. புறம்: பா. 192
43. தொல். பொருள்: நூ. 78
44. நச்சர், மதுரை, உரை ப. 4
45. மணி: உதயகுமாரன் அம்பலம் புக்க காதை: அடிகள்: 113-130
46. மேலது, சக்கரவாளக்கோட்டம் உரைத்த காதை: 101 -104

47. மு. வரதராசனார், முன்னுரை அறமும் அரசியலும் ப. 1
48. மு. முருகரத்தினம், குறள் கூறும் இறைமாட்சி ப. 52
49. மு. வரதரசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம் பக். 95 – 96
50. சிலம்பு, மதுரைக் காண்டம், அடிகள்: 11:60 – 45
51. மணி: துயில் எழுப்பிய காதை: அடிகள்: 8 - 10
52. புறம்: பா. 5: 3- 8
53. காஞ்சிப்பு. திருமேற். பா.6
54. கம்பர், கார்முகப் படலம், பா, 26
55. மூதுரை பா. 16.

## முடிவுரை

**"அற இலக்கியமும் திருவிவிலியமும் (அற விழுமிய நோக்கு )"** என்னும் தலைப்பிலான இவ் ஆய்வின் வழி, பெறப்பட்ட முடிவுகள் கீழ்க்கண்டவாறு தொகுத்துத் தரப்படுகின்றன.

- தமிழ் அற நூல்களுள் தலைமைத்தன்மை உடையதாய்ப் போற்றப்படுவது திருக்குறள் ஆகும். இதன் ஆசிரியர் திருவள்ளுவர் என்பவர் ஆவார். வள்ளுவன் என்பான், அரசனின் கட்டளையைப் முரசறைந்து அறிவிப்பவன் என்பதைப் பெருங்கதையும் வள்ளுவன் என்பவன் அரசர்க்கு உள்படு கருமத்தலைவனாய் விளங்குபவன் என்பதனைப் பிங்கல நிகண்டும் வள்ளுவன் என்பவன் புள்ளுவன் (நிமித்திகன்) என்று சீவகசிந்தாமணியும் உரைப்பதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

- 'வள்' என்னும் அடிச்சொல்லிற்கு அமைந்த பலபொருள்களுள் கூர்மை, வலிமை, வண்மை என்பதும் அமைகின்றது. எனவே 'வள்ளுவன்' என்னும் சொல்லிற்குக் கூர்மதியன், வல்லவன், வள்ளியோன் என்று முப்பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்தாய் அமையும் என்பதனை அறிய முடிகின்றது.

- திருவள்ளுவர் காலத்தினைத் திட்டமிட்டு உரைக்க இயலாதெனினும் தொல்காப்பியர் காலத்திற்கும் கடைச்சங்க காலத்திற்கும் இடைப்பட்டதென்பதற்குப் புறநானூறு, பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்றவற்றில் காணப்படும் திருக்குறள் கருத்துகளின் பயன்பாடு சான்றாதாரங்களாக அமைகின்றன என்பது வெளிப்போந்து நிற்கின்றது.

- பயனில் சொல் பகர்வானைப் பதடி எனப் பழித்துரைக்கும் திருவள்ளுவர், சொற்சுருக்கம் பற்றியும் பாக்களுள் சிறந்த வகை என்பது பற்றியும் குறள் வெண்பாவையே தம் நூற்கான பாவகையாக எடுத்துக் கொண்டார் என்பது ஆய்வின்வழி வெளிப்படுகிறது.

- திருக்குறளுக்கு அடுத்த இடத்தில் வைத்து எண்ணப்படுவது நாலடியார். நாலடி வெண்பாக்கள் கொண்ட நீதி நூல்கள் வேறு பல உண்டு. எனினும், இதன் சிறப்புக் கருதி இதனை மட்டும் 'நாலடி' என்று வழங்கினர். மேலும் 'ஆர்' விகுதி சேர்த்து நாலடியார் எனப்பட்டது. நானூறு வெண்பாக்கள் உடைமையால் 'நாலடி நானூறு' என்றும் வழங்கப்படுகிறது. இதற்கு 'வேளாண் வேதம்' என்ற பெயரும் உண்டு என்பது ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

- பழமொழி நானூற்றின் ஆசிரியர் முன்றுறை அரையனார் சமண சமயத்தினர் என்பது நூலின் தற்சிறப்புப் பாயிரத்தில் வழி வெளிப்பட்டு நிற்கின்றது. இந்நூலில் 34 தலைப்புகளின் கீழ் பாடல்கள் அமைந்துள்ளன என்பதும் தெரிய வருகின்றது. மேலும் தூங்கெயில் எறிந்த தொடித்தோட் செம்பியன், மனு நீதி கண்ட சோழன், பொற்கைப் பாண்டியன், வள்ளல் பாரி, பேகன், பாரி மகளிர், கரிகால் சோழன், சேரன் செங்குட்டுவன் போன்ற மன்னர்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுவதனை ஆய்வானது வெளிப்படுத்தி நிற்கின்றது.

- திரிகடுகம் என்ற மருந்தில் அடங்கியுள்ள சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று காரப் பொருள்கள் போன்ற மூன்று அறக்கருத்துகளை ஒவ்வொரு பாடலும் கூறுவதால் இப்பெயர் பெற்றது என்பதும் இதனுள் கடவுள் வாழ்த்தோடு சேர்ந்து 101 வெண்பாக்கள் அமைந்துள்ளன என்பதும் வெளிப்படுகின்றது. நான்கு உயர்ந்த மணிகளால் ஆன அணிகலன் போல ஒவ்வொரு பாட்டிலும் நான்கு அரிய உண்மைகளைத் தொகுத்துக் கூறும் வெண்பாக்களைக் கொண்ட நூல் நான்மணிக்கடிகை. கடவுள் வாழ்த்து இரண்டு உட்பட, இதில் 104 செய்யுட்கள் உள்ளன என்பதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

- சிறுபஞ்சமூலம், சிறுவழுதுணை, நெருஞ்சி, சிறுமல்லி, பெருமல்லி, கண்டங்கத்திரி என்னும் வேர்கள் உடற்பிணியைப் போக்கி நலம் செய்வது போல, மக்களின் உயிர்ப்பிணியாகிய

அறியாமையைப் போக்கி அதன் ஈடேற்றத்திற்கு உதவும் அரிய பெரிய உண்மைகளை ஐந்து ஐந்தாகச் செய்யுள்தோறும் உரைக்கும் நூல் என்பதும் இதனுள் சிறப்புப்பாயிரங்கள் இரண்டும் 104 வெண்பாக்களும் அமைந்துள்ளன என்பதும் வெளிப்பட்டு நிற்கின்றது.

❖ ஏலம், இலவங்கம், நாக கேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு பொருள்களையும் கொண்ட ˙மருந்து போல, ஒவ்வொரு செய்யுளாலும் ஆறு அரிய அறக்கருத்துகளைக் கொண்ட 80 வெண்பாக்களால் ஆன நூல் ஏலாதி என்பதும் இதன் ஆசிரியர் கணிமேதாவியார் என்பதும் ஆய்வின்வழி வெளிப்படுகின்றது. இன்னா நாற்பது கடவுள் வாழ்த்து உள்பட 41 வெண்பாக்களைக் கொண்ட அறநூல் ஆகும். இதிலுள்ள ஒவ்வொரு பாட்டும் இன்னது இன்னது துன்பம் தருவது என்று கூறுவதால் இன்னா நாற்பது என்று பெயர் பெற்றது. இந்நூல் தொல்காப்பியர் கூறும் அம்மை என்னும் வனப்பைச் சார்ந்ததாகும் என்னும் கருத்து வெளிப்போந்து நிற்கின்றது.

❖ வாழ்விற்கு நன்மை தரும் இனிய அறக்கருத்துகளைக் கூறும் நாற்பது வெண்பாக்களைக் கொண்ட நூல் இனியவை நாற்பதாயிற்று. இதன் கடவுள் வாழ்த்தில் சிவபெருமானும், திருமாலும், நான்முகனான பிரம்ம தேவனும் வாழ்த்தப்படுகின்றனர். இந்நூலின் 1, 3, 4, 5 என்னும் நான்கு பாடல்கள் மட்டும் நான்கு இனிய பொருள்களைக் கூறுகின்றன. ஏனையவற்றில் மும்மூன்று கருத்துகளே கூறப்பட்டுள்ளன.இந்நூலின் ஆசிரியர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் என்பதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

❖ காஞ்சி என்பது தொல்காப்பியத்தில் காட்டப்படும் புறத்துறை ஆகும். இதற்கு ‘கழிந்தோர் ஒழிந்தோர்க்குப் காட்டிய முறைமை’ என்பதாகப் பொருள் விளக்கப்படுகின்றது. பலர் புகழ் புலவர் பன்னினர் தெரியும் உலகியல் பொருள் முடிவு உணரக் கூறின்று என்பது புறப்பொருள் வெண்பாமாலையில் இடம்பெறும் முதுமொழிக்காஞ்சித் துறைக்கு உரிய விளக்கமாய் அமைகின்றது.இத்துறையின் பெயரில் அமைந்துள்ள முதுமொழிக்காஞ்சி என்னும் நூலின் ஆசிரியர் மதுரைக் கூடலூர்கிழார் ஆவார். இதன் ஒவ்வொரு பதிகமும் ‘ஆர்கலி உலகத்து மக்கட்கு எல்லாம்’ என்னும் தரவு அடியோடு தொடங்குகின்றது. அடுத்து ஓரடிப் பாடல்கள் பத்து ஒவ்வொன்றிலும் தாழிசை போல அடுக்கி வருகின்றன. 18 நூல்களின் தொகுப்பான பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என அழைக்கப்படும் தமிழ் நூல் தொகுதியில் மிகச் சிறியது இந்நூலாகும் என்னும் கருத்து வெளிப்படுகின்றது.

❖ ‘ஆசாரம்’ என்னும் வடசொல் ஒழுக்கம் என்று பொருள்படுவதாகும். நல்லொழுக்கக் கோட்பாடுகளைத் தொகுத்துக் கோவையாகத் தருவதனால் இந்நூல் ஆசாரக்கோவை எனப் பெயர் பெற்றது. சிறப்புப் பாயிரம் நீங்கலாக இதில் நூறு வெண்பாக்கள் உள்ளன. வெண்பா வகையில் குறள், சிந்தியல், நேரிசை, இன்னிசை, ப∴றொடை ஆகிய பல

வகையும் இதில் உள்ளன. இதன் ஆசிரியர் கயத்தூர்ப் பெருவாயில் முள்ளியார் என்பவராவார் என்னும் கருத்தானது அறிய வருகின்றது.

❖ இயேசு பிறந்த நிகழ்ச்சியை விவரிக்கும் நற்செய்தி நூல்கள் யோசேப்பும் மரியாவும் அப்போது யூதேயாவை ஆண்ட அகஸ்து சீசர் என்னும் அரசன் இட்ட கட்டளைக்கு ஏற்ப, யோசேப்பு தமக்கு மண ஒப்பந்தமான மரியாவைக் கூட்டிக்கொண்டு நாசரேத்திலிருந்து தம் சொந்த ஊரான பெத்லகேமுக்குப் பெயர் பதிவுசெய்யச் சென்றபொழுது மரியா இயேசுவை ஒரு மாட்டுத் தொழுவத்தில் பெற்றெடுத்தார் என இயேசுவின் பிறப்பினைக் குறித்துத் தெரிவிப்பதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

❖ இயேசு தனது முப்பதாம் வயதில் யோர்தான் ஆற்றின் அருகே வந்து, அங்கே திருமுழுக்குக் கொடுத்துக் கொண்டிருந்த யோவானிடம் தாமும் திருமுழுக்குப் பெற்றார். ஆற்றிலிருந்து இயேசு கரையேறியபோது தூய ஆவி அவர்மீது புறா வடிவில் வந்திறங்கியது. திருமுழுக்குப் பெற்ற பின்னர் இயேசு பாலைநிலத்துக்குச் சென்று 40 நாள்கள் நோன்பிருந்தார். அப்போது அலகை அவரை மூன்று முறை சோதித்தது. மூன்று முறையும் இயேசு வென்றார். இறைத்தன்மையுடன் விளங்கிய அவர் தான் கடவுளின் மகன் என்பதை தன்னுடைய போதனைகளில் வெளிப்படையாகவே அறிவித்தார். இறைத்தன்மையை வெளிக்காட்டும் விதமாக நோய்களைக் குணமாக்குதல், பேய்களை ஓட்டுதல், இறந்தோரை உயிர்த்தெழச் செய்தல் என ஏராளமான புதுமைகளை மக்களிடையே நிறைவேற்றினார் என்பன போன்ற செய்திகள் மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் போன்ற நூல்களின் மூலம் வெளிப்பட்டு நிற்பதனை அறிய முடிகின்றது.

❖ தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பட்டு புனித நூல்கள் என அங்கீகரிக்கப்பட்டுள்ள எழுபத்து மூன்று நூல்களின் தொகுப்பே ‘திருவிவிலியம்’ என்று அழைக்கப்படுகின்றது. திருவிவிலியத்தில் உள்ள நூல்களை மனிதர்கள் எழுதினர் என்றாலும் அவை தூய ஆவியின் ஏவுதலால் எழுதப்பெற்றவை என்றே குறிப்பிடப்படுவதனை ஆய்வானது வெளிப்படுத்துகின்றது. எகிப்தில் உள்ள நைல் நதிக்கரையில் வளர்ந்த ‘பப்ரைஸ்’ என்னும் ஒருவகை நாணற் புற்களிலிருந்து தயாரிக்கப்பட்ட காகிதத்தில் எழுதப்பட்ட நூல்கள் யாவும் கிரேக்கத்தில் ‘பிபிலியா’ என அழைக்கப்பட்டன. இந்த கிரேக்க மூலச்சொல்லே பைபிள் என ஆங்கிலத்திலும் விவிலியம் எனத் தமிழிலும் வழங்கப்படலாயிற்று என்பது ஆய்வின்வழி வெளிப்படுகிறது.

❖ திருவிவிலியத்தில் உள்ள படைப்புகள் முதலில் சிறுசிறு பாடல்கள் கதை வடிவில் உருவாகி வாய்மொழியாகவே பின் வந்த தலைமுறையினருக்கு கற்பிக்கப்பெற்று வந்தன. மேலும் சமூக மற்றும் நாட்டு உணர்வுகளுடன் உருவான கதைகள் பாடல்கள்

படிப்படியாகச் சமயச் சார்பற்ற பொருள் பெற்றன. பின்னாளில் சிறுசிறு எழுத்தோவியங்கள் உருவாயின. முக்கியமாக சாலமோன் காலத்திலிருந்து எழுத்துப் படையல்கள் உருவாயின.பின் சிறுசிறு ஏடுகள் தொகுக்கப்பெற்று பாரம்பரியங்கள் ஆயின. திருவிவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் இடம்பெறும் இறைவாக்குகளுள் ஆமோஸ் உரைத்த தூதுரையே முதலில் எழுத்து வடிவம் பெற்றதாகும். புதிய ஏற்பாட்டில் பவுல் தெசலோனிக்கருக்கு எழுதிய முதல் திருமுகம் கி.பி 51 இல் முதலில் எழுதப்பெற்றது என்பதும் ஆய்வின்வழி வெளிப்பட்டு நிற்கின்றது.

❖ புதிய ஏற்பாட்டைப் பொறுத்தவரையில் கான்டர்பரி பேராயர் ஸ்டீபன் லாங்டன் என்பவர் புதிய ஏற்பாட்டின் அதிகாரங்களைப் பிரித்தார். கி. பி. 1550 இல் பிரான்சு அச்சுவல்லுநர் இராபர்ட் ஸ்டீபன் புதிய ஏற்பாடு நூலின் வசனங்களை உருவாக்கினார், பழைய ஏற்பாட்டைப் பொறுத்த வரையில் கி.பி 1440 இல் இராபி நாத்தான் என்பவர்தான் அதிகாரங்கள் மற்றும் வசனங்களை உருவாக்கினார். இவர்கள் உருவாக்கிய அதிகாரப் பிரிவுகள் நூற்றுக்குநூறு சரியானவை என்று சொல்லமுடியாது. சில நீளமாகவும் சில சிறியதாகவும் உள்ளன. சில அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் மையக்கருத்து அடுத்த அதிகாரங்கள் மற்றும் வசனங்களில் முடிகிறது என்பன போன்ற செய்திகளை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

❖ திருவிவிலியத்தின் முதல் ஐந்து நூல்கள் ஒரே தொகுதியாக உள்ளன. எனினும் இவை யாவே மரபு, எலோகிம் மரபு, இணைச்சட்ட மரபு, குருக்கள் மரபு என்னும் நான்கு மரபுகளின் வழியாக வந்தவை என்பதனை அறிய முடிகின்றது.

❖ திருவிவிலியமானது பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்னும் இருபெரும் பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டமைந்ததாகும். பழைய ஏற்பாட்டில் நாற்பத்தாறு நூல்களும் புதிய ஏற்பாட்டில் இருபத்தேழு நூல்களும் உள்ளன. பழைய ஏற்பாட்டைப் பொறுத்தவரை சீர்திருத்த சபையாருக்கும் கத்தோலிக்கக் கிறித்தவர்களுக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன. சீர்திருத்தச் சபையார்கள் பழைய ஏற்பாட்டில் இடம்பெற்றுள்ள நாற்பத்தாறு நூல்களுள் தோபித்து, யூதித்து,பாருக்கு, சீராக்கின் ஞானம், சாலமோனின் ஞானம், 1மக்கபேயர், 2. மக்கபேயர் என்னும் ஏழுநூல்களை நீக்கி ஏனைய முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே ஏற்றுக் கொள்கின்றனர். இதற்குக் காரணம் பாலஸ்தீனத்தில் உள்ள யூதர்கள் எபிரேய மொழியில் அமைந்த முப்பத்தொன்பது நூல்களை மட்டுமே பழைய ஏற்பாடாக ஏற்றனர். பாலஸ்தீனத்திற்கு வெளியே உள்ள யூதர்கள் கிரேக்க மொழிபெயர்ப்பான செப்துவசிந்து நூலில் காணப்படும் நாற்பத்தாறு நூல்களைப் பழைய ஏற்பாடாக ஏற்றனர் என்பதாகும். காலப்போக்கில் கத்தோலிக்கக் கிறித்தவர்களும் பழைய ஏற்பாட்டில் கிரேக்க யூதர்களைப் பின்பற்றினர்.ஆனால் தூய

ஆவியின் ஏற்பாட்டால் எழுதப்பெற்ற இந்நூல்களை காலம், இடம், மொழி என்னும் எல்லைக்கு உட்படுத்தக் கூடாது எனக் கூறிய ஆதித்திருச்சபை அவ் ஏழு புத்தகங்களையும் ஏற்றுக் கொண்டது என்பதனை ஆய்வானது வெளிப்படுத்தி நிற்கின்றது.

❖ பழைய ஏற்பாடு கிறித்துவின் வருகைக்கு முன் முழுமையாகத் தொகுக்கப்பெற்றவை ஆகும். இவை பொருளடக்கம்,அவற்றின் இலக்கியச் சொற்றொடர் அமைப்பு, போன்றவற்றை அடிப்படையாக வைத்து நான்கு வகையானதாகப் பிரிக்கப்படுகின்றன. திருச்சட்ட நூல்கள் எனப்படுவன தொடக்க நூல், விடுதலைப் பயணம், லேவியர், எண்ணிக்கை; இணைச் சட்டம் என்பன ஆகும். வரலாற்று நூல்கள் எனப்படுபவை யோசுவா; நீதித் தலைவர்கள்; ரூத்து; 1 சாமுவேல்; 2 சாமுவேல்; 1 அரசர்கள்; 2 அரசர்கள்; 1 குறிப்பேடு; 2 குறிப்பேடு, எஸ்ரா, நெகேமியா, தோபித்து, யூதித்து, எஸ்தர்; 1 மக்கபேயர்; 2 மக்கபேயர் என்பனவாகும். யோபு; திருப்பாடல்கள்; நீதிமொழிகள்; சபை உரையாளர்; இனிமைமிகு பாடல்; சாலமோனின் ஞானம்; சீராக்கின் ஞானம் என்பன ஞானநூல்கள் எனப்பட்டன. இறைவாக்கு நூல்கள் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. எசாயா; எரேமியா; பாரூக்கு; புலம்பல்; எசேக்கியேல்; தானியேல் போன்றன பெரிய இறைவாக்கினர் என்றும் ஓசேயா; யோவேல்; ஆமோஸ்; ஒபதியா; யோனா; மீக்கா; நாகூம்; அபக்கூக்கு; செப்பனியா; ஆகாய்; செக்கரியா; மலாக்கி என்பன சிறிய இறைவாக்கினர் என்றும் அழைக்கப்பட்டன என்பது தெரியவருகின்றது.

❖ புதிய ஏற்பாடு (New Testament) என்பது கிறித்தவர்களின் புனித நூலான விவிலியத்தின் இரண்டாவது பகுதியாகும். முதல் பகுதி பழைய ஏற்பாடு (OLD Testament) என்று அழைக்கப்படுகிறது. ஏற்பாடு என்னும் சொல் ‘உடன்படிக்கை’, ‘ஒப்பந்தம்’ என்று பொருள்படும். கடவுள் தொடக்கத்தில் தமக்கென ஒரு மக்களினத்தைத் தெரிந்துகொண்டு, அவர்களுக்குத் தாம் கடவுளாக இருப்பதாகவும், அவர்கள் தமக்கு நெருக்கமான மக்களாக வாழ்ந்து, தம் கட்டளைகளைக் கடைப்பிடித்து ஒழுக வேண்டும் என்றும் அவர்களோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார் என்று யூத மக்களும் கிறித்தவ மக்களும் நம்புகின்றனர். இந்த ஒப்பந்தத்தைக் கிறித்தவர்கள் ‘பழைய உடன்படிக்கை’ என்று அழைக்கின்றனர். யூதர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டதும், கிறித்துவின் காலத்திற்கு முற்பட்டதுமான புனித நூல் தொகுப்பைக் கிறித்தவர் பழைய ஏற்பாடு என்பர். கிறித்துவின் காலத்திலும் அவர் இறந்த ஒரு நூற்றாண்டுக்குள்ளும் எழுதப்பட்ட புனித நூல்தொகுப்பு ‘புதிய ஏற்பாடு’ என்று வழங்கப்படுகிறது.

❖ பழைய ஏற்பாட்டைப் போலவே புதிய ஏற்பாடும் பல நூல்கள் அடங்கிய தொகுப்பு ஆகும். இது பல எழுத்தாளர்களாலும் குழுக்களாலும் கி.பி. 45க்குப் பின்னும் கி.பி. 140க்கு

முன்னும் எழுதப்பட்டு சிறுகச் சிறுக சில நூற்றாண்டுகளாக ஒன்று சேர்க்கப்பட்டு, கிறித்தவ திருச்சபையால் அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டது. கி.பி. 397 இல் கார்த்தேசு நகரில் நடந்த சங்கத்திலும், பின்னர் திரெந்து சங்கத்திலும் (கி.பி. 1546) இவை விவிலியத் திருமுறை நூல்களாக அதிகாரப்பூர்வமாக ஏற்கப்பட்டன என்பது தெரிய வருகின்றது.

❖ புதிய ஏற்பாட்டின் மூல பாடம் ‘செப்துவசிந்து’ என்னும் கிரேக்க விவிலியத்தில் உள்ளது. தொடக்க காலத்தில் விவிலியம் இலத்தீன் மொழியில் பெயர்க்கப்பட்டது என்பது ஆய்வின் வழி அறிய வருகின்றது.

❖ ஒரு தனிமனிதன் சீர்குலைகின்ற போது அதன் தொடர்வினையாகப் பல்வேறுபட்ட தனிமனிதர்கள் சீர்குலைந்து போகின்றனர்.சமூக உறவுகள் பாதிப்புறுகின்றன.தனிமனிதக் கூறுகளின் அசைவுகளுக்கு ஏற்பச் சமூகமும் இயங்கிக்கொண்டிருக்கின்றது. அது ஒரு உயிர்வாசி இல்லை என்றாலும் அதற்கும் இயக்கம் உண்டு.அதன் இயக்கத்தில் கண்ணுக்குத் தெரியாத அசைவுகள் இருக்கும்.இந்த அசைவுகளை, இயக்கங்களைத் தீர்மானிப்பது தனிமனிதன். எனவே தனிமனித அறம் என்பது இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது.

❖ மனித வாழ்க்கையானது அதனால் ஆகிய ஆக்கத்தினைப் பெற்றுச் சிறப்பதற்கே அமைந்ததாகும்.எனவே மனிதர்கள் தம் வாழ்நாளில் தன் பிறப்பிற்கான ஆக்கத்தினைத் தேடிச் செயல்களை இயற்றல் வேண்டும். அத்தகைய ஆக்கம் அமையும் திறமானது அறத்தால் அன்றிப் பிறதொன்றினால் இல்லை. அதனின் மறுதலையாய் ஒருவர் அறத்தினைப் பேணாது வாழ்வராயின் அதனினும் கேடு பயப்பதும் பிறிதொன்றும் இல்லை. எனவே மறந்தும் அறம் செய்தலை நீங்காமை வேண்டும் என்பது தமிழ் அற இலக்கியங்கள் முன்மொழியும் செய்தியாகும். இத்தகைய கருத்தினையே திருவிவிலியமும் நன்மை செய்வதில் நீங்கள் ஆர்வமுடையவராய் இருந்தால் உங்களுக்குத் தீமை செய்யப் போகிறவர் யாரும் இல்லை, கைகளில் தூய்மை உள்ளவனும் இதயத்தில் மாசு இல்லாதவனுமாய் இருந்து மனிதன் பயனுற வேண்டும் என வலியுறுத்தி நிற்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ அடக்கமுடைமை என்னும் நல்லறமானது மெய், மொழி, மனம் போன்றன தீநெறிக்கண் செல்லாது அடங்குதல் ஆகிய தன்மை ஆகும் என அற இலக்கியங்கள் குறிக்கின்றன. இத்தகைய பண்பானது நடுவுநிலைமை உடையாருக்கே அமையும் எனவும் சுட்டப்படுகின்றது. மேலும் மனிதனை ஆசை என்னும் வலையினுள் வீழ்த்தி அழிக்கும் ஆற்றல் பெற்றவையாய்ப் புலனின்பங்கள் அமைதலின் மனிதன் பெற்று உயர வேண்டிய

உடைமைகளுள் ஒன்றாய்ப் புலனடக்கம் என்பதனைத் தமிழ் அற இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்துகின்றன. தமிழ் அற இலக்கியங்களால் வலியுறுத்தப்படும் இத்தகைய புலனடக்கத்தினை திருவிவிலியம் கண், மனம், நா ஆகியவற்றின் ஆசைகளை அவித்தல் வேண்டும் என உணர்த்தும் அறவுரைகளோடு ஒப்புநோக்கி உணரமுடிகின்றது.

❖ ஓர் அறிவுடையன உயிர்கள் முதலாக ஐயறிவு உடைய உயிர்கள் ஈறாக கொல்லுதலைச் செய்யாமையே ‘கொல்லாமை’ என்று குறிக்கப்படுவதாகும். இத்தகைய கொல்லாமை என்னும் உயர்நெறியைத் தமிழ் அற இலக்கியங்கள் பெரிதும் போற்றுகின்றன. கொல்லாமை என்பது கொல்வதன் எதிர்ப்பதம் அன்று, கொல்லாமை என்பது அறங்களின் தொகுப்பு ஆகும். உடலாலும், மனத்தாலும். மொழியாலும் பிற உயிர்களுக்கு யாதொரு துன்பமும் செய்யாமையே கொல்லாமை என்னும் விழுமியத்தின் அடிப்படை ஆகும் என அற இலக்கியங்கள் வலியுறுத்துவதனை அறிய முடிகின்றது. திருவிவிலியமும் கொலைச்செயலைக் கடிவதுடன் கொலை செய்தவர் எவரும் தண்டனைத் தீர்ப்பிற்கு ஆளாவார் எனவும் அறவுரை பகர்கின்றது.

❖ தமிழ் அற இலக்கியங்களால் வலியுறுத்தப்படும் தனிமனித அறங்களுள் இன்றியமையாத ஒன்றாய்ப் பொறையுடைமை அமைகின்றது. பொறையுடைமை என்பது ஒருவன் தன்னால் வெல்ல இயலாத வலிமை உடையவன் மாட்டுப் பொறுமையுடையவனாய் இருத்தல் என்பதன்று. தன்னினும் எளியோர் மாட்டும் பொறுமை உடையவனாய் இருத்தலே ஆகும் எனத் தமிழ் அற இலக்கியங்கள் வரையறை தருவதுடன் மனிதன் அவற்றைத் தன் வாழ்வில் கொண்டொழுகல் வேண்டும் என்றும் வலியுறுத்துகின்றன. இத்தகைய பொறையுடைமை திருவிவிலிய வசனங்களின் வழியும் இன்னல் செய்தாரையும் மன்னியும் என்று இறைவனிடம் மன்றாடிய இயேசுவின் வாழ்க்கை வழியும் வலியுறுத்தப்படுவதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ பயனில சொல்லாமை என்பது தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை என்பதாகும். ஆக்கமும் கேடும் சொல்லினால் வருதலால் காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு எனக் குறிக்கும் அற இலக்கியங்கள் சொல்லின்கண் வரும் சோர்வாகிய பயனில சொல்லுதலை நீக்கல் வேண்டும் என வலியுறுத்திப் பேசுகின்றன.திருவிவிலியமும் மனிதர்கள் பேசும் ஒவ்வொரு வீண் வார்த்தைக்கும் தீர்ப்புநாளில் கணக்குக் கொடுக்க வேண்டும், பொன்னையும் முத்துக்களையும் விட அறிவுயர்ந்த பேச்சே விலையுயர்ந்த அணிகலன், என்றெல்லாம் அறிவுறுத்தி பயனிலசொல்லாமையை நீக்குதல் வேண்டும் எனக் குறித்து நிற்கிறது என்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ மனிதன் பொய் சொல்லல், ஊனுண்ணல், கள்ளுண்ணல், போன்றவற்றை ஒழித்து, தீய செயல்களைச் செய்யாமலும் சிறியாரது கூட்டத்தைச் சேராமலும் பிறரை பழிக்காமலும் இருப்பானாகில் அவனுக்கு,அறிவைத் தரும் நூல்கள், தேவையில்லை எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. மேலும் ஒருவன் பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணாது இருத்தல் வேண்டும். அதனை விடுத்து எண்ணுவானாயின், அவனுக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும் என எடுத்துரைத்துத் தீயனவற்றைச் செய்வதற்கு அஞ்சுதல் வேண்டும் எனவும் அறிவுறுத்துகின்றன. திருவிவிலியமும் மனிதர் தீமைகளைச் செய்து விட்டுத் தப்பித்தல் இயலாது என்றும் நல்லது செய்பவரே நாட்டில் நிலைத்திருப்பர் என்றும் அறிவுரை பகர்கின்றது. திருவிவிலியத்தின் இத்தகைய அறிவுரைகள் தமிழ் அறஇலக்கியங்கள் உணர்த்தும் அறிவுரைகளோடு ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

❖ அன்பே மனித அறங்களுக்கு எல்லாம் அடிப்படை என்றும் அன்பில்லாத உடல் என்புதோல் போர்த்ததற்குச் சமம் என்றும் உள்ளத்தில் அன்பில்லாத உயிர்வாழ்க்கை வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று என்பதற்குச் சமம் என்றும் தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. திருவிவிலியமும் மனிதன் என்பவன் மனிதர்களின் மொழிகளையும் இறைவனின் மொழிகளையும் பேசினாலும் அன்பு இல்லாவிட்டால் ஒலிக்கும் வெண்கலமும் ஓசையிடும் தாளமும் போலவும் இருப்பர் என்று வலியுறுத்தி நிற்பதனைக் காணமுடிகிறது.

❖ தமிழ் அற இலக்கியங்கள் பிறன் பொருளைக் கவர்தலாகிய குற்றத்தினைத் தம் நெஞ்சால் கருதுதலும் கூட பாவம் நிறைந்த செயலாகும் என வலியுறுத்துகின்றன. மேலும் பிறர் மனையாளை நயத்தல், கள்ளுண்ணல், சூதாடுதல், கொலை செய்தல் போன்றன எத்தகைய தீநெறியைத் தருமோ அதனைப் போன்று பிறன் பொருளைக் கவர்தலாகிய செயலும் தீய நெறிச் சேர்த்து விடும் என்றும் குறிப்பிடுகின்றன. மேலும் அறனறிந்தவர்கள் மனத்தாலும் இத்தகைய செயல்களைச் செய்யக் கருதமாட்டார்கள் என்றும் அறிவுறுத்துகின்றன. திருவிவிலியம் களவு செய்யாமலும் பொய் சொல்லாமலும் ஒருவரை ஒருவர் வஞ்சியாமலும் இறைவன் பெயரால் பொய் ஆணையிட்டுக் கடவுளின் பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தாமலும் இருங்கள் என்றும் வஞ்சனையால் தேடிய பொருள் குறைந்து போகும் என்றும் குறிப்பிடுகின்றது. இத்தகைய சிந்தனைகள் தமிழ் அற இலக்கியங்களின் சிந்தனையோடு ஒத்தமைவதனைக் காண முடிகின்றது.

❖ திருட்டு எண்ணம் தோன்றுவதற்கு வறுமை, பசி என்பதனைக் காரணமாகச் சுட்டும் திருவிவிலியம் அதற்காகத் திருடுவதனை நியாயப்படுத்தவில்லை. திருடுபவர் இம்மையில் தண்டனையையும் மறுமையில் நாள்தோறும் வேதனையுள்ள நரகத்தினைச் சேர நேரிடும்

என்று குறிப்பிடுகிறது. இத்தகைய திருவிவிலியக் கோட்பாடு தமிழ் அறநூல்கள் குறித்து நிற்கும் கள்ளாமை என்னும் அறத்தினோடு ஒத்து அமைவதனைக் காணமுடிகின்றது.

❖ வெகுளியால் ஏற்படும் தீமையையும் வெகுளாமையின் சிறப்புகளையும் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்தியம்புகின்றன. தமிழ் அற இலக்கியங்கள் சினம் என்பது ஒருவனின் உடலுக்குப் பகையாய் அமைவதுடன் அவன் சுற்றத்தையும் சேர்த்தழிக்கும் என்று குறிப்பிடுகின்றன. திருவிவிலியமும் வெகுளியானது ஒருவனின் ஆன்மா, உடல் போன்றவற்றை அழித்துவிடும் என்று குறிப்பிடுகின்றது. மேலும் திருவிவிலியம் அரசனின் கோபத்தினை மரணதூதனுக்கும் சிங்கத்தின் கர்ச்சிப்புக்கும் ஒத்ததாய்க் காட்டுகின்றது. திருவிவிலியத்தின் இத்தகைய அறவுரைகள் தமிழ் அறஇலக்கியங்கள் உணர்த்தும் வெகுளாமை ஆகிய அறக்கருத்துகளோடு ஒத்தமைவதனை ஆய்வின்வழி அறிய முடிகின்றது.

❖ வாய்மை என்னும் சொல்லிற்குப் பிறிதோர் உயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதலாக அமைதல் வேண்டும் என்றும் இவ் வாய்மையானது உடல், மொழி, மனம் போன்றவற்றின் செயல்களில் அமைந்து காணப்படுகின்றது என்றும் அத்தகைய வாய்மையுடையோரையே சான்றோர் போற்றுவர் என்றும் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றன.

❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒழுக்கத்தால் ஏற்படும் சிறப்புகளையும் ஒழுக்கமின்மையால் எற்படும் இழிவினையும் எடுத்துக்காட்டுகின்றன. ஒழுக்கத்தின் உயர்ந்தது பிறிதொன்று இல்லை எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கும் கருத்தோடு தீமையை விட்டு விலகுவது செம்மையானவர்கள் செல்லும் நல்லாறு, நல்லாறு நடப்போன் தன் ஆன்மாவைக் காக்கின்றான் எனவரும் திருவிவிலிய அறவுரை ஒத்தமைவதனை ஆய்வின் மூலம் அறிய முடிகின்றது.

❖ பணிவுடைமை என்பது ஒவ்வொரு தனிமனிதருக்கும் இன்றியமையாதாகும் என்பதனைத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் எடுத்துரைக்கின்றன. தமிழ் அற இலக்கியங்கள் பெருமையுடையோர் பணிவினை அணிகலன்களாய்ப் பெற்று அதனால் சிறப்புறுவர் எனக் குறிப்பதனை ஆவியில் எளிமை உடையவர்கள் பேறுபெற்றோர், விண்ணரசு அவர்களுடையது என்ற திருவிவிலியக் கருத்தோடு ஒப்புநோக்க முடிகின்றது.

❖ தனிமனிதன் பின்பற்றவேண்டிய அறவிழுமியங்களுள் மிகவும் இன்றியமையாத ஒன்றாகக் குறிக்கப்படுவது புறங்கூறாமை என்பதாகும். ஒருவன் பிறன்மேல் குற்றம் கூறுவதன்முன் தன் குற்றம் காணல் வேண்டும் எனத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும்

குறிப்பிடுகின்றன. பிறிதொருவரின் பழியை அவருக்குப் பின்னால் கூறுபவன் தன் சொந்தப் பழிகளுள்ளும் கடுமையானவை தெரிந்தெடுக்கப்பட்டு அப்பிறிதொருவனால் தன் எதிரிலேயே பழி கூறப்படுவான் எனத் தமிழ் அற இலக்கியங்களில் உணர்த்தப்படும் கருத்தானது நீங்கள் குற்றவாளிகள் என்று தீர்க்கப்படாதபடிக்கு மற்றவர்களை குற்றவாளிகள் என்று தீர்ப்பிடாதீர்கள்.ஏனெனில் நீங்கள் மற்றவர்களைத் தீர்க்கின்ற தீர்ப்பின்படியே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள். நீங்கள் எந்த அளவையால் அளக்கிறீர்களோ அதே அளவையால் உங்களுக்கும் அளக்கப்படும் எனும் திருவிவிலியக் கருத்தோடு ஒத்தமைவதனைக் காணமுடிகின்றது.

❖ இல்லறம் என்பது கணவன்,மனைவி, குழந்தைகள் என்று உறவுகளின் அடிப்படையில் கூடி வாழ்வது ஆகும். ஓர் ஆணும் ஒரு பெண்ணும் திருமணம் என்ற சடங்குமூலம் உருவாகும் அமைப்பே குடும்பம் எனப்பெறும். குடும்பத்தில்தான் அவனுடைய வாழ்க்கையின் பெரும்பகுதி அமைகின்றது. பிறப்பிலிருந்து இறப்புவரை மனிதன் இக்குழுவோடு இணைப்பு வைத்துள்ளான். மனிதனுடைய உடல், உள்ளத் தேவைகளைப் பெரிதும் நிறைவேற்றி அவனுடைய வாழ்க்கையை அமைத்துக்கொடுப்பது குடும்பமே என்னும் கருத்து ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

❖ குடும்பம், திருமணம் என்ற ஆதாரத்தின் மீது அமைந்துள்ளது. எனினும் அது திருமணத்துடன் குறிக்கப்பட்டு விடுவதில்லை. அது பல தலைமுறைகளைச் சேர்ந்த மரபுவழிக் கிளைகளின் பிரதிநிதிகளையும் சேர்த்துக் கொண்டிருக்கும்.பிறப்பு முதல் இறப்பு வரை அதனோடுதான் அவர்கள் தொடர்ச்சியாகத் தொடர்பு கொள்கின்றனர். ஏனெனில் இது மக்களின் உயிரியல், உளவியல், வாழ்வியல் சார்ந்த அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்கிறது. அதனாலே குடும்பம் எனும் அமைப்பு, இடம், காலம், அனைத்தையும் கடந்து எல்லாப் பண்பாடுகளுக்கும் பொதுவான ஓர் உலகலாவிய பண்பாகத் திகழ்கிறது என்பது ஆய்வின்வழி வெளிப்படுகின்றது.

❖ திருமணம் என்பது அவ்வப்போது ஏற்படும் உடல் தேவையைத் தீத்துக் கொள்வதோ, சில காலத்திற்குத் தேவைப்படுகின்ற நல்லதொரு கூட்டாளியைத் தேடிக் கொள்வதோ அல்ல.இது நிரந்தரமான நிலைகுலையாத ஒரு சங்கமம். மனைவியின் நற்குண நற்செய்கைச் சிறப்பே இல்லறத்திற்கு மங்கலமாவதாகும் எனத் தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. மேலும் ஓர் இல்லறத்தின்கண் வாழும் கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் தம் செயல் நலத்தால் உயர்த்துபவராய் அமைதல் வேண்டும். அவ்வாறு அமையார் எனில் அத்தகைய இல்லறம் பயனற்றதாம் எனக் குறிக்கப்படும் அற இலக்கியங்களின் கருத்தினோடு திருமணத்தை அனைவரும் உயர்வாக மதியுங்கள்.

மணவறைப் படுக்கை மாசுறாமல் இருக்கட்டும் என வரும் திருவிவிலியக் கருத்துகள் ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

❖ ‘அறம்’ என்ற சொல்லுக்கு நல்வினை, ஐயம் (பிச்சை), வறியோர்க்கு இனாம் கொடுப்பது, நோயாளிக்கு மருந்து ஈதல்,நலம், இன்பம், தகுதி, கற்பு, நோன்பு, புண்ணியம், ஞானம், அறச்சாலை, அறத்தெய்வம், கூற்றுவன் எனப் பதினைந்து பொருள்கள் குறிக்கப்படுகின்றன. இத்தகைய அறம் என்பது இல்வாழ்க்கை மேற்கொள்வார்க்கு இன்றியமையாத பண்பு ஆகும். எனவேதான் ‘இல்’ என்பதனுடன் ‘அறம்’ என்பது சேர்க்கப்பெற்று ‘இல்லறம்’ எனக் குறிக்கப்பட்டது. எனவேதான் அறன் இல்லாத இல்வாழ்க்கை சிறப்புடையது அன்று எனத் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் குறிப்பிடுவதனை அறிய முடிகின்றது.

❖ இல்லறவாழ்க்கை என்பது இருபகடுகளால் இழுக்கப்பெறும் சகடத்தின் ஒழுக்கம் போன்றதாகும். எனவே கணவன் மனைவியரிடைப்பட்ட இருதலையன்பு அதன் பண்பாகும். அதனாற் செய்யப்படும் அறம் அதன் பயனாகும் என எடுத்துரைக்கின்றன அற இலக்கியங்கள். அற இலக்கியங்கள் வலியுறுத்தி உரைக்கும் கணவன் மனைவியடையேயான ஒத்த அன்பினைத் திருவிவிலியமும் கணவன் தன் மனைவிக்கு மனைவாழ்கைக்கு உரிய உரிமைகளைக் கொடுக்கவேண்டும். அதுபோல மனைவியும் தம் கணவனுக்குக் கொடுக்கவேண்டும் என உரைப்பதனோடு ஒப்புநோக்கி நிறுவப்பெற்றுள்ளது.

❖ ஒரு மனைவி, கற்பினின்றும் வழுவாமல் தன்னைக் காத்துத் தன்னைக் கொண்டவனையும் உண்டி முதலியவற்றால் பேணி இருவர் மாட்டும் நன்மை அமைந்த புகழ் நீங்காமல் காத்து நிற்கும் நற்குண நற்செய்கைகளினும் கடைப்பிடிப்பவளாய் அமைதல் வேண்டும் என அற இலக்கியங்கள் உணர்த்துவதனைத் திருவிவிலியம் ஞானமுள்ள பெண்கள் தம் இல்லத்தைத் கட்டி எழுப்புகின்றனர்.அறிவற்றவரோ தம் கைகளைக் கொண்டே அதை அழித்து விடுகின்றனர் எனவும் நல்ல மனைவி தன் வாழ்நாள் முழுவதும் அவனுக்கு நன்மையே செய்வாள். சுறுசுறுப்புடன் வேலை செய்வாள். உணவைக் கொண்டு வருபவளாகவும் ஏழைகளுக்கும் சிறுமையாளர்களுக்கும் உதவி செய்பவளாகவும் தன் வீட்டாரைக் கவனித்துக் கொள்பவளாகவும் தன் இல்லத்தின் அலுவல்களில் மேலும் கண்ணோக்கம் உள்ளவளாகவும் காணப்படுகிறாள் என எடுத்தியம்புகிறது என்பதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ கற்பு என்பது தன்னைத்தான் கொண்டொழுகும் தன்மை உடையதோர் பண்பு ஆகும். தன்னைக் காத்துக் கொள்ளாத பெண்ணை சிறையில் வைத்தும் காத்தல் என்பது

இயலாது என்றும் கற்பு நெறி இன்றி இல்லத்தின் எல்கை கடந்து வெளியேறும் பெண்ணானவள் மழையினைக் கெடுக்கும் கோள் ஆவாள் என்றும் அற இலக்கியங்கள் அறிவுறுத்துகின்றன. இதன்வழி, கற்புநெறியில் இருந்து தவறிய பெண்ணானவள் தன் இல்லத்தில் வாழ்பவர்களுக்கு மட்டுமன்று. சமூகத்திற்கும் தீங்கு பயப்பவளாய் அமைகின்றாள் என்னும் உண்மையானது வெளிப்பட்டு நிற்கின்றது. தமிழ் அற இலக்கியங்கள் வலியுறுத்தும் இவ்வுயரிய விழுமியத்தைத் திருவிவிலியமும் நல்லொழுக்குமுள்ள பெண் தன் மானத்தைக் காக்கின்றாள் என்றும் வலியுறுத்தி நிற்பதனை அறிய முடிகின்றது.

- ❖ புகழை விரும்பிய இல்லாளை மனைவியாகப் பெறாதவர்க்கு தம்மை இகழ்ந்துரைக்கும் பகைவர்முன் சிங்க ஏறு போல நடக்கும் பெருமித நடை இல்லை என்பது அற இலக்கியங்கள் உணர்த்தும் நெறியாகும். இத்தகைய நெறியினைத் திருவிவிலியம் நல்லொழுக்கமுள்ள மனைவியை மணந்த கணவன் ஊர்ப்பெரியோருள் ஒருவனாய் இருப்பான். மக்கள் மன்றத்தில் புகழ் பெற்றவனாயும் இருப்பான் என்றும் குணசாலியான மனைவி தன் கணவனுக்கு மணிமுடியாக இருப்பாள் என்றும் உரைத்து நிற்பதனை அறிய முடிகின்றது.

- ❖ இல்லறத்தில் வாழ்கின்ற கணவன் தன் மனைவியின் மீது அன்பு பாராட்டுபவனாய் அமைதல் வேண்டும் என்பது அற இலக்கியங்கள் வலியுறுத்தும் நெறியாகும். திருவிவிலியமும் தன் மனைவியில் அன்பு கூருகிறவன் தன்னில் அன்பு கூர்கிறான் என்றும் கணவர்கள் தங்கள் மனைவியரைத் தங்கள் சொந்த உடலாகக் கருதி அவர்களில் அன்பு கூரவேண்டும் என்றும் வலியுறுத்துகின்றது.

- ❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒருதார மணத்தினையே வலியுறுத்துகின்றன. இதனைப் பல்வேறு அற இலக்கியப் பாடல்களின் வழியும் திருவிவிலிய வசனங்கள், நிகழ்வுகளின் வழியும் அறிய முடிகின்றது. பிறன் மனைவியை விரும்புதல் என்பது எப்பொழுதும் அச்சம் தரும் செயலாதலால் அதனைக் கருத்தில் கொள்ளாமல் ஒருவன் பிறன் மனைவியை விரும்பியொழுகுதல் சிறப்புடையது அன்று என அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. தமிழ் அற இலக்கியங்களின் இத்தகைய கருத்தினை அறத்தின் தன்மையோடு பொருந்தி இல்வாழ்க்கை வாழ்பவன் பிறனுக்கு உரிமையானவளின் பெண்தன்மையை விரும்பாதவனாய் பிறர் மனைவியைக் காமுறாதவனாய் இருத்தல் வேண்டும் என வரும் திருவிவிலியக் கருத்தினோடு ஒப்புநோக்கி அறிய முடிகின்றது.

❖ இல்லறத்தாரின் கடமைகளாக விருந்தோம்பல், சுற்றம் ஓம்பல், வறியவர்க்கு உதவுதல், ஒப்புரவறிதல் போன்றவை அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுகின்றன.

❖ தந்தை, தன் மகனை அறப்பண்புகளும், சிறந்த கல்வியறிவும் சான்றோரால் மதிக்கப்படும் தகவுகளும் உடையவனாய் வளர்த்தெடுத்தல் வேண்டும் என்னும் கருத்தும் மகன் என்பவன் தன் பெற்றோருக்குச் சிறப்பு சேர்ப்பவனாய் அமைதல் வேண்டும் என்னும் கருத்தும் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுகின்றன.

❖ அற இலக்கியங்கள் மனிதன் தன் கடமையைச் செய்வதில் உறுதிப்பாடு உடையவனாய் இருத்தல் வேண்டும் என வலியுறுத்துகின்றன. அற இலக்கியங்களில் பார்ப்பன் பிறப்பொழுக்கம் குன்றக்கெடும், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும், துறந்தாரின் நோற்கிற்பலர், பயனில சொல்லாமை நன்று, கைம்மாறு வேண்டா கடப்பாடு, கடன் அறிந்து காட்சியவர், உயிரஞ்சா மறவர், மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை, கடன் என்ப நல்லவை எல்லாம், உண்டலினும் உண்டல் அற இனிது என்பன போன்ற பல்வேறு கடமைகள் வலியுறுத்தப்படுகின்றன. திருவிவிலியமும் கடமையைச் செய்தலின் இன்றியமையாமையை வலியுறுத்துகின்றது, பழைய ஏற்பாட்டில் உள்ள பத்துக் கட்டளைகளும் கடமைகளாகவே அமைகின்றன. கடவுளை வணங்குதல் முதற்கடன், ஓய்வு நாட்களை தூய்மையாகக் கடைபிடித்தல், கொலை, விபச்சாரம், களவு, பொய்சாட்சி, போன்றவற்றை மேற்கொள்ளாதிருத்தல், தாயையும் தந்தையையும் மதித்தல் என்பவை கட்டளைகளாகக் குறிக்கப்பட்டாலும் கடமைகளாகவே குறிக்கப்பட்டன. பழைய ஏற்பாட்டில் கூறப்பட்ட பத்துக் கட்டளைகள் புதிய ஏற்பாட்டில், மனிதன் முழு உள்ளத்தோடு இறைவன் மேல் அன்பு செலுத்துதல் வேண்டும், மனிதன் தன் மீது அன்பு கூர்வதுபோல அயலான் மீதும் அன்பு கூர்தல் வேண்டும் எனும் இரண்டு கட்டளைகளாக அடக்கிக் காட்டப்படுகின்றன.பவுலடியார் உரோமைருக்கு எழுதிய திருமுகத்தில் இதைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார். பழைய ஏற்பாட்டில் கட்டளைகளாகக் குறிக்கப்பட்டவை புதிய ஏற்பாட்டில் இறைவனால் அன்பின் கடமைகளாகக் குறிக்கப்பட்டன. திருவிவிலியத்தின் பழைய ஏற்பாட்டில் அமைந்த கடமையாற்றுதல் என்பது அச்சத்தின் அடிப்படையிலானவையாக அமைகின்றன. ஆனால் புதிய ஏற்பாட்டில் கடமை என்பது அன்பு, நல்மனம் இவற்றின் அடிப்படையிலானதாகக் கட்டமைக்கப்படுகிறது. தாய், தந்தை, கணவன், மனைவி, குழந்தைகள், நண்பர்கள் போன்றோருக்கான கடமைகள் அன்பின் அடிப்படையிலும் அலுவலர்கள் முதலாளிகளுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் நல்மனட்சாட்சியின் அடிப்படையிலும் அமைந்தனவாக இருத்தல் வேண்டும் என்று திருவிவிலியம் குறிப்பிடுகின்றது.

❖ இல்லறத்தின் பற்பல நோக்கங்களில் ஒன்றாய் இருப்பது துறவறம் ஆகும். செல்வமும் உடம்பும் நிலையாமை எனக் கண்டபின் திருவருள் ஒன்றே நிலையெனத் துணிந்து அதனில் நெருக்கம் கொள்ளுதல் துறவு எனப்படும்.அருளில் நெருங்குங்கால் நிலையாமைப் பொருள்களில் உள்ளம் பற்றுவிட்டு விடுவதால் துறவு என்பது விடுதல் என்னும் பொருளிலும் வந்தது. இத்தகைய துறவறநிலையும் துறவறத்திற்கான அறப்பண்புகளும் தமிழ் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் ஒத்தமைந்து இருப்பதனைக் காண முடிகின்றது.

❖ ஓர் ஒழுங்கின் அடிப்படையில் ஒரே சிந்தனை, ஒரே எண்ணம், என ஒன்றுபட்டு ஒரே இடத்தில் தங்களின் வாழ்க்கை முறை கொண்டவர்களாகத் தங்களுக்குத் தேவையானவற்றைத் தாங்களே பங்கிட்டு நிறைவேற்றிக் கொள்பவர்களாக வாழக்கூடிய ஒரு குழுவான மக்களைச் சமுதாயம் என அழைக்கலாம். ஒரு நாட்டில் அல்லது பல்வேறு நாடுகளில் வாழக் கூடிய ஒரே மாதிரியான வாழ்க்கை முறைகள் கொண்டவர்களையும் சமுதாயம் என்றழைக்கலாம் என்னும் கருத்தானது வெளிப்படுகின்றது.

❖ சமூகக் காரணங்களின் விளைவாக இலக்கியமும் இலக்கியக் காரணங்களின் விளைவாக சமூகமும் அமைவது தவிர்க்க முடியாதது. இதனால் சமூகம், இலக்கியம், ஆகிய இரண்டும் ஒன்று மற்றொன்றிற்குக் காரண, காரியமாய் விளங்குவதைக் காணலாம்.சமுதாயத்தையும் இலக்கியத்தையும் பிரிக்க முடியாது. ஒன்றோடு ஒன்று தொடர்புடையதாய் அமைகின்றது என்னும் கருத்தானது வெளிப்போந்து நிற்கின்றது.

❖ தனிமனிதனை பிற உயிர்களிடத்து இரக்கம் கொண்டவனாய் மாற்றும் காரணிகளுள் இன்றியமையாத ஒன்றாய் இறை உணர்வு என்பது அமைகின்றது. இத்தகைய இறை உணர்வு மனித மனத்தினை நெறிப்படுத்தி சமூக நாட்டமுடையவனாய் மாற்றும் காரணிகளுள் ஒன்றாய் முன்நிற்கின்றது. அந்நிலையில் இறைஉணர்வினை மனிதனிடத்துத் தோற்றுவித்து நெறிப்படுத்துவதில் தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்த தன்மை உடையனவாய் அமைகின்றன. அற இலக்கியம் தனக்குவமை இல்லாதான் தாளினைச் சேராதவன் மனக்கவலையினை நீக்குதல் இயலாது என்று குறிப்பிடுகின்றது. திருவிவிலியமும் தூய ஆவியின் துணையால் நாம் வாழ்கிறோம். எனவே, அந்த ஆவி காட்டும் நெறியிலேயே நடக்க முயலுவோம் என்று அறிவுறுத்துகின்றது.

❖ உலகின் நிலைப்பேற்றிற்கு அடிப்படையாய் அமைவது மழையே ஆகும். இத்தகைய மழையானது வானின்று வாராது அமையுமெனில் நிலவுலகில் உயிர்கள் அனைத்தும் பசியால் வாடி மடியும். எனவேதான் திருவள்ளுவர் திருக்குறளில் ‘வான்சிறப்பு’ என்றொரு அதிகாரமே படைத்தளித்துள்ளார். தமிழின் பிற அற இலக்கியங்களும் மழையின்

சிறப்பினை எடுத்துரைத்துச் சமூக உயிர்களின் வாழ்விற்கு மழை இன்றியமையாததாக அமைகின்றது என முன்மொழிகின்றன. திருவிவிலியமும் மழையின் சிறப்பினை எடுத்துரைப்பதுடன் அம்மழையானது இறைவனால் வருவிக்கப்படுவதாய் உரைக்கின்றது.

❖ சமுதாயத்தில் அறம் உரைக்கும் நிலையில் இருப்போர் நடுவுநிலைமை உடையவராய் இருத்தல் என்பது இன்றியமையாதது ஆகும். நடுவுநிலைமை என்பதற்கு இன்ப துன்பங்களுக்கு ஆட்படாமல் விருப்பு, வெறுப்புகள் இல்லாமல் இன்னார், இனியார் எனக் கருதாமல் அறத்தின்வழி நிற்றல் என்பதே ஆகும். தமிழ் அற இலக்கியங்கள் இத்தகைய தன்மையுடையோரைச் ‘சான்றோர்’ எனப் போற்றுகின்றது. திருவிவிலியமும் நீதி வழங்குபவரை நோக்கி நீங்கள் ஆள்பார்த்துச் செயல்பட்டால் நீங்கள் செய்வது பாவம், நேர்மையுடன் நீதி வழங்குங்கள், ஓரவஞ்சனை காட்டுவது நன்றல்ல என்றும் அறிவுறுத்துகின்றது.

❖ தமிழ் அற இலக்கியங்களும் திருவிவிலியமும் மனிதன் அவாவினை நீக்குதல் வேண்டும் என்றும் பிறர் மனைவியைக் காமுறுதல் கூடாது என்றும் அறவுரை பகர்கின்றன. திருவிவிலியமும் பிறர் மனைவி, பிறர் வீடு, நிலம் அடிமை, அடிமைப்பெண், மாடு, கழுதை, அல்லது பிறர்க்குரியது எதையுமே கவர்ந்திட விரும்பாதே என்றும் அறவுரை பகர்வது தமிழ் அற இலக்கியங்களின் கருத்தினை அடியொற்றி அமைந்திருப்பதை ஆயும்வழி அறியமுடிகின்றது.

❖ அன்பின் முதிர்ச்சியாகிய அருள் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த அறப்பண்பாதலானும், இம்மை மறுமை வீடாகிய மும்மைக்கும் உதவுதலானும், உயிர்க்கு அதுவே துணையாகும் எனத் தமிழ்அற இலக்கியங்கள் உரைப்பது போன்றே அருளின் இன்றியமையாமையை திருவிவிலியமும் வலியுறுத்தி நிற்பதனை ஆய்வானது உறுதிப்படுத்தியுள்ளது. இவ் அருளுடைமையின் வெளிப்பாடய் ஈதல் அறம் அமைதல் வேண்டும் என்னும் தன்மை அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் வலியுறுத்தப்படுவதனை அறிய முடிகின்றது. விண்ணரசு வேண்டி ஈதல் வேண்டும் எனக் குறிக்கும் திருவிவிலியத்தின் கருத்தினும் எத்துணை ஆயினும் ஈதல் நன்றென உரைக்கும் தமிழ் அற இலக்கியங்களின் கருத்து உயர்ந்து நிற்பதனை அறிய முடிகின்றது.

❖ கூடா ஒழுக்கம் என்பது தனிமனித அறம் எனினும் அதனைப் பின்பற்றாதவனால் சமூக ஒழுங்கானது சீர்குலைவதனால் அது சமூக ஒழுக்கமாகவே பார்க்கப்படுகின்றது. உலகில் நல்லவர்போல் நடித்து கூடா ஒழுக்கம் மேற்கொள்வோரை புலித்தோல் போர்த்திய பசு எனத் தமிழ் அற இலக்கியங்கள் சாடுகின்றன. திருவிவிலியமும் இத்தகைய போலி வேடதாரிகள், கைம்பெண்களின் வீடுகளைப் பிடிங்கிக் கொள்வதோடு நீண்டநேரம்

இறைவனிடம் வேண்டுவதாக நடிக்கிறார்கள், கடும்தண்டனை தீர்ப்பிற்கு இவர்களே ஆளாவார்கள் எனச் சாடுகின்றது. இந்நிலையில் அற இலக்கியங்களின் கருத்தும் திருவிவிலியத்தின் கருத்தும் ஒத்தமைவதனை அறிய முடிகின்றது.

❖ ஒவ்வொரு மனிதனும் சமுதாய வாழ்வியலில் தான் பிறருக்கு உதவியும் பிறரிடம் உதவி பெற்றும் வாழ்வியல் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றான். எனவே தமிழ் அற இலக்கியங்கள் மனிதன் சமூக உணர்வுடன் வாழ்வதற்குப் பெறவேண்டிய தலையாய பண்புகளுள் ஒன்றாய் செய்ந்நன்றியறிதல் என்பதனைச் சுட்டுகின்றது. இத்தகைய கருத்துடன் ஒத்தமையும் திருவிவிலியம் செய்ந்நன்றிமறத்தல் என்பது வரம்புமீறிய ஒழுக்கக்கேடு என வலியுறுத்துகின்றது.

❖ மெய்யுணர்தல், பிறன் பொருளை விரும்பாத தன்மையைத் தரும் வெ.ஃகாமை, குற்றம் கடிந்து சமூக அறம் பேணல் போன்ற வாழ்வியல் ஒழுக்கங்களை வலியுறுத்துவதில் தமிழ்அற இலக்கியங்களும் திருவிவிலியமும் ஒத்தமைவது ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளது.

❖ தன்னில் இருந்து சமூகத்தின் நன்மைக்காய்த் தன்னை ஒப்பளித்துக் கொள்ளும் தவமுடையாருக்கான அறவிழுமியங்களை அற இலக்கியங்கள் பெரிதும் வலியுறுத்துகின்றன. மனஉறுதியும், பிறருக்கு உதவும் பண்பும், பொருள்கள் மேல் பற்றற்ற தன்மையும் போலித்தன்மை இல்லாத ஒழுக்கமும் தவத்தின் மேன்மைகளாம் எனத் தமிழ் அற இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. திருவிவிலியத்திலும் தவத்தினை வெளிவேடக்காரர்களாய் மேற்கொள்பவர்களைச் சாடுகின்ற வசனங்கள் காணப்படுவதனை ஆயும்வழி அறிய முடிகின்றது.

❖ ஊழ்வினை குறித்த சிந்தனைகள் அற இலக்கியங்களிலும் திருவிவிலியத்திலும் காணப்படுகின்றன. ஊழிற்பெருவலி யாவுள எனத் தமிழ் அற இலக்கியங்கள் உரைப்பதனை ஒட்டியதாய் அடுத்து என்ன நடக்கும் என்பதை மனிதன் தெரிந்துகொள்ளா வண்ணம் கடவுள், இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி வரவிடுகிறார் என்னும் சிந்தனையானது திருவிவிலியத்தில் காணப்படுகின்றது.

❖ அரசியல் அறத்தினை அற இலக்கியங்களும் திருவிவிலியமும் பெரிதும் வலியுறுத்துகின்றன. அரசன் என்பவன் தன்னலம் கருதாத தன்மை உடையவனாய் குடிமக்கள் நலம் பேணும் கொள்கை உடையவனாய், பகையிடம் இருந்து தன் மக்களைக் காக்கும் ஆற்றல் உடையவனாய், அறம்தலை நிறுத்தி ஆட்சிபுரிபவனாய் அமைதல் வேண்டும் என்பது அற இலக்கியங்கள் வலியுறுத்தும் விழுமியங்கள் ஆகும். திருவிவிலியக் கருத்துகளும் அற இலக்கியக் கருத்துகளோடு ஒத்ததன்மை

உடையனவாய் அமைகின்றன. முடியாட்சிக் காலத்தில் உரைக்கப்பெற்ற அவ்விழுமியங்கள் இன்றைய அரசிற்கும் பொருந்தி நிற்றலை ஆயும்வழி அறியமுடிகின்றது.

**மேலாய்வுக் களங்கள்**

❖ திருவிவிலியத்தைத் தமிழில் பிற்காலத்தில் தோற்றம் பெற்ற அற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தின் இல்லற ஒழுக்கங்களைத் தமிழ் அக இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல், திருவிவிலியத்தில் காணப்படும் அரசியல் தொடர்பான அறங்களைத் தமிழ்ப் புற இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்தல் போன்றவை மேலாய்வுக்களங்களாக அமைகின்றன.

## துணைநூற்பட்டியல்

### முதன்மை ஆதாரங்கள்:

❖ **(பதினெண் கீழ்கணக்கு நூல்களை நிரல்பட உரைக்கும் பழைய வெண்பா அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளது)**


1. நாலடியார் — புலவர் சுந்தர சண்முகனார் (உ.ஆ)
   புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம்
   புதுச்சேரி -1
   1970

2. நான்மணிக்கடிகை — முனைவர் வே. இரா. மாதவன் (ப.ஆ)
   தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு
   தஞ்சாவூர்
   முதற் பதிப்பு - 2001

3. இன்னா நாற்பது — வேங்கடசாமி நாட்டார் நா.மு. (ப.ஆ)
   திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக்
   கழக வெளியீடு – திருநெல்வேலி
   இரண்டாம் பதிப்பு - 1935